


424



50 nP

PT-I

# சந்நியாசியும் சர்வாதிகாரியும்

ஆர்தர் கோய்ஸ்லர்

# சந்நியாசியும் சர்வாதிகாரியும்

ஆர்தர் கோய்ஸ்லர்

[The Yogi and the Commissar: Arthur Koestler]



மொழிபெயர்ப்பு:
பால பாரதி ச. து. சு. யோகி




ர்ல் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்
பம்பாய்-1
விலை 50 நயா பைசா

இங்கிலாந்து, லண்டனிலுள்ள எ. டி. பீட்டர்ஸ் அவர்களுடன் செய்துகொண்ட ஏற்பாட்டின்படி இந்தியாவில் இப்புத்தகம் வெளியிடப்படுகிறது.





முதல் பதிப்பு-1958




பம்பாய்-1, மஹாத்மா காந்தி ரோட், ரீகல் சினிமாவுக் கெ
லுள்ள வாட்டர்லூ மான்ஷன்ஸ் 12-ஆம் நம்பரிலிருந்து செய
புரியும் பேர்ல் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டுக்க
ஸ்ரீ ஜி. எல். மிர்சந்தானியால் வெளியிடப்பட்டது.

அச்சிட்டோர்: குபேரா பிரின்டர்ஸ் பிரைவேட் லிமிடெ
சென்னை-1.




சமர்ப்பணம்

ப்ரொபஸர் மைக்கேல் போலன்யீ
அவர்களுக்கு

கடவுளே! எக்காலத்தும் எதையும் முழுதாக முடிக்கும்படி விட்டு விடாதே. இந்நூல் பூராவும் ஒரு திட்டமே, இல்லை, திட்டத்தின் திட்டமே. ஆ! காலமே, வலிமையே, பணமே, பொறுமையே!

மெல்வில்—மோபி டிக்

# முகவுரை

ஆர்தர் கோய்ஸ்லர்! அறிஞர்களுக்கு அவரிடம் அபாரமான மதிப்புண்டு; ஏனெனில் அவரே ஒரு பேரறிஞர், அரசியல் மேதை, அநுபவஞானி; உலகச் சிறுமைகளை ஒழிக்க ஓயா துழைக்கும் உத்தமர்.

அவர் ஐரோப்பாவில் பிறந்தவர்; ஐரோப்பா முழுவதையும் நன்கறிந்தவர், ஆங்காங்குள்ள அரசியல், பொருளாதார, ஸமூக, இலக்கிய இயல்புகளை நேரடியாகக் கண்டு கணித்தவர்; தனக் கென்று நிர்ணயமான ஒரு கொள்கையை உடையவர்; அக் கொள்கைக்காகக் கடுஞ்சிறைகளின் கொடுமைகளையும் தாங்கி யவர்.

அவரது சிந்தனை வேகம் அறிவியல் துறையிலுள்ள யாவற்றை யும் ஆராய்ச்சி செய்கிறது; பழைய இலக்கியங்கள், புதிய இலக் கியங்கள், கவிதைகள், கலைகள், மொழிகள், முயற்சிகள், சரித் திரம், விஞ்ஞான விளக்கங்கள், இயக்கங்கள், போர்கள், வெற்றிகள், தோல்விகள், உயிர் நூல், உரை நூல், ஸமுதாய நூல் என யாவும் அவரது அறிவில் இடம் பெறுகின்றன. அவற்றை ஒரு அசாதாரணமான முறையில் இந்நூலில் உபயோகித்துள்ளார்.

இது ஒரு கட்டுரைத் தொகுதி; பெரும்பாலானவை அரசியலைப் பற்றியவை, சிற்சில இலக்கிய ரஸனைகள்; இவை யூடெல்லாம் உண்மையின் சரடு ஒன்று ஓடுகிறது; உண்மையின் ஒளி, உலகியல் என்னும் பட்டை தீர்த்த கண்ணாடிமூலம் பலப்பல வண்ண வரிகளாக விகசிக்கிறது; மனிதப் பண்புகள் யாவும் அவ்வண்ண வரிசையில் விளக்கம் பெறுகின்றன.

ஒரு பக்கத்தில் உள்ளுண்மையை நாடும் யோகி இருக்கிறான், மற்றொரு முனையில் 'கம்மிஸார்' என்னும் சர்வாதிகாரி நிற்கிறான்; இடையில் பலரக மனிதர்கள் அங்குமிங்குமாய் அல்லாடுகின்றனர்; பலப்பல வளைவுகள், வலைப்பின்னல்கள், உளைச்சல்கள், உணர்ச்சிகள், எழுத்தாளர்கள், வாசகர்கள், முட்டாள்கள், முரடர்கள், தில்லுமுல்லுகள், தீர்க்க தரிசனங் கள், ஏழைகள், எளியவர்கள், கைதிகள், அடிமைகள், கடுமை கள், கொடுமைகள், நம்பகமின்மை, முதலிய யாவும் நடமாடு கின்றன.

அடுத்தபடி ஒரு மாயை—அம்மாயையைப் பற்றிய விமர் ஸனம்; ஸோவியத் மாயையும் உண்மையும் உருவாகின்றன;

ஒன்றுக்கொன்று எவ்வளவு வித்யாசம்? மாயைப் படலம் கலைகிறது, உண்மை வெளிப்படுகிறது; மறுபடியும் யோகியும் கம்மிஸாரும் உறவு கொண்டாடுகின்றனர்; சந்நியாசியும் சர்வாதிகாரியும் விஞ்ஞான மூலம் விளக்கம் பெறுகின்றனர்.

இது அற்புதமான ஒரு நூல், எனினும், சுலபமானதல்ல. எல்லாத் துறைகளும் இணைந்த அரசியல் சமுதாயத் துறையின் அதிசயமான, அவசியமான நூல்; கவனித்துப் படித்துக் கருத்துக்களின் கருவை அறியவேண்டிய கனிவான நூல், மனிதனது கடமைகள், மனிதனது உரிமைகள், செய்தவை யாவை, செய்ய வேண்டியவை எவை என்பதையெல்லாம் தெள்ளத் தெளியத் தெரிவிக்கும் நூல், மனித ஜாதியின் முன்னேற்றத்தில் நம்பிக்கையுள்ள யாவரும் படிக்கவேண்டிய நூல்.

முதல் நூலின் திண்மையையும், செறிவையும், பண்பையும், பயனேயும் மொழிபெயர்ப்பாளர் நன்கு வெளிப்படுத்தியுள்ளார்; வெறும் பொழுதுபோக்குக்காகப் படிக்கும் வெட்டி நூலல்ல இது; வாழ்வை வளம்பெறச் செய்யும் கெட்டி நூல்.

முதல் நூலாசிரியர் இதனைத் தம் நண்பர் புரொபஸர் மைக்கேல் போலன்யீ என்பவருக்குச் சமர்ப்பித்துள்ளார்; முத்துப் பதிப்பகத்தாராகிய நாங்கள் இதனை நம் நாட்டு அரசியல் அறிஞர்களுக்கும், ஸமுதாயத் தொண்டர்களுக்கும், பொருளாதார நிபுணர்களுக்கும், இலக்கிய ரஸிகர்களுக்கும் ஸமர்ப்பணம் செய்கிறோம்.

—பதிப்பாசிரியர்.

# அட்டவணை

# சந்நியாசியும் சர்வாதிகாரியும்*

## நிலை ஒளி விசிறி

விஞ்ஞானிகள் ஒரு ஒளிக் கதிரை வண்ண விசிறியாக விரித்துக் காட்டுகின்றனர்; அதே போல, மக்களின் சமுதாய நடை உடை பாவனைகளையும் பிரித்துக் காட்டக் கூடிய ஒரு கருவியை நான் கற்பிக்க விரும்புகிறேன். இக்கருவியின் அலைவரிப்படல (Diffraction grating)த்தூடு **ஒளிவிசிறி** (Spectrum) யின் வான வில் வர்ணக் கதிர்களைப் போல், வாழ்வில் சாத்யமான எல்லா வகை மாறுபட்ட இயல்புகளையும் நம்மால் காணமுடியும்; துன் பந்தரும் குழப்பங்கள் தீர்ந்து விடும்; ஒழுங்கு ஏற்படும்; தெளிவு பிறக்கும்; விஷயங்கள் விளக்கமுறும்.

இந்த **ஒளி விசிறியின்** ஒரு முனையில், காணுச் செங்கதிர் (infra-red) நுனியிலே கம்மிஸ்ஸார் (Commissar) என்னும் சர் வாதிகாரியைக் காண்கிறோம். அவர் புற மாறுதல்கள் மூலம் மன மாற்றம் காண்பதில் நம்பிக்கை உடையவர். மலச்சிக்கல் முதல், மாதாவையே காமுறும் மடமை (Oedipus complex) வரையான மனித குலத்தின் சகல தொல்லைகளையும் பொருள்களின் உற் பத்தி, விநியோக முறைகளை வேரோடு களைந்து வேருக அமைப் பது மூலம் நீக்கி விடலாம் என்று கருதுபவர். இந்த லட்சியம் ஈடேறப் பலாத்காரம், பசப்பு, வஞ்சனை, விஷமூட்டல் உட்பட எந்த மார்க்கத்தையும் கையாளலாம்; இந்த வாதமுறையில் தவறே ஏற்படாது; இதன் மின்அணுக்கள் (electrons) சுற்றி விட்ட வகையிலேயே என்றும் சுழலும்; இதைவிட்டு வேறு எதை நம்பினாலும் அத்தகையோர் வாழ்வை விட்டு விலகும் வெறியர்களே என்று அவர் நம்புகிருர். விசிறியின் இந்த முனை மிகமிகத் தயக்கமான அலை அதிர்ச்சி (lowest frequency of vibrations) களை உடையது; ஒருவகையில் கதிரின் முரடான பகுதியு மாகும்; எனினும், உச்சமான உஷ்ணத்தை உற்பத்தி செய்வதும் இதுவே.

ஒளி விசிறியின் மறுமுனை—கண்டு கணிக்கமுடியாத வகை யில் அலைவரிகள் (wave-lengths) சிறுத்து, அதிர்ச்சி (high frequency), மிகுந்து நிறமற்று, உஷ்ணமற்று, எனினும் யாவற்றை யும் ஊடுருவிச் செல்லும் இயல்புடையது; இங்கு காணு ஊதா (ultra violet)க்கவினில் கனிந்தவராய் யோகி இருக்கிருர். உலகைக் கடிகாரம் என்பதில் அவருக்குத் தடையில்லை, அதே சமயம் இசைப் பெட்டி, அல்லது மீன் குட்டை என்ருலும் சரிதான். அவருக்கு முன் கூட்டிக் கூற முடியாத விளைவைவிட அதை அடையக் கையாளும் முறையே முக்கியம்; எவ்வாருயினும்,

எதிலும் ஹிம்ஸை கூடாது, வாழ்வுக்குப் பிரதானமான அகண்ட உண்மையின் காந்த முனையை அண்டும் போது தர்க்க ரீதியான வாத முறையின் திறம் மழுங்கி விடுகிறது. உண்மையே முக்யம், வெளிப்படையான கட்டுத் திட்டங்களால் எதையும் சீர் திருத்த முடியாது; தனி மனிதனது உள் உணர்ச்சியின் ஊக்கமே யாவற்றையும் சாதிக்க வல்லது. இதை நம்பாதவர்கள் வாழ்வை அஞ்சி விலக விரும்புபவர்களே என்றெல்லாம் யோகி கருதுகிறார். இந்தியக் குடியானவர்கள் மேல் லேவா தேவிக்காரர்களால் சுமத்தப்பட்டுள்ள கடன் சேவைக் கொடுமைகளைப் பொருளாதாரச் சட்டதிட்டங்களாலன்றி ஆன்மிக வழியிலேயே தீர்க்கவேண்டும் என அவர் எண்ணுகிறார். ஒவ்வொரு மனிதனும், தனியாயினும், கண் காணாத உயிர்ப் பென்னும் உந்திக் கொடி மூலம் எல்லாமும் ஒன்றான சக்தியுடன் இணைக்கப்பட்டுள்ளான்; இக் கொடியூடு வரும் உரத்தாலேயே அவனது கற்பனைத் திறன், நற்குணங்கள், உண்மைத் தன்மை, பயனுடைமை யாவும் வளம் பெறமுடியும். அவனது வாழ்வின் ஒரே ஒரு நோக்கம் செயலாலோ, உணர்வாலோ, எண்ணத்தாலோ இவ்வுயிர்ப்புக் கொடிக்கு ஊறு வராமற் காப்பதே. இது கஷ்ட சாத்யமான காரியமே; இதற்காக யோகி கடினமான சாதனைகளைக் கையாளுகிறார்: இவற்றிலேயே அவருக்கு நம்பிக்கை.

இவ்விரு முனைகளுக்கும் இடையே சாதாரண மக்களின் பலதரப் பாங்கைக் குறிக்கும் கதிர்கள் தொடர்ச்சியாகப் பரந்துள்ளன; இவ்வண்ணக் கதிர் விசிறியின் நடு மையத்திற்குப் போகப் போக வரிகள் மங்குகின்றன; கம்பளச் சொணைகளாய்ச் சிலும்புகின்றன; இச் சிலுப்பம் அம்மணமான வரிகளின்மேல் ஆடை போர்த்துகிறது; எனவே, இத்தகையோர் தக்கவர்கள், இவர்களுடன் பழகுவது நாகரிகமானது என்றெல்லாம் தோன்றுகிறது. அப்பட்டமான ஒரு சர்வாதிகாரியோடு நாம் வாதம் செய்யமுடியாது; உடனே அவர் தம் மார்பைத் தட்டிக்கொள்ளுவார்; அடுத்த கணம், நண்பரோ, பகைவரோ யாராயிருந்தாலும் தம் மரணப்பிடி போன்ற ஆலிங்கனத்தால் நெருக்கித் திக்கு முக்காட வைப்பார். காணு ஊதாக் கவினில் கரையும் யோகியிடமும் நாம் விவாதிக்க முடியாது; வார்த்தைகளால் அவருக்குப் பயனில்லை. ஆனால், போர் முடிவில் சமாதானத் திட்டம் வகுப்போர், சச்சரவை விரும்பாத ஃபேபியர் (Fabians) கள், நட்பை நயக்கும் க்வேக்கர் (Quakers)கள், தாராள மனப்பான்மையினர், தயை மிகுந்த தர்மவான்கள்—இவர்களுடன் வாதம் புரியலாம் எனினும் அதனால் யாதொரு முடிவும் ஏற்படாது; ஏனெனில் உண்மையான பிரச்னை சந்நியாசிக்கும் சர்வாதிகாரிக்கும் இடை

யிலே உள்ளது; அது அகத்திலிருந்து புறத்தைத் திருந்துவதா, புறத்திருந்து அகத்தைத் திருத்துவதா என்னும் அடிப்படைத் தத்துவங்களின் சாம்யத்திலிருக்கிறது.

நமக்குத தேவை ஸமன்வயமே: புரட்சியையும், தெய்விகத் திருவையும் ஒன்ருய் இணைக்கும் ஒருமையே, என்று கூறுவது சுலபம்; இதில் இதுவரையில் எவரும் சித்தி பெற்றதில்லை. நடந்ததெல்லாம் ஒளி விசிறியின் மங்கிய இடைவரிகள் தம்முள் 'ராஜி'யாக ஒப்புக்கு உறவாடியதைத் தவிர உண்மையான ஒருமைப்பாடு ஏற்பட்டதேயில்லை, இவ்விரு தத்துவங்களும் இணைவது அநேகமாய் அசாத்யம். மானுட வரலாற்றின் குழப் பங்களுக்கு இவ்வீடுபாடின்மையும் ஒரு காரணமே. சர்வாதி காரியின் உள்ளம் தனி மனிதனுக்கும் சமூகத்திற்கும் இடையே ஊசலாடுகிறது; சந்நியாசியின் உள்ளம் தனி மனிதனுக்கும் அகில லோக அகண்ட சைதன்யத்திற்கும் இடையே தாவிச் செல்லு கிறது. வேண்டுவதெல்லாம் ஒரு சிறு முயற்சியே என்பது எளிது; ஆனல், இது புமமையன் (homosexual) ஒருவனைக் கன்னியரின் காதலுக்காக முயற்சி செய்யத் தூண்டுவது போன்றதே.

### சர்வாதிகாரியின் தர்ம சங்கடம்

அடிமையர் கலகத் தலைவன் ஸ்பார்த்தாக (Spartacus) ஸனது சூரிய நாட்டு (Sun State) அமைப்பு முதலாக, இடைக் காலத்து மதப் பூசாரிகளது வல்லடி வழக்கு (Inquisition) களுடும், சீர் திருத்த (Reformation)ச் செறிவுகளுடும், இன்றுள்ள ஸோவியத் ரஷ்யா வரையில், சர்வாதிகார முறையில் மனித இயல்பை மாற்றி அமைக்கும் முயற்சிகள் யாவும் படுதோல்வி அடைந்துள்ளன. இத்தோல்வியின் காரணம் விவகார ஞானத்தின் விரோத பாவங் கள் (Antinomies of Applied Reasoning) என்று கேன்ட் (Kant) கூறுவதுபோல், இருவகைப்படும். முதலாவது பாம்பின் வளை விலுள்ள விரோத பாவம், இரண்டாவது சரிவின் சாய்ப்பிலுள்ள எதிர்மறைத்தன்மை.

லட்சிய உலகின் சிகரம் செங்குத்தானது. அதை அடைய வளைந்து வளைந்து செல்லும் பாதையில் திகைக்கவைக்கும் பல திருப்பங்கள் உள்ளன; சிகரம் கண்ணுக்குத் தெரியாது; வளை கோணத்தில் நேர்முக இலக்கையே நோக்கித் திசைதெரியாமல் செல்லவேண்டியிருக்கும். பாம்பென வளையும் பாதையில் தலை வரைப் பின்பற்றி மக்கள் பெரும் கூட்டமாகப் போனல், அவர் களுக்கு இயல்பாயுள்ள ஜடத்தன்மை (inertia) யின் கோரஙியாதி களுக்கேற்பத் தங்கள் தலைவனைப் பாதையை விட்டுத் தள்ளி விடுகின்றனர். பின்பே அவனைப் பின்பற்றுகின்றனர். ஏதோ

கோணத்தில் எங்கோ சென்று வெறுமையை அடைகின்றனர், மக்களின் ஜடத் தன்மை, சுற்றிச் சுழலும் சூறைவெறி (Violent centrifugal force) யாக மாறின புரட்சிகள் யாவும் அநேகமாக இவ்விதமே முடிவடைந்தன. அதி ஜாக்ரதையுடன் மென்மையாய் நடத்தப்பெறும் சீர்திருத்த இயக்கங்களிலோ மக்களின் உணர்ச்சி வேகம் சீக்கிரமே தணிந்து மேல்நோக்கிச் செல்லும் வளைவுகள் சமதளத்தில் ஒரே படித்தாய்ச் சிகரத்தைச் சுற்றிச் சுற்றி வளையவருகின்றன. பின்னர் இச்சுழற்சி கீழ்நோக்கி இறங்குகின்றது. நம் தொழிற் சங்க (Trade Union) இயக்கம் இதற்கு ஓர் உதரணம்.

தோல்வியின் இரண்டாவது வேர் சரிவின் விரோதபாவமே, அதாவது முடிவுக்கும் முறைமைக்குமுள்ள முரண்பாடு. முடிவான நோக்கம் பெரிதா? முயலும் முறை பெரிதா?—என்பதே கேள்வி. ஏட்டளவில் இரண்டையும் இணைத்து, விஸ்தாரமான மிதவாத அல்லது மத சம்பந்தமான பல மையத் திட்டங்களைச் சமைத்துக் கொள்ளலாம்: ஆனல், செயல் முறையில் இரண்டில் ஒன்றைப் பின்பற்றியே தீரவேண்டும்: எதை என்ற தீர்மானம் நம்மைச் சரிவில் கொண்டு நிறுத்துகிறது. முறைகள் எதுவாயினும் முடிவே முக்கியம் என்பவரை அச்சரிவு, வழுக்கிச் செல்லும் விவகார அறிவென்னும் பாயலூடு, கீழே, கீழே அத பாதாலத்திற்கு நழுவ விடுகிறது,—விவகார அறிவின் தன்மைக்கு ஒரே ஒரு உதாரணம். "தற்பாதுகாப்பு; அதற்குச் சரியான வழி தாக்குவதே, அதி சீக்கிரத்தில் சண்டையை முடிக்கக் கண்மூடித்தனமான கொடுமையே தேவை" என்பது. இச்சரிவின் இன்னெரு வகையான பாணி நோய் தீர்க்கும் கத்திமுனையில் ஆரம்பித்து மாஸ்கோவில் நடந்த மனித வேட்டையில் முடிவடைகிறது. இச்சரிவின் சாவுமயமான இக்கொடுந்தன்மையை பாஸ்கல் (Pascal) என்னும் அரசியல் ஞானி முன்பே அறிந்திருந்தார்:- "மனிதன் தேவனுமல்ல, விலங்குமல்ல தேவனய் நடக்கவேண்டியவன், விலங்காய் நடப்பதே அவனுடைய துயரத்துக்கு காரணம்.''

**சந்நியாசியின் தர்ம சங்கடம்**

அக வழியில் புற உலகை மாற்றும் முயற்சிகளும் தோல்வி அடைந்தன. வெளிக் கட்டுத் திட்டங்களால் உள்ளூறும் தெய்வத் தன்மையை உருவாக்க முயன்றவர்களெல்லாம் இதே இக்கட்டிற்கு ஆளாயினர். மதவழக்கு(Inquisition)கள் எதிர்கோணத்தில் பறந்து பாழாயின; அதுமுதல் கிறிஸ்தவக் கோயில்கள் (Church) யாவும் மேலேற வழியின்றி ஒரே நிலையில் சுற்றிச் சுழன்றன. முன்னதைப் போலவே முடிவைக் காட்டிலும் முறையே முக்கியம்

என்னும் கொள்கையும் நம்மை அத பாதலத்தில் வீழ்த்துவதே யாகும். அது அஹிம்சையில் ஆரம்பித்து ஆக்ரமிப்பைத் தடுக்காத தன்மைக்கு இறங்கிவிடும்.

பார்க்கப்போனால், மிசாவலி (Machiavelli) யின் சமயோசிதத் தந்திரக் கொள்கைக்கு நேர்மாறான சந்நியாச தர்மத்தில், சர்வாதி காரத்தைக் காட்டிலும் பொது மக்களின் முன்னேற்றம் எந்த வகையிலும் அதிகப் பிரகாசம் பெறுவதாகக் கூறமுடியாது. ஒரு சரிவு கோர தண்டனைக் கிடமளிக்கும் மதத்துரோக வழக்கு (inquisition)களுக்கும், மனித வேட்டை (purge)க்கும் நம்மைக் கொண்டு செல்லுகிறது; மற்றொன்று சாத்விகமாகப் பணிவதற் கும், புளிந்த கண்களுடன் அளிந்த குழந்தைகளை உடைய, சாக் கடை யற்றுச் சகதியான கிராமங்கள் துப்பாக்கித் தாக்குதலுக் கும், பலவந்தமான பங்கத்துக்கும் இரையாவதைக் கண்டும் கை கட்டிக்கொண்டு சும்மாயிருக்கும் அவலத்திற்கு இழுத்துச் செல்லுகிறது. எனவே சந்நியாசியும் சர்வாதிகாரியும் இவ்விஷ யத்தில் ஒரே மாதிரிதான்.

**அலை ஒளி விசிறி**

ஆனால், அவர்கள் அப்படிச் செய்யமாட்டார்கள். ஒற்றுமை பெற முடிவதில்லை; இடைவரிகளின் ஒட்டுப்போட்ட வெறும் உடன்பாடுகள் திருப்தி தருவதில்லை. எனவே, வரிசைக் கிரமமாய் ஒன்றை ஒன்று ஈர்க்கின்றன, எதிர்க்கின்றன, உலக சரித்திரத்தில் மெதுவாய் அசையும் இவ் விசித்திரக் கூத்து நம் உள்ளக் கிளர்ச்சியை ஊக்கும் ஒரு அம்ஸமாகும், மற்றெல்லா வகையிலும் பயனுடையதான மார்க்ஸிய சித்தாந்தம் (Marxism) இவ்விஷயத்தை மட்டும் கணிக்கத் தவறி விட்டது,

கடலின்மேல் பருவக்காற்றுகள் அலைவதுபோல் உலக வரலாற்றின் சிற்சில பருவங்களில் ஒளி விசிறியின் ஒரு முனை யிலிருந்து மறு முனைக்கு, காணச் செம்மை முதல் ஊதா வரை, அல்லது எதிர்மாறாக மக்கள் குலம் தாவுகிறது. 19-ஆம் நூற் றாண்டில் சர்வாதிகாரச் செம்முனை நோக்கிச் சென்றது, இப் போது மாறிச் செல்கிறது, 1930-முதல் ஒரு வகையில் மன மறிந்தே நாம் காண ஊதாக் கரையை நோக்கிப் போகிறோம்.

தெரியாத போக்கில் விருப்பம் அதிகரிக்கிறது; தெரிந்து செல்லுங்கால் விருப்பம் குறைகிறது. என்னைப் பொறுத்த வரை யில் நான் இரண்டாவது வகையைச் சார்ந்தவன். காண ஊதாக் கரை ரீதியில் முடியாத, காணச் செங்கதிர் ரீதியில் நாவல் ஒன்றை யாராவது எழுதினால் நன்றாய்த்தானிருக்கும். ஆனால் எப்படி ஒரு உண்மை விஞ்ஞானி வேதாந்தமாக முடிக்காமல்

வெறும் பௌதிக விஞ்ஞானத்தைப்பற்றி மட்டும் எழுத முடியாதோ, மக்கள் மனோநிலையில் பகுத்தறிவுக் கொவ்வாத தன்மையைக் குறிப்பிடாமல் உண்மையான ஒரு ஸமுதாயப் பொது உடைமை (Socialist) வாதி தீவிரவாதத் தோல்விகளைப் பற்றிக் கூற முடியாது. குருட்டுத்தனமாகப் பழமையையே விரும்பும் ஒருவன் பின்தங்க நேரும், ஆனால் காலப்போக்குக்கு இலகுவாக மசிபவன் காற்றிலடிபடும் சருகைப்போல் அடித்துச் செல்லப் படுவான். இந்தச் சூழ்நிலையில் செய்யக்கூடியதெல்லாம் காலப் போக்கை நன்கு அறிந்து அதிக விருப்பமில்லாமல் அதிஜாக்ரதையாக நடந்து கொள்ளுவதுதான்.

அவ்வாறு மனப்பூர்வமாக நடப்பது சாத்தியமா? பெரும் பெரும் வண்ண வரிச் சலனங்களுடும் அழியாமல் உயிர்த்து நிற்போர் யார்? வாழத் தகுந்த வலி படைத்தவர்களா? அல்லது மலைச் சரிவில் வழுக்கிச் செல்லும் வழவழப் பேர்வழிகளா? கிளைக்கு கிளை அநாயாசமாகத் தாவும் குரங்குபோல் செந்நுனியிலிருந்து ஊதா நுனிக்குத் தாண்டும் சில எழுத்தாளர்களைப் பற்றி என்னென்பது? 'இறந்தவர் இறந்தவரைப் புதைக்கட்டும்' என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. அவர்களோ, 'அதுவே எங்கள் அபிப்பிராயமும் என்கின்றனர்; தங்கள் எண்ணம் அதுவே என்பதில் அவர்களுக்கும் சந்தேகமில்லை. எண்ணுவதை எண்ணியபடியே எழுதுவதாக எண்ணுத எழுத்தாளன் ஏது? ஆகவே அத்தகையோரைக் கண்டதும் முதலில் நமக்கு வெறுப்பே ஏற்படுகிறது; அடுத்தாற்போல் தவருன காரணங்களுக்காகவே நாம் அவர்களை வெறுத்தோம் என்றும் தெரிகிறது; அப்போதும் வெறுப்புத்தான் மிஞ்சுகிறது; காரணம், நமக்கு முன்பே, வெகு விரைவில் செம்முனையிலிருந்து ஊதா முனைக்குச் செல்லவேண்டிய சரியான காரணங்களை அவர்கள் தெரிந்து கொண்டார்களே என்று வெறுப்படைகிறோம். இவ்விவகாரங்களில் வழவழத் தன்மையைக் காட்டிலும் வக்கிரத்தன்மையே மதிப்பிற்குரியது- எதிர்காற்றுக்கு நேராக அவர்கள் ஏறிச்செல்ல என்றும் முயன்றதில்லை. காற்றின் முதல் வீச்சுக்குத் தங்களைப் பறிகொடுத்தனர்; அது அவர்களை அடிக்கட்டையிலிருந்து மெதுவாகத் தூக்கியது, மெதுவாகச் சுழற்றியது, மறுமுனைக்கு மெதுவாகத் தாழ்த்தியது. இதனலேயே அவர்கள் முணுமுணுப்பதும், மடிந்துவிடும் உலர்ந்த சருகுகளைப்போல் சலசலப்பதும்.

ஒளி விசிறியின் வரிச்சலனங்கள் கலைச் சர்வாதிகாரிகளைப் பாதிப்பதைக் காட்டிலும் அரசியல் சர்வாதிகாரிகளையே அதிகமாகப் பாதிக்கிறது. இதைப்பற்றி அவர்கள் அதிகமாக ஆழ்ந்து சிந்திக்கிருர்கள் என்பதல்ல; சிந்திப்பதில்லை என்றே

கூறிவிடலாம். மதிப்பீடுகள் கலகலத்து, மனித வாழ்வே மற்றவர்களைக் காட்டிக் கொடுத்து வழுக்கிச் செல்வதாக முடியும் துன்ப நேரங்களில் கலைஞனுக்கு தற்கொலை செய்துகொள்ளும் எண்ணம் தோன்றுகிறது. ஆனால் அப்படிச் செய்து கொள்வதில்லை; புரட்சிக்காரனோ தற்கொலைக்குத் தயாராயில்லை; அப்படி ஏற்பட்டாலும் அது வேறு வழியில்லாததால்தான். ஒருவகையில் ஆன்மிக தர்மம் மரணத்தை ஏற்பதற்கான பயிற்சி எனலாம்; இந்தப் பயிற்சியில் மிகமிகக் கீழ் மட்டத்தி லுள்ளவனே சர்வாதிகாரி. எனினும் சந்தர்ப்ப நிர்ப்பந்தங்கள் காரணமாக லட்சியத்தின் முன்னணியில் நிற்கிறான்.

எனவே, வாழ்க்கைப் பாதையில் வழுக்கிச் செல்லும் வழவழத் தன்மையைக் கலைஞன் அவ்வளவாக எதிர்ப்பதில்லை; புரட்சிக்காரன் தீவிரமாக எதிர்க்கிறான். உண்மையில் சர்வாதிகாரியை வரையறுக்க வேண்டுமானால் உள்ளத்தின் அடிப்படைப் பண்புகளோடு எவ்வகையான உறவும் இல்லாதவன் என்று கூறலாம். நிரந்தரமான ஆபத்தின்கீழ் இவ்வாறு வாழ்வது அதிசயமே. லெனின் (Lenin) என்றுதான் நினைக்கிறேன்; 'உரிய விடுமுறையோடு உலவும் உயிரற்ற சவங்கள் நாம்' என்று கூறியது. இவ்வபாயச் சூழ்நிலை அபாயகரமான துறைகளுடன் தொடர்புகொள்ள அவனைத் தூண்டுகிறது. அமுக்கப்பட்ட பக்குவநிலையில் அவன் சதா வாழ்கிறான். சாதாரண வாழ்வில் புதுப் பல் முளைப்பதைப்போல், உலகத்தின் தீர்க்கமுடியாத சிக்கல்களைக் காணும் யௌவனத்தின் நெருக்கடி ஒரே ஒரு முறைதான் வருகிறது; புரட்சியாளனோ எப்போதுமே இந்த உஷ்ணச் சூழ்நிலையிலேயே உலவுகிறான். சிக்கல்களே அவனது அன்றாட உணவாகின்றன. பல் முளைப்பது போன்ற யௌவனப் பரவசம் தீர்ந்ததும் சாதாரண மனிதன் வாழ்வின் அகண்டத் தோடு பழகச் சுலபமானதோர் இடைவழி (Modus vivendi) யைக் கண்டு கொள்ளுகிறான்; ஆனால் சர்வாதிகாரிகளில் மிகமிக உயர்ந்தவன்கூட இவ்விஷயத்தில் கடூரமானதோர் கடை வழி (modus moriendi) யையே கடைப்பிடிக்க முடியும்,

நிரந்தரமான யௌவனப் பருவத்தில் வாழ்ந்தாலும், அப் பருவத்துக்குரிய பரவசமும், கற்பிதக் கனவுகளும் அவனிடம் கிடையாது, அவன் உள்ளப்பண்புகள் மனோதத்துவ ஸாஸ்திரியால் ஆராயப்படவில்லை; சஸ்திர வைத்திய (surgeon) னது அறுத்தெறியும் கத்தியால் அகற்றப்பட்டவைபோலவே தோன்றுகின்றன. உண்மையாகவே அவனுக்குள்ள கஷ்டம் தன்னிச்சையின்றி உள்ளம் தனக்கிச்சையானபடி உறக்கத்தில் பேசுவது போன்ற தானறியாத உளவியல்புகளுக்கு ஆளாகிவிடக்கூடாதே

என்பதுதான்:—இவ்வண்ணம் நல்ல சர்வாதிகாரியாயின் இதில் வெற்றி பெறுகிறான். இவ்வகையில் அமுக்கப்பட்ட, நாடி நரம்பற்ற அதிசய சிருட்டியே அவன்; மனிதகுலத்தின் அற்புதமான சாதனைகளில் இதுவும் ஒன்றே என்னலாம்.

தயையற்ற வாழ்க்கை சாத்தியமல்ல எனில், தன்னிடமே எள்ளளவாவது தயைகொள்ளாத வாழ்வு சாத்தியமே இல்லை. சர்வாதிகாரிக்கும் துன்பம் உண்டு; எனினும் அவன் துன்பத்தை உணருவதில்லை; அறுத்தெறியப்பட்ட அங்கத்தின் உணர்ச்சிபோல, துன்பத்தின் எதிரொலியை அநுபவிக்கிறான். நாம் அவனைப் போற்றுகிறோம். அதே சமயம் எளியவர்கள் சில நேரம் வலியவரிடம் காட்டும் கருணைபோல, அவனிடம் தயை காட்டுகிறோம். ப்ளாங்கி (Blanqui), லக்ஸம்பர்க் (Luxemburg), வெரா ஃபிக்னர் (Vera Figner) முதலிய மகத்தான மனிதர்களின் முன் நாம் எத்துணைப் பயனற்ற, அற்பப் பதர்கள் என்பதை உணர்ந்து பேசாமலிருக்க வேண்டியதே; எனினும் தயை மட்டும் மிஞ்சுகிறது.

வாழ்வின் நெருக்கடியைச் சர்வாதிகாரி அடையும்போது இந்த உளப்பாங்கு நியாயம்தான் என்று தெளிவாகிறது. இது சிக்கலான பயங்கரப் பாதை. பலருக்குச் சரிவரப் புரியாது. அவரவர் விஷயத்தில் இதன் உருவங்கள் மாறுபடலாம், ஆனால், அடிப்படை ஒன்றே—அதாவது அறுத்தெறிந்த அங்கத்தின் பழி வாங்கும் படலமே. கெரார்டு நெர்வல் (Gerard Nerval) எழுதிய ஒரு கதை மங்கலாய் என் நினைவிலிருக்கிறது; ஒரு திருடனது கரத்தை வெட்டிவிடும்படி நீதிபதி உத்தரவிடுகிறார்; வெட்டப்பட்ட கரம் நீதிபதியைத் தொடர்ந்து சென்று அவர் கழுத்தைத் திருகிச் சாகடிக்கிறது. சர்வாதிகாரியின் விஷயத்திலோ நீதிபதியும் குற்றவாளியும் ஒருவரே; தவிர, அறுக்கப்பட்டது கையல்ல, 'அகண்டமான கடலுணர்ச்சி' (Oceanic Feeling) என்று அறிவுக்குப் பொருந்த ஃப்ராய்டு (Freud) கூறும் யோகியின் சர்வத்தையும் இணைக்கும் உந்திக்கொடியே. சாதாரண நாளில் சர்வாதிகாரி அதை ஒரு வீணுடம்பர வெற்றங்கமாக நினைத்தான்; சங்கடம் நேர்ந்த போதுதான் அதன் முக்கியத்வத்தை உணர்ந்தான். உள்ள ஒழுக்கத்திற்கு மனித—ஸமூகப் பிணைப்பு மட்டும் போதாது; மனித—அகில அகண்ட இணைப்பை மறுபடியும் நிலைநிறுத்துவது அவசியம்.

இந்தக் கட்டம் இரு வகையாக முடியலாம்; வெட்டப்பட்ட உந்திக்கொடி மறுபடியும் ஒட்டப்படலாம்; குற்றத்திற்கு ப்ராயச்சித்தமாக மனித—சமூக தத்துவம் தகர்க்கப்படலாம், புரட்சியாளன் ஞானியாகலாம்; சர்வாதிகாரி திடீரென்று யோகி

முனைக்குத் தாவிக் குதிக்கலாம்; அல்லது உந்திக்கொடி ஒட்டப் படாவிடில் ஆளைச் சுற்றி அமுக்கிக் கொல்லலாம்; மாஜிப் புரட்சியினர் பலர் இவ்வாறு திணறிப்போய்த் திக்குமுக்காடி உயிரிழந்துள்ளனர்; அல்லது, அவர்கள் மாஸ்கோ வழக்குகளில் சீன யூத (Sinowjew) னைப்போல் நடைப்பிணமாய் உருக்கொண்டு வரலாம்; லவால் (Laval), டோரியட் (Doriot) போன்று எதிலும் நம்பிக்கையற்ற சாத்தான்களாகத் தோன்றலாம்; அல்லது உளுத்துப் போய் வீரியமற்று வெறுமையான இடதுசாரிக் கட்சி அதிகார வர்க்கம் போல் இருக்கலாம்; ரோஸா லக்ஸம்பர்க் (Rosa Luxemburg) குக்கப்புறம் கட்டற்று அகண்ட கடலுணர்ச்சியும், காரியத்திறனும் ஒருங்கே கூடிய எவரும் தோன்றவில்லை.

துரதிர்ஷ்ட வசமாக இத்தகைய மாறுதல்களை வர்ணிக்கச் சரியான விஞ்ஞான வார்த்தைகள் கிடையாது. மானுட வரலாற்றின் உள்ளுணர்விற்கு இவை மிகவும் தேவையானவை. அறிவுக்குப் பொருத்தமான வகையில் இயற்கையை விவரிப்பதில் உருவற்ற—தெளிவற்ற உருவங்களையும், உவமைகளையுமே உபயோகிக்க வேண்டியிருக்கிறது. மனித சரித்திரத்தில் இங்ஙிலைக்கான உதாரணங்கள் எத்தனையோ; எனினும் இன்றுள்ள உள நூல் தத்துவங்கள் மூன்றில் ஒன்றிலேனும் புரட்சியாளன் லோகாயதனாகவோ ஞானியாகவோ மாறுவதைப் பற்றிப் பேச்சே கிடையாது. இதை நெருங்கி ஆராய்ந்தவர் ஜங் (Jung) ஒருவரே. அவரது உள்ளக் கருவும் யோகியின் உந்திக் கொடியும் அநேகமாய் ஒன்றே எனலாம்; எனினும் அவர் ஆராய எடுத்துக்கொண்டவர்கள் நடுவயதுப் பணக்காரர்களே. இவர்களை விட்டு, ஜெர்மானிய, ரஷ்ய ரகசியக் கடுஞ்சிறை (Concentration Camp) களிற் குமைபவர்களை ஆய்ந்திருப்பின், அவரது உளவியல் சிகிச்சை தக்க அளவு பயன்படாது, மனோ தத்துவத்தில் பல புதிய கொள்கைகளைப் புகுத்த நேரும், பதப் பிரயோகமே மாறும்; உலக தரிசனமே (Weltanschauung) தவிடு பொடியாய்விடும், சர்வாதிகாரியின் வண்ணக் கதிர்ச் சலனம் மனோதத்துவ சாஸ்திரிகளுக்குப் புரியாத ஒரு உலகப் புதுமை (terra nova) யே.

மங்கி மயங்கி மதமதக்கும் ஒளி விசிறியின் நடுத்தர வண்ண வரிகளைக் காணும்போது மேற்காட்டிய மனோதீத மாறுதலால் ஏற்படும் விளைவுகள் விளக்கமாகத் தெரிகின்றன. செங்கதிர் முனையின் ஓரத்தில் தீவிரவாதிகளின் தொடர்ச்சியான தோல்விகளைப்பற்றிய எண்ணம் மிகுந்துள்ளது; பழைய கட்சிகளின்பால் வெறுப்பு, உளுத்துப்போன தலைவர்களிடம் துவேஷம், தங்களது மூடத்தனங்கள், முற்றுப்பெறாத ஆசைகள்—இவைகளாலான திட்டங்கள், வாக்குறுதிகள், கொள்கைகள், நோக்கங்கள் யாவும் உள்ளன. இச்செவ்வரிப் பின்னணியே உணர்ச்சிகளின்

உற்பத்திஸ்தானம். அடுத்தபடியாகப் பொது மக்களுடன் நாம் தொடர்பு கொண்ட வகை தவறானது என்ற எண்ணம் உண்டாகிறது. அப்பால் தோல்வியுற்ற வகையிலேயே பொது மக்களைச் சுறுசுறுப்பாக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றுகிறது. அந்தப்படி தாம் தோல்வியுற்ற அதே அம்சத்தில் தனி மனிதத் தலைமையில் ஃபாஸிஸம் (Fascism) மிகப் பயங்கரமான வகையில் வெற்றி பெறுகிறது. இவ்வெற்றி, தோல்வியுற்றவர்களின் பொறாமையைத் தூண்டுகிறது. நுணுகி ஆராய்ந்தால் செம்பட்டைக் கோணத்தவர்களுக்கு ஃபாஸிஸத்திடம் வெறுப்பைக் காட்டிலும் பொறாமையே அதிகம் என்பதைக் காணலாம்.

ஒளி விசிறியின் வண்ண வரிச் சலனத்தால் பயனடைந்தவன் ஒருவனே—அதாவது விஞ்ஞானி மட்டுமே. ஒரு வகையில் இச்சலனத்தைத் துவக்கியதே விஞ்ஞானிதான்; அச்சலனத்தின் வேகம் விரும்பாத அளவுக்கு அவனை இழுத்துச் சென்றுவிட்டது. இன்றைய பௌதிக நூல், உயிர் நூல், உளநூல் யாவற்றிலும் பொது அறிவுக்குப் பொருந்தாத காரணதாக் கறை படிந்துள்ளதைக் காணலாம். இது வேதாந்தத்தை விஞ்ஞானத்திற் புகுத்திய விவகாரமல்ல, விஞ்ஞானமே தன் சோதனைக் கூடங்களிலிருந்து தோற்றுவித்த வேதாந்தமாகும். உதாரணமாகச் சென்ற நூற்றாண்டின் முடிவுவரை சர்வாதிகாரிகளின் தனிச் சொத்தாயிருந்த பௌதிக சாத்திரம் இன்று யோகி விஞ்ஞானமாக மாறிவிட்டது. பொருள்கள், தன்மைகள், காலம், இடம், காரணம், தவறு அளவைகள், அளக்கப்பட்டவைகளின் வருங்கால நிர்ணயங்கள், யாவும் கரையும் மணலென விஞ்ஞானியின் விரல்களூடு கழிந்துவிட்டன; மிஞ்சியுள்ளது கீழ் வருவது போன்ற விவரணங்களே: "ஒரு போக்கர் (Poker) ஆட்டச் சின்னச் சீட்டுக்கட்டு படப்பக்க(ace-side) மாக விழுவதைவிரும்புவதற்கு யாதொரு காரணத்தையும் எதிர்பார்க்காதவகையில் அமைக்கப்பட்டிருந்தால், ஆயிரம் முறை அலசிப்போட்டாலும் அது படப்பக்கமாகவே விழவேண்டும் என்று கூறிவிட முடியாது."

இது திட்டமான வர்க்யமே என்பதை எவரும் மறுக்க முடியாது; ஆனால், அகில உலகங்களின் ரகசியங்களை யெல்லாம் அறிய விரும்பும் நம் அறிவுப் பசிக்கு இது ஏற்ற உணவாகுமா? தற்கால விஞ்ஞானி கூறுகிறான், 'எதையும் விளக்குவதுஎன்வேலை அல்ல' என்று. தன் துயரில் (தோல்வியில்) தானே மகிழும் (masochism) தன்மையில், தன்னுடைய கூற்றுக்கள் எவ்வளவு தூரம் சரியற்றவை என்பதைச் சரியான வகையில், கணக்காக நிலைநிறுத்தத்தக்க சாம்யங்க (formulae)ளை உற்பத்தி செய்கிறான்; அதாவது, விஞ்ஞானத்தால் உலகப் பொருள்களை விளக்கமட்டு

மல்ல, வர்ணிக்கவும் முடியாது. சில ஆண்டுகளுக்குமுன், ஒரே சமயத்தில் எல்லா அணுக்களையும் எண்ணி, அவற்றின் வேகத்தையும் அறியக்கூடிய ஒரு அகண்டாகார மேதையால், மிஸ்டர் சர்ச்சி (Churchill) யின் சுருட்டு உட்பட உலக முடிவு வரையில் நடக்கப்போகும் வருங்காலச் செய்திகள் யாவற்றையும் முன்கூட்டியே கூற முடியும் என்று லேப்லாஸ் (Laplace) என்னும் விஞ்ஞானி நம்பினார். முந்தைய சர்வாதிகார சகாப்தத்திலிருந்த விஞ்ஞானிகளும், வேதாந்திகளும் தவிர்க்க முடியாத பௌதிக விதிகளின் கீழ்ச் சந்தோஷமாகவே வளையவந்தனர். அவர்களுக்கு வேறு வழியில்லை. 19-ஆம் நூற்றாண்டுப் பௌதிக உலகம் தன்னிச்சையற்ற ஒரு கடிகாரம்; அதன் ஓட்டத்தைத் துவக்குவதிலும், நடத்துவதிலும், இயற்கை விதிகளை அமைத்துக்கொண்டதிலும் தவிர மற்றவை யாவும் கடுமையான கட்டுத் திட்டத்துக்குட்பட்டே நடைபெற்றன. 20-ஆம் நூற்றாண்டு விஞ்ஞானத்தில் இந்த ஆரம்ப காலச் சுதந்திரம் காலகூடக் குறுக்கீடுகள் யாவினும் சிறுசிறு அளவில் சராசரியாக எங்கும் விரவப் பட்டுள்ளன; எனவே ஆதி சிருட்டியே சிருட்டிமேல் சிருட்டி (creatio continua) யாகத் தொடர்ந்து செல்லுகிறது. சுதந்திரம் (விடுதலை, தன்னிச்சை) தற்போக்கில் ஆதாரத்தேர்வு, என்பதெல்லாம் விஞ்ஞான ரீதியில் கணித்துரைக்க முடியாத பல அம்சங்கள் இயற்கையிலுள்ளன என்பதைத்தான் காட்டுகின்றன. 19-ஆம் நூற்றாண்டு விஞ்ஞானம் தேய்ந்த முதலீட்டுடன் கூடிய தெளிவான வரம்புக்குட்பட்ட உலகைக் காட்டியது; இன்றைய விஞ்ஞானமோ இம்மி (granules) அடுக்குகள் ஏறுமாறான படச் சுருணையைப்போல் ஒரே தரமாய் எங்கும் மங்கிய மசமசப்புலகைக் காட்டுகிறது, (அடுக்கு இம்மிகள் 'எச்' என்னும் ஒளி அணுக்களின் ஊக்கத்தால் உருவாகி ஹெய்ஸன்பெர்க் (Heisenberg) கின் •நிண்ணயமின்மைத் தத்துவத்தால் விளக்கம் பெறுகின்றன.) 'ஒன்றான முழுமை' (Pantheistic) 'விடுதலை வீறு', 'நிர்ணயமற்றது' 'கணக்கானது' 'தெய்விகமானது' 'தானே இயங்குவது' என்றெல்லாம் இவ்வுலகை வர்ணிப்பது அவரவர்கள் இஷ்டத்தைப் பொறுத்தது. விஞ்ஞானியின் அளவுகோலுக்கு அடங்காத அளவுகள் உலகில் உள்ளன என்பதே முக்கியமான விஷயம். இதனாலேயே விஞ்ஞானி தெரிந்தே மற்றவர்களைக் காட்டிலும் ஜாக்கிரதையாகக் காணு ஊதாக் கறையை நோக்கிச் செல்லுகிறான்.

**ஆடும் பெண்டுலம்**

சர்வாதிகாரி, கலைஞன், வரையறுக்கக்கூடாத நல்ல மனிதன், விஞ்ஞானி—இவர்கள் ஒவ்வொருவரையும் ஒவ்வொரு வகையில்

ஒளிவிசிறியின் வண்ணச் சலனம் பிரதிபலிக்கின்றது, ஒவ்வொரு வர் விஷயத்திலும் இதற்கான காரணம் வெவ்வேறு. இச்சலனத் திற்குப் பொதுவான காரணம் ஏதாவது உண்டா? விஞ்ஞானப் புரட்சி ஓரளவு கலைஞனையும். மனோதத்துவப் புரட்சி அரசியலை யும் பாதிக்கின்றன. இத்தகைய வேறு குறுக்கீடுகளும் சாத் தியமே. இவைகள் நேர்க் கோடுகளல்ல. கோணங்களைப் பிணைக் கும் சாய்வுக்கோடுகள்; காரண காரியத் தொடர்பான சங்கிலிக ளல்ல, குறுக்கும் நெடுக்குமாய்ப் பின்னிய வலைப்படலங்கள். ஒளி அணுத் தத்துவ (Quantum Mechanics) த்திற்கும், தன்னைத் தானே குற்றஞ் சாட்டும் புசாரின் (Bucharin) தத்துவத்திற்கும் இடையே யாதொரு காரண காரியத் தொடர்பும் கிடையாது; ஆனால் இரண்டும் வக்கிரமான வகையில் சாய்வுக் கோடுகளால் இணைக்கப்பட்டே யுள்ளன, இவைகளுள் பொதுப்படையான ஒரே காரணத்தை எதிர்பார்க்கலாகாது; பல காரணங்களின் சராசரிச் சமனத்தையே எதிர்பார்க்கலாம்.

வேமார் (Weimar) குடியரசின் நெருக்கடிக் காலத்தில் கம்யூ னிஸப் புரட்சியோ, ஃபாஸிஸப் புரட்சியோ ஏற்படுவது சாத்யம் எனத் தோன்றியது; சாத்யமல்லாது உளுத்துப்போனது அந்த ஆட்சியின் நீடிப்பே. எர்னஸ்ட் ஜூங்கர் (Ernst Juenger) 'பொதுமக்களின் முதலாளித்துவ எதிர்ப்பு ஆசை' என்று இந் நிலையை விவரித்தார். கணிக்க முடியாத, ஆனால் கடுமையான இந்த ஆசை மற்றப்படி மாறுபடும் பலவகையான மக்களிடம் பொதுவாயிருந்தது, இதன் சராசரிச் சமனத்தை 'லோகாயத விரோதக் குடிமை விருப்பம்' எனலாம். இதில் அறிவியல் தத்து வம், ஆழமற்ற நம்பகம், தயையற்ற வாதம், அகம் பிடித்த ஆணவம் என்ற 19-ஆம் நூற்றுண்டு ப்ரொமேதியன் (Promethean) கோட்பாடுகள் குடிகொண்டிருந்தன, அது தெய் விக ரகஸ்யம், கற்பிதக் கனவுகள், ஆய்வற்ற ஒழுக்கம் முதலான இடைக்கால அந்தி மயக்கத்தை விரும்பியது. சுருக்கமாக, எவற்றைவிட்டு விலகி, ஒளிவிசிறியின் வரிச்சலனம், காணுச் செங்கதிரின் கரையை அடைந்ததோ அவற்றையே மறுபடி யும் விழைந்தது. பார்க்கப்போனால் இச்சலனங்கள் பெண்டு லங்கள்போல் மாறிமாறி வருகின்றன.

இவ்வாறு அறிவியலுக்கும் கனவியலுக்கும் வரிச்சலனம் பெண்டுலம்போல் மாறிமாறி வருவது வாத ரீதியான சரித்திர இயக்கத்திற்கு எதிரானதல்ல; இவைகள் கடலுக் கேகும் நதி ஒன்றின்மேல் நிகழும் தண்ணீரின் ஏற்றத்தாழ்வு களைப் போன்றவை. மார்க்ஸிய (Marxist) சரித்திர ஆராய்ச்சியில் அலைகளின் போக்கைக் கவனியாமல் ஆற்றின் போக்கை மட்டும் கணித்ததே குறைவின் குழியாகும், நாஜி தத்துவத் (Nazism)தை

மார்க்ஸிய தத்துவத்தால் விவரிக்க முடியாது; இதற்கு நதியின் போக்கைக் காட்டிலும் நீரின் ஏற்றத் தாழ்வுகளே முக்கியம். எனினும் மாறிமாறி ஆடும் பெண்டுலம் மட்டும் சரித்திர உண்மைகளைக் காட்டப் போதுமான சாதனமாகாது; அலைகளைப் பற்றிப் பேசுமுன் ஆற்றைப்பற்றி அறிய வேண்டுவது அவசியம்.

தாவும் பெண்டுலத்தில் பொதுஜனத் தழைவுகளின் வரிச்சலனத்தைத் தனி மனிதனது உறக்கத்திற்கும் விழிப்பிற்கும் ஒப்பிடுவது தவருகாது. பொதுவாக ஆய்வற்ற கற்பனைப் பருவங்களை உறக்கமும் கனவும் எனலாம். இக்கனவுகள் அமைதியானவை யல்ல, பயங்கரமானவை. இக்கனவுகளில்லையேல் ப்ரொமேதியன் (Promethean) அல்லது சர்வாதிகார விழிப்பு நிலைக்கு வேண்டிய வாழ்வின் வீர்யத்தைப் பெறமுடியாது. ஒவ்வொரு கனவுப் பருவத்தின் பிறகும் ஒரு நனவுப் பருவம் வந்தே தீரும்; மக்களின் வாழ்க்கைத் திட்டத்தில் சந்நியாசச் சூழ்நிலை இரவுகளும் சர்வாதிகாரச் சூழ்நிலைப் பகல்களும் அடுத்தடுத்தே வரும் போலும். எனவே, நமது தற்கால நாகரிகம் செத்துக் கொண்டிருக்கவில்லை, உறங்கிக் கொண்டிருக்கிறது எனலாம்.

* இக்கட்டுரை 1942, ஜூன் மாதம், ஹொரைஸன் (லண்டன்) என்னும் பத்திரிகையில் முதன் முதலாக வெளியிடப்பட்டது.

# பரங்கிக் காய்ச்சல்*

இந்நாட்டின் இலக்கிய விரியோகஸ்தர்கள், தலையங்க ஆசிரியர்கள், விமர்சகர்கள், கட்டுரையாளர்கள், இசைமலையான பர்னஸஸ் (Parnassus) மேல் ஏறி இருக்கும் எழுத்தமைச்சர்கள் யாவரையும் அடிக்கடி வரும் ஃப்ரெஞ்சு ஃப்ளூ (French Flu) என்னும் பரங்கித் தொத்து நோய் பற்றிக் கொள்ளுகிறது. சாதாரணமாய் நிதானப் போக்கும், ஜாக்கிரதையும், அவநம்பகமும் உடைய ஒருவர் திடீரென்று பரங்கிக் கவிதையையோ, வசனத்தையோ கண்டதுமே தன்வச மற்று ஆராய்ச்சித் திறமையை இழந்து விடுகிறார். இதுவே, இந்நோயின் அறிகுறி. ஹே ஃபீவர் (hay fever) என்னும் காசக் காய்ச்சலில் ஒரே ஒரு மூச்சு நோயை மறுக்களிக்கச் செய்வது போல். 'பூயாபெஸ்' (bouillabaisse—மீன் சூப்பு), க்ரெவ்கீர் (creve-coeur— உள்ள உடைவு), பேட்ரீ (Patrie—ஸ்வதேசம்), மீனீ (minette—பூனைக் குட்டி) போன்ற ஒரே ஒரு வார்த்தை போதும், உடனே படிப்பவர் அசாதாரணமான ஆவேசம் கொள்கிறார்—கண் ததும்புகிறது, துன்பமயமான இன்பத்தால் இதயம் தோய்கிறது, கண மூலங்கள் (ductless glands) குருதி வெள்ளத்திற் கலந்து யௌவனக் குதூகலத்தோடு கொந்தளிக்கின்றன. ஆங்கிலக் கவிஞன் ஒருவன் 'என் தந்தையர் நாடு (my fatherland), 'என்னுயிர் my soul), என் இதயம் (my heart) என்றெல்லாம் எழுதுவதை நாம் விரும்புவதில்லை; ஆனால் பரங்கிக் கவிஞன் லா பேட்ரீ (la patrie—என் ஸ்வதேசம்); லா ஃப்ரான்ஸ் (la France) என் ஃபிரான்ஸ்), மான் கீர் (mon coeur என் இதயம் ), மான் அமி (mon ame—என் உயிர்) என்று இசையுடன் இழைக்கும் போது நோயாளி பரவச வெறி கொண்டு மயிர்க் குச்செறிவதைப் பார்க்கிறோம்.

சென்ற ஆண்டில் ஃபிரெஞ்சு நாட்டிலிருந்து மூன்று நூல்கள் வெளிவந்தன; இவை இலக்கிய தெய்வதரிசனங்கள் எனப் போற்றப்படுகின்றன: கைடி (Gide)ன் மானசிகப் பேட்டிகள் (Imaginary interviews); ஆரகா (Aragon) னின் லா க்ரெவ் கீ (le Creve coeur)—இதய வேதனை); வெர்கா (Vercor) ரின் லேர் ஸைலன்ஸ் டி லா மெர் (Le Silence de la Mer—அந்தக் கடலின் அதிசய மோனம்) என்பவையே, செவ்வாய் கிரஹத்திலிருந்து செய்தி வந்தால் எவ்வளவு ஆர்வத்துடன் கேட்பேனோ அவ்வளவு ஆர்வத்துடனும், அக்கறையுடனும் நான் கைடின் பேட்டிகளைப் படித்தேன், அது சங்கடமான படிப்பு. அவரது நூல்களில் எப்போதுமே அதீதமானதோர் அகங்காரம் திகழும், நுணுகி

நொடிந்த வெறுமைக் காற்று வீசும். அவை பரங்கி இளைஞர் களை வருந்தத் தக்க வகையில பாதிக்கின்றன. (இதன் காரணம் விச்சி (Vichy) அரசினரால் வெறுக்கப்படும் அவரது வக்ரமான காமக் கொள்கைகளல்ல:—புத்தகப் படிப்பாலேயே எவரும் பால் மாறிய (invert) காமப் பதிதனுக முடியாது) அந் நூற்களி லுள்ள ஆன்மிக அகந்தை—உபதேசம் பெற்று உயர்ந்தவர் கள், தனிப்பட்ட சமயத்தைச் சார்ந்தவர்கள், இன்பத் திருவின் ஏற்றம் படைத்த கொள்கைகளை உடையவர்கள் தாங்களே என் னும் ஆணவமே. இவற்றை ஆராயப் புகின், வெறும் மணலாய்க் கரைந்து போகின்றன. இள அறிஞர்களுக்கு கைட் அளிக்கும் சேதி, மன்னுதி மன்னன் பிறந்த மேனிப் பொன்னுடையைக் கண்டதாக ஒருவன் கூறினுல் அதைக் கண்டதில்லை என்று எவ ருக்கும் ஒப்புக்கொள்ளத் தைர்யம் இராது என்பதே.

மத்யதர வகுப்பினரான பரங்கி இளைஞர்கள் மாம்ஸ தர்மம் (le bifteck), ஆன்மிக தர்மம் (l'esprit) என்று இரு வகையாகப் பிளவுண்ட ஒரு உலகில் வசித்தனர், தங்களது அவநம்பகங்கள், ஆசைக் களறிகள் எதுவும் ஆன்மாவைத் தொடமுடியாது என்று நம்பினர். பகலில், இரண்டாந்தரக் காதுகள் கேட்ப, பரங்கியர் ஆன்மிகப் பெருமை (le genie francais) யைப் பேசுப வர்; இரவில் சக்ரவர்த்தி உடையணிந்து இன்பம் திளைப்பர். இந் நூலிலிருந்து கைட் அதிகம் மாறி விடவில்லை — கீழ்நிலைக்குத் தவிர—என்று தெரிகிறது; அதே அர்த்தமற்ற, சலிப்புத் தரும், ஆகாசக் கோட்டைகள், உண்மையற்ற, உருவற்ற, நிழலற்ற வெற்றொளி வேடிக்கைகள்—அவ்வளவே. சில மாதங்களுக்கு முன்பு நான் படித்த அந் நூலிலிருந்து ஒரு வார்த்தை கூட, ஒரே ஒரு கருத்துக்கூட எனக்கு நினைவில்லை: மணல் கரைந்துவிட் டது, மிஞ்சியிருப்பது தெளிவற்ற ஒரு வாசனையே. போதம் நிறைந்த புத்தகம் எனில் வார்த்தைகள் மறைந்த பிறகும் கருத் துக்கள் நம் நினைவிலிருக்க வேண்டும்.

லெ க்ரெவ் கீர் (Le creve coeur) என்னும் கவிக் கொத் தின் முகவுரையில் லூயி ஆரகா (louis Aragon)னைப் பற்றி அடியிற் கண்டபடி எழுதப்பட்டுள்ளது:—

> நான் அவரை (ஆரகானை) ஒரு வேனிற்கால மாலையில், நெவுல்லி (Neuilly)த் திரு விழாவில் முதன் முதலாகச் சந்தித் தேன். அவரும். அவரது தொடர்பற்ற கனுக் கலைஞர்க ளான ஸர்ரியலிஸ்ட் (Surrealist) இளந்தோழர்களும் கூடி இருந்தனர், அவர்களது கழுத்துக் குட்டைகள் காரிருளில் கதிர் வீசி மின்னின. உலகத்தில் அவர்களுக் கென்றே உள்ள ஒரே ஒரு பெண்ணுன அழகும், அறிவும்

மிக்க ஃபெம்மே ட்ரோன் (Femme Trone) ஆசையைப் பெற அவர்கள் காத்து நிற்க, அவள் ஒரு பீடத்தின் மேல், கையும் காலுமற்றுக் கழுத்தும் மார்புமாகச் சுற்றி, தன் போட்டோக்களில் வாயில் இடுக்கியிருந்த பேனுவால் கையெழுத்திட்டாள். அவர் சிறிய உருவினர், வெளுத்த மேனியர், படபடப்பு மிக்கவர், பனித்த கண்ணினர். அழகிய புருவங்களுக்கு மேல் பின்புறம் சீவி விட்டுச் சிதறிய கருங்குழலினர். அப்பால், அவரும் அவரது சகாக்களும் மார்க்விஸஸ் (Marquesas) தீவுகளுக்கு உல்லாச யாத்திரை போயினர். இவ்வுல்லாச யாத்திரை ஒரு கனவினுல் உத்தரவிடப்பட்டதாம். சிறிது காலத்தில் மயக்கம் தீர்ந்து, தம்மையே வெறுத்தவராய்—அரசியல் காரணங்களுக்காக கனுக்கலேயை விட்டு விலகித் தனிமனிதச் சார்பற்ற பொது உடைமையான கம்யூனிஸ்ட் கட்சியில் சேர்ந்தார்.

இவைகள் எப்படியாயினும் அவர் கவிஞராய் இருக்கமுடிந்தது; அவரது பழைய அந்தரங்க, பொதுவாழ்வினைப் பற்றி எவருக்கும் கவலையில்லை; ஆனுல் பரங்கி நோயைப் பரப்புபவர்களுக்கு, ஆரகான் ஒரு கவிஞர் என்று மட்டும் கூறினுல் போதாது. தீவிரவாத வீரன், த்யாகமூர்த்தி என்றெல்லாம் விளம்பரம் செய்ய வேண்டும், எனவே, 'ராணுவவிரோதமான பாட்டெழுதியதால் அவர் சிறை செய்யப்பட்டார், பின்னர் ரஷ்யா சென்றுர்—. போர் துவங்கியதும் கம்யூனிஸ்ட் என்ற வகையில் தனிப்பட்ட ஆபத்துகள் நிறைந்த ஒரு வேலையில் நியமிக்கப்பட்டார்'—என்றெல்லாம் கூறினர். உண்மை என்னவெனில், ஆரகானின் கம்யூனிஸ வாழ்க்கையும் ஸர்ரியலிஸக் கலை வகையிலேயே நடந்தது. மால்ராக்ஸ் (Malraux) மக்களாட்சி வான்படையின் (Republican Air Force) சர்வதேச முன்னணி (International Squadron)யை வகுத்தபோது; கார்ன்ஃபோர்டு (Cornford)ம், ரால்ப் ஃபாக்ஸ (Ralph Fox)ம் படைமுகப்பில் உயிர் விட்டபோது, ஆரகான் ஸ்பானியப் படை வகுப்பினருக்கு ஒலிபெருக்கி பொருத்திய வண்டியில் சென்று கவிதைகளால் ஊக்கமூட்டினுர், இதனுல் எல்லாக் கலைஞர்களும் படைமுகப்பில் உயிர் விடவேண்டும் என்று அர்த்தமல்ல. ஆனுல், வார்த்தைகளுக்கு ஏதாவது பொருளிருப்பின், மேற்கண்டவரே வீரர்கள், தியாகிகள்; ஆரகானைப் போன்றவர்களல்ல. படைவிரோதப் பாட்டுக்காக அவரைச் சிறைசெய்தது ஒரே நாளில் ஓய்ந்துபோன ஒரு வேடிக்கை விவகாரம். அவர் புகல் தேடி ரஷ்யாவுக்குப் போகவில்லை; எழுத்தாளர் மகாநாட்டில் பங்கெடுத்துக் கொள்ளவே போனுர், 'ஆபத்து நிறைந்தவேலையில்' அவர் அமர்த்தப்படவில்லை, வைத்தியப்படையில் ஒரு சிறிய பதவியில் தம் கடமைகளைச்

சரிவரச் செய்தார்; அவ்வளவுதான். மறுபடியும் கூறுகிறேன், எழுத்தாளன் வீரனாய் இருக்க வேண்டுமென்று யாரும் எதிர் பார்க்கவில்லை; இஷர்வுட் (Isherwood) வேட்டைநாய்ப் படை (Commando)யில் சேருவதை எவரும் விரும்பியதில்லை. தீவிரவாதி களின் போராட்டம் ஒரு இசை நாடகமல்ல; இசை நாடக வீரர் களை யுத்த வீரர்களாக்குவதும் பரங்கி நோய்ப் போக்கின் ஒரு பண்பாடே. இப்படிச் செய்வது, வேறெதற்காக இல்லை எனி னும், இறந்தவர்களிடம் காட்டும் மரியாதையை உத்தேசித் தேனும், அருவருப்பையே உண்டாக்குகிறது.

கவிதைகளைத் தவிர, லே க்ரெவ் கிரில் ஆரகான் எழுதிய "1940-இன் எதுகை" (The Rhyme in 1940) என்னும் ஒரு கட்டுரையும் உள்ளது - அதில் பல உண்மைகள் விளங்குகின்றன; பரங்கிக் கவிதையில் தாம் புதிதாகப் புகுத்திய பல பண்புகளைக் குறிப்பிடுகிறார்; முதலாவது எதுகையில்லாக் கவிதையிலிருந்து எதுகைக் கவிதைக்குத் திரும்பியதே; ஸர்ரியலிஸ்ட் கலைக் கொள்கைகளுக் கேற்ப, இதுவும் ஏதோ தொடர்பற்ற வகையில் பரங்கியர் தோல்வியோடு இணைக்கப்பட்டுள்ளதாகவே அவருக் குத் தோன்றியதுபோலும்.

"1940-ஐப்பற்றி எழுதுகிறோம், புது உலகம் இல்லாத போது புதுக் கவிதையும் இராது என்பது பொய் என்று கூறவே நான் என் குரலை எழுப்புகிறேன். இதுவரையில் பரங்கிக் கவிதையில் ரேடியோ பாஷையையும், யூக்ளிட் (Euclid) அல்லாத க்ஷேத்ரகணிதங்களை (geometries)யும் யார் புகுத்தி யுள்ளனர்?"

என்றெல்லாம் கூறுகிறார். இவற்றையெல்லாம் இந் நூற்றாண்டின் மூன்றாம் பத்தி (thirties)லேயே புது எழுத் தாளர் குழு (New Writing Group) விடமிருந்து நாம் கேள்விப் பட்டிருக்கிறோம்; பிடித்தமோ பிடித்தமில்லையோ ஆடன் (Auden) மேதையால் இவைகளை, அதாவது விஞ்ஞான நுணுக்க வார்த்தைகளை, நாம் ஒப்புக் கொண்டுமிருக்கிறோம். ஆரகானது புதுமைகளெல்லாம் பத்து ஆண்டுப் பழமையான வையாயிருந்தன. மாஸ்கோ மனித வேட்டையின்போதுதான் கம்யூனிஸத்தை அவர் கண்டுபிடித்தார்; ஃபிரஞ்சுத் தோல்வியின் போதுதான் யூக்ளிடில்லாத புது க்ஷேத்ரகணிதத்தைக் கண்டு பிடித்தார். அவர் கண்ட இரண்டாம் புதுமை வாக்யங்களின் அளவைக் குறிகளை (punctuations) நீக்கி விடுவதே. இதனால் அவரது வாக்யங்கள் சட்டைப்பையில் உருகிச் சவ்வான சாக் லெட்டைப் போல் மக்கித் தோன்றுகின்றன. மூன்றாவது 'மூவ்' என்பதற்கு 'லவ்' என்பது போன்ற அரைகுறை எதுகை கள். டோனே (Donne), கிதே (Goethe) முதலாக எல்லாக்

கவிஞர்களுந்தான் வேறு வழியில்லாதபோது அரைகுறை எதுகைகளை உபயோகித்துள்ளனர். ஆனால் தங்களது இக் குறையை அவர்கள் ஒரு தத்துவமென்று பெருமைப்படுத்த வில்லை; இக்குறைபாடுகளைக் காட்டி, ஆரகானைப் போல், இவற் றையே பின்பற்ற வேண்டுமென்று பிரசாரம் செய்யவில்லை. உதாரணமாக:—

பார் லெர்ட்' அமார் ஸெஸ்ட் பார்லெர் டெல்வ்ய எட் பார்லெர் டெல்வ்ய

ரஸஸ்ட் ட்யூட் லா ம்பூஸிகே எட் ஸே ஸோன்ட் லெஸ் ஜார்டின்ஸ்

இன்டர்டைட் யோ ரேனாட் ஸெஸ்ட் எப்ரிஸ் டி யார்மைட் எட் எல்

எய்மி ஸான்ஸ் யென் ரெய்ன் டைர் அப்ஸர்டி பெலேடின்

என்பது ஒரு பாட்டு; உங்களுக்கு ஃபிரஞ்சு மொழி தெரியாவிட் டால் பாதகமில்லை; இங்கு நாம் அறியவேண்டுவது 'டேல்யே' என்பது 'எட் எல்' என்பதோடு எதுகையாய் வருகிறது; ஆங்கிலத்தில்

————————ரெய்ன்

————————ஐன்

டி இட் எ பிடி—

என்பது போல. அவரே இன்னும் சில உதாரணங்கள் தருகி றார்-(இவரெஸ்—என்ட்ஸெ, ஓரெக்—வாடோர்—கோர்). இவை கள் நம்மை மயிர்சிலிர்க்க வைக்கின்றன. பின்னர் வழக்கமான பணிவுடன்,

'இத்துடன் உதாரணங்களை நிறுத்திக் கொள்ளுகிறேன். புதுக் காவியச் சாம்யங்களை விரும்புவோருக்குச் சரியான வழியைக் காண்பித்துள்ளேன் என்று நம்புகிறேன். பலர் ஆமென்று தலை அசைப்பதை எதிர்பார்க்கிறேன். 1941-இல் இது போன்ற பல புதுமைகள் ஏற்றுக்கொள்ளப்படும்.'

இதுவரையில் ஆரகானே, தம் கவிதைகளைப் பற்றிக் கூறி யதைக் கவனித்தோம். இனிக் கவிதைகளையே பார்ப்போம். ஃபிரஞ்சு நாட்டிடம் நமக்குள்ள பேராபிமானத்தைப் பின்னணி யாகக் கொண்டு கவனித்தால் இக்கவிதைகள் இசைமிகுந்துள் ளன; ஒவ்வொரு வரியும் எதுகையில் முடிவது நீண்ட நாட்க ளாக இழந்த இன்பத்தைத் தருகிறது. இரண்டாவது ஃபிரஞ்சு பாஷையாகையால் மென்மையான டர்க்கிஷ் டிலைட் (Turkish Delight) மிட்டாயைப் போல் நம் வாயூற இனிக்கிறது. 'ல ஸாஜ்

ட்யூ கேபினெட் எஸ்ட் இண்டர்டிட் பென்டெண்ட் லா அரட் ட்யூ ட்ரெய்ன் என் கேர் (L'usage du Cabinet est interdit pendeant l'arret du train en gare) என்பதற்கு ஒரு ஸ்டேஷனில் ரெயில் நிற்கும்போது கேசாலங்காரம் செய்துகொள்ளக்கூடாது என்றுதான் அர்த்தம்; எனினும் 4 வருடங்கள் ஐரோப்பாவை விட்டு விலகி இருந்த ஒருவர் காதில் இது வானக்கோளங்கள் வளையவரும் மந்தமான இசையைப் போல மகிழ்ச்சி உண்டாக்கு கிறது. ஃப்ரான்ஸிடம் மதிமயங்கிய பேரன்பு உடையவர்களுக்குப் பாரி நகரத்துப் பாதாள ரெயில்வே ஸ்டேஷன்களின் (வாவின், லெஸ்பூட்டஸ், சரமாண்ட், ரேமூர், ஸெபஸ்டபோல், போர்ட்டெஸ் லிலாஸ் போன்ற) பெயர்கள் கூடத்தான் இனிக்கின்றன. முதலில் இதயம் துள்ளுகிறது, கவிழ் கவ்வு கிறது; உடனே பரங்கி நோயின் பரவச ஐவ்வு பாய் கிறது. இவ்விதமான அமித ஆசைகளையெல்லாம், அவற்றால் விளையும் மிகை தொகை வகைகளையெல்லாம் விட்டு விட்டு ஆங்கிலக் கவிஞன் ஒருவனைத் தவறு கூறுத ஆங்கில விமர்சகர்கள் கணிப்பதுபோல் கணித்தோமாகில், ஆரகான் திறமைசாலியே, காவியச் சிறு குட்டையிலுள்ள பெருந்தவளைகளில் ஒருவரே, தமது விசித்திர சம்பிரதாயங்கள், 'ரெடிமேட்' கரடி வித்தைகள் (தயக்கமற்ற தகிடுதத்தங்கள்) உருவற்ற உணர்ச்சிகள், குடி வெறிக் கற்பனைகள் முதலியவற்றை நீக்கி விட்டால் என்றாவது ஒரு நாள் அவரைத் தட்டிக்கொடுத்து நல்ல கவிஞர் என்று கூறலாம். ஆனால் 'க்ரெவ் கீரை' ஐரோப்பா முழுமைக்கும் பொதுவானதோர் உயர்ந்த போதம் என்பது ஐரோப்பாவையும், இறந்துபோன இலக்கிய மேதைகளையும் இழிவுசெய்வதேயாகும்.

கடைசியில் வெர்காரின் லே ஸைலன்ஸ் டி லா மெர் என்னும் கதைக்கு வருவோம். இந்தப் புனைபெயருள் மறைந்துள்ளவர் புகழ் வாய்ந்த ஓர் இலக்கிய கர்த்தாவாம். கதை பின்வருமாறு:—

ஒரு ஜெர்மானிய அதிகாரி ஒரு ஃபிரஞ்சு மனையில் தங்க நேர்ந்தது; அவ்வீட்டில் ஒரு கிழவரும், அவர் மறுமகளும் வசித்து வந்தனர். அந்த அதிகாரியின் பெயர் வெர்னர் வான் எப்ரென்னக் (Werner von Ebrennac). அவர் ஒரு இசைக் கலைஞர், சாஹித்யக்காரர், இளைஞர், வனப்பு வாய்ந்தவர், பண்பாடு மிக்கவர், உணர்ச்சியாளர், ஃபிரஞ்சு நாட்டின் மேல் அன்புடையவர், அதைப்போற்றிப் புகழ்பவர், ஃபிரஞ்சுப் பழைய இலக்கியங்களைத் தலைகீழாகப் படித்தவர், போர் முடிவில் ஃபிரஞ்சு நாட்டுக்கும் ஜெர்மனிக்கும் நிரந்தரமான சமாதானம் ஏற்படும், ஃபிரஞ்சு நாட்டின் கலாசாரக் கவினின் கீழ் இரு நாடுகளும் ஒரு தெய்விகமான திருமணத்தால் ஒருமைப்பட்டு வாழும் என்பதை உறுதியாக நம்புபவர். இவைகளைப் பற்றியே அவர்

பேசுகிறார்; நெகிடித் தீமுன் அமர்ந்து, 1940-41 மாரிக்காலம் பூராவும், அக்கிழவனிடமும், மறுமகளிடமும், தாழ்ந்து, தணிந்த, இனிமையான குரலில் பேசுகிறார். கிழவர் தம் சுங்கானில் புகை பிடிக்கிறார். பெண் பூ வேலை தைக்கிறாள், இருவரும் வாய் திறக்கவில்லை, ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை; நூற்றுக்கு மேற்பட்ட மாரிக்கால மாலைகளுக்குக் கதை நீண்டு கொண்டே போகிறது. எனினும் கல்லுளிமங்கர்களாய்ச் செவிட்டூமைகள் போல் அவ்விருவரும் மௌனமாய்க் கதை கேட்கின்றனர். ஈற்றில் வெர்னர் விடுமுறை பெற்றுப் பாரி நகருக்குச் செல்லுகிறார். நாஜிகள் விலங்குகளினும் கேடு கெட்டவர்கள் என்று அறிந்துகொள்ளுகிறார். (வேமார் ஜனாட்சியின் ஆதரவாளராயிருந்தும், பண்பாடு மிக்க உணர்ச்சி வசத்தராய் இருந்தும் அதுவரையில் அவருக்கு அவ்விஷயம் தெரியாதது ஆச்சர்யமே); உடனே ரஷ்ய முன்னணிப் படையில் சேர்ந்து தன்னைத்தானே மாய்த்துக்கொள்ள நினைக்கிறார். இத்தீர்மானத்தைச் சொன்னதும் அம்மறுமகள் (அவளும் இவரும் ஒருவரை ஒருவர் காதலிக்கின்றனர் என்பது தெரிந்ததுதானே) முதல் முதலாகவும் கடைசியாகவும் 'போய் வாருங்கள்' என்ற ஒரே ஒரு வார்த்தை கூறி விடை அளிக்கிறாள். இக்கதையை அக்கிழவன் தன்மையிடமாய் 'நான்' இட்டு கூறுகிறான்.

இப்போது மனோதத்துவ இயல்புப்படி இக்கதையை ஆராய்ந்து பார்ப்போம். நூறு இரவுகள் தொடர்ச்சியாக ஒருவர் ஒன்றும் பேசா ஊமையர்களுக்குக் கதை சொல்லமுடியுமா? இரண்டாவது மாலையிலேயே அவரது நாடி நரம்புகள் அதிர்ச்சியுற்று வெறி பிடித்தவர்போல் ஏதாவது செய்வார்—கிழவரது தோட்களைக் குலுக்கலாம், கதவைப் படீரென்று சாத்தலாம், தன் அறைக்குச் சென்று திரும்பாமலே இருக்கலாம். நூற்றுக்கு மேற்பட்ட இரவுகள் கதை கேட்ட பெண்ணும் கிழவனும் இதே மாதிரிதான் நடந்து கொள்ளமுடியும்.

மனோதத்துவப்படி கதை முழுதுமே (நிழலினும்) வெறுமையானது, அரசியல் தத்துவப்படியோ அதைக் காட்டிலும் மட்டமானது, விஷயமறிந்த இந்தச் சீமானது ஒவ்வொரு வார்த்தையும், எண்ணமும் நாஜி தத்துவத்திற்கு விரோதமானதே; எனினும் ஆசிரியர் ஃபாஸிஸப் பகைவன் (anti-fascist) என்ற வார்த்தையை வெறுப்பதாகத் தெரிகிறது. ஒருவரது அரசியற் கொள்கைகள் அவரது தேசபக்தியை மீறுவதை அவர் விரும்பவில்லை போலும். இதனாலேயே வான் எப்ரென்னக் இருமைத் தன்மை (Schizophrene) யுடன் தூக்கத்தில் நடப்பவரைப்போல் தோன்றுகிறார். அறிவாளியா யிருந்தும் அவர் ஹிட்லர் பிரசங்கங்கள் ஒன்றைக்கூடப் படித்ததில்லை; ரீச்ஸ்டாக் (Reichstag–

—ஹிட்லரின் அதிகார ஸ்தலம்) கின் முதல் வெடியிலிருந்து போலந்தைத் தாக்கியது வரையான பத்து வருடகாலப் பத்திரிகைகள் எதையும் பார்த்ததில்லை என்றே நினைக்கவேண்டியிருக்கிறது. இவ்வகையில் தான் இக்கதையின் முரண்பாடுகளைச் சரி செய்ய முடியும்; சமூக இயல்புகளை மழுப்பிவிட முடியும்; 1870-இன், ஏன் 1815-இன் என்றே கூறலாம்; ஃபிரஞ்சு—ஜெர்மன் கூட்டுறவுக் கனவின் சின்னமாகத் தற்போதைய யுத்தத்தை உருவகம் செய்ய முடியும். (புனை பெயரிலுள்ள) வெர்னர் யாரென்று தெரிந்தால் அவர் ஒரு ஃபிரஞ்சு தேசத்து ஃபாஸிஸ்ட்டாகவோ, குறைந்தபட்சம் பின்னேற்றம் விரும்பும் மிதவாதியாகவோ தான் இருப்பார் என்று பந்தயம் கட்டலாம்.

இந்நூலில் அமிதமாக நம் பொறுமையைச் சோதிப்பது அதில் தாழ்வு மனப்பான்மையும், அடங்கா ஆணவமும் ஒன்ருய்க் கலந்து உறவாடுவதே. மேன்மையான, நல்லெண்ணம் கூடிய, தன்னலமற்ற ஃபிரான்ஸின் நண்பர் எவராவது இருந்தால், அது கனவிச்சைக் கதாநாயகனை நம் வான் எப்ரென்னுக்கே; தன்னுடைய ஃபிரஞ்சு பக்தியை அவர் தற்கொலைக்கும் தயாராகும் அளவுக்குக் கொண்டு செல்லுகிருர். அப்படியிருக்கக் கதையில், மூடத்தனமான, ஆணவம் நிறைந்த மௌனத்தால் அவரைத் தண்டிப்பானேன்? ஒரே ஒரு காரணம் இந்த நாஜி—எதிர்ப்பாளர் ஜெர்மானியத் தாய் தந்தையர்களுக்குப் பிறந்தவர் என்பதே. இங்கு, 1939-இல், எந்த மனோபாவம் ஃபிரான்ஸிலிருந்த ஜெர்மானிய-பரங்கி ஃபாஸிஸப் பகைவர்களை ரகசியக் கடுஞ்சிறைக் கொடுமைகளுக்கனுப்பியதோ அதே மனோபாவத்தை 1942-இலும் இக்கதையில் காண்கிரும். வீண் வழக்காடும் நாடு கடத்தப்பட்ட ஃபிரஞ்சு அரசியல் வாதிகளைக் காட்டிலும் அதிகமாக எம். வெர்கார் எதுவும் அறிந்திருப்பதாகக் கூறமுடியாது. துன்பம் எப்போதுமே தூய்மைப்படுத்தும் என்பதற்கில்லை; நேர்விரோதமான உணர்ச்சிகளையும் தூண்டிவிடலாம், எது எப்படியாயினும் ஃபிரஞ்சு நாட்டுக் கலாசாரப் பழம் பெருமையைப் போற்றுவோர் உண்மைத் தியாகிகளைச் சுற்றியுள்ள ஒளிப்படலத்தையும், காமாலைக் கண்களூடு தாங்கள் காணும் வெற்ருெளி விங்யாச வெளிச்சத்தையும் வேறுபடுத்தி நோக்கவேண்டிய சமயம் வந்து விட்டது.

ஃபிரஞ்சு நாட்டின் பெயரில் தகுதியோடு பேசக்கூடிய தக்கோர்கள் மௌனமாயிருக்கின்றனர். சீனப் பழமொழி கூறுவதுபோல் மீன் பிடிக்க ஒரு நேரமும், மீன் வலையை உலர்த்த ஒரு நேரமும் உண்டு என்பதை அவர்கள் அறிவர். இன்று, இலக்கியத்திலும் கறுப்பான கள்ளமார்க்கெட் புகுந்து விட்டது. மனிதர்களின் தியாகங்கள், துன்பங்கள், போராட்டங்கள், ஏமாற்

றங்கள் யாவும் வியாபாரப் பொருள்களாக விலைக்கு விற்கப் படுகின்றன; ஆன்மிக தர்மம் வெறும் குடிவெறி மயக்கமாய் விட்டது. ஐரோப்பாவின் அந்தரங்கமான (மறைந்திருக்கும்) இயல்புகளை (இயக்கங்களை) ஹார்லிவுட் எவ்வண்ணம் காட்டு கிறதோ அவ்வண்ணமே இன்றைய இலக்கியப் படாடோபங்கள் ஃபிரஞ்சுப் பொது மக்களின் வாழ்க்கையைச் சித்தரிக்கின்றன. ஃபிரஞ்சுத் தரத்துக்கு இவை பயன்படா. தவிர, நம்முன்னுள்ள தவிர்க்கமுடியாத உண்மை நிலைகளை மறைத்து இவைகள் ஆபத்தான வகையில் வழி தப்பிச் செல்லச் செய்கின்றன.

---

* 1943, நவம்பர், ட்ரிப்யூன் (லண்டன்) பத்திரிகையில் இக் கட்டுரை முதன் முதலாகப் பிரசுரிக்கப்பட்டது.

# நாவலாசிரியன் மயக்கம்*

ரஷ்யப் பெரியார்களில் ஒருவர்—டர்கினெவ் (Turgenev) என்று நினைக்கிறேன்— திறந்துள்ள சாளர முகமாய் அமர்ந்து மேஜையின் கீழ் ஒரு வெந்நீர்த் தொட்டியில் காலை வைத்துக் கொண்டால்தான் அவருக்கு எழுத வருமாம். நாவல் புனைவோருக்குத் தகுந்த நிலை இதுவே என்று நான் நம்புகிறேன். வெந்நீர்த் தொட்டி உணர்ச்சியின் உத்வேகம், உள்ளத்தின் அடிப்பீடம், கற்பனையின் கருவூலம்—இன்னும் எப்படிச் சொன்னாலும் சரி— இவைகளின் அறிகுறியாக நிற்கிறது; திறந்துள்ள சாளரம் வெளி உலகை, கலைஞனது சிருஷ்டிக்கான மூலப்பொருளை உணர்த்துகிறது.

இப்போது நாம் வெந்நீர்த் தொட்டியை மறந்து விடுவோம்; நமது நாவலாசிரியனை உண்மையான கலைஞன், கற்பனைத் திறன் உடையவன் எனக் கொள்வோம்; திறந்திருக்கும் சாளரத்தில் நாம் கவனத்தைச் செலுத்துவோம், அது மேஜைக்கெதிரிலுள்ள கலைஞனை எவ்வாறு பாதிக்கிறது என்று பார்ப்போம்.

முதன் முதலாகப் பெரு வலிமையுடன் சாளர வழியே தெரியும் வெளியுலகம் திரைகளை இழுத்துக் கதவுகளைச் சாத்தித் தாளிடத் தூண்டுகிறது. வெளிப்படையான இச்சிறிய விவகாரம் ருசிகரமான பல கோணங்களை உடையது. அவைகளிலெல்லாம் மிக ஆபத்தானது இவ்வுணர்ச்சியின் இயல்பான தன்மையே. எழுத்தாளனுக்கு ஒருமைப்பாடு வேண்டும், அவனது நாடி நரம்புகள் வெகு சுலபமாக அமைதியை இழந்துவிடும். திறந்த அச் சாளரம், அதனூடு அறைக்குள் புகுந்து துளைக்கும் கீச்சொலிகள், சிரிப்புகள், புலம்பல்கள், தோன்றி மறையும் சச்சரவுகளின் கூச்சல்கள்—இவைகளைத் தாங்க எழுத்தாளன் தொடர்ந்து, துணிந்து அதி ஜாக்கிரதையாக முயல வேண்டும்.

இந்த மயக்கும் இச்சையின் மற்றொரு பண்பு சாதாரண மயக்கு இச்சைகளுக்கு நேர்மாறானது; கீழ்த்தரமான ஒழுக்கங்களைப்பற்றியதல்ல, ஆன்மிகத் துறையின் உன்னதமான உயிர்ப்புகளைப் பற்றியது; சாந்தம், அழகு, கடவுளுடன் கலப்பதுங்கூட எனலாம்—இவற்றால் இம்மயக்கம் நம்மை வசப்படுத்தப் பார்க்கிறது. இவ்வாசை யென்னும் பூதம் உன் உயிரைக் கேட்பதில்லை, உன்னுயிரை உனக்கே பரிசாக வழங்க விரும்புகிறது; மெல்ல உன் காதுகளில், 'சாளரத்தைச் சாத்து; உலகம் ஒன்றுக்கும் உதவாதது, செயல்கள் தீயன, பொறுப்பும் தீமையே, திரைகளை இழுத்துவிடு; அந்தக் காட்டு மிராண்டித் தனமான போர்க்கூச்சல்களை மறந்துவிடு; உன் செவிகளை

மௌனத்தால் நிரப்பு, துன்புறும் உன் கண்கள் அமரத்தன்மையின் மந்தமான வானொளியில் குளிக்கட்டும்'—என்றெல்லாம் குசும்புகிறது,

மூடப்பட்டுள்ள சாளரத்தின் பின் அதிசயமான, சில சமயங்களில் அழகான, அமைப்புகள் உருவாகின்றன; அவை வெப்ப வீட்டில் விளைந்தவை—கதைத் திட்டங்கள், கதா பாத்திரங்கள் யாவும். இவ்வாறு விளைந்தவற்றுள் அந்தத் தந்தக் கோபுரமும் ஒன்று. வேறு பலவும் உண்டு. இதில் விநோதமென்னவென்றால், காலத்தை யொட்டிய சம்பிரதாயத்தை வெளியே விட்டுப் பூட்டிவிட்டதாகக் கருதிக்கொண்டிருக்கையில் திரைமூடிய அவ்வறையின் அலங்காரங்களும் அப்போதைய சம்பிரதாயத்தை ஒட்டியிருப்பதே. தந்தக் கோபுரம் கலைஞனது சிருஷ்டி, மற்றவை ஒழுக்கக் கோட்பாடுகளை ஆதாரமாகக் கொண்டது. அவற்றில் வாழ்வோர் ரோமாபுரி எரியும்போது பிடில் வாசிக்கும் மனப்போக்குள்ளவர் அல்ல, கடவுளைத் துதிப்பதில் நாட்டம் செலுத்துவோரே. மூடப்பட்டுள்ள அவ்வறை மெதுவாக ஒரு மாதா கோயிலின் மையக்கூடமாக மாறலாம்—அங்கு தாடிக்கார ரஷ்ய நாவலாசிரியன் புரட்சியாளனுயிருந்ததன் பழைய புன்மைக்காகப் பாவ மன்னிப்புக் கீதங்கள் பாடுகிறுன். அல்லது, நினைவின் பிற்போக்கில், தீமுருகல் பாஷாணச் செவ்வொளி (Phosphorescent light) யில் திமிங்கலம் போன்ற ராட்சத மீன்கள் கூடிய கடலாழக் கருவூலமாக அவ்வறை மாறினும் மாறலாம்; அல்லது திண்டுகள் திணிந்த மாபஸான் (Maupassant), கெரார்டு டி நெர்வல் (Gerard de Nerval) முதலியோரின் குகைகளாகவும் குலாவலாம். இக்கடைசி மாற்றம் யோகாப்யாசத்துக்கேற்ற உன்னத உறையுளாய்த் தோன்றுகிறது. ஒளி விசிறியின் செம்முனைக் காலம் யோகியின் ஊதா முனைக் காலமாக உருக்கொள்வதான உணர்ச்சி உண்டாகிறது. முதலாவது மயக்கு ஆசையைப்பற்றி இவ்வளவே. இரண்டாவது மயக்கு ஆசை திறந்துள்ள சாளரத்தால் விளைவன; அதன் செயல் அமுக்கமல்ல, ஈர்த்தல் (உறிஞ்சல்); மேஜையின் எதிரிலுள்ள மனிதன் ஜன்னலை மூட விரும்பவில்லை; அதன்மேற் சாய்ந்து வெளியே தலைநீட்ட விழைகிறுன். வீதிச் சம்பவங்களின் வசப்பட்டு வெறிகொண்டு கை காலாட்டிக் குதிக்கிறுன், கத்துகிறுன், தடபுடலாகப் பேசிச் சீறுகிறுன். முன்பு தடைப்படாத கற்பனைத் திறல் தழைத்ததில், உண்மையின் உருவகமில்லை; இப்போது கற்பனையால் ஜீரணிக்கப்படாத கடுங்கனவின் களேபரக் காட்சி இருக்கிறது. சாளரத்தின் வெளியில் அதிகமாகச் சாய்வதால் வெந்நீர்த் தொட்டிச் சூழ்நிலையிலிருந்து கலைஞன் விலகி விட்டான்; வேறு வார்த்தையில் நாவலாசிரியனுய் இருந்த

வன் கண்டதைக் குறிக்கும் நிருப (Reporter) ஞய் மாறிவிட்டான். செம்முனை எழுத்தாளர்களின் தோல்விக்கெலலாம் காரணம் இதுவே. இந்தக் காலத்து நாவல்கள் வர்க்கப் போராட்ட முனைகளிலிருந்து பிறந்த நிருபர்களின் செய்திக் கோவைகளைப் போன்றிருந்தன. கதா பாத்திரங்கள் பருமனற்று (உருவற்று)த் தட்டையாய் ஓய்ந்தன; கடுமையானதோர் பின்னணி முன் தங்களது நிழலான சண்டைகளை நிகழ்த்துவதுபோலிருந்தன. செம்முனை நாவல்களின் கதாபாத்திரங்களுக்கு வர்க்கரீதி அளவீடு (நீளம்) இருந்தது, இனக் கவர்ச்சி அளவீடும் (அகலம்) இருந்தது; மூன்ருவதான அறிவிற்கு அப்பாற்பட்ட ஆன்மிக ஆழம் இல்லை; அப்பருமன் அழிந்து விட்டது, அல்லது அழுகிப் போயிற்று.

செம்முனைக்கப்பாலான யோகி முனையில் அறிவுக்கப்பாற் பட்ட அகண்டாகார வரைவு (dimension) அமிதமாய் வளர்ந்து மற்ற வரைவுகளைப் பழிவாங்குகிறது. செம்முனைத் தீமையினின்று தப்பிப் பிழைத்துள்ள சில இலக்கிய கர்த்தாக்கள் ஸைலோன் (Silone), மால்ராக்ஸ் (Malraux) போன்று யுத்த முன்னணியிலும் அகண்டமான தங்கள் ஆன்மிக உயர்வை மறவாதவர்களே. ஆனல், இத்தகையோர் விதிவிலக்கான சிற்சிலரே.

ஒரே சமயத்தில் சாளரத்தைத் திறந்துவைத்து வெந்நீர்த் தொட்டியிற் கால்வைத்துக்கொள்ளும் ரீதியில் நடப்பது கஷ்டமே. இதற்காக, பழைய புதிய நாவலாசிரியர்களெல்லாம் இரண்டும் இணைந்த ஒரு இடைவழியைப் பின்பற்றுகின்றனர். இதுவே மூன்ருவது மயக்கம்,

இதில் சாளரம் மூடப்படுவதுமில்லை, திறக்கப்படுவதுமில்லை, இருந்தபடி திறந்த வெளியாகவே இருக்கின்றன; ஆனல், திரைச்சேலைகள் இழுத்து விடப்படுகின்றன. ஒரே ஒரு இடைவெளி வெளி உலகின் துன்பமும் ஆபத்துமான காட்சிகளை மறைத்து ஒரு சின்னஞ்சிறு பகுதியைக் கலைஞனுக்கு காட்டுகிறது. வேண்டுமானல் சேலைத் துளையில் ஒரு தொலை நோக்காடி (Telescope) யை நுழைத்து உலகத்தின் ஒரு சிறு பகுதியை—அது முக்கியமற்றதாகவும் இருக்கலாம்—தெளிவான முறையில், நுணுக்கமாகக் காணலாம், உலகின் ஒரு சிறு பகுதியின் விளைவே எனினும் சந்தேகமில்லாமல் உயர்ந்த இலக்கியங்கள் இம்முறையில் உற்பத்தி ஆகலாம்—காமமற்ற காதல், வியர்வையற்ற வேலை, பொருமையற்ற இனப் பாகுபாடு, மலச்சிக்கலற்ற மனத் தயக்கம். இத்தொலைநோக்காடியை வேறு பக்கமும் திருப்பிப் பார்க்கலாம். வலத்திற்குப் பதில் இடப் பக்கச் சாளரத்தூடு காணலாம்; காதலற்ற காமம், பெரிதான மலச்சிக்கல், வெறுப்பு, வியர்வை—இவற்றின் உருவங்கள்

தென்படுகின்றன. இங்கிலையில், இக் குறுகிய குழைக் காட்சி மூலம் மதிப்பிற்குரிய இலக்கியங்கள் உண்டாகி யுள்ளன. அப்படி இருக்கும்போது இதை மயக்காசை என்பானேன்? முழுதாகச் சாளரம் திறந்திருக்கும் முறையைக் கட்டாயப்படுத்துவானேன்? இத் திரைச் சேலைத் துளை முறை யில் விக்டோரியா (Victoria) ராணி காலத்து வியப்பான, செயல் நுண்மைகள் மிக்க நவீனங்கள் உண்டானது உண்மை யாயினும், ஈற்றில் நாவல் கலை ஒரு முடக்கடித் தடத்தில் முடிந்து விடுகிறது. டிக்கன்ஸ் (Dickens), ஸோலா (Zola)க் கதைகளைப் பாராட்டுவதில் நமக்குள் ஓரளவு தாராள மனப்பான்மை கலந்தே இருக்கிறது.

## 2

மயக்காசை என்னும்போதே ஏதோ லட்சியத்தை நோக்கிச் செல்லும் ஒரு பாதை நம் மனக்கண் முன் உருவாகிறது. இது பூரணத்தை நாடிப்போகும் பாதை : மயக்காசைப் பொருள் நம் மைக் கிளை வழிகளில் தவறிப்போகத் தூண்டுகிறது. இத்தவறு கலையில் தோல்வியைக் காட்டவேண்டுமென்ற அவசியமில்லை; எனினும், யுலென்ஸ்பைஜெல் (Eluenspiegel), டான் க்விக்ஸோ தன் (Don Quixote) முதல் வார் அண்ட் பீஸ் (War and Peace-சண்டையும் சமாதானமும்), ஜாலமலை (The Magic Mountain) ஃபோண்டாமாரா (Fontamara) வரையான பகுதியிலிருந்து ஒரு இலக்கிய ராஜபாட்டை மேலேறிச் செல்லுகிறதென்று நான் திடமாக நம்புகிறேன். அதைப்போலவே ட்ரிஸ்ட்ரேம் (Tris-tram), ஷேண்டி (Shandy), உதரிங்ஹைட்ஸ் (Wuthering heights) அலைகள் (The Waves) முதலியவை இலக்கிய உச்சங் களாயினும் இடைவழிப் பாதையின் முடக்கடித்தடத்தில் முடிவுற்றவையே என்பதையும் நான் நம்புகிறேன்.

இத்தன்னிச்சையான வேறுபாட்டை நிரூபிக்க ஜன்னல் அருகில் வீழ்ச்சி அடைந்துள்ள நம் இலக்கியகர்த்தாவைக் கவனிப்போம். அவர் முன் திரை மூடி இருக்கிறது. அத்திரை யில் வட்டமான ஒரு துளை இருக்கிறது, அத்துளையூடு ஒரு தொலைநோக்காடி பொருத்தப்பட்டுள்ளது; அதன் வழியே ஒரு வீடும் தோட்டமும் தோன்றுகின்றன. அதில் ஒரு மங்கை இருக்கிருள், அவள் கையில் ரோஜா மலர்க்கொத்தொன்று இருக் கிறது. அவள் தன்னைக் கல்யாணம் செய்துகொள்ளப்போகும் காதலனுக்காகக் காத்திருக்கிருள். நமது நாவலாசிரியர் நல்ல கதாசிரியரே போலும் — 'அவள் அழகாயில்லையா?'- என்று தன்னைத் தானே கேட்டுக்கொள்ளுகிருர். 'அவள் உயிர்ப்பு மிக்கவள், ஸில்வியா என்பது அவள் பெயர்.' திரைச் சேலையின் சிறு துளையூடு வந்ததாயினும், வீடு, தோட்டம்,

பெண், ரோஜா மலர்கள், யாவும் ஜீவகளை ததும்பிக்கொண்டுள்ளன என்று நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். இவைகளைப் பாராட்டியவாறே 25 பக்கங்கள் படித்து விடுகிறோம். அப்பால் ஆசிரியர் திடுக்கிடும்படியான ஒரு கேள்வியைக் கிளப்புகிறோம். 'மன்னிக்கவேண்டும், வீட்டின் அப்பாலுள்ள யந்திரசாலையின் புகைபோக்கியை, அணுகுண்டுப் பிளவையை வாரனூஃப் (Voronoff) வைத்யக் குரங்குகளை, ரகசிய சிறைப் பண்ணைக் கொடுமைகளையெல்லாம் மறந்து விட்டீரே?' என்கிறோம். அவர் படபடப்பாய், 'உனக்குப் பைத்யமா? என் கதையில் முதுகு நிறையக் காய வடுக்களை உடைய, நாடு கடத்தப்பட்ட ஜெர்மானிய அகதி ஒருவனைப் புகுத்தச்சொல்லுகிறாயா?' என்று பதில் கேள்வி போடுகிறார்.

வேண்டாம் என்பதுதான் உண்மையில் சரியான விடை. கதாசிரியனது வாழ்க்கைச்சித்திரத்தில் எதையும் திணிக்கவேண்டாம்; பின்னணியாக அந்தப் புகைபோக்கி கூடத்தேவையில்லை, அதனால் பயனில்லைதான். எனினும், நம் உள்ளம் ஒரு மாற்று யோசனை செய்கிறது. ஸில்வியா ஒரு சூத்திரப்பாவையல்ல, இங்கு, இன்று, இந்நூற்றாண்டில் உண்மையாகவே வாழும் ஒரு பெண்ணே எனில் நம் கேள்விக்கு விடைவேண்டும். நம் மாற்று யோசனைகள் இவையே: ஸில்வியாவுக்கு ரகஸியச் சிறைக்கூடங்க (Concentration Camps) ளைப் பற்றித் தெரியும். எனினும், கையில் ரோஜா மலர்களுடன் கவலையற்று நிற்கிறாள் இது அவளது—தீயதாயிருக்கவேண்டிய அவசியமில்லை—முக்கியமானதோர் குண இயல்பை விளக்கிக் காட்டுகிறது; அல்லது, கைதிகளின் ரகசியக் கடுஞ் சிறைகளைப்பற்றி அவள் படித்ததுமில்லை, கேட்டதுமில்லை—இவ்விஷயமும் அவளது குணத்தை அறிய ஒரு தடையமாகிறது. இத்தடையங்கள் கட்டாயம் தேவையே, இவை அவளுக்கும், அவள் காலச் சிந்தனைகளுக்கும், செயல்களுக்கும் உள்ள உறவுகளையும், உறவின்மைகளையும் காட்டுகின்றன. இத்தகைய அவசியமான சேதிகளெல்லாம் ஒரே ஒரு துளையை உடைய திரைச் சேலையால் மறைக்கப்பட்டால், கதாசரியனால் ஸில்வியாவைச் சரியானபடி எவ்வண்ணம் சித்திரிக்கமுடியும்? புகைபோக்கியை நாம் வாழ்வின் ஓவியத்தில் இழக்கவில்லை; கலைஞனின் மன ஓவியத்தில்தான் இழந்துவிடுகிறோம்.

இவ்வாறு இழப்பதால் தோட்டம், வீடு, ஸில்வியா, ரோஜா மலர்கள் யாவும் அரை உண்மை, அல்லது பொய்யாகி விடுகின்றன. திரைச் சேலையால் மறைக்கப்பட்டுள்ள பகுதிகளைப் பற்றிய அறியாமை, ஆசிரியரது கலை ஓவியத்தின் அகலத்தையும், ஆழத்தையும், அளவையும், பருமனையும் பாழ்படுத்து

கிறது. தோட்டத்தில் நிற்கும் ஸில்வியா ஒரு இளம் பெண்ணுகத் தோன்றுவதில்லே. மேடம் டஸ்ஸாட் (Madame Tussaud)டிலுள்ள மெழுகுப் பொம்மையாகவே தோன்றுகிருள்.

எனவே பூரணமான நாவலுக்குப் பூரணமாகத் திறந்துள்ள ஒரு சாளரம் தேவை. சமுதாய கணிதம் (Statistics) உட்பட உலகின் ஸர்வ இயல்களேயும், செயல்களேயும், இயற்கை விஞ்ஞானம் உட்பட எல்லாத் தத்துவங்களேயும் நாவலாசிரியன் பூரணமாக அறிந்திருக்கவேண்டும். நேரடியாக உபயோகிப்பதற்கல்ல, அவ்வாருன உபயோகம் விஷய அகராதி (Encyclopedia)யாகுமே தவிர நாவலாகாது, உள்ளுறையாகவே உபயோகிக்கவேண்டும். இரு வேறு ரசாயனப் பொருள்களே இணேக்கும் இணேப்பொரு (Catalytic agent) ளேப் போலும், உணவுண்டு உரம் படைக்க உதவும் உமிழ் நீரைப்போலும் இவற்றைப் பயன்படுத்த வேண்டும். இவையற்ற கதை செயற்கையாகவும், சீர்குலேந்ததாகவும், விக்டோரியா காலத்து இலக்கியங்களேப் போன்றுமிருக்கும். பூரண அறிவே சிருட்டிச் செயலின் அடிப் பீடம்,

## 3

ஆனல், இவைகள் யாவும் வெறு வெளி விவாதங்களல்லவா? நூற்றுக்கணக்கான நாவல்களில்—சில நல்லவை—அவ்விளம் பெண் நீட்டிய கரங்களில் ரோஜாமலர்களுடன் எதனுலும் பாதிக்கப்படாமல் அப்படியே நிலேத்து நிற்கவில்லேயா? நம் குறையெல்லாம் ஆசிரியர் சரியான சூழ்நிலேயில், அணுகுண்டும் அக்னி மழையுமான யுகத்தில் அவளேக் காட்டவில்லே, காட்ட முயலவில்லே என்பதே. உண்மையிலேயே, அவளது குறுகிய வாழ்வில் அவசியங்கள் என்று நாம் கருதும் துன்பங்களும், துயரங்களும் இடம் பெருதிருக்கலாமல்லவா? தீ விசிறுவோர் (flame throwers) போன்ற தம் காலத்துச் செய்திகளால் பாதிக்கப்படாத எத்தனேயோ லக்ஷம் ஸில்வியாக்கள் இருக்கின்றனரே? அவர்களேப்பற்றி உண்மையில் உயர்வான நூல்கள் எழுத முடியாதா?

உலகின் மற்றையப் பகுதிகளின்றும் விலகி நிற்கும் ஒரு தீவில் தனியாக வசிக்கும் ஒரு மனிதனேக் கற்பனேயிற் காண்போம். அவனுக்குப் புற உலகைப்பற்றி ஒன்றும் தெரியாது. அவனது உண்மையான குணம் குறுகலான அத்தீவுச் சூழ்நிலேயைப் பொறுத்துள்ளது. ஆனல், நாவலில் வரும் கதாபாத்திரம் என்ற வகையில் அவனேப் பற்றிய மிக மிக ருசிகரமான விஷயம், தான் வாழும் காலத்தைப் பற்றிய முக்கிய விஷயங்களே அவன் அறியாதிருப்பதே. தன்னேச் சுற்றியுள்ள சூழ்நிலேயோடு அவன் சம்பந்தப்படாததே. நாவலின் கண் கொண்டு நாம் அவனேப்

பார்க்கிறோம்; அவனுக்குத் தெரிவதைக் காட்டிலும் அவனைப் பற்றி நமக்கு அதிகமாய்த் தெரியும். நம் காட்சியில் அவன் அறியாத நகரங்களும், மலைகளும், நதிகளும் அடங்கியுள்ளன. இந்த நகரங்கள், மலைகள், நதிகள்—இவற்றால் அளவிடும் போதுதான் உண்மையில் அவன் நாவலின் பாத்திரமாகிறான். நம் உள்ளத்திலிருந்து இத்தொலைவுக் காட்சிகளை நீக்கி விட்டாலும் அவன் உயிருடன்தான் இருப்பான்; ஆனால் நாவலின் குணபாத்திரமென்ற வகையில் அவன் இறந்து விட்டவனே. நதிகளும், மலைகளும் முக்கியமென்பது உண்மை யென்றால், பொருள் நிரம்பியவை என்றால் அவைகளைக் காட்டிலும் கடுமையான ரகஸியக் கைதிகள் முகாமும், யந்திரசாலைப் புகைக் கூண்டுகளும், தீ விசிறும் தீயர்களும் உண்மையில் முக்கியம் குறைந்தவைகளா? அல்லது குறைந்தவர்களா?

நாவல் அமைப்புக் கண்ணோட்டப்படி ஆசிரியன், உண்மை வாழ்க்கையை வருணிப்பது மட்டும் போதாது; இணைகூடிய உலக அமைப்பில் அவ்வாழ்விற்குரிய திட்டமான கோணத்தையும் குறிப்பிடவேண்டும். பிரதானச் செய்திகள் கருத்துக்கள், காலத்தை அநுசரித்த மனோபாவம் இவையே அதன் ஆதாரபீடம். இதன் ஸ்தானத்தைக் காலதேசத் தொடர்பின் அகண்ட வரைவில் (n-dimensional space-time continuuem) அறுதியிட்டு நிர்ணயிக்கவேண்டும். உண்மையான ஸில்வியா வாழ்வின் நதியில் குடும்பமென்னும் குறுகிய நீர்ச் சுழலில் சுற்றுகிறாள்; அவளே, ஆசிரியனால் நாவல் பாத்திரமாக உயர்த்தப்பட்டதும் காலக்கடலில் பருவக்காற்றுகள், பெருஞ்சூறைகள், நீர் அமுக்கங்கள், புயல்கள் முதலியவைகளான பெருஞ் சுழலில் பின்னப்படுகிறாள். இவற்றை நாவலாசிரியன் வர்ணிக்க வேண்டியதில்லை, சொல்லவும் தேவையில்லை. ஆனால், பூடகமாகவாவது உணர்த்தியே தீர வேண்டும்.

இந்த ஒரே ஒரு வகையிலேயே நாவலாசிரியன் கிளை வழிகளையும், முடக்கடிகளையும் விட்டு கலையின் ராஜபாட்டையில் செல்லமுடியும். அவனது பெருமை தன் கற்பனைக் காட்சிக்கு அகலமும் ஆழமும் அளிப்பதைப் பொறுத்ததே. கதை ஒரு சிறு தோட்டத்திலுள்ள பெண்ணைப் பற்றியே யாயினும் அவனது சாளரம் அனைத்தையும் தழுவிய அகண்டக் காட்சியால் நிரம்பியிருக்கவேண்டும். ஒரே ஒரு புல்லாங்குழலின் இசையையே பற்றயிருப்பதாயினும் அவன் காதுகள் அகண்டத்தின் இசை வகைகளையெல்லாம் அறிந்திருக்கவேண்டும். எனவே,

'காற்றில் வரும் நம்பகத்தை அவன் கேட்பான்.
சுற்றியுள்ள துயரத்தை அவன் உணர்வான்'

என்கிறார் சி. டே. லூயீ.

நம் காலத்தவனுகையால் அவனும் முக்கியமாய்த் துன்பத்தையே உணருவான்; வேறு காலங்களில் அரசியலை விரும்புவது வெற்ருசையின் மயக்கமாகத் தோன்றலாம்; இங்நிலையில் அரசியலை விரும்பாததே மயக்கமாகும்.

அவனது அரசியல், வேதாந்த விஞ்ஞானக் கொள்கைகளும், கருத்துக்களும் எதுவாயிருப்பினும் அவை கதாபாத்திரங்களால் ஸ்வீகரிக்கப்பட்டே வெளிப்பட வேண்டும், அப்போதுதான் நாவலின் உயிர்ப்பும் (ஜீவத்திறலும்), அதன் ஆதாரங்களும் (raison detre) சிறப்படையும். உண்மையான, வெறும் அறிக்கையும், வரலாறும் அல்லாத நாவலின், முக்கியமான நடப்புகள் பாத்திரங்களின் உள்ளத்திலும் உடலிலுமாக உருவங் கொள்ளுகின்றன. இப்படியாக, உண்மைகளும், கருத்துக்களும் முன்னமே பக்குவமான பிறகே வெளியிடப்படுகின்றன.

இது வியப்பூட்டும், சில சமயம் துன்பமூட்டும் நடைமுறையே. நாவலாசிரியர் என்ற இனத்தைப்பற்றி எண்ணும் போதெல்லாம் ஆஸ்திரேலிய வெள்ளை எறும்புகளின் அதிசயமான சில செயல் முறைகள் எனக்கு ஞாபகத்திற்கு வருகின்றன. இவ்வெறும்பினத்தில் சாதாரணமானவை அருகிலுள்ள ஆகாரத்தை அநுபவிக்க முடியாது; ஏனெனில், அவற்றின் ஜீரணக் கருவிகளில் சில கோளாறுகள் உண்டு. இதற்கென்றே தனிப்பட்ட சில தொழிலாள எறும்பு வர்க்கம் உள்ளது. அவைகள் சுற்றியுள்ள உணவுப் பொருள்களைச் சேமித்துத் தேர்ந்து, விழுங்கி, ஜீரணித்து, பின் ராணி, தொழிலாளி, இறக்கை இளைஞர் என்ற எல்லா எறும்புகளையும் தம் குடலிலுள்ள உணவால் போஷிக்கின்றன. சில எறும்பினங்களில் இவ்வுணவுத் தொழில் எறும்புகள் கூட்டைவிட்டு அகலுவதில்லை. எறும்புப்புற்றின் இருண்ட நிலவறைகளிலும், குகை வழிக் கணவாய்களிலும் தலைகீழாகத் தொங்குகின்றன. சேமிப்புக் கலங்களில்லாதபோது இவற்றின் ஜவ்வுபோல் நீண்டகன்று பெரிதான வயிறுகளே நீர்த்தேக்கங்கள், தொட்டிகள், தேன் குடங்களாக மாறுகின்றன. சேமித்த ஆகாரங்கள் இப்பெருங்குடங்களில் கொட்டி வைக்கப்படுகின்றன; பசி மிக்கபோது இவை உறிஞ்சப்பட்டு உபயோகமாகின்றன.

நம் வாழ்க்கை என்னும் எறும்புப் புற்றின் நிலவறைகளில் தலைகீழாய்த் தொங்கியவாறே, விஷமும் கசப்பும் நிறைந்து பக்குவப்படுத்தப்பட்ட விஷயங்களை, போர்வீரர்களுக்கும், இறக்கை இளைஞர்களுக்கும் ஊட்டி வளர்க்கும் கலைஞனது உள்ளம் விபரீத எண்ணங்களை நோக்கிச் சாய்கிறது. சில சமயம் தான் ஒருவனே பக்குவமடைந்த வாலிபன் என்றும், சுற்றியுள்ள

யாவரும் தங்களைத் தாங்களே கெடுத்துக்கொள்ளும் நிலையில் உள்ளனர் என்றும் அவன் நினைக்கிறான். எனவே, வாழ்வின் வளத்தை யாருமே காணாத இவ்வுலகில் உள்ள நிலைமையைக் கொள்ளா திருப்பதே அவன் கடமை, அது உத்வேகமாக மாறுகிறது.

உண்மையில் மேற்கூறிய மயக்காசைகள் யாவைக்கும் பொதுவான சராசரிச் சமனம், ஏற்றுக் கொள்ளலாமே என்ற நப்பாசைதான். அகண்டத்தின் அணைப்புக்காக (pour embrasser l'absolu)ச் சாளரத்தை மூடுவது வெளி உலகம் தெளியவைக்க முடியாத பைத்யக்காரத்தனமானது என்று கருதி அதை அம்பலப்படுத்தும் பொறுப்பைத் தட்டிக்கழிப்பதாகும். சாளரத்தை அகலத் திறக்க விட்டுப் பார்த்த பின்பு தீயவற்றை மூடி மறைப்பது, நடப்பது நடக்கட்டும் என்ற மந்த மனப்பான்மை காரணமாக அதை ஏற்பதாகும். இந்த வகையில் வெறும் செயலற்ற ஈடுபாடெல்லாமும், அவற்றிற்கு உடந்தையாயிருப்பது போல் தான். இந்தக் கண்ணோட்டத்தில் பார்த்தால் கலைகள் பிரசாரமே யாகும். தெரிந்து பிரசாரம் செய்வது கடமையைத் தட்டிக் கழிப்பதே, கலைஞனை இக்கட்டிலிருந்து தப்பவைக்கும் மற்றொரு மார்க்கமே. அவனது கலை ஆழம் எல்லாச் சிக்கல்களையும் லகுவாகத் தீர்க்கும் லலித வெறு வெளிப் போர்வையில் மறைந்தொளித்துக் கொள்ளுகிறது.

கலைஞன் வழி காட்டியல்ல எந்தச் சிக்கலையும் தீர்ப்பது அவன் ஜோலியல்ல. அவற்றை வெளிப்படுத்துவதே. உபதேசிப்பதல்ல, உண்மைகளைப் பட்டவர்த்தனமாக நிரூபிப்பதே.

> 'மற்றவர்களுடன் நமக்குள்ள போராட்டம் வாக்சாதுர்யமாக வெளிப்படுகிறது. நம்முள் நமக்கே நடக்கும் போராட்டங்கள் கவிதை மூலம் வெளியாகின்றன'

என்கிறார் கவிஞர் ஈட்ஸ் (Yeats). குறை களைவது, உபதேசிப்பது, பிரசாரம் செய்வது—இவைகளைக் கலைஞன் மற்றவர்களுக்கு விட்டுவிடவேண்டும். எனினும் மற்றவர்களுக்கு இயலாத அலாதியான வகையில் அவன் உண்மையை உருவாக்கித் துயரங்கள் தீர்க்கும் முயற்சிக்கு உத்வேக மூட்டவேண்டும்.

எனவே, எழுத்தாளனுக்குச் சமூகத் துறையில் குறிப்பிடத்தக்க ஒரு கடமை உண்டு. நாவலெழுத முற்படும் கலைஞனை ரகஸியமாகச் 'சீல்' செய்யப்பட்ட உத்தரவுடன் கடல் மேல் பயணம் போகும் கப்பித்தானுக்கு ஒப்பிடலாம். கடலில் புகுந்ததும் கடிதத்தைப் பிரிக்கிறான் அவன். அது மறைப்பு மையால் எழுதப் பட்டிருந்தது. அதைப் படிக்க முடியாவிடினும், ஏதோ கடமை உணர்ச்சியை மட்டும் இடையீடின்றி அவன் உள்ளம் உணர்ந்தது. ஏனெனில், அவன் ஒரு போர்க்கப்பலின் கப்பித்தான்.

அது இன்ப யாத்திரைக்கான கப்பலல்ல, விளங்காவிடினும், கட்டாயம் நிறைவேற்றவேண்டிய அவ்வுத்தரவுக் கடிதம் அவனது பொறுப்பை உணர்த்தியது. எழுத்தாளனின் பெருமையும் இப்படியே. அவன் சமாளிக்கவேண்டிய நிலையும் இதுவே.

---

* 1941, செப்டம்பரின், 17-வது ஸர்வ தேசியக் காங்கிரஸின்போது பென் (P. E. N.) குழுவில் செய்த பிரசங்கம்.

# வாசகன் தடுமாற்றம்*

அன்புள்ள கார்ப்போரல் (காலாட்படைத் தலைவன்) ஜெஃப் ஃபுக்கு!

பீதி ஊட்டும் உன் கடிதம் கிடைத்தது; என்னுல் கூடியவரையில் பதிலளிக்க முயல்கிறேன். நீ எழுதுகிருய் :—

'எனக்கு 22 வயதாயிற்று. சேனையின் அழைப்பு வரும் முன் நான் எல் (L) என்னும் இடத்தில் ஒரு ரேடியோ விளைஞனுய் இருந்தேன். புத்தகம் வாங்குவதில் நம்பகமான வழிகாட்டியாக எவரது விமர்சனப் பத்திகளைப் படிப்பது என்று தெரிந்து கொள்ளவே இதை எழுதுகிறேன். மாதத்திற்கு ஒரு புத்தகம் மட்டுமே என்னுல் வாங்க முடியும் அதற்கென்றே வாரத்திற்கு 2 ஷில்லிங்குகள் ஒதுக்கி வைக்கிறேன். ந்யூஸ் க்ரானிகல் (செய்தி அறிக்கை) நான் படிக்கிறேன். சில சமயம் ட்ரிப்யூன் (Tribune) அல்லது ந்யூ ஸ்டேட்ஸ்மன் (New Statesman) பத்திரிகைகள் கிடைக்கின்றன. ஆனுல், பெரும்பான்மை விமர்சனங்கள் என் அறிவிற்குச் சிறிது அப்பாற்பட்டவையே. என்னுடைய படைப் பகுதியில் புத்தகங்களில் அக்கறை உள்ளவர்கள் அநேகமாய்க் கிடையாது. எங்களுடைய கூடாரமே தன்னந்தனியான ஒரு இடத்தில் இருக்கிறது...?'

உன் கடிதத்தை 'பீதியூட்டுவது' என்று கூறினுல் அது மிகைப்பட்ட கூற்று எனப் பலர் நினைக்கக்கூடும். நான் அப்படிக் கருதவில்லை. ஏனெனில் உன் கடிதத்தின் கலை நுணுக்கமான பிரச்னையைப் பற்றி நான் அவ்வளவாகக் கவலைப்படவில்லை; அதன் வரிகளிடையே தொனிக்கும் இரக்கமூட்டும் முறையீட்டையே முக்கியமாகக் கருதுகிறேன். சென்ற மூன்று ஆண்டுகளில் படைகளுக்குப் பிரசங்கம் செய்பவனுய் இருந்ததால், அப்போது தான் அமைந்த புதுப்படையில் 'சிந்தனை மிக்க தலைவர் வரிசையில்' (thoughtful corporal belt) உன்னைப் போன்ற பலரை நான் பார்த்திருக்கிறேன். நம்பிக்கைக்குரிய, கவலையும், கணிப்பும் கூடிய உங்களுக்குச் சீக்கிரமாகவே படையின் இரு பரிசுப் பட்டைகள் (Stripes) கிடைத்து விடுகின்றன; ஆனுல், ராயல் விமானப்படை (R. A. F.) யில் தவிர வேறு எதிலும் மூன்ருவது பரிசுப்பட்டை அநேகமாய்க் கிடைப்பதில்லை. உன் கடிதத்தைப் படிக்கும்போது, உன்னை நான் சந்தித்ததேயில்லை எனினும், என் மனக்கண் முன் உடலோடு கூடிய உன் உருவம் உயிர்க்கிறது. சனிக்கிழமை மாலை நேரங்களில், கிறிஸ்தவ இளைஞர் சங்க (Y. M. C. A.)த்து இருண்ட புத்தகாலயங்களை நீ ஆய்ந்து அலசுவதையும், அல்லது (W. H.) ஸ்மித் புத்தகசாலையின் நிண நீர்

நிறைந்த (lymphatic) பெண்ணிடம் அச்சிலில்லாத ஒரு 'பெங்க்வின்' (Penguin) நூலை வேண்டுவதையும் கற்பனையில் காண்கிறேன். தெளிவற்ற வகையில் பொதுமை ஆட்சி (Common Wealth)யும், சமஷ்டி அரசிய (Federal Union) லும் உன்னை வசிகரிக்கின்றன; இதே சமயம் தொழிற் கட்சி (Labour Party) யின் பெயர்கூட உனக்குச் சுவையற்ற மதுவாகத் தோன்றுகிறது. நீ திடீர் திடீரெனத் தினசரி(நாட் குறிப்பை)யை எழுதுகிறாய்; ட்ரிப்யூன் அல்லது ந்யூ ரைட்டிங் (New Writing) பத்திரிகைக்கு படைப்பாடி வாழ்வைப் பற்றிய ஒரு சிறு கதை எழுத எண்ணுகிறாய்; பிரசங்க நேரத்தில் கர்ஸான் வரி (Curzon Line–சென்ற யுத்தத்தின் ஒரு படைப்புல எல்லைக் கோடு) யைப் பற்றியோ, அல்லது ஜெர்மானியப் புதுமுறைப் போதனையைப் பற்றியோ அக்கறையோடு முன் கூட்டியே தயாரிக்கப்பட்ட கேள்விகள் கேட்கிறாய். சில ஆண்டுகளுக்கு முன் தீவிரவாதப் புத்தக சங்க (Left Book Club)த்தில் நீ அங்கத்தினனாய் இருந்தாய். முன்கூறிய சுவையற்ற உணர்ச்சியாலோ, அல்லது ஸ்டாலின்-ஹிட்லர் சமாதான ஒப்பந்தத்தாலோ வெறுப்புற்று நீ அச்சங்கத்தை விட்டு விலகினாய். நடனச் சகாவாகக் கடுகடுப்பான ஒரு கன்னிகையை நீ தேர்ந்தெடுக்கிறாய், அவள் அநேகமாக எலும்பும் தோலுமாய் இளைத்திருப்பவள்; தேவைக்கேற்ற 'ஸப்ளை' என்ற சட்டப்படி அழகுள்ள மற்ற சகோதரிகளைக் காட்டிலும் அவள் ஒழுக்கம் மிகுந்தவள். எதிர்காலப் போர்ப்படை (W. E. A.) மாலை வகுப்புகள், இரவுப் படிப்புகள், வார முடிவில் ஃபிரான்ஸுக்குச் செல்லப் பரவலான பணச் சேமிப்புகள் என உன் வாழ்க்கை அந்தகாரமாகக் காட்சி யளிக்கிறது. பணக்காரர்களிடம் உனக்குப் பொறுமை இல்லை, எனினும், ஏழ்மையைக் கசப்போடு வெறுக்கிறாய்.'வர்க்கப் போராட்டம்' உனக்கு வெறும் வார்த்தையே, 'அவசர அணிவகுப்பு' (barricade) பாரிஸ்(Paris) 'நகரத்தோடும், பழைய நூற்றாண்டோடும்' தொடர்புடைய கவின்மிகும் கற்பனைச் சொல்தான். உன்னுடைய எண்ணங்கள், உணர்ச்சிகள் — இவைகளின் அடிப்பீடத்தில் மிகப் பிரம்மாண்டமான பழுப்பேறிய தோல்வி மனப்பான்மையே குவிந்து கிடக்கிறது.

உன் சொந்தப் பிரச்னையைப் பற்றி பின்னர் யோசிக்கலாம்; இப்போது உன் நுணுக்கக் கேள்விகளுக்குப் பதில் கூறுவோம். அதற்குச் சுருக்கமாகவும், விரிவாகவும் இரு விடைகள் உண்டு. சுருக்கமான விடை : கதைக்கு ஹெரால்ட் (Herald) பத்திரிகையில் பெட்ஜமன் (Betjeman) எழுதுவுதைப் படிக்கலாம்; கதையில்லா இலக்கியத்திற்கு அப்ஸர்வர் (Observer) பத்திரிகையின் புத்தகப் பத்திகளைப் பார்க்கலாம்; விரிவான, நுணுக்கமான விமர்சனங்கள் வேண்டின் லிஸன (Listener) னரில் காணலாம்.

இவைகளின் தீர்ப்புகள் எப்போதுமே தவறற்றவை என்பதல்ல; ஆனால் பொதுவாகப் பண்புடையவை, பாரபட்சமற்றவை, விஷயக் கூர்மை உள்ளவை, அலட்சியம் காட்டாதவை, ருசிகர மானவை, முக்கியமான புத்தகங்கள் எதையும் விடாதவை; இதைக் காட்டிலும் உனக்கு வேறென்ன வேண்டும்? இனி விரி வான விடைக்கு வருவோம்.

முதன் முதலாக, மற்ற நாடுகளுடன் ஒப்பிடும்போது இந் நாட்டின் விமர்சன ஆய்வுகள் மோசமானவையல்ல. உதாரண மாக ரஷ்யாவில் இலக்கியப் போக்கு அரசாங்கத்தினரால் நிச்ச யிக்கப்படுகிறது; இலக்கிய விவாதங்கள் 'புரட்சிக் கெதிரான புன்மைகள்' என்ற குற்றச்சாட்டுகளால் காரசாரமான சுவை பெறுகின்றன. முன்னணியிலுள்ள மாஸ்கோ இலக்கிய அமைப் பாளர்களுள் ஒருவரான ஜே. ஆர். பெசர் (J. R. Becher) ஒரு முறை என்னிடம் கூறினார். "பயனுள்ளவர்கள் என்று நாங்கள் கருதும் எழுத்தாளர்களுக்குப் புகழ்க் கோபுரங்கள் காட்டுகி ரோம்; தீயவரென நினைப்பவரை அழித்து விடுகிரோம்; கலைப் பண்பைக் கவனிப்பதெல்லாம் முதலாளித்துவத்தின் அற்பமான முட்டாள் முடைவுகளே."

ஜெர்மனியில் நிலைமை இன்னும் மட்டமானது என்று சொல் லத் தேவையில்லை. இனப் போராட்டமும், கட்சிக் கொள்கை களுமே இலக்கியப் போக்கை நிர்ணயிக்கின்றன. யூதரான ஹெய்ன் (Heine), மிதவாதி, (Liberal) தாமஸ் மான் (Thomas Mann) ஸோஷலிஸ்டான ஸைலோன் (Silone) இவர்கள் எத் தகைய இலக்கியமேதைகளாயினும் அப்படி இருப்பதற்காகவே தடைக்கு ஆளாக்கப்படுகின்றனர்.

பிரிட்டனில் பத்திரிகைகள் புத்தக விமர்சனங்களுக்காக அதிகப் பத்திகளை ஒதுக்கி அக்கறை காட்டுகின்றன; ஃபிரஞ்சு நாடு இவ்விஷயத்தில் என்றுமே அவ்வளவாக அக்கறை காட்டிய தில்லை. இலக்கிய அரசியலில் சூழ்ச்சிகளும், பரிதானப் படு கைகளும் நிறைந்து விட்டன. கோன்கோர்ட் (Goncourt), ஃபெமினா (Femina) முதலான வருடாந்தரப் பரிசுகள் சிறு போட்டிக் கும்பல்களுக்குள்ளே நடக்கும் போராட்ட வெற்றிச் சின்னங்களாகிவிட்டன. ஒரு புத்தகத்தின் வெற்றி, விமர்சகர்க ளுக்கு லஞ்சம் தருவது உட்பட பிரசுரகர்த்தா அதை முன்னுக்குத் தள்ளுவதையே பொறுத்தது. என்னுடைய முதல் புத்தகம் ஃபிரஞ்சு நாட்டில் வெளியானது. என் பதிப்பாளரான ஆல்பின் மிச்சல் (Albin Michel) ஒரு நாள் பூராவும் என்னை அவர் ஆபீஸில் கழிக்கும்படி செய்தார். விமர்சகர்கள், ஆசிரியர்கள், முக்கியமான பெரிய மனிதர்கள் என்ன, முந்நூறு பேர்களுக்கு அனுப்ப வேண்டிய பிரதிகளில் நான் கையெழுத்திட்டேன்.

ஒவ்வொன்றிற்குமான. (ஹாமேஜ்-லா-ஓடர் ஹாமேஜ் டிஸ்டகே, ஹாமேஜ ட்ரேஸ்டீஸ் டிங்கே, ஹாமேஜ் டிஸ்டிங்கே எட்ரெஸ் பெக்டக்ஸ்) என ஆசிரியன் வணக்கம், மரியாதை மிக்க வணக்கம், மிக மிக மரியாதையான வணக்கம், உமது கனந் தங்கிய மரியாதைக்கு மரியாதையான வணக்கம் என்று ஒரு நீண்ட டைப் செய்யப்பட்ட அட்டவணையிலிருந்து சமூகத்தில் அவரவர்கள் தகுதிக்கேற்ற சமர்ப்பண வாக்யங்களைப் படித்துக்கொண்டேபோனார். நான் எழுதிக்கொண்டே போனேன். நல்ல வேளை, இந்நாட்டிலும் அத்தகைய வழக்கங்கள் இல்லாமைக்காகக் கடவுளுக்கு வந்தனம். இங்கு பதிப்பினருக்கும் விமர்சகர்களுக்குமிடையே விருந்துகள் நடப்பது வாஸ்தவம் தான்; விளம்பர விநியோகம் சில சமயம் பிரசாரமான விமர்சன தோதுக்களை விளக்கெண்ணெய் பூசினாற்போல் தணிய வைக்கிறது. ஆசிரிய-விமர்சக நேசமும், கூடா நட்புகளும் இங்குந்தான் உண்டு; எனினும் இவையாவும் நேரிய ஒரு அளவுக்குள் இருக்கின்றன, யுத்தத்திற்கு முந்திய ஐரோப்பாவில் எந்த நாட்டையும்விட இங்கிலாந்தில் விமர்சனத்தரம் பொதுப்படையாகப் பார்க்கப்போனால் உண்மையும், உயர்வும் உடையதே.

ஆனால், இது ஒப்புமையால் வரும் உயர்வே. புத்தக ஆய்வுப் பத்திகளை ஊடுருவிப் பார்த்தால் நீ சொல்வது உண்மை என்றே தோன்றுகிறது; எந்தப் புத்தகத்தை வாங்குவது என்று யோசிப்பவர்களுக்கு அவை உதவுவதற்குப் பதில் குழப்பத்தையே உண்டு பண்ணுகின்றன. நாவல் விமர்சனத்தையே பிழைப்பாகக் கொண்டவர்கள் கொஞ்ச நாளில் தங்கள் மதிப்பீடுகளை மறந்துவிடுவதே முக்கியமான குறை என்று நினைக்கிறேன். இலக்கிய மேதையை கெஜக்கோல் கொண்டு கணிக்க முடியாது; இதய உணர்ச்சியை உஷ்ணமானி (Thermometer) யைக் கொண்டு அளக்க முடியாது; எனினும், எடுத்துக்கொண்ட நூலின் முக்கியத்துவத்திற்கு ஏற்ப, விமர்சகனுக்கு ஓரளவு தராதர ஞானம் அவசியம் என்று எதிர்பார்ப்பது சகஜமே. உதாரணமாக, என் முன்னுள்ள, 1944, ஏப்ரல், 9-ஆம் தேதி ஸண்டே டைம்ஸ் (Sundy Times) இதழில் மிஸ்டர் ரால்ஃப் ஸ்ட்ரா (Mr. Ralah Strauss) ஸின் பத்திகளைப் பார்ப்போம், அவர் மூன்று நாவல்களை விமர்சித்துள்ளார்; அவற்றின் கடைவரிகள் பின்வருபவையே.

'....மிகமிக நல்ல பொழுதுபோக்குச் சாதனம்; அவள் நூலில் ருசியற்ற பக்கம் ஒன்றுகூட கிடையாது'.

'....படிக்க அபூர்வமாய் நன்றாயிருக்கிறது. மனப்பூர்வமாகச் சிபாரிசு செய்யலாம்'.

'....இதய மகிழும் இனிமை, நல்ல வேலைத்திறன்'.

மற்ருெரு வாரத்தில், மார்ச், 19-ஆம் தேதி அங்குமிங்குமாய் பொறுக்கினுல் ஐந்து விமர்சனங்கள் கீழ்க் கண்டவாறு முடிகின்றன:

'....நூல் மூலம் அவனுடன் அறிமுகம் பெறுவது இன்பகரமானது'.

'....உன்னதமான சைத்ரிக நெறியைப் பின்பற்றுகிருர்'.

'....ருசிகரமான பூத தயையுடன் கூறப்பட்டுள்ள கதை'.

'....படிக்க இன்பமானது, லகுவானது'.

'....அவளது வசனங்கள் சுலபமானவை, இயல்பானவை'

ஒரு வாரத்திற்கு இரு ஷில்லிங்காக நீ சேமிப்பதை நினைக்க என் உள்ளம் திகைக்கிறது. ஒரு யந்திரம் ஒரே விதமான மஸாலை இட்ட இறைச்சித் துண்டுகளை உற்பத்தி செய்கிறது; அவை போன்ற ஒரே ரகமான மேற்கண்ட துணுக்குகளைக் கொண்டு உன் பணத்தை முதலீடுசெய்யும் வகையை நீ எவ்வாறு தெரிந்து கொள்ள முடியும்? முன்னுரையாக ஒரு வாக்யம், மூன்று நான்கு வாக்யங்களில் கதை, லேசாக விமர்சனம் செய்யும் ஒரு வார்த்தை, மேற்கூறிய வண்ணம் மென்மையான முடிவுரை. இவ்வளவு தான். இறைச்சியில் மசாலையை நிரப்பி ஸீல் செய்தாயிற்று; அப்பால் மூன்று நட்சத்திரக் குறிகள், பின் அடுத்த விமர்சனம். இவ்வாரம் பிரசுரமான புதுப் புத்தகங்களில் மிஸ். மார்க்கரி எட்வர்ட்ஸ் (Miss. Margery Edwards) எழுதிய 'கெண்டிஷ் நந்த வனத்து ரோஜா மலர்கள்' (Ross from a Kentish Garden), ஒன்று; குற்றமும் சிட்சையும் (Crime and Punishment) மற்ருென்று என்று வைத்துக்கொள்வோம். ஒவ்வொன்றும் 20 வரி விமர்சனம் பெறும், இடையில் நட்சத்திரக் குறிகள், அநேகமாய் அடியில் கண்டபடியேதான்.

'....இன்பகரமான கெண்ட் நாட்டு நிலவளத்தைப் பற்றியது. அவளது கதா பாத்திரங்களெல்லாம் ஒழுங்காக வரையப்பட்டுள்ளன. கதை, இடையிடையே தயங்கினுலும், மென்மையான முறையில் திறமையோடு கூறப்பட்டுள்ளது.

* * *

மிஸ்டர் டாஸ்டோவிஸ்கி (Mr. Dostoevsky) ஒரு ரஷ்யக்காரர், அவரிடம் மிஸ் எட்வர்ட்ஸ் (Miss Edwards) ஸுக்குள்ள நளினமான ஹாஸ்யம் கிடையாது. ஒரு ஆவேச மிக்க இளமாணவன் ஒரு காவற் கன்னிகையைக் கோடாலியால் கொன்று விடுகிருன்...ஓரளவு வக்ரமான சுவையே. ஆனுல் கதாபாத்திரங்கள் ஒழுங்காக சித்தரிக்கப்பட்டுள்ளன; வசனங்கள் தடையற்றுத் தழைதழைக்கின்றன. கூட...முழுக்கதையும் திறமையோடும், லாகவத்துடனும் கூறப்பட்டுள்ளது.'

இத்தகைய விமர்சனத் தராசில் ஒரு 'டன்'னும் ஒரு 'அவுன்ஸு'ம் ஒரே எடைபோல்தான் இருக்கிறது. மிஸ்டர் ஸ்ட்ராஸ் ஒரு அமித உதாரணம்; பொதுவாகத் தினசரிகளிலும், ஞாயிறு இதழ்களிலும் வரும் பத்திகள் ஏறத்தாழ இக்குறைகள் கூடிய வையே. இவற்றை ஒன்றன்பின் ஒன்ருகக் காட்டப்போனல் சலிப்புத் தட்டிவிடும்; எனவே, உன் முக்கிய துயரமான மேம் பாட்டு வார இதழ் (Highbrow weeklies) களைக் கவனிப்போம். அவை, 'என் அறிவிற்குச் சிறிது அப்பாற்பட்டவையே' என்று நீ கூறியுள்ளாய்; இதில்தான் உன் சொந்த விவகாரமும், உன் கடித வரிகளின் இடையூடு குமுறும் சோர்வுணர்ச்சியும், ஏமாற்றமும் எதிரொலிக்கின்றன.

உன் உணர்ச்சிகளை அறிய என்னல் முடியும் என்று நம்பு கிறேன். ந்யூ ஸ்டேட்ஸ்மனில் ஒரு கட்டுரையை நீ ஆவலுடன் படிக்க ஆரம்பிக்கிருய்; அது ரேமாண்டு மார்டிமர் (Raymond Mortimer) அல்லது ஸ்டோனிய (Stonier) ரால் எழுதப்பட்ட தாக வைத்துக்கொள்வோம்; சில வரிகளுக்குப் பிறகு உனக்கு விளங்காத ஒரு குறிப்பு வருகிறது. ப்ரூஸ்ட் (Proust), காஃப்கா (Kafka) அல்லது பிகி (Peguy) எனப் படித்தறியாத ஆசிரியர் களைப்பற்றிக் கட்டுரையாளர் இவர்களது நூல்களை எல்லோரும் படித்திருப்பர்; படித்திருக்க வேண்டும் என்று எடுத்தாளுகிருர்! எனவே, பள்ளிக்கூடத்தில் பாடமறியாத மாணவனைப்போல், அல்லது வேண்டாத விருந்தில் வெளியில் குளிரில் விடப்பட்டு, இழிவுற்றுப் பொருமையுடன் வெறுப்புக் காட்டும் ஒருவனைப் போலும் துயரங்கொள்கிருய். இங்கு தான் முக்கியமான மைய அம்சத்துக்கு வருகிருேம்; எதிரே ஒரு சுவர் இருக்கிறது. அது முற்போக்கு அறிஞர் (Progressive inteligentsia) களுக்கும் படித்த தொழிலாளி (educated working class) வர்க்கத்துக்கும் இடையே தடையாக நிற்கிறது.

இதைப்பற்றி நாம் பசப்பத் தேவையில்லை. அச்சுவர் இருக்கத்தான் செய்கிறது. எவ்வளவுக் கெவ்வளவு அதை விலக்க முயல்கிருேமோ அவ்வளவுக் கவ்வளவு அதன் மேல் தலையை மோதிக்கொள்ளுகிருேம். இந்நூற்ருண்டின் மூன்ரும் பத்தில் (thirties) தீவிரவாத அறிஞர்கள் பாமர (proletarian)க் கலைஞராக வேஷம் போட்டனர், அது வீணை ஒரு வேடிக் கையே. பாமரருக்கென்று பாஷையைக் குறைத்தனர், அதுவும் பயனற்ற தோல்வியே. மேம்பாட்டுக் கலைஞர்களை இழித்துக் கூறினர், அது தங்களைத் தாங்களே இழித்துக் கொண்டதாக முடிந்தது. சுவரைத் தாண்ட முயல்வது வீண், அதை ஒழித்து விடவேண்டும். ஆனல் இது இலக்கிய வேலையல்ல, அரசியல்

வேலை, ஸோஷலிஸத்தின் உன்னதமான லட்சியம் இதுவே என்று நான் நம்புகிறேன்.

மேம்பாட்டு கீழ்பாட்டு என்ற (highbrow and lowbrow) பேச்செல்லாம் வெறும் புகையாலான திரையின் புன்மைகளே. அப்பட்டமான உண்மை என்னவெனில் உன் விமர்சக நண்பனின் பெற்றோர்கள் வசதி உள்ளவர்கள்; பதினாறு ஆண்டுகள் அவன் ஓய்வு நேரங்களில், படித்து நினைத்து. பயிற்சி பெறப் பணமுதவ அவர்களால் முடிந்தது. எனவே நீ விரும்பும் ஆன்மிகச் சத்தில் அவன் ஊறித்திளைக்கிறான். ஒன்பது ஆண்டுகள் தான் உன்னால் பள்ளிக்குப் போக முடிந்தது. அதுவும் வேறொரு வகையான பள்ளி, அங்கு ஓய்வு கம்மி. இதுவே அவனுக்கும் உனக்கும், எனக்கும் உனக்கும் இடையிலே நிற்பது. நெருக்கத்திலும், உணர்ச்சி வசப்படும்போதும், கூட்டத்தில் தோளோடு தோள் உரசும் போதும் நம் வேறுபாடுகள் உருகிக் கரைவது போல் தோன்றுகின்றன. ஆனால், அவரவரது தனி வாழ்க்கையிலே மறுபடியும் தலை தூக்கி விடுகின்றன. இது என் தவறுமல்ல, உன் தவறுமல்ல, நானும் நீயும் ஒருவரை ஒருவர் குற்றம் கூறுவதால் பயனில்லை. உன் ஏமாற்றத்தை நான் உணர்கிறேன்; இதன் காரணமான சமூக அமைப்பை நான் வெறுக்கிறேன்; ஆனால், அதற்காக, பரமர ரஞ்சகமான மேம்பாடு வேட்டை (highbrow beating) யில் நான் பங்கு கொள்ள மாட்டேன். மேம்பாட்டுக் (கலையை) ஒழித்து விட்டால், நம் போக்கு ஒரு காலால் நொண்டும் (goose-step) உளுத்த நடையாகிவிடும். இது ஃபாஸிஸ (Fascist) விளையாட்டு. அந்தச் சுவரை நாம் தாக்குவதே வழி; அது இருக்கும் வரையில் குடியாட்சி (Democracy) என்பது வெறும் பகட்டே.

இப்போது உன் கேள்விக்கு வருவோம். படிப்பால் பரவசம் பெற இத்தகைய குதர்க்கவாத விமர்சனங்களால் குமைய வேண்டுமென்று யார் உனக்குக் கூறியது? இது பயனற்ற பொய்யான நடைமுறை. 'சீ சீ இந்தப் பழம் புளிக்கும்' பழமொழியைத் தலைகீழாய்ப் 'புளிப்பதனாலே புசித்தே தீருவேன்' என்று மாற்றிக்கொள்வதையே ஒத்திருக்கிறது உன்னுடைய முயற்சி. இன்பத்திற்காகப் படி, படிப்பைப் பல்லைக் கடித்துக்கொண்டு சகிக்கும் கசப்பான வேலையாக்கி விடாதே.

ஆம்! இன்பத்திற்காகப் படி; பெகி (Peguy)யையும் ஃபின்னகான் வேக் (Finnegans Wake) கையும் பற்றிக் கவலைப்படாதே. ஒரு பொது வாசக சாலை, அல்லது ஒரு புத்தகக் கடைக்குப் போ; ஏதோ ஒரு நூலை எடு, நுனிப்புல்மேய், ஒரு பக்கம் படி—அதைப் படிக்கவேண்டுமா, வேண்டாமா என்பது உனக்கே விளங்கும். ஒரு புத்தகத்தைப் படித்தே தீரவேண்டு

மென்று உன்னை நீயே கட்டாயப்படுத்திக் கொள்ளாதே—அது வீண் வேலை. உன் ரேடியோவைத் திருப்ப எவ்வளவு கவனம் தேவையோ, அவ்வளவு கவனம் புத்தகத் தேர்விலும் இருந்தால் போதும். உன்னைப் பரவசமடையச் செய்யாத கதைகளைப் படிக்காதே-எல்லாக் கதைகளும், பில்க்ரிம்ஸ் ப்ராக்ரெஸ் (Pilgrims Progress) உட்பட, குறிப்பிட்ட ஒருவனைக் குறிப்பிட்ட ஒரு சமயத்தில் வசீகரித்தே தீரவேண்டும். சரியான சமயத்தில், சரியான புத்தகம் அகப்பட்டால் அதைப் படிக்காமல் கீழே வைக்கமுடியாது. மற்ற சமயங்களில் அது வீணான விழலே. கட்டுரை, சரித்திரம், தத்துவ சாத்திரம் எதுவானாலும் விதி ஒன்றே. உன்னுடைய சொந்த உணர்ச்சிகள், கவலைகள், சிக்கல்கள்—இவைகளுடன் சம்பந்தப்படாத புத்தகங்களைத் தள்ளி வைத்து விடு, பார்க்கப் போனால் கலைகள், இலக்கியங்கள்—இவற்றின் நோக்கமென்ன? உலகத்தை உணர்ச்சியால் நிரப்புவது; அர்த்தமுடையதாக்குவது; நம்மையும், நம் சூழ்நிலையையும் பற்றிய அறிவை ஆழமும் அகலமும் பெறும்படி செய்வதுதானே. இவையாவும் உன் சக்திக்குள் அடங்கிய சாத்யமான காரியங்களே.

நான் சகிப்புத்தன்மையைப் போதிக்கவில்லை என்பது நினைவிலிருக்கட்டும். ஏமாற்று உணர்ச்சியும் வெறுப்பும் கொள்ளுவது உன்னுடைய உரிமை, கடமையுந்தான்—ஆனால், அரசியல் தரத்தில் மட்டுமே. சரித்திர பூர்வமாக இதுவே ஏழைகளின் பலன் தரும் ஆஸ்தி. இது இல்லாவிடில் அவர்கள் என்றுமே அடிமைகளாய்த் தான் வாழ்வர். பிறர் உன்னுடைய இதை, சாதுர்யம், கலாசாரம் கலை இவற்றிற்கெதிராகத் திசைதிருப்பப்பார்க்கலாம். உனக்கு மறுக்கப்பட்ட அந்த உயர் கலைகளை ஈனப்படுத்தும் துறையில் திருப்பலாம். இது சூழ்ச்சியான முறை, மேலுக்குத் தெரியாத ஏமாற்று வித்தை—இவ்வித்தையில் முதலில் வெற்றி பெற்றவர்கள் நாஜி (Nazis) கள் என்று நினைக்காதே. இத்துடன் இது முடிவுறும் என்றும் கருதாதே. இந்த வலைப்பொறியில் சிக்காதே, உன் விரோதி மேதாவியல்ல, பணக்காரனே.

---

* 1944, ஏப்ரல் மாதம், லண்டன் நகரத்து ட்ரிப்யூன் பத்திரிகையில் முதன் முதலாக வெளியிடப்பட்டது.

# பெரும் பைத்தியம்*

அவன் எழுதிய தன்னைத்தானே விளக்கும் ஒரே ஒரு வாக்யம் இதுவரையில் சரியானபடி மொழிபெயர்க்கப்படவில்லை. அவ் வாக்யத்தின் அசல்; இன் டெர் க்ரோஸ்ஸே டெர் லூய்ஜ் லெய்ட் இம்மெர் யீன் ஃபேக்டர் டெஸ் கெக்லாப்ட் வெர்டன்ஸ் (In der Groesse der Luege liegt immer ein Faktor des Geglaubt-werdens) என்பதே. இதை அப்படியே அப்பட்டமாக மொழி பெயர்ப்பது மிகக் கஷ்டம்; காரணம் இது வாதத்திற்கு ஏற்ப அமைக்கப்பட்ட வாக்கியமல்ல; சொந்தமான இலக்கணத்தோடு ஞானியின் உள்ளுறை உரையைப் போல் அமைந்துள்ளது. ஒரு வாறு அதனுடன் நெருங்கியுள்ளதாகக் கொள்ளத்தக்க மொழி பெயர்ப்பு இதுவே; 'பொய்யின் பெருமை அதை நம்பக்கூடிய தொரு தன்மையை எப்போதுமே கொண்டிருப்பதுதான்'. இதில் 'கொண்டு' என்பது 'பொய்'யைச் சாராமல் 'பெருமை'யையே தழுவி நிற்பதைப் பாருங்கள். 'பெருமை' என்ற சொல் இங்கு அபூதமான வகையில் இரு அர்த்தங்களை உடையது; அளவுக் கும், மகிமைக்கும் ஒருங்கே பொருந்த நிற்கிறது. இப்போது, மகத்தான இப்பொய், ஆண்டவத்தன்மை பெற்ற அகண்ட மான பொய் (the apotheosis of the Absolute Untruth) அதற்குள் ளேயே அதை நம்பும்படியான பண்பைப் பெற்றுள்ளதாம். வேறு வார்த்தையில், பிறர் நம்பவேண்டுமே என்பதற்காகக் கஷ்டப்பட்டு இட்டுக்கட்டின புதுப் புளுகு; இது உள்ளத்தின் அடித்தட்டிலிருந்து உயிர்க்கிறது; இதன் மகத்தான மகிமையே நம்மையறியாமல் இதை ஏற்றுக்கொண்டு போற்றும்படி செய்து விடுகிறது. க்ரேங் (crank-பெயர்: பைத்யம்) கின் மறைஞான பொக்கிஷத் திறவுகோல்களில் இதுவும் ஒன்றுபோலும். இதுவே அதிகாரத்துக்கு வழி காட்டி சாவி அபூர்வமானதெனில் பூட்டு அதைவிட அபூர்வமானதாக இருக்க வேண்டுமல்லவா?

ஆனால், இந்தப் பூட்டைப்பற்றிக் கவலைப்படவேண்டிய வன் சரித்திரக்காரன், சாவியைப்பற்றி மட்டுமே நமக்குக் கவலை. அந்தப் பைத்யம் தன் இன்பமற்ற இளமைப் பருவத்தில் பல வீடுகளை நாடிச் சென்றுள்ளான்; எங்கும் அநுமதி மறுக்கப் பட்டான். ஒரு சைத்ரிகனாக முயன்றான்; அவனது கண்ணாடி வண்ண மாலைக்காலச் சித்திரங்கள் விலை போகவில்லை. கட்டிட வேலை செய்தான்; மதுவுக்குப் பதில் பாலைக் குடிப்பதும், பைத் யக்காரத்தனமாய்ப் பேசுவதும் சகத்தொழிலாளிகள் அவனை விரட்டும்படி செய்து விட்டன. சேனையில் சேர்ந்தான்; முதற் பரிசுப் பட்டைக்குமேல் முன்னேற முடியவில்லை. அவன் வான்

ரக்ஷணிய சேனை (Salvation Army) யினர் கூடாரங்களின் கீழ், பாலங்களுக்கடியில், ஏதோ கிடைத்த இடத்தில் என்றெல்லாம் வசித்தான். சமூகத்தில் எவருக்கும் சொந்தமில்லாத இடத்தில் கண்டபடி சுற்றும் பிரஷ்டர்களான லாம்பென் (lumpen) சுமை தாங்கிப் பாமரர்களோடு உறவாடினன். இவ்வாறு பல வருடங்கள் கழிந்தன, பிற்கால அரசியல் வாதிக்கு இது தகுதியான ஒரு உன்னத அநுபவமேயாகும். இங்குதான் அந்த சூட்சுமச் சாவி (master key) ஆரம்ப கட்டத்தில் உருப்பெறத் தொடங்கியது. மக்களின் மேல் அபார வெறுப்பாக மாறியது. அவன் சக்கையையே சத்தாக நினைத்தான் என்பது வாஸ்தவமே, எனினும், இத்தவறு அவனது வாழ்விற்கு வளம் தந்தது, சுமையாக அமையவில்லை. பொதுஜன அபிப்பிராயம் அப்பொதுமையைச் சமைக்கும் தனி மனித அபிப்பிராயங்களின் தொகுப்பல்ல; அவற்றின் கீழ் மட்டத்தின் சமனமே: அறிவுச் சக்திகள் ஒன்ருேடொன்று கூடுவதால் கூட்டுச் சக்தியாவதில்லை, பல மூளைகளின் குறுக்கீட்டால் குழம்பிப் போகின்றன; ஒளியுடன் ஒளி சேர்ந்தால் இருள் உண்டாகிறது: எனினும் அவர்களது உணர்ச்சி உத்வேகங்கள் மட்டும் கம்பிச் சுருணையிலுள்ள மின்னல் (electric) கதியைப்போல் பிறவூற்றையும், தம்மூற்றையும் ஏற்று (induction and self induction) அமிதமாய்த் தழைகிறது. இவ்வண்ணம் சமூகத்தின் அடிமட்டத் தரத்தில் தன் வாழ்வின் ஒரே ஒரு லட்சியத்தை அவன் கண்டு பிடித்தான்—சமூகத்தின் கீழ்த்தர மனோநிலை. இதனல் அவனுக்கு சூட்சுமச் சாவி அகப்பட்டு விட்டது.

அதன் மகேந்திர ஜாலம் முதலில் அதன் சொந்தக்காரனை அவனையே அதிசயமாக மாற்றி விட்டது. உளுத்துப்போன பைத்யம் உத்வேகமிக்க பைத்யமானன், இளமைப் பருவத்தில் ஒரு கரும் புள்ளிக் கோடுடன் உருவற்று மொத்தையான அவன் முகம், அக் கண்பாவைகளின் பின் பிடிவாதக் கருத்துக்களின் மின்னெளி கொளுத்தப்பட்டதும் உயிர் பெற்றது. அம்முகத்தில் பழமையான பைத்யத்தின் ஏளனம், அதன் மேல் நோக்கி வளைந்த மூக்கின் அடியிலும் மேலும் கரும் புள்ளிக் கோடுகளுடன் அப்படியே தான் இருந்தன; எனினும் இவை இப்போது நரபலி வெறியில் கூத்தாடும்போது அணியும் சங்கேத (totem) முகமூடியைப் போல் கொடூரமாயின. அவனது கீச்சுக் குரல் பின்னும் அதிகமாய்க் கீச்சிடுகின்றது—மந்திர வெறிமயக்கம் போல. அவன் திரும்பத் திரும்பக் கூறும் எளிய சொற்கள் புதர் முழைவில் தாளம் தவருது தட்டும் சாப்பறைபோலக் கொட்டியது. இதை அறிந்தே போலும் அவன் அக்காலத்தில் தன்னைப் பறையடிப்போன் (Drummer) என கூறிக் கொண்டான்.

அவன் முதலில் சிறு கூட்டங்களில் பேசினான், குறுக்கீட் (interference) டால் அறிவின் குழப்பமும், கொள்ளீட் (Induction) டால் பொதுவுணர்ச்சியும் உண்டாகின்றன என்ற தன் கொள்கைகளைப் பதம் பார்த்தான். அவை நன்கு வேலை செய்தன. அக் காலம் அவன் தேசம் தோல்வியுற்ற காலம், அன்றிருந்த அதிகார வர்க்கம், மக்களின் வெறுப்பை வேறு வகையில் திருப்ப உபயோகமான பைத்யங்களைத் தேடியது. இப் பைத்யம் மிக மிக உபயோகமானவனென்று கண்டனர். இதன் விளைவு பின்னரே தெரிந்தது; எனினும் இது ஒரு முக்கியமான சரித்திர சம்பவம், சாவி தனக்கேற்ற பூட்டைக் கண்டுகொண்டது.

சரித்திரங்களெல்லாம் என்றுமே சாவி—பூட்டு அடிப்படையிலேயே எழுதப்படுவன. சாவிகள் தனி மனிதனின் அலாதித் தன்மைகளால் உருவானவை; சமூகத்தின் அமைப்புப் பாதைகள் மாறுவதால் பூட்டுகள் உருவாகின்றன. சரித்திரப் போக்கைப் பரந்த வாரியாகப் பார்க்கும்போது நிர்ணயிக்கப்படாத அம்சங்களுக்கும் அதில் இடமிருப்பது தெரிகிறது. யதேச்சையாக நிகழ்ச்சிகள் ஏற்படுவதற்கான தோதுதான் இது. ஒரு குறிப்பிட்ட பூட்டு அமைப்பு சரியான சாவியோடு சேருவது செல்டன்ஹா (Cheltenham) மில் எத்துணை வருங்கால வெல்லிங்டன் (Wellingtons)கள் இருந்தனரோ, நமக்குத் தெரியாது. க்ரோச்சி (Gracchi) யின் கலைப் பித்தம் கொஞ்சம் குறைந்திருப்பின் ரோம் அழிவிலிருந்து தப்பியிருக்கும். இந்தப் பைத்யத்தைச் சரியான காலத்தில் கொன்றிருந்தால் வெய்மர் (Weimar) ஆட்சி நீடித்து இன்றைய போர் தவக்கப்பட்டிருக்கலாம், அல்லது அடியோடு தவிர்க்கப்பட்டும் இருக்கலாம். இப்போதுள்ள நிலைமையில், இந்த சுயேச்சைக்கு மலர்ந்த கண்களுடன் மக்கள் பலியாக வேண்டியதே: மறுபடியும் இதேமாதிரி ஒரு பைத்யம் தோன்றலாம்; சமூகத்தின் அடிமட்டத்திலுள்ள மக்களை இயக்கும் சூட்சுமச் சாவியைக்கண்டு பிடிக்கலாம்—எதுவரையில், சமூகத்தின் அடிமட்டத்திலுள்ளோர் நிலை அவன் அண்ட முடியாதபடி உயரும் வரையில் இப்படி நடந்துகொண்டேயிருக்கும். இதுவே பைத்யத்திற்கும் ஜனநாயகத்திற்கும் இடையேயுள்ள அடிப்படையான குறிக்கோள்.

* 1942, அக்டோபரில், லண்டன் நகரத்து அப்ஸர்வர் பத்திரிகையில் பக்கவாட்டு முகபாவ (Pnofiles) வரிசைக் கட்டுரைகளில் ஒன்றாக வெளிவந்தது.

# நினைவுச் சின்னம்*

இறந்த நண்பரைப் பற்றி எழுதுகிறோம்; எனவே, காலத்தை எதிர்த்து எழுதுகிறோம்; மறைந்து மங்கும் ஒரு உருவத்தைத் துரத்திப் பிடிப்பது போன்றது இது. மறைந்துறைந்து பய பக்திக் கதையில் சங்கமமாகுமுன் அவரைப் பிடித்து எழுத்தோவியத்தில் நிறுத்த முயல்கிறோம்.

இறந்தவரை வருணிப்பது அகம்பாவ மிகுந்தவரை மசிய வைப்பது போலத்தான். படையில் உன்னுடன் சாமானிய வீரனாயிருந்து, கமிஷன் அந்தஸ்து பெற்றவனுடன் பழகுவது போல விபரீதமான அவர்களின் சாவுமோனம் நம்மைச் செயலிழக்கச்செய்கிறது. எனவே, பந்தயம் துவங்கு முன்பே நாம் தோல்வியடைந்து விடுகிறோம்.

உள்ளது உள்ளபடி இறந்தவரை மறுபடியும் வருணிக்க முடியாது; காலமானவரைப் பற்றிக் கதை கட்டும் கற்பனை யந்திரம் ஏற்கனவே இயங்க ஆரம்பித்து விட்டது. சின்னஞ்சிறு மனோரம்ய நிகழ்ச்சிகளும் வாழ்க்கைச் சரிதச் சம்பவங்களாய் உருப் பெற்று உறைகின்றன; சாரமற்ற நிகழ்ச்சிகளே நினைவுக் குகையின் முகட்டில் கனிவான பனி மணிக் கொத்துகளாகத் தொங்குகின்றன.

யுத்த காலத்தில் இறந்தவர்களைப் பற்றிய உண்மைகள் அதி வேகமாய் மறைகின்றன; அவர்களைப் பற்றிய பயபக்திக் கதைகளும் அதிசீக்கிரமாய் உருவாகின்றன. இப்போதே ஹில்லரி (Hillary) யைப் பற்றிய இத்தகைய கதை யொன்று தோன்றி விட்டது; அது வளர்பிறை போல் வளர்ந்த கன்று பரிமாணத்தில் பெருகும் எனச் சிரமமின்றிக் கூறலாம். இந்த யுத்தம் சம்பந்தப்பட்டதொரு சின்னமாய் தலைத் தோங்கும் வரை இது நீடிக்கும். இக்கதைகளின் வளர்ச்சியை எவரும் மாற்ற முடியாது; மாற்ற முயல்வதும் வீண். இவை படிப்படியாய்ப் படியும் பளிங்குகள் போல, உப்பு நீர்; உப்பு நிறைந்து தோய்ந்து திணிவதென இணை அணுக்க (molecules) ளாய்த் தேங்குகின்றன, ஒரு மையத்தைச் சுற்றிப் பளிங்குருவங்களாய்ப் படிகின்றன. இதைப் போன்றே சமூகத்தில் மறைந்து பரவலாயுள்ள ஒரு உணர்ச்சி ஒரு மையத்தைப் பற்றிப் பயபக்திக் கதையாக வடிவெடுக்கிறது. பளிங்கைப் போலத்தான் பயபக்திக் கதையும் பிறக்கிறது.

இப்போதுள்ள கேள்வி அந்த மையம் யார் என்பதே? யாராயிருந்தாலும் அவருக்கும் சமூகத்தில் தெளிவற்றுப் பரந்துள்ள அவ்வுணர்ச்சிக்கும் ஏதோ சம்பந்த மிருக்கவேண்டும்;

அவர் பயபக்திக் கதைக்கேற்ற ஆசைக்குத் தக்க வீரனுய்த் திகழ வேண்டும்; விளங்காத அவ்வாசை வெறியின் ஏதோ ஒன்றின் விளக்கமாயிருக்க வேண்டும். ஹில்லரியின் வாழ்வும் மரணமும் ஒருவகையில், சின்னங்களே. அது அவருக்கும் தெரியும்; ஆனுல் எதைப் பற்றிய சின்னங்கள்? அதைத்தான் அவர் அறிய விரும் பியிருப்பார்; அது தான் அவரால் அறியமுடியவில்லை. அவர்,

"படுக்கைக்குப் போகுமுன் இதை எழுதுகிறேன்; ஏதோ மாதிரி நோயுற்றவன் போன்ற ஒரு உணர்ச்சி தோன்று கிறது; ஏனெனில் இன்றுதான் ஸிங்கப்பூரில் காலின் பிங்க்நே (Colin Pinckney) கொல்லப்பட்டார் என்ற செய்தியை அறிந் தேன். அவரை உங்களுக்குத் தெரியாது; இனித் தெரிந்து கொள்வீர்கள்; இந் நூலைப் படித்ததும் அவரிடம் உங்க ளுக்குப் பிரியம் ஏற்படும் என நம்புகிறேன். வாழ்விற்குத் தக்க வகையிலே அவரது மரணமும் அமைந்துள்ளது. இதனுல் என் மனத்தில் ஒரு கேள்வி தோன்றுகின்றது; இப்புத்தகத்தில் அதே கேள்வியைக் கேட்டு. அதற்குப் பதிலும் காண முயன் றுள்ளேன். கேள்வி இதுவே: போனவர் போக மிஞ்சி இருப்ப வனின் கடமை என்ன? இருப்பவர்கள் என்று பன்மையிற் கூறவில்லை, இருப்பவன் என்று ஒருமையில் கூறுகிறேன்; ஏனெனில் கடைசியில் மிச்சமாயிருப்பது நான் மட்டுமே. வாழ் வில் சிறிதே தியாகம் செய்த நான் மிஞ்சி நிற்க நேர்ந்தது ஆச்சர்யமே? ஏன்? எனக்கே புரியவில்லை" என்கிருர்.

அவர் மீது விழுந்த பொறுப்புத்தான் என்ன? எந்தச் சின் னத்தை அவர் உருவகப்படுத்துகிருர்? ஒரு பயபக்தி கதை வளரலாம், அது நம்மை வசிகரிக்கலாம், சரியான தந்திக் கேற்பத் தாவிக் குதிக்கும் இசைக்கவண் (tuning forks)போல நம் உள்ளம் அதில் ஈடுபடலாம்; எனினும் ஏன் அவ்வாறு ஈடுபடுகிருேம் என் பது நமக்கே தெரியாமற் போகலாம்; சிக்கல் விளங்காமலேயே சின்னத்தைப் போற்றலாம். மாதாவையே காதலித்த மன்னன் யுடிபஸ் ரெக்ஸ் (Oedipus Rex) சின்னத்தின் கவர்ச்சிக்குக் காரணம் தெரிய இரண்டாயிரம் ஆண்டுகள் ஆகவில்லையா?

தன் 23 வயது ஆயுளின் கடை இரு வருடங்களில் ஹில்லரி இக் கேள்விக்கு விடைகாண முயன்ருர்; தன்னைச் சுற்றிப் பின்னி வருவதாக அவரே கருதிய புராணக் கதையின் கடும் பொருளைத் தேடுவதில் ஈடுபட்டார். தான் இறக்கப் போவது அவருக்குத் தெரிந்திருந்தது; ஏன்? என்று அறிய விரும்பினுர். உண்மையில் தன் மரணத்தாலன்றி வேறு வகையில் அது முடிவடையாது எனத் தெரிந்தே ஒரு மார்க்கத்தை மனமறிந்து பின்பற்றினுர்.

"—அன்பே! நம்பிக்கை கொள் என்கிருய்; எதில் நம்பிக்கை? எல்லாம் சரியாய் விடும் என்பதிலா? இது,'சரி' யென்று எதைக்

கருதுகிறேமோ அதைப் பொறுத்தது. ஏதோ ஒரு அதிசயம், தக்கபடி மட்டுமல்லாமல் சந்தோஷமாக நான் செய்யக் கூடிய ஒரு தொழிலைக் கொடுக்கும் என்பதை நம்பச் சொல்லுகிருயா? இல்லை, இது தீமையான நம்பகம்: உள்ளூற அரித்து ஒருவனை உபயோகமற்றவனுகச் செய்யும் நம்பகம். நான் திரும்ப என் பழைய வேலைக்கே (அவர் ஒரு விமானப் படையினர், இரண்டாண்டுகளுக்குமுன் விமானம் விழுந்து அடியுண்டவர், இப்போதும் அவ்வேலைக்கே திரும்புகிருர்) வந்தது சரி என்று நம்பச் சொல்கிருயா? அப்படியானுல் ஆம். இதனுல் நான் சாக மாட்டேன் என்ற நம்பகமா? அப்படியானுல் இல்லை. தர்க்க ரீதியான வாதப்படி இது முடிவதானுல் நான் சாகாதிருக்க யாதொரு காரணமுமில்லை. சில மணிநேர ஆகாய கமனத்திற்குப் பிறகு என் உள்ளுணர்ச்சி நீ சாகமாட்டாய் என்று கூறும்; என் பகுத்தறிவு சாவாய் என்று கூறும். இச்சமயத்தில் என் பகுத்தறிவு சொல்வதே சரியாயிருக்கும்."

இது தவிர,

"...முன்னைப்போலவே, ஆகாயத்தில் அதிகமாய்ப் பறக்க உயிரிழக்க மாட்டாய் என்று என் உள்ளுணர்ச்சி உறுதி கூறும்; உயிரிழப்பாய் என்னும் அறிவின் குரல் கொஞ்சம் கொஞ்சமாய் ஓயும். இப்போது என் அறிவு சொல்வது தான் சரி; எனக்கு நன்கு தெரியும், அதைச் சந்தேகிக்க இடமில்லை."

இது விசித்திரமா யிருக்கிறதல்லவா? பொதுவாக உள்ளுணர்ச்சியே மனிதனை எச்சரித்துப் பயங்கொள்ளச் செய்வது, பகுத்தறிவே அஞ்சேலென்று அபயமளிப்பது. ஆனுல், அவர் விஷயத்தில் எல்லாம் தலைகீழாய் நடக்கிறது. இதைக் காட்டிலும் விநோதமான ஒன்று இனித்தான் வருகிறது. உள்ளுணர்ச்சி எவ்வளவு ஏமாற்றமானது என்பதைக் கண்டோம். அவருக்கு அது தெரியும். அதை அடிக்கடி வற்புறுத்துகிருர். உதாரணமாக: '...ஏற்கனவே மதுவின் வெறி தன் வேலையைத் துவங்கி விட்டது. சாப்பாட்டறைக்குச் செல்லும்போது என் கால்கள் தடுமாறுகின்றன—' முதலிய. இருப்பினும், தன் பகுத்தறிவுக்கு விரோதமாய், உள்ளுணர்ச்சியின் உபதேசப்படியே, விமானத் தொழிலுக்கே திரும்புவதென்னும் உயிர் வாங்கும் தீர்மானத்தில் உறுதியாய் நிற்கிருர்: விமான நிலையத்திற்கு வந்த சில நாட்களுக்குப் பிறகு அவர் எழுதியது:—

"வேண்டுமானுல் ஒருவன் என்றென்றும் பகுத்தறிவு வாதத்திலீடுபடலாம். ஆனுல் இதெல்லாம் பைத்யக்காரத்தனம் என்று பகுத்தறிவே இறுதியாகச் சொல்லிவிடும்; உண்மையில் எவனும் தன் உள்ளுணர்ச்சியின் குரலுக்கே செவிசாய்க்கிருன்..."

மற்றொரு கடிதத்தில்:—

"...(வாழ்க்கை) யாத்திரையின் முடிவிற்கு இது ஓர் அதிசய மான இடமே" என்கிறார். எனவே, உயிரோடிருப்பாய் என்னும் போது அவர் உள்ளுணர்ச்சியை நம்பவில்லை; யாத்திரை முடிவிற்கு அழைத்துச் செல்லும் காலையில் அதை நம்புகிறார். யார் யாரை ஏமாற்றுவது? வெளிப்படையாகப் பார்த்தால் உள்ளுணர்ச்சி தன்னை உடையவரை ஏமாற்றுகிறது; தன்னை எவரும் தகைக்க முடியாதென்னும் மாய உறுதியுடன் அவரை வசஞ்செய்து சாப்பொறிக்குள் கூட்டிச் செல்கிறது. ஆனால், நெருக்கமாக உற்று நோக்கினால் அவரே தன்னிச்சையாகத் திறந்த கண்களுடன், பல்லைக் கடித்துக் கொண்டு சாப்பொறி (death trap)க்குள் நுழைவதைக் காண்கிறோம்.

"...ஹாலிவுட் (Hollywood-சினிமா) கொள்ளைக்கார வீரன் தானாகத் தன்னிச்சையாய்ச் சிறை புகுந்து, தன்முன் கடைசி முறையாய்ச் சிறையின் கதவு அடைக்கப்படுவதைக் காண்பது போன்ற உணர்ச்சியே எனக்கும் ஏற்படுகிறது," என்றும் சொல்கிறார்.

இந்த அதிசயமான, சந்தேகிக்கத்தக்க உள்ளுணர்ச்சியின் தீர்ப்பை அவர் ஒப்புக்கொள்ளுகிறார், ஆறுதலை ஒதுக்கிவிடுகிறார்- வெறுப்போடும், ஆவலோடும், வக்ரமான வாதங்கள் புரிந்தும் குழந்தைபோல் அழுது முரண்டு செய்தாலும் கடைசியில் அதற்குப் பணிகிறார். இப்போது இவ்வுள்ளுணர்ச்சி வாஸ்தவத்திலேயே மிக மிக வியப்பானதோர் சக்தியாய் வெளிப்படுகிறது. இதை வர்ணிக்க விஞ்ஞானத்தில் வார்த்தை கிடையாது. ஏதோ மையத்தைப்பற்றி ஏற்பாட்டின்படி மாறும் இணை அணுக்களுக்கு இதை ஓரளவு ஒப்பிட்டுக் கூறலாம்.

## 2

கட்டுக் கதை, தான் தேர்ந்த ஒருவரின் உள்ளே புகுந்து உருக்குலைக்கின்றது. பூதக் கண்ணாடியில் தெரியும் விஷக் கிருமிகளைப் போல் வீரனாகும் விருப்பம், உருவகச் சின்னமாகும் உணர்ச்சி என்பவை அவரது உடலிற் புகுந்து, ரத்தத்திற் கலந்து உள்ளூற அரித்து, புகழ் உருவைக் காப்பாற்றப் புலாலுருவையே எரித்து விடுகிறது. இது அவரது கடிதங்கள் மூலம் நன்கு தெரிகிறது.

எனினும், இவை ஒன்றும் நம் கேள்விக்கு விடை கூறவில்லை. சின்னமெனில் எதைப் பற்றிய சின்னம்? பார்க்கப் போனால் பேட்ஃபினுகேன் (Pat Finucane) 32 விமானங்களை வீழ்த்தினார்; இவர் வீழ்த்தியவை ஐந்தே, அதிலும் மூன்றே என்றுதான் கூற வேண்டும். ஒரு பரிசுப் பதக்கம் கூடப் பெறவில்லை. அக்காலத்து

நூல்களில் இவரது கடைசிப்பகைவன் (The Last Enemy) வரப் போகும் உயர்வுக்கு உன்னதமானதோர் வழிகாட்டியாய் நின் றது, எனினும் எதிர்பார்க்கப் பட்டதே ஒழிய நிறைவேற்றப் பட்டதல்ல. பின், எந்தப் பண்பை, கருத்தை, மனோ நிலையை, வெளியாகா நம்பகத்தை அவர் விளக்கினார்? இளைஞனை ஹில்லரி இதைத் தெரிந்துகொள்ள எதையும் த்யாகம் செய்யத் தயாரா யிருந்தார்; ஆனால் தெரிந்து கொள்ள முடியவில்லை. வாழ்க்கை விளையாட்டின் விதிகளுக்கு இது விரோதமனது; தேய்ந்து நுணுகியுள்ள இத்தகைய கட்டங்களில் சரியான காரியங்கள் தவறான காரணங்களுக்காகவே செய்யப்படுகின்றன. அவர் அறிந்ததெல்லாம் 'இவ்விஷயத்தில் தன் உள்ளுணர்ச்சி கூறுவது சரியே' என்பதுதான்; எழுத்தாள ஆவேசத்தோடு மறுபடியும் மறுபடியும் 'இது ஏன் சரியானது?' என்பதை விளக்க முயல் கிறார்; தோல்வி அடைகிறார்; வெற்றி பெற்றிருப்பின் உள்ளு ணர்ச்சி மடிந்திருக்கும், அவர் உயிரோடிருப்பார். இந்த நிலையில் தன் மரண ஸாஸன (epitaph)த்தைத் தேடி அவரே சாகவேண்டி யதாயிற்று.

முதலில் தன் கல்லறைக் கல்வெட்டாக வெர்லெய்ன் (Verlaine) எழுதிய நாலு வரிப் பாட்டொன்றைப் பயன்படுத்த எண்ணினார்:—

க்யோக்யூ ஸான்ஸ் பேட்ரே எட் ஸான்ஸ் ராய்
எட் ட்ராஸ் ப்ரேவ் நே லெ டான்ட் க்யுரே
ஜாய்வோலூ மோரிர் ஆ லா க்யுர்ரே
லா மார்ட் நா பாஸ் வோலூ தே மாய்

'அதி நில மற்றேன் அரசனுமில்லேன்
தைர்ய மிக் கிலேன் தனிச் சிறப் பில்லேன்
வெற்றி மிக்கிலேன் வெங்கள முனையில்
உயிர் விட் டேங்கும் உத்தம னல்லேன்
என்னுள் என்னையே தேடுவான் இறந்தேன்'.

இது வாழ்வின் ஆரம்ப கால முடிவு; பருவ முதிர்வின் நாத்திகத் தழைவான தங்கு மிடம். பழைய நினைவாய்க் 'கடைசிப் பகைவனின்' முதல் அத்தியாயத்து, முடிவுரையாக இது வரு கிறது. பின், வாழ்வின் வழி திரும்பி விட்டது இப்போது, 'மனித உள்ளத்திற்கு அப்பாலுள்ள எண்ணக் கோவைகளின் திரையை, விலக்கிப் பார்க்க விரும்புகிறது'; எனவே கடைசி அத் யாயத்தில் கல்லறைக் கல்வெட்டு மாறி விடுகிறது.

'லெ ஸெண்டிமெண்ட் டிட்ரே டவ்ட் எட் ல' விடன்ஸ் தே நெட்ரே ரைய்ன்'-அதாவது, 'வாழ்வின் உணர்ச்சி யாவும் மரணத்

தின் சாட்சியே—அது நானே!' என்று, கடைசி அத்தியாயத்தின் பாஷையில் முன்பிருந்த தீவிசிறும் தெளிவான லாகவம் இல்லை; உதவி யற்றுத் திக்கித் திணறுகிறது. உச்சமான அந்த கண்டம் தீர்ந்ததும், உருவைப் பிரித்து ஒட்டவைத்து உருவகத்தைக் காணும் முயற்சி முடிந்ததும், தன் வாழ்வின் அர்த்தத்தை அவர் அறிய முயல்கிறார்.

"ஓரளவு தயக்கத்தோடு தான் இந் நூலை எழுத ஆரம்பிக்கிறேன். யுத்த சம்பவங்கள் வெறும் திரைப்படக் காட்சிகளல்ல; இத்தேசத்தின் இளம் சமுதாயத்திடையே பிரதிவிளைவு உண்டாக்க வல்லவை என்பதால் நல்லபடி இயற்ற வேண்டும். எடுத்துக்கொண்ட விஷயத்துக்குத் தகுதியான முறை என்று யாரோ குறிப்பிட்டது சரிதான் என்று நான் நினைத்தேன். வெற்றி பெற்றேனோ இல்லையோ, எனக்குத் தெரியாது. கடைப் பட்சம், 'வானரண் தீவுகள் (Island fortresses), வாயு மண்டல வீரர்கள் (the knights of the Air) என்னும் வெறிக் கூச்சல்களை நான் வெறுக்கலானேன். அடுத்த தலைமுறைக்காவது நாம் முட்டாள்களே; எனினும் இந்த வெறுங்கூச்சல்களை நம்பக்கூடிய அவ்வளவு முட்டாள்களல்ல என்று தெரிய வேண்டும். அதற்காகவே இதை எழுதுகிறேன். போன யுத்தத்திலும் இவ்வாறு தான் நடந்தது; அதை நாங்கள் மறக்கவில்லை; இவற்றாலல்ல, இவைகளை அசட்டை செய்தே, இந்த யுத்தத்தில் ஈடுபடுவது சரி யென்று நாம் எண்ணுகிறோம்."

இது சரியான விளக்கம் என்று கூறமுடியாது. ஒரே ஒரு மாற்றுச் சொற்றொடர்—, 'இவற்றாலல்ல இவைகளை அசட்டை செய்தே'—என்பது மட்டுமே நம் இதய வீணையைக் கொஞ்சம் உலுக்குகிறது; ஏனெனில். இவைகளை விட்டொதுங்கி வேறு எதற்காகவோதான் யுத்தம் செய்கிறோம் என்பதை ஏறத்தாழ உணர்கிறோம். வாயரட்டல் தேசபக்தி, நம்பக மற்ற வீரத்தன்மை,சார்பற்ற லக்ஷ்ய வாதம்—இவைகள் இன்றையயுத்த மனோபாவத்தில் முக்கியமாய் உள்ளன. இத்தகையோரையே இக்காரியத்திற்காகத் தேர்ந்தெடுக்கும் சக்திகளைப் பற்றி இதில் லேசான ஒரு அறிகுறி இருக்கிறது. இது மிகமிக லேசான அறிகுறியே. இக்கருத்து வேறொரு கடிதத்தில், அதாவது, அடிக்கடி திரும்பத் திரும்பத் தைப்பதால் முன்னிருந்த துணியைக் காட்டிலும் ஒட்டுத் துணிகளே அதிகமான சட்டையைப் போல், மறுபடி மறுபடியான ஆபரேஷனால் அவர் முகம் அறுத்து அறுத்து அப்பித் தைத்த சதைப் படலங்களாய் அலங்கோலமான பிறகு எழுதிய கடிதத்தில், இந்த லேசான அறிகுறி சற்று விரிவான விளக்கம் பெறுகிறது. அது,

ஆஸ்பத்திரியில்,
படுக்கையில்,
கோபத்தில்,
என்னத் தலைக் குறிப்புகள் கொண்டுள்ள.

"மனித குலம் கழுத்துக்குமேல் வஞ்சப் புகழ்ச்சியின் வளமையே யாகும்: மக்களுக்காகப் போரிடுபவன் முதன் முதலாகத் தெரிந்துகொள்ளவேண்டியது இதையே. இப் போராட்டத்திலிருந்து கிடைப்பது ஒன்றுமில்லை. ஒழுக்கத்தின் பயன் ஒழுக்கமே என்பதில் உனக்குத் திருப்தி ஏற்படவில்லை யானால், வாழ்வை விநோதமாகக் கொள்ளுவதுதான் மனிதத் தன்மை: இல்லையேல், கடவுள்தான் உன்னைக் காக்கவேண்டும்."

ஆறு வாரங்களுக் கப்புறம், மற்ளுெரு ஆபரேஷனுக்குப் பிறகு கைகளுக்குப் புதிய சப்பைக் கட்டுகள் ஏற்பட்டபின் தெளிவற்ற இதே சிந்தனையை வேறு வகையில் அவர் தெளிவிக்க விரும்புகிறார் :—

"விமானப் படைக்கென்றே தனிப்பட்ட பண்புகள் யாவை? இவற்றைப் பிரித்துணர்வது கஷ்டமான செயலே. நான் நினைக் கிறேன்—மற்றத் தொழில்களிலிருந்து ஏதோ ஒன்று இதைத் தனி யாய்ப் பிரித்து வைக்கிறது. அது ஒரு வரம்பற்ற வாகை உணர்ச்சி என்பது விளைசையும், பொய்யுமே; எனினும் இதைக் காட்டிலும் தக்க வகையில் இக்குணத்தை வர்ணிக்க வார்த்தை களில்லை. முடிவாக அது இதுதான் போலும். சமுதாய அமைப் பைவிடத் தனி மனிதன் காணுச் சக்தியின் சமீபத்தில் நிற்கிறான். ஆனால், சமுதாய அமைப்புகளுக்குள், வான்படையே தனி மனி தனது இப்பான்மைக்கு அதிக இடங் கொடுக்கிறது. எனினும் வான்படையினரும் தமக்கே விளங்காத வகையிலேயே இதை அநுபவிக்கின்றனர். அவர்களைக் கண்டால் ஏமாற்றமே ஏற்படு கிறது. டி மார்கன் (**De Morgan**) நவீனங்களில், நோக்கம் உயர்ந் துள்ளது, அடையும் மார்க்கத்தில் ஏதோ குறையிருக்கிறது. வான்படையினரைப் பற்றியும் இத்தகைய உணர்ச்சியே நமக்கு உண்டாகிறது. சமாதானத்திற்குப் பிறகாவது நல்லகாலம் பிறக்குமா? ஹேரிஸன் (**Harrison**) கேட்பது போல்—அச்சத் திற்கு மேம்பட்ட ஆதர்ஸத்தில்-நாம் வெற்றி பெறுவோமா?"

தன் அவநம்பகத்தை அவர் எத்துணை அக்கறையோடு காப் பாற்றுகிறார்? காவல் நாயைப்போல் அவர் வீட்டு வாயிலில் அது சதா ஆரவாரத்தோடும், ஆவேசத்தோடும், சில சமயம் ஹாஸ்யத் தோடும் குலைக்கிறது; ஆனால் கடிப்பதில்லை. வீடு திறந்து தானிருக்கிறது; உள்ளே செல்ல யாதொரு தடையும் இல்லை.

ஐந்து மாதங்களாயின, உள்ளுணர்ச்சி மறுபடியும் அவரை விமான நிலையத்திற்கு உந்திக்கொண்டு வந்தது. கழுகின்

காலடிபோல் கைகள் வக்கரித்திருந்தன; உணவுக் கருவிகளைக் கூட அவரால் சரியானபடி பிடிக்கமுடியவில்லை. தனக்குப் பழக்கமான இரட்டை என்ஜின் விமானத்தை 'ப்ரேக்' போட்டு நிறுத்த இயலவில்லை. அதற்காக நீண்ட கழி ஒன்றை அதனுடன் இணைத்தனர்; விமானத்தின் அடித்தளக் கதவைத் திறக்க முடியவில்லை; வேறொருவர் அதைச் செய்யவேண்டி இருந்தது. சில சமயங்களில் தம்மைப் பிணைக்கும் 'பெல்ட்' (இணைப்புப் பட்டை)டுகளைப் போட்டுக்கொள்ளமுடியவில்லை. அவை இல்லாமலே பறந்து சென்றார். ("...இப்போது நான் எதையும் பற்றிக் கவலைப்படவில்லை. தரைமேல் சரேலென இறங்குவதா, தயார்; காற்றுக் கண்ணாடி (wind-screen) யினூடு சென்று அழிவதா? அப்படியே ஆகட்டும்.") சில சமயம் செயற்கையான கண்ணாடிப் பாவைகள் பொருத்திய அவரது சிதைந்த கண்களால், உயரமானி (altimeter) யைச் சரியானபடி படிக்க முடியவில்லை. அடிக்கடி வெடிபடும் தலைவலியால் வருந்தினார்; உயரச் செல்லச் செல்ல நோய் உணர்ச்சி மிகுந்தது; புயலின் வெறி அவரது கைத்தோலைப் பிய்த்தது. எப்படியோ டாக்டர்களை ஏமாற்றிவிட்டார். தன்னைத் தானே ஏமாற்றிக்கொள்ள இயலவில்லை. அவரது கடைசி இரவின் பயிற்சிப் பறத்தல்கள் மயிரிழை தப்பிய ஆபத்துக்களின் சங்கிலிக்கோவையே. இப்படிப் போனால் இன்றோ நாளையோ சங்கிலி அறுந்துதானே தீரவேண்டும்.

பின், கடவுள் பெயரால் கேட்கிறேன், எதற்காக அவர் மறுபடியும் விமானத் தொழிலை மேற்கொண்டார்?

மமதையாலா? "நானே வியப்படைகிறேன்; ஏதோ ஒரு சிந்தையற்ற சிறுமி கூறியதுபோல் உண்மையில் மமதைக்காகவா மறுபடியும் விமான வேலையை ஏற்றேன்? இல்லை, ஏனெனில் என் தீர்மானத்திலேயே நான் இறந்து விடுவேன் என்ற நிச்சயமும் இருந்தது." நாம் மேதாவித்தனக் குயுக்தியாய் இவ்வாக்யத்தையே வக்ரமாய்த் திரித்து மன்னிப்புத் தன்மையே மமதையின் தாக்குத (qui s'excuse s'accuse) லாகலாம் என்று தற்பெருமை வாதத்திற்கு இதையே அத்தாட்சியாகக் கொள்ளலாம். ஒப்புக்கொள்ளுகிறோம்; எனினும், ஏதோ ஒரு நோக்கத்தின் திருப்திக்காகத் தன்னையே மாய்த்துக்கொள்ளும் உணர்ச்சியை வேறு பெயரிட்டுத்தான் அழைக்கவேண்டும். நார்ஸிஸெஸ் (நீரில் தெரியும் தன் நிழலைக் காதலித்து இங்ஙனைவாலேயே மடிந்து நீர்ப்பூவான இளைஞன்) கூட நீரில் தெரியும் தன் நிழலைக் காப்பாற்றத் தன்னையே எரித்துக் கொள்ளவில்லை.

சுயநாச வெறி, தன்மைத் தழைவு (masochism) ஆழ்மைக் கலக்கம் (morbidity)—என்றெல்லாம் கூறலாம். "அன்பே! நான்

ஒரு இருண்ட குகை வழியே போகும் மனிதனைப் போன்றிருக்கிறேன்; அவன் தூரத்தே ஒரு துளிச்சுடரைக் காண்கிறான்; சந்தோஷமாய்க் கூச்சலிடுகிறான், அது மாயமாயிருக்குமோ என்று தயங்குகிறான்; பின் உறுதியோடு மௌனமாய் முன்னேறுகிறான்; அவனது இதயம் அடித்துக் கொள்ளுகிறது; தட்டுத் தடுமாறி வெளிச்சத்திற்கு வருகிறான்; அவனது உடலின் விறைப்புத் தணிகிறது, ஆனந்தக் கண்ணீர் விடுகிறான், இதயத்தைத் திறந்து கொட்டுகிறான்—ரிச்சார்டு". இத்தகைய காதற்கடிதம் எழுதுபவர் உள்ளூறக் கலங்கிய தன்மை உன்மத்த (morbid masochist) ராக இருக்கமுடியாது. இங்கும் ஒன்று மற்றொன்றை விட்டு விலகியதல்ல; எதிர் மறை எல்லைகள் இணைந்தேயுள்ளன (les extremes se touchent) என்றெல்லாம் விவாதிக்கலாம். சரி, இதையும் ஒப்புக்கொள்வோம்.

ஒருகொள்கையிற் பிடிவாதமான ஈடுபாடா?......"என்பால் தயை மிகுந்தவர்களின் தவறான கருணையை எடுத்த எடுப்பிலேயே உதாசினம் செய்ய இஷ்டமில்லை; அப்படிச் செய்யின் நான் பொய்யான விநயஸ்தன், லேசான கிறுக்கன் என்றெல்லாம் கருதியிருப்பர். எனவே நான் பாசாங்கு வேஷப் பதிதனாய்த் தான் இருந்தேன். பிறர் சொல்லுவர், 'உன்னைப் பிடித்தோரைப் பன்றி பிடிக்கட்டும்; அந்தப் பெயர்களை நீ எவ்வளவு வெறுப்பாய்' என்று; அதற்குப் பட்டும் படாமலும் 'எனக்குத் தெரியாது' என்ற பதிலோடு நிறுத்திக்கொள்வேன். அவர்களது யுத்தத்தில் நான் காயமடையவில்லை; நம் தீவுக் கொத்தளத் (island fortress) தைக் காக்கவோ? அல்லது குடியாட்சிக்காக உலகைக் காப்பாற்ற (making the world safe for democracy)வோ நான் போருக்குப் போகவில்லை என்பதை விளக்கமாகக் கூற எனக்கு முடிவதில்லை. இதுவரையில் பட்ட துன்பங்களுக்காக நான் வருந்தவில்லை; நான் அவைகளை வரவேற்றேன்; இப்போதும், துன்பங்களெல்லாம் தீர்ந்த பிறகும் அவற்றிடம் நான் நண்புள்ளவனாயிருக்கிறேன். காலாகாலத்தில் என் வாழ்வின் வளர்ச்சிப் பாதையில் இவ்வநுபவங்கள் எனக்கு மிகவும் உதவியாயிருக்கும் என்றெல்லாம் வெளிப்படையாகக் கூற எனக்கு இயலவில்லை." ஆனால், இதுவுங்கூடப் பார்க்கப்போனால் பணிவுதானா? தலைகீழ்த் தற்பெருமையா? ஆங்கில இளைஞனுக்குத் தான் குறைவை நிறைவாகக் கூறுவதில் பிரியமாயிற்றே?

இவ்வண்ணம் அமித மேதையால் இதைப் பகுத்து வகுத்துக் குதர்க்கம் செய்துகொண்டே போகலாம்; அவர் மேல் ஏதாவது லேபில் (தலைப்பு) ஒட்டவேண்டுமல்லவா; இப்படி ஒட்டிக் கொண்டே போனால் உலக யாத்ரிகனது கைப்பெட்டி போல்

அவரும் ஓட்டல் மயமாவார். இவைகளில் எப்போதுமே ஏதாவது ஓரளவு உண்மை இருக்கத்தான் செய்கிறது. சில்லறை ஜோதிடம்போல் தளர்ந்த வகையில் இவை எவருக்கும் பொருந்தக் கூடியவையே. நிர்ணயமான ஸாஸ்திரீய உரிச்சொற்கள் (adjectives) சரிப்படவில்லையானல் ஒரு கழித்தல் குறி (minus sign) யைப் போட்டாற் போதும். இல்லையேல், அமுக்கப்பட்டதன் பழிவாங்கும் தன்மை (revenge of the repressed) என்று சுலபமாய் வர்ணித்து விடலாம். நமது சின்னஞ்சிறிய பெயரெச்சங்களை நாம் உண்மையாகவே நேசிக்கிறோம். அவையே பயங்கரமான உண்மைகளினின்றும் நம் தயையையும், தடுமாற்றத்தையும் காப்பாற்றுகின்றன. நம் அறிவு விளக்கை நட்சத்திரங்களின் கீழ் முணுமுணுக்கும் மெழுகு விளக்காக்க விரும்புகிறோம்; ஆனால், மெழுகு தீர்ந்து விளக்கணைந்ததும் பழையபடி அறிவுக்கு அப்பாலான அகண்ட வானமே மிஞ்சுகிறது. நம் பெயரெச்சங்கள் மறைகின்றன, லேபில்கள் பிய்ந்து போகின்றன: விண்மீன்களுக் கடியில் விஷயம் மட்டுமே விஞ்சி நிற்கிறது; பெயரற்ற அதன் சக்தி அவரை அழிக்கத் தயாராயிருக்கிறது. நாம் அப்போராட்டத்தை—அவன் அறிவும் விதியும், மனிதத்தன்மையும் கட்டுக்கதையும் போரிடுவதைக் காண்கிறோம், கட்டுக் கதை மனிதனின் உண்மைத் தன்மைகளையே விழுங்கி விடுகிறது.

"திரும்பவும் (விமான வேலைக்கே) போவேன் என்றுதான் எண்ணுகிறேன். இனியும் யோசிக்க என்னால் முடியாது; யாவற்றையும் உள்ளுணர்ச்சியின் தீர்மானத்திற்கே விட்டுவிட வேண்டும். இதற்குத்தான் போலும் நான் எனக்குள் என்னையே ஒளித்துக் கொள்கிறேன். எனக்கொன்றும் தெரியவில்லை; இக்கடிதத்தின் அர்த்தம் புரியவில்லை, (ஒரு வேளை உனக்குப் புரியலாம்). எனினும், ஏதோ ஒரு வகையில் இது விஷயத்தை விளக்குகிறது......மறுபடியும் அமைதி வளையங்கள் வருகின்றன. அவை வந்துதானே தீரவேண்டும்."

அவர் வலைக்குள் சிக்கி விடுதலை பெற, உயிர் வாழ, பாவம், 22 வயதுதானே ஆகிறது—திண்டாடுகிறார்.

"அன்பே! உன்னை வேண்டிக் கொள்ளுகிறேன். இதன் விநோதத்தன்மையைக் கண்டு உன் அழகிய புருவங்களைச் சுளித்துக்கொள்ளாதே. இது வெளிப் பார்வைக்குத் தோன்றுவது போல் வேடிக்கையானதல்ல; திகைப்புற்ற உள்ளத்தின் சினவெறித் துடிப்பை லேசாக மறைக்க முயலும் மாயப்போர்வையே இது.

"நான் பெவர்லி நிக்கால (Beverley Nichols) ஸாயிருந்தால், அலங்காரப் பாதரட்சைகள் அணிந்திருந்தால், வழியில் தாபதில்

(Daffodils) மலர்கள் பூத்திருந்தால், மெதுவாக வெளியிற்சென்று அவற்றிடையே உயிரோடிருக்கிறோம் என்ற மகிழ்ச்சியில் உன்மத்தக் கூத்தாடுவேன். மூவகையிலும் ஏமாறிய நான் சாப்பாட்டு விடுதியில் ஒரு கோப்பை மதுவில் திருப்தி காண்கிறேன்; எனக்குள் இன்பத்தை எதிர்பார்த்து என்னையே அணைத்துள்ள உள்ளுணர்ச்சி அமைதியான ஒரு முகபாவத்தால் விளக்கப்படும்."

பார்க்கப் போனால் 22 வயதுதானே ஆகிறது; இன்னும் இதைப் போன்று இரண்டத்தனை வயதுக்கு உத்தரவாதம் (Cheque) இருக்கவே இருக்கிறது. எனினும், தப்ப முடியாது; அது அவருக்கும் தெரியும்; எனவே. தன்னை அழிக்கவரும் பெயரற்ற சக்திக்குச் சரியான ஒரு பெயரையாவது கொடுக்க நினைக்கிறார். இம்முயற்சியை 'அதி நிலமற்றேன், அரசனுமில்லேன்' முதல் 'இனி என்னால் யோசிக்கமுடியாது, உள்ளுணர்ச்சியே தீர்மானிக்கட்டும்' என்பதுவரை நாமும் தான் கண்காணித்து வருகிறோம். எனினும், தீர்மானத்துக்குப் பிறகும், காரியம் நடந்தபின் (post factum), அதை அறிவால் அளக்க முயல்கிறார். இது அவர் பலியாவதற்கு முந்திய சில வாரங்களில் முக்கிய இடம் பெறுகிறது.

"கடைசியில் கென்னிங்டன் (Kennington)னைப் பற்றிய உள்ளுணர்ச்சி! டிராவிடில் மின்ட் (Mint) என்ற நூலை நான் படித்திருக்க மாட்டேன்; படியாதிருந்தால் ஒரு வேளை திரும்பவும் (வேலைக்கு) வந்திருக்கமாட்டேன்".

இக்கடிதத்தின் பொருள் அடுத்த வாரம் எழுதிய மற்றொரு கடிதத்தில் விளக்கம் பெறுகிறது.

"நான் பெருமூச்சு விட்டவாறே 'மின்ட்' டைப் படித்தேன். விமானப் படையின் இரண்டாவது ஏ. சி. (A. C.) யாக அக்ஸ்பிரிட்ஜ் (Uxbridge) ஜில் டி. இ. லாரென்ஸ் (T. E. Lawrence) பட்ட, பதிப்பிக்க முடியாத பாடுகளை அறிந்தேன். இவ்வனுபவங்கள் என்னை அதிகமாகப் பாதித்தன. அவைகளுக்காகவே நான் காத்திருந்தேன்." அவர் விமானப் படையினருடன் அநுபவித்த சாதாரண விஷயங்கள், சில்லறைக் கொடுமைகள் முதலியவற்றோடு, அதுவரையில் அறியாத தோழமையையும் இன்பத்தையும் கண்டார்.

"இவைகளுக்காகவே நானும் திரும்பி வந்தேன்; எனினும்..."

எனவே, தோழமை இன்பம் இவைகளுக்காகவே அவர் திரும்பி வந்தார். ஏழு மாதங்களுக்கு முன்பு, மானுடன் கழுத்துக்குமேல் வஞ்சப் புகழ்ச்சி நிரம்பியவன்' என்று எழுதியதற்கும், இதற்கும் எவ்வளவு வித்யாசம்! விரைவில் மடிவோர் வேகமாய் நடக்கின்றனர். ஆனால், இது கடைசித் தங்குமிடமுமல்ல. தான் திரும்பிய காரணத்தை விளக்க விரும்பிய இக்கடைசி

முயற்சியில் அதிசயமானதோர் வஞ்சகம் வெளியாகிறது. கடிதம் மேலும் கூறுகிறது.

"...எனினும், மூன்று ஆண்டுகளுக்கு முந்திய நிலைக்குத் தன்னை ஒருவன் சரி செய்துகொள்ளுவது சிரம சாத்தியமான காரியமே. இள விமானிகள் பழையபடிதானிருக்கின்றனர்; எனினும் பழையபடியில்லை—முன்பிருந்த மேன்மையில் ஏதோ குறைந்துள்ளது. நான் இன்னும் வெளியேதான் நிற்கிறேன்......சில சமயம் படையினருக்குச் செய்யும் பிரசங்கங்களைக் கேட்கிறேன்; அப்போதெல்லாம் என் பக்கத்தில் நோயல் அகஸாரிய (Noel Agazarian)ன் அமர்ந்திருப்பார் என்று எதிர்பார்க்கிறேன்; அவருக்குப் பதில் மூக்கைக் குடையும் முடைத்தழும்புள்ள ஒரு இளைஞனைக் காண்கிறேன்...".

இதே கடிதத்தின் முன்பகுதியில் :—

"நான் ஒரு தெளர்பாக்யன், இந்த விமானஸ்தலம் குளிரால் விறைத்து, மரங்கள், வீடுகள், ஏன், பழக மனிதர்கள் யாருமே இல்லாத பொட்டலாய் வெறித்துக் கிடந்தது...முதலிரு இரவுகள் என் குடிசைக்குள் சென்று குழந்தையைப் போல் அழுதேன். வேண்டுமென்றே இதற்காக மனதைக் கல்லாக்கிவிட்டதாகக் கருதி நானே அழுவது எனக்கே ஆச்சரியமாயிருந்தது."

இந்தக் கட்டத்தில் வாழ்க்கை வழிகாட்டியா யிருந்தவரென்றாலும் லாரன்ஸ் அவரைக் கைவிட்டுவிடுகிறார். இங்கு வந்ததும் பாடி வீட்டுப் புத்தகாலயத்தில் முதல் முதலாக அவர் கண்ட புத்தகம் டேவிட் கார்னெட் (David Garnett) தேர்ந்து திரட்டிய லாரென்ஸின் கடிதங்களே. இச்சந்தர்ப்பத்தில் இந்நூல் அவருக்குத் தனிப்பட்ட விசேஷமான அறிகுறியுடன் தோன்றியது. "நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி, புத்தகத்தை யதேச்சையாகத் திறந்ததும் இந்தப் பக்கம்தான் வந்தது...".உடனே,(இப் பக்கத்திலுள்ள) லாரன்ஸ் ராயல் விமானப் படை (R. A. F.)க்குத் திரும்பி வர விரும்பியதன் காரணத்தைப் பற்றிக் கார்னெட் கூறும் விளக்கத்தை எடுத்துக் காட்டுகிறார்.

"அறிவைக் காட்டிலும் அவரது உறுதி அதிகமாய் விட்டதோ என்று நாம் அதிசயிக்கிறோம். குறைகூறிக் குமைய விரும்பாமல் தலை நிமிர்ந்து நடக்கும் சிறுவனின் துணிச்சலை நாம் பாராட்டுகிறோம்; இதே துணிச்சல் படிப்பாளியிடம் காணப்படின் ஏளனத்தையும், விநோதப் பிறவி என்ற சம்சயத்தையுமே மூட்டுகின்றன."

லாரென்ஸைப் பற்றிய இத்தீர்ப்பைத் தக்கபடி மாற்றி (mutatis mutandis)த் தனக்கே அவர் பொருத்திப் பார்க்கிறார். இது மதிப்பைக் குறைப்பது, ஆசையைக் குலைப்பது. 'தோழமையும் இன்பமும்' விரும்பிய சிந்தையைச் சிதைப்பது.

எனினும், தன்னுடைய ஏமாற்றத்தையும், தனிமையையும் பற்றி அவர் தம் வருத்தத்தைத் தெரிவிக்காமலில்லை.

"தன்னந் தனியாய்த் தனித்திருப்பதன் பயன்தானே என்னமோ? நான் தனிமையையே மிகவும் விரும்புவதாக நினைத்தேன்–அது ஒரு கசப்பான மாத்திரை. மனிதத் தோழமை சிறிது கூட இல்லாதிருப்பது பயங்கரமானது, அவர்கள் யந்திரங்களே, மனிதர்களல்ல. விமானப் படைக்குள்ளோ அவர்கள் மனிதர்களாகவே நடந்தனர்; அவர்களோடு அளவளாவி, பிரியம் கொள்ள முடிந்தது... நான் உன்னைக் காதலிக்கிறேன், சில சமயம் காதலின் மிகுதியாலேயே என் இதயம் உடைந்து விடுமோ என்றும் அஞ்சுகிறேன். இங்கு நான் இழந்துள்ளது நீதான். அன்பின் வெதுவெதுப்பு, தனிதத் தன்மை, ஹாஸ்யம், விவேகம்..."

பரவசமடையும் நேரங்களும் இருக்கத்தான் செய்தன; இரட்டை என்ஜின் விமானத்தில் (வெற்றியுடன்) தனியாகப் பறந்து வந்தபோது இளவிமானிகள் பாராட்டியது போன்ற நேரங்கள்.

"எப்படியும் அவர்கள் மனிதப் பிறவிதானே. என்னுள் பழைய புதிய வெதுவெதுப்பான பரவசம் பாய்கிறது; மது தன் வேலையைச் செய்கிறது."

"ஒரு பத்திரிகையை எடுக்கிறேன்; அது பெவரிட்ஜ் ரிபோர்ட்(Beveridge Report); ஆ! அதன் ஆசிரியர் யுத்தத்திற்குப் பிற்காலம் பற்றியன்றோ யோசிக்கிறார்; எது நடந்தால்தான் நமக்கென்ன கவலை? நாம்தான் அதற்கு முன்பே இறந்துவிடுவோமே? சரி, டெய்லி மிர (தினக் கண்ணாடி)ரில் ஜேன் (Jane) என்ன செய்கிறாள் பார்ப்போம். அந்தப் பக்கத்தைத் திருப்புகிறோம், அவளது காலழகைப் பற்றிப் பேசுகிறோம்; நான் என்னைச்சுற்றியுள்ளவர்களது முகங்களைப் பார்க்கிறேன்; பரவசமடைகிறேன், களிப்படைகிறேன்.

"எல்லோரும் சாப்பாட்டுக்குச் செல்லுகிறோம்; கெகிடித் தீமுன் கூடுகிறோம்; மதுவை மறுபடியும் மறுபடியும் காலி செய்கிறோம்; வீணரட்டை அடிக்கிறோம்; காலம் நகர்கிறது. எனக்குச் சலிப்புத் தட்டுகிறதோ! ஆம், லேசான, மிகமிக லேசான சலிப்பே, மறுநாள் நான் பழையபடி திடம் கொண்டு விடுவேன்."

ஆனால், தோழமையும் இன்பமும் கூடிய இவைகள் சின்னேரங்களே—அதிக நொய்வுமிக்க செயற்கையானவை, அப்பால் தனிமை அவர்மேல் கவிழ்ந்து கொள்ளுகிறது; மரணத்திற்கு நாளெண்ணும் காலம், இன்னும் பத்தே நாட்கள் தான் பாக்கி.

"சகோதரத்வத்தில் நம்பக (l'espoir de la fraternite)த்தைத் தேடுவது வீணாகக் காட்டு வாத்தை வேட்டையாடுவ (wild-goose chase) தைப் போன்றதே என்னும் கே (K) யின்

கொள்கையைப்பற்றிச் சிந்தித்தேன். இக் கொள்கை வாழ்வில் நெருக்குண்டவன், நீண்ட படைப் பயணத்திற்கு பின்போல் கூட்டத்தில் இடிபட்டுக் குலைந்தவன், இவர்களுக்கே சரியாகும்.

"எனினும் இன்றிரவு கேயின் கொள்கையை நான் அநேகமாய் நம்புகிறேன். ஆனால், அது சரியாயிருக்கக்கூடாது; அதனால்தானே இங்கு வந்தேன்."

பத்து நாட்களே உள்ளன; கானல் நீர் வேட்டையும் தீர்ந்தது. ஆனால், உண்மை 'ஸகோதரத்துவ நம்பிக்கை' யாலா அவர் பழைய பணிக்கு வந்தார்? யாருடன் ஸகோதரத்துவம்? முடைவடுக்களுடைய இளைஞனுக்குப் பின் அவர் காலஞ்சென்ற நோயல் அகஸாரியனையும், பீடர் பீஸையும், காலிங்க் பிங்க்நேயையும், பிறரையும் காண்கிறார். அவர்களுள் இவரே உயிருடன் மிஞ்சியவர்.—தமது 23-வது வயதில் தம் காலத்தை அநுசரிக்க முடியாத வேறு தலைமுறையின் எச்சம் என்றெல்லாம் தன்னைப் பற்றி எண்ணலானார். ஒருவர் பின் ஒருவராய் அத் தலைமுறையினர் யாவரும் மடிந்தனர்; அவரது நூலில் ஒரு வாக்கியம் கல்லறை வரிசைகளே போல் தொனிக்கிறது— "இந்த ஆகாய கமனத்திலிருந்து ப்ரூடி பென்ஸன் திரும்பவில்லை; இந்த கமனத்திலிருந்து பப்பிள் வாடர்ஸன் திரும்பவில்லை; இந்த கமனத்தில் லேரி கன்னிங்ஹாம் திரும்பவில்லை; ஒவ்வொரு முறையும் இவர்கள் போருக்குத் தயாராய் விமானமேறினர்; ஒவ்வொரு முறையும் மனப்பூர்வமாக தமக்கு முன் இறந்தவர்களுக்கு அஞ்சலி செலுத்தினர்." அவர்களில் இவர் ஒருவர்தான் மிச்சம்; இவரும் தன் காணிக்கையைச் செலுத்திக் கொண்டு இருக்க வேண்டியதே; இருப்பவர் இறந்தோருக்குக் கடமைப்பட்டவர்தானே. ஏற்கனவே அவர் இறந்த சகோதரர் வரிசையைச் சேர்ந்தவராய் வாழும் சகோதரர்களோடு கூடி மகிழ்வதாகத்தான் எண்ணினார்.

இந்த வகையில், தன் உணர்ச்சிகளை நியாயம் கற்பித்து விளக்கக் கடைசியில் அவர் முயன்றது முன்னவைகளைப் போல் உண்மையே என்று உணர்கிறோம்; ஆனால் இது முடிவான உண்மையல்ல. இதுவரையில் தனித்தனியே எடுத்து, பார்த்து பின்னர் எறிந்துவிட்ட இணைப்புகளும் சேர்ந்ததே. எனினும், நூலிழைகளின் தொகுப்பு மட்டுமாய்ச் சேலையாய் விடாது; சேலையின் சிங்காரச் சித்திர வேலைகளைப் பற்றி நூல்களுக்கு ஒன்றும் தெரியாது. இவைகள் சாதாரண இழைகள், காரண காரியத் தொடர்போடு நெய்யப்பட்டவை. ஆனால் முடிவான மாதிரியில் காரியமே காரணத்தை இயக்குவது போலுள்ளது. இழைகள் காரணத்தைப் பற்றியவை, அமைப்போ முடிந்த உருவத்தைப் பிரதிபலிப்பது.

# 3

நான் கற்பனைக் கயிறு திரிக்கிறேன் என்று பலர் குறை கூறக்கூடும், அவரது கடைக்காலக் கடிதங்கள் படிக்க பயங்கர மானவையே. கண்ணுடியிற்போல் சாகப்போகும் தன் கதியை உணர்ந்த ஓர் இளைஞனின் கடிதங்கள் அவை.

"நாள் முழுதும் கண்ணில் கண்ணீர் முட்டிக்கொண்டு நின்றது; கடைசியில் என் அறையின் தனிமையில், ஒரு மணி நேரம் குழந்தையைப்போல் அழுதேன். ஏன்? பயமா? இன்னும் நான் ஒரு விமானத்தையும் காணவில்லை; இரவு பயங்கரமானதா, இல்லையா என்று இதுவரையில் எனக்குத் தெரியாது. இது ஒரு வேளைச் சூழ்நிலையின் நோய்வா? சூழ்நிலையை நான் நன்கு அறிவேன். ஒருக்கால் வானப் படையில் 'நன்னெறி நரம்பின் தளர்ச்சி' (lack of moral fibre) என்கிறுர்களே, அதுதானு இது?– இதை எண்ணி அடிக்கடி நான் அதிசயிக்கிறேன். நரம்பு அதிர்ந்தால் ஒருவனுக்கு இப்படித்தான் நேரும் போலும். எனினும், எனக்குத் தெரிந்தவரையில் எதைக் கண்டும் நான் பயப்படுவதில்லை; சொல்ல முடியாத துன்பத்திலுள்ளேன், அவ்வளவே."

இந்தத் துன்பமும் உடலைப் பற்றியதே.

"...நான் தன்னல மிக்கவன், எனவே, எவற்றினும் முக்கியமாய் எனக்குப்பட்டது எப்படி அசாத்யமான அந்தக் குளிரைத் தடுப்பது என்பதே. அது என் கையிலும், முகத்திலுமுள்ள வெந்த புண்களின் தோலை விறைக்கச் செய்வதுடன், என் உயிருக்குள்ளும் புகுந்து உளைக்கிறது...இங்கு, இந்த இரவில், இந்தப் பனியில் இறக்க நேருமே என்று என் உள்ளத்தில் அடித்தட்டிலுள்ள பயத்தை இக்குளிர் வெளிப்படுத்துகிறது என்று நினைக்கிறேன்."

இருப்பினும் அவர் தம் அகத்துத் துயரை முகத்தில் காட்டவில்லை; அங்கிருந்த எவருக்கும் அவரது துன்பங்களைப் பற்றித் தெரியாது. அவர் யாவரும் விரும்பும் ஒருவர், வெந்த கைகளோடும், முகத்தோடும், ஒட்டித் தைத்த உதடுகளில் இடையரு இளமைப் புன்னகையோடும் விமான நிலையத்தைச் சுற்றி வருவதைக் கண்டவர்கள் 'எத்துணை விநோதமான தோழர்' (rather a droll fellow) என்பர். நிழ்ச்சிகள், உத்தரவுகள், நடனங்கள், சர்வ சாதாரண விமான வீழ்ச்சிகள் எல்லாமும் தினசரி உண்டு. இதைவிட ஆக்ஸ்ஃபோர்டு சர்க்க(Oxford Circus) ஸிலிருந்து மார்பில் ஆர்ச் (Marble Arch) வரை சிலுவைச் சமாதிகளூடே உலாவலாம்.

இத்தகையது துன்ப நிறைவுகளோடு மாறி மாறி இன்பக் கணங்களுந்தான் வந்து போகின்றன. சாந்திச் சூழல்கள் கைக் கெட்டாமல் மயக்கிப் பின்னேக்கிச் செல்கின்றன.

"இன்று எவ்வளவோ தேவலை; நான் விமானத்தில் பறந் தேன்—உதரும் பற்களின் நறநறப்பு ஒருவனை நடக்கும்படி கட்டாயப் படுத்தாவிடில், விமான நிலையத்தில் எங்கோ ஒரு இடத்தில் அமர்ந்து அகண்டமான அம்மௌனத்தைக் கண்டு களிப்பது எத்துணையோ மேல்—யாவும் ஒரே அமைதி; ஏறி இறங்கும் விமானங்களின் இரைச்சலும் இவ்வமைதியையே வற்புறுத்துகின்றன.

"இரும்பாலும், எஃகாலுமான என்னைக் கொல்லச் சமயம் பார்க்கும் ராக்ஷஸ விமானத்துள் புகுந்ததும் பயமெல்லாம் தீர்ந்து விடுகிறது; மீண்டும் நிம்மதி ஏற்படுகிறது." இது மன வியல் துறையிலேயே விநோதமானது. பெரும் சோர்வூட்டும் நேரங்களும் உண்டு; இதெல்லாம் சீக்கிரம் தீர்ந்து விடாதா என்ற உணர்ச்சி. சாக ஒரு வாரத்திற்கு முன் நடந்த ஒரு நடன விருந் தைப் பற்றிக் கூறுகிறார்:

"நான் படுக்கைக்குப் போக விரும்புகிறேன்; எனினும் போகவில்லை. குடித்து வெறிகொள்ளும் கூட்டத்தைப் பார்க் கிறேன். நேற்று சமனத் தீ முன்பு கொம்மாளமடித்ததைப் பற்றியெல்லாம் அவர்கள் பேசுகின்றனர். 2–30 மணி. இன்னும் அங்குதான் இருக்கிறேன். ஏன்? எனக்குத் தெரியாது. நீண்ட காலத்திற்கு முன்பே மத்திய வயது மாதர்களுக்கும், சின்னஞ் சிறு பையன்களுக்குமே ஏற்படவேண்டிய 'எதையோ இழந்து விடுவோமோ' என்ற மனோநிலையை நான் சமாளித்து விட்டேன். எனினும் அங்கேயே இருந்தேன்."

யாவற்றினும் கஷ்டமானது ஃபிரஞ்சு கத்தோலிக்கர்கள் கூறும் ஸம்ஸய வாத நோய் (la maladie du scrupule) அவரைப் பற்றி நின்றதே. தற்பெருமை உளைச்சல்களுக்காக அவர் தன் னைத் தானே வெறுத்துக்கொள்ளுகிறார். "இந்த நீண்ட, தன்னைப் பற்றித் தானே இரங்கும் (இது உண்மையே என நான் நம்பு கிறேன்) இக்கடிதத்திற்கு என்னை மன்னிக்கவும். முடியுமானல் என்னைக் குறித்து வெட்கக்கேடென நினைப்பதைத் தவிர். இறந்தவர்களின் சகோதரத்வத்திற்கும் அலாதியான நடை முறைகளுண்டு; ஒருவன் தன் ஆதர்ச புருஷனைப் பின்பற்றி வாழ வேண்டுவது மட்டுமல்ல, அதற்காகச் சாகவும் வேண்டும்." இலக் கியக்காரனின் அறிவார்வமும் அவரிடம் இருந்தது. அது காரணமாக தன் நாடியைத் தானே சோதித்துக் கொண்டும், அதன் துடிப்புகள் ஒவ்வொன்றையும் பென்சிலால் காகிதத்தில்

குறித்து வைக்க உத்வேகம் எழுந்தது. புறப்பேத்தல்—உள்ளத் தேய்வு; ஏற்றல்—எதிர்த்தல்; அகந்தை—பணிவு, இருபத்தி மூன்று ஆண்டுகள்—பொன்ருப் புகழ் வாழ்வு இவற்றுக்கிடையே நரம்பு கிறுங்கி அவர் உள்ளம் ஊசலாடுகிறது.

"கோய்ஸ்ல (Koestler)ரின் இதைப் பற்றிய கொள்கை: வாழ்வு இருபடித்தானது; ஒன்று சாவியல் வாழ்வு (vie tragique), மற்ருென்று சிற்றியல் வாழ்வு (vie triviale). பொதுவாக நாம் சிற்றியலிலேயே வாழ்கிருேம், சிலசமயம் அபூர்வமான பரபரப்பிலும், ஆபத்திலும் சாவியலின் அறிவுக்கு அப்பாலான அகண்டக் காட்சியைக் காண்கிருேம். நிலேயாக ஒரே படியில் மனிதன் நிற்கமுடியாது; இரண்டிற்கும் இடையே ஊசலாடுகிருன்; அவனது துயரங்களுக்கு இதுவும் ஒரு காரணமே. சிற்றியலில் சாவியலின் உண்மைகள் முட்டாள்தனமாகவும், மூளேக் கொதிப்பாகவும் தோன்றுகின்றன; சாவியலில் சிற்றியலின் இன்ப துன்பங்கள் ஆழமற்றவையாகவும், சிதறும் சிறு அற்பங்களாகவும் தோன்றுகின்றன. மாறி மாறி இரண்டிலுமாகக் கட்டாயம் இயங்கியே தீர வேண்டும் என்பதை ஒப்பாத சிலர் எந்தப் படியில் வாழ்வதென்ற எண்ணத்திலேயே தம் வாழ்நாள் முழுவதையும் செலவழிக்கின்றனர். ஆனல், சில தனிப்பட்ட சந்தர்ப்பங்களில்—உதாரணமாக நெடுங்காலம் தொடர்பாகத் துன்பத்தை அநுபவித்த நிலேயில்—ஒருவர் இரு படிகளுக்கும் இடைக் கோட்டில் வாழ நேருகிறது. இது விறைத்த கயிற்றின் மேல் நடப்பது போன்று நாடி நரம்புகளேத் திரித்து முறுக்குவது. நீண்ட காலம் இந் நிலேயைத் தாங்க முடியாமல் தான் விமானப்படையின் குறை மொழிகளேப் போல் விரிவான சமூகப் பழக்கவழக்கங்களும் விதிகளும் ஏற்பட்டன. வேறு வார்த்தையில் அவர்கள் சாவியலேயும் சிற்றியலேயும் ஒன்ருய்ப் பிணேக்க முயல்கின்றனர். வாழ்வின் ஆவேசத்தையும் சாவின் அடக்கத்தையும் வடித்து உறைந்துபோன பழக்கவழக்க நெறி முறைகளே வகுக்கின்றனர் என்கிருர். ஆழ்ந்து நோக் (Au fond) கில் இதுவே நாகரிக வளர்ச்சியை இயக்கும் இயந்திரம் என்று அவர் கருதுகிருர். அவர் கூறுவது சரியே என்று நான் நம்புகிறேன்."

வாஸ்தவமாகவே, உருவகம் என்ற வகையில் இது உண்மையே என்றுதான் நான் இன்னமும் நம்புகிறேன். ஒரு படியிலிருந்து மற்ருெரு படிக்குத் தாவும் இந்தச் சக்தியே மாணவனே மானீரனுக்குகிறது; வெற்றுள இயல்பின் விளேவுகளே புனிதப் புராணங்களாக்குகிறது; ஆயிரம் வகையாய்த் தனிப்பட்ட இயல்புகளே ஒன்ருக்கிப் பிரிட்டனேக் காக்கும் பெரும் போரா (Battle of Britain)கச் செய்கிறது. காலப் போக்கின் கனமும் இதே வகையில் தான்—இன்று சமூகம் சிற்றியலேயே முக்கிய

மாய்க் கடைப் பிடித்துள்ளது; எனினும் உலக சரித்திரம் எப்போதும் சாவியலையே வற்புறுத்துகிறது. யுத்தங்களும், நெருக்கடி உச்சங்களும் இவ் வியல்பை பாம்பே (Pompeii) எரிமலை என்ன துரிதப் படுத்துகின்றன; கோலி விளையாடும் பள்ளிச் சிறுவர்களை இந்தக் கொழுந்தழலாறு பாய்ந்து ஆதர்ச புருஷர்களாக்கி விடுகிறது.

சிலர் கூறலாம், இவ்வனல் வெள்ளம் அவர்களைக் கனவு நிலைக்கு இழுத்துச் சென்றுவிட்டதென்று.

## 4

இரண்டுக்கு மிடையே வீக்கிய கயிற்றின்மேல் நடக்கும்படி கட்டாயப்படுத்தப்படும் மற்றொரு வகையினர் கலைஞர்கள். அதிலும் சிறப்பாக எழுத்தாளர்கள். விமானி சிற்றியலின்மேல் சாவியலை இழைத்தே தன் சங்கடங்களைச் சமாளிக்கிறான். கலைஞனோ, இதற்கு நேர்மாறாக, சாவியலின் பூரணத்தினின்றும் சிற்றியலின் சிதைவுகளைக் காண்கிறான்.

இவ்வகையில் ஹில்லரி வெற்றி பெற்றாரா? வெற்றியின் அறிகுறிகள் உள்ளன, உயிரோடிருப்பின் முழு வெற்றியும் தந்திருக்கும், எழுத்தாள விமானிகளில் ஹில்லரியும், ஸெய்ன்ட் எக்ஸூபெரி (St Exupery) யும் தனிப்பட்ட வகையினர். மற்றவர்கள், அவர் கூற்றுப்படி, எதோ சம்பவத்தை யதேச்சையாய் நல்ல முறையில் போட்டோ எடுக்கும் கற்றுக்குட்டிகள். அவர், சம்பவமோ, சம்பவமில்லையோ எப்போதும் சரியான போட்டோக்களையே எடுக்கும் போட்டோத் தொழிலாளி.

'கடைசிப் பகைவனில்' நல்ல கைத்திறனின் நயத்தைத் தவறாமல் காணலாம். முதன் முதலாக எழுதும் எந்த நூலிலும் இதன் ஜ்வலிக்கும் லாகவத்தைப் பார்க்க முடியாது. அளவு, தெளிவு, காம்பீர்யம், சொற்செட்டு, பரபரப்பு என்னும் முதல் தரமான சம்பவ விவரண மோஹனங்கள் முழுவதையும் இதில் காணலாம். இரண்டு அத்யாயங்க ளில்லையேல் நான் அவரை வெறும் தகவல் நிருபர் என்று கூறிவிடுவேன். பீடர் பீஸின் உலகம் (The world of Peter Pease), உன்னையும் கொண்டனர் (They Got You Too) என்ற இரு அத்யாயங்கள், தங்களது தோல்வியின் தோய்வாலேயே, அவர் வெறும் தகவல் நிருபருக்கும் மேம்பட்டவர் என நிரூபிக்கின்றன. இவ்விரு அத்யாயங்களில் அவர் நித்யத்வ உபகதி (sub specie aeternitatis) களான நெறி முறைகளைப் பற்றி விவரிக்கிறார். இங்கு பாஷா நடையின் லாகவமும், ஸ்தூலத்தன்மையும் மறைந்து விடுகின்றன; தட்டையாய்த் தழைகிறது; எண்ணங்கள் குத்தலற்று இயல்பாய்க்

குலவுகின்றன; தாங்க முடியாத ஒரு உணர்ச்சி வெறி அவரது உரையைத் தடுத்துத் திக்கவைப்பதுபோல் தோன்றுகிறது.

"...நான் அவர்களைப் பற்றி, பீடரையும் மற்றவர்களையும் பற்றி, எழுத விரும்புகிறேன், அவர்களுக்காக எழுதுகிறேன், அவர்களுடனேயே எழுதுகிறேன், அவர்கள் என் பக்கத்தில் இருப்பர். யார் படிப்பதற்காக இப்புத்தகத்தை எழுதுவது? இவர்களைப் பற்றிப் பேசும்போது நான் யாருக்கு அதைச் சொல்லுகிறேன்? அதுவும் நானறிந்ததே, மனித குலத்திற்கு; மனித குலத்திற்காகத்தானே எல்லா நூல்களும் எழுதப்படு கின்றன. ஆம், நான் வெறுத்த மனித குலம், பீடரிடம் ஏளனம் செய்த அதே மனிதகுலம்."

இதை அறிக்கை மயமான அத்யாயங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால், வெற்றியின் பூரணத்வம் எங்கு குறைகிற தென்று தெரியும். உணர்ச்சியின் உத்வேகம், உள்ளதை உள்ளவாறு உரைக்கும் லாகவம். இவை இரண்டுமே எழுத்தாளர்களின் அடிப்பீடமான தர்மம். 'கடைசிப் பகைவ'னில் இவை இரண்டும் தனித்தனி இயங்குகின்றன. ஆனல், இவை இரண்டும் பல இடங் களில் இணைகின்றன. உதாரணமாக முதன்முதல் விமான வீழ்ச் சியைப் பற்றி அவர் எழுதுகிருர்:—

"விமான வீழ்ச்சிகளைப் பற்றிய அந்தக் குடிசையில் அப் போதுதான் சேனைக்குச் செய்யும் பிரசங்கம் முடிந்தது. மிகமிக உயரத்தில், மெலிதாய், வேகமாய்க் கீழ் நோக்கி வரும் விமானத் தின் கீச்சிடும் அவலக்குரல் கேட்டது. காலாட் படைத் தலைவர் சிகரெட் சுழற்றுகிருர். சிகரெட் பேபரைக் கையிலெடுக் கிருர், ஆள் காட்டி விரலால் குழைவுண்டாக்குகிருர்; புகையிலை டப்பாவைத் திறக்கிருர். அக்குழைவிற் கொஞ்சம் புகையிலைத் தூளைக் கொட்டுகிருர், பேபரின் ஓரத்தில் தன் நாவை ஒட்டுகிருர், பின் சிகரெட்டைச் சுற்றுகிருர். அவர் அதை வாயில் வைக்கும் தருணம்: விமானம் நொறுங்கிய வெறிக்குரல் கேட்டது—ஒரு மைலுக்கு அப்பாலிருக்கலாம். அவர் ஒரு தீக்குச்சியைக் கொளுத்தியவாறே கூறுகிருர்: கடைசியான விமான விபத்து என் நினைவிலிருக்கிறது; காவற் குழுவில் நானும் ஒருவனயிருந்தேன். அது கண்ணருவியான காட்சி''—என்று.

"பின்னரே தெரிந்தது. அந்த விமானி யுத்தத்திற்கான உயரப் பரீட்சைக்குச் சென்றுன்; மூர்ச்சை அடைந்தான். அவன் உடலில் அதிகம் அகப்படவில்லை. எனினும் சவப் பெட்டியில் மணலை நிரப்பி அவனுக்கு மகத்தான ஓர் சமாதி கட்டினேம்."

இதில் தான் சாவியலையும், சிற்றியலையும் ஒன்ருய்ப் பிணைக் கும் உயர்வைக் காண்கிறேம். அழகுக் கடை (The Beauty

shop) என்பதிலும் விளக்கமற்ற வகையில் இவ்விணைப்பைக் காண்கிறோம். அங்கு, அந்தப் பயங்கரமான உறுப்புகள் ஒட்ட வைக்கும் (plastic surgery) ஆஸ்பத்திரியில், நெற்றியிலிருந்து மூக்குகள் முளைக்கும், ஒட்டுப் போட்ட வெள்ளை உதடுகளுக்கு ரஸ வண்ணம் (mercurochrome) பூசப்படும்; ஒட்டியும் ஒட்டாத செயற்கைக் கண்பாவைகள் பக்கத்திலுள்ள 'பக்கெட்'டில் பிய்த்தெறியப்படுகின்றன. இவைகள் யாவும் அதி கோரமான வர்க்கத்தன்மையுடன் வர்ணிக்கப் பட்டுள்ளன. அவை அருவருப்புக்குப் பதில் அடாத்தன்மை மிக்க ஆரவாரத்தையே உற்பத்தி செய்கின்றன. இது எப்படிச் சாத்யமானது? இரு படிக்கும் இடையே நடப்பதாலேயே, நமக்குக் கோரமாகத் தெரிவதெல்லாம் சில்லறையான சிற்றியல் கண்ணுடியில் சிதைந்து தெரியும் சாவியல் வடிவங்களே.

இத்தகைய பகுதிகள் புத்தகம் பூராவிலும் சிதறிக்கிடக்கின்றன; இரண்டு மூன்று பக்கங்களுக்கொருதரம் இவற்றைக் காணலாம்—ஆக்ஸ்ஃபோர்டு நினைவுகள், ஜெர்மனியில் படகுப் போட்டி, அக்னி மழையின் முதல் அநுபவம், இரவு விமானப் பயிற்சியின் பயங்கர உணர்ச்சி, டார்ஃப்ஸைட் (Tarfside) குழந்தைகள், விமானிகளின் சித்திரங்கள், ராயல் விமானப் படையின் மாதிரிகள், விமான நிலையத்தில் கண்ணுடிக் குப்பியில் மூடிவைத்துள்ள காற்றுத் திணிப்புகள், விமான வீழ்ச்சிகள், மரணங்கள், குடி வெறிகள், ஆபரேஷன்கள், பின்னும் ஆபரேஷன்கள், குருடுகள், 'நர்ஸு' (வைத்யப் பணிப் பெண்கள்) களுடன் சச்சரவுகள், தத்துவப் பேச்சுகள் என்று வரிசையாய் வருகின்றன. இரண்டு இயல்களும் இன்னும் ஒன்ருய் இணையவில்லை; எனினும் ஒன்றிலிருக்கும்போதே மற்ருென்றையும் உணர்ச்சி கொண்டு அளந்து பார்க்கிருர். இது, இன்னும் சிலகாலம் உயிரோடிருந்தால், இன்னும் சில புத்தகங்கள் எழுதியிருந்தால், அவர் இலக்கியத் துறையில் பூரண வெற்றி அடைந்திருப்பாரென்று உறுதி கூறுகிறது.

தற்போது உள்ளபடி பார்த்தால் இலக்கியத்தில் அவரது ஸ்தானம் சூன்யப்பகுதியே; எனினும், இலக்கியப் பரப்புப் படத்தில் இவ்வெறுமை எங்குள்ளதென்று காட்டிவிடலாம். நடுத்தர வர்க்க நாவல்களின் ஸகாப்தம் முடியுந்தருணம், அவை அலுப்பூட்டுவதாக மாறி ஓய்ந்தன; புதுக் கலைஞன் எழுதுகிருன், மனிதப் பண்பு மிக்க மத்யதர எழுத்தாளனிடமிருந்து இப்பொறுப்பை, விமானிகள், புரட்சிக்காரர், சாகஸர்கள், ஆபத்தாக வாழ்பவர்கள்-இவர்கள் ஏற்கின்றனர்; புதுமைக் காட்சி முறைகள், திறந்த வெளிச் சிந்தனைகள், விசித்திரமான த்யானங்கள், ஏன், ஞான ரகஸியங்கள்கூட அவர்களிடம் உருக்கொள்ளுகின்

றன. இவை இறந்த புயலின் இதயத்தினின் றெழும் உணர்ச்சிகள். ஸெய்ண்ட் எக்ஸுபெரி (St Exupery) ஸைலோன் (Silone), ட்ரேவன் (Traven), ஹெமிங்வே (Hemingway), ஸ்கோலோசௌ (Scholochow). இஸ்ட்ராடீ (Istrati), மால்ராக்ஸ் (Malraux), முதலியோர் புது இலக்கியத்தின் முன்னணியினர். ஹில்லரியும் இவர்களில் ஒருவராய் இருந்திருக்கலாம், எனினும், ஒரு சிறு நூல், ஒரு கடிதக் கொத்து, இரு சிறு கதைகள்—இவைகள் மட்டும் இச்சூன்யப் பகுதியை நிரப்பப் போதாது.

மரணத்தின் பிறகும் மக்கள் மனத்தில் தம் நினைவை விட்டுச் செல்லக் கருதும் எழுத்தாளர் சிறந்த நூல்களை எழுதினுற் போதாது, நிறையவும் எழுத வேண்டும் என்ருர் தாமஸ் மேன் (Thomas Mann). ஒரு சந்தர்ப்பத்தில் இது பிடித்தமில்லாத ஓர் உண்மையே. எனினும், ஹில்லரியின் சிறு நூல் மக்கள் மனத்தாழத்தில் படிந்து நிற்கக்கூடிய கனமுடையது; அதன் முன் டன் கணக்கான அச்சடித்த நூல்கள் மனவிளிம்பில் வெறும் நார்களைப்போல் மிதப்பவையே.

இந்த இள விமானி எழுத்தாளரின் வாழ்வும், மரணமும் மற்றவர்களுக்கொரு சின்னமாக மாறியதேன் என்ற கேள்வியுடன் தான் இக்கட்டுரையைத் துவங்கினேம்; இன்னும் அதற்கு விடை காணவில்லை. எந்த எண்ணங்கள், மதிப்பியல்புகளை அவர் பிரதிபலிக்கிருர் என்ற கேள்வி அவர் தலைமுறையிலும் அவர் வர்க்கத்தினரிலும் உட்பொதிந்திருந்த எண்ணங்கள், மதிப்பியல்புகளுடன் சங்கமமாகியே தீரவேண்டும். அவற்றைப் பற்றி அவர் கூறுவது :—

"சுய பரித்யாக மனேபாவம் கல்லூரி மாணவர்களில் அறிவு மிக்கவர்களிடையே தான் அதிகமாகக் காணப்பட்டது. தங்களது கல்விக்கும், பதவிக்கும் காரணமான மத்யதரச் சமூகத்தை அவர்கள் வெறுத்தனர், தாக்கவும் தாக்கினர். வன்மையால் அல்ல. இளமை முதிர்வின் விறைப்பால். இதில் அவர்களை ஊக்கி விட்டது அவர்களது இலக்கிய லட்சிய புருஷர்களின் நூல்களே. ஆடன் (Auden), இஷெர்வுட் (Isherwood), ஸ்பெண்டர் (Spender), டே லூயீ (Day Lewis) முதலியோருக்கு தங்கு தடையற்றுத் தலைவணங்கினர். இவர்களுடன் சேர்ந்து தீவிர வாதத் திசையில் நயமான முறையில் சாய்ந்தனர். தங்கள் சொந்த வகுப்பினரின் குறுகிய நோக்கங்களின் கட்டுப்பாடுகளை ஏற்க மறுத்த இவர்களை, காரியவாதத் தொழிற்சங்க இயக்கத்தினர், இடைத்தரகர்கள், வீண் கனக் காண்பவர்கள், பூஞ் சிவப்பு அரசியலினர், பயனற்று வெளிறிய பழுப்பினர் என்றெல்லாம் ஒதுக்கி விட்டனர். அவர்கள் தாங்கள் வெறுத்த உலகத்தினின்று வெளிப்பட்டனர்; தங்களை வெறுக்கும் உலகத்திற்குள்

புகமுடியவில்லை; இரண்டிற்குமிடையே ஆபத்தான நிலையில் தடுமாறினர்......"

இதுதான் அவர் தம்மைச் சுற்றிக் கண்ட சூழ்நிலை; ஆனால் ட்ரினிடி (Trinity)க் கல்லூரி உப அத்யட்சகரிடமிருந்து ஹில்லரியின் தந்தைக்கு வந்த அநுதாபக் கடிதத்தில் வேறொரு நிலையைக் காண்கிறோம்.

"......அப்போது டிக் (Dick-ஹில்லரி) உன்னதமான வசிகரமும், உயிர்ப்பும் கூடியவனாய் வந்தான்; வந்த ஒரு வருஷத்தில் வருங்காலத்தினர் மறக்க முடியாத ஒரு அருஞ் செயல் செய்து விட்டான். அவன் கல்லூரியின் எட்டாம் நீச்சற்படையைச் சார்ந்தவன்; ஐந்தே தாவுதலில் ஆற்றின் தலைக் கடையை அடைந்து விட்டான்......இந்த வித்தையை இனி மிஞ்சுவது நடக்காத காரியம்: 1939-இலும் தனது அசையாத உறுதியாலும், ஆற்றலாலும் முந்திய வருடத்தில் கல்லூரிக்குத் தான் சாம்பாதித்துக் கொடுத்த பெயரைக் காப்பாற்றினான். அப்புறம் இக் கொடிய யுத்தம் வந்து விட்டது."

எதிர்மாறான கோணம் என்று இதைத்தான் கூறுவர் போலும். இது இல்லையேல் அவரது வாழ்க்கை இசைவேறு பாடற்ற வெறுமையாயிருக்கும். ஆடனும், ஐந்து தாவுதலும் தனிப்பட்ட வகையில் தம்முள் போட்டியிடுகின்றன; தாவுதலின்றேல் பிரிட்டனுக்காகப் போரிட்டிரார்; ஆடனின், 'கடைசிப் பகைவன்' என்னும் புத்தகமிராது. பரம்பரைக் கொள்கைகளின் பிடிப்பு எவ்வளவு உறுதியாயிருந்தது என்று அவர்கள் அவற்றை அமிதமாக வெறுத்ததே விளக்குகிறது. ஆனால், பரம்பரைக் கொள்கைகள் ஒருவனை இருவகையில் பாதிக்கும்—பும்மை செய்வது (Sterilising), புதுமை செய்வது (eatalysing). பெரும்பாலோர் முதல் வகையினர்; அதிர்ஷ்டவசமாய் ஹில்லரி சிறுபான்மையான பின் வகுப்பினர். ஷ்ரூஸ்பரி (Shrewsbury)யும், ஆக்ஸ்ஃபோர்டும் அவருக்குச் சுமையாகவில்லை. ஆக்கமாயிருந்தன. அற்புதமான, அளவோடு கூடிய சில வாக்கியங்களில் ஆக்ஸ்ஃபோர்டைப் பற்றிப் பேசுகிறார்.

"நான் நிரம்பப் படித்தேன். அதைக் காட்டிலும் முக்கியம் நல்ல முறையில் பிறருடன் பழகத் தெரிந்துகொண்டேன். குடிப்பதற்கு வரம்பு என்ன, எவ்வாறு பெண்களிடம் வக்ரமில்லாது பழகுவது, தடையின்றித் தகைப்பின்றிப் பிறரிடம் எப்படிப் பேசுவது, எவ்வண்ணம் தன்னம்பிக்கையை இழக்காதிருப்பது என்றெல்லாம் கற்றுக்கொண்டேன். இவை, வேறு எவ்வகைக் கல்வியாலும் எனக்குக் கிடைத்திருக்காது."

அப்பால், ஆற்றின் மேல் இரு தாவல்களுக்கிடையே, மாறுதலற்ற வகையில், பாம்பே (Pompeii) எரிமலை போல் உத்வேகம்

பொங்குகிறது. அப்போதுதான் ஒருவகையான நன்னடக்கை (savoir faire) யை அவர் கற்றுக்கொண்டிருந்தார்.

"இங்கு, இந்த டெவா (Devon)னது வானவெளியில், ரிச்சார்டு ஹில்லரி (Richard Hillary) யின் கடைசி கமனத்தைப்பற்றிக் கேள்வியுற்றேன். நான் ஆன்மாவில் அடங்கிய அமைதியுடன் ஒரு ராட்சசக் கழுகு காற்றேறிப் பறப்பதைக் கவனித்தேன், அது தாக்கத் தயாராய் வானில் தயங்கியது, திடீரென்று இலக்கை நோக்கிக் கீழே கணத்தில் பாய்ந்தது. இப்படித்தான் (ஹில்லரியும்) தம் எரிகக்கும் விமான (Spitfire)த்தை இயக்கினார்: பஞ்சபூத பௌதிக ஆபத்துக்களையும், மனிதன் படைத்த பேய்த்தனங்களையும், நமக்காக, இங்கிலாந்துக்காக, தைரியமாய் எதிர்த்தார்."

மற்றொரு மாற்றுக் கோணம், மேம்பாட்டுக் கழுகு முகங் காட்டுகிறது. தன்னைப்பற்றி அவர் மதிப்பீடு இதோ:

"...இதுதான் 1939, செப்டம்பர், 3-ஆம் தேதி போருக்குச் சென்ற ஆக்ஸ்ஃபோர்டு பரம்பரை. பழுதுற்று ஏமாற்றமடைந்தோம். எங்களை 'மறைந்த தலைமுறை' (Lost Generation) என்று பத்திரிகைகள் வர்ணித்ததை நாங்கள் வெறுக்கவில்லை; மேம்போக்கில் பார்த்தால் நாங்கள் தெய்விகப் போர்வை (Holy Grail) யில்லாது சுயசிந்தனையேயுள்ள தன்னலக்காரர்கள். இத்தகையப்போர்வையை போர் அளித்தது. ஏற்கத்தக்க இனிமையாய்க் கொடுத்தது. ஸ்தாபன ரீதியில் உணர்ச்சிகளும், தேசாபிமானமும் செயல்படுவதை வெறுத்தோம்; கொள்கையை விரும்புவதைக் காட்டிலும் குறுக்கீடுகளை வெறுத்தோம்; இவ்வெறுப்புகளைச் செயலில் காட்ட யுத்தம் ஒரு நல்ல சந்தர்ப்பமாகியது. கட்டுப்பாடற்றவர்களாயினும் ஒரே கோட்பாடில் பிடிவாதமான ஹிட்லரின் இளைஞர்களுக்கு நாங்கள் இளைத்தவர்களல்ல என்பதை எங்களுக்கும், உலகத்திற்கும் நிரூபிக்கப் போர் சரியான வாய்ப்பாயமைந்தது."

புகழை (la gloire) விலக்கும் தெளிவான சிந்தையோடு நிற்கத்தான் எத்துணைத் தூய முயற்சிகள்! துல்யமான பாதரட்சைகளுடன் மடிபவர் சிலர், பரிசுத்தமான மனத்தோடு மடிபவர் சிலர்; முன்னவர் நெறி சுலபமானது; அவர்களது வாழ்வும் மரணமும் ஆச்சரியக் குறிகள் நிரம்பியவை ஹில்லரியைப் போன்றவர்களுக்கு மிகவும் கஷ்டமானது, அவர்களதுவழி கேள்விக் குறிகளின் அடுக்கான தொடர்ச்சி, ஒவ்வொன்றையும் வளைவு நிமிர்த்த வேண்டும், நேராக்க வேண்டும், கூராக்க வேண்டும். யாவும் அவர்களே செய்ய வேண்டும் என்பதே.

அவர்களது நோக்கத்தின் திசை யாது? யூகிக்கத்தான் வேண்டும். அவரது அறிவாராய்ச்சி அமைப்புகளிலிருந்தல்ல;

தம்மை யறியாது சொல்ல மறந்த உண்மைகளிலிருந்தே இதை யூகிக்க முடியும். "சொந்தத் தேச பக்தி கீழ்த்தரமானதென்றும், தெய்வ பக்தி பத்தாம்பசலி வேலை யென்றும், மானுட பக்தி ஹிருதயத் திருப்திக்கானது என்றும் கருதப்படும் காலத்தில்தான் இம் மூன்றிலும் நீர் ஈடுபடுகிறீர்" என்று, தாம் எவரை, யாவரி லும் உயர்வாக மதித்தாரோ, மருந்து மயக்கத்தில் எவரது சாவைத் தம் மனக்கண்ணினுல் கண்டாரோ, எவர் அவரது சமயத் தத்துவத்தின் உருவகமாய், ஆதர்ஸ புருஷனுய் நிறைந்து விளங்கினுரோ, அந்தப் பீடர் பீஸிடம் கூறுகிறுர். இந்த ஒரு வாக்யத்தில், மூன்று உள மருட்டும் உரிச்சொற்களின் முடைவில் அவருள் மறைந்திருந்த ஆசையின் ஒரு மின்னல் வீச்சைக் காண் கிறேம்; பரிசுத்தமான மனத்துடன் இறக்கும் பண்பைப் பார்க்கிறேம்.

அறிவாராய்ச்சிப் போர்வைகள், ஜரூரான கோட்பாடு நிர்ணயங்கள் எப்படி இருப்பினும், ஸ்தாபன ரீதியில் தேச பக்தியையும் உணர்ச்சி வெள்ளத்தையும் திரட்டுவதன் மீதுள்ள வெறுப்பால் மட்டும் ஒருவன் மும்முறை தீக்குளிக்க மாட் டான், இது கேட்க இனிமையாகத்தா னிருக்கிறது. எனினும் உண்மையல்ல. ஆனுல், அமிதமான உணர்ச்சி வசப்படும் தன்மையும், அசாதாரணத்தைர்யமும் உடைய ஒருவர், தம் வாழ் நாளின் ஒரே ஒரே ஒரு நோக்கத்தைப்பற்றி, உவமை உணர்ச்சி, கீழ்த்தர ஆசை, பழைய புராணம் முதலியவையற்ற உயர்வான ஒரு நோக்கம், கொள்கை, இவற்றைத் தேடி இவ்வண்ணம் செய் வது சாத்யமே. இவரது வார்த்தைகளை எவரும் வெட்கமற்றுத் தடையற்று வெளிப்படையாகக் கூறலாம். எல்லா அரசியல் நெறிகளும் அர்த்தமற்றுப் போனுல், உலக முழுதுமே குறுகிய மனப்பான்மை அடிப்படையான கேள்விக் குறியால் நிரம்பி விட்டால், அப்போது தெய்விகப் போர்வை வேண்டு மென்ற விருப்பம் மிகலாம். இவ்விருப்பத்தின் வன்மையில் விளக்கில் பாயும் விட்டிலைப்போல் பாய்கிறுர் அவர்; சிறகுகள் எரிந்து சிதைந்த பிறகும் அதையே நாடி மெதுவாக ஊர்ந்து செல்கிறுர். இந்த உணர்ச்சி ஒன்றுதான் மனிதப்பண்பில் பகுத்தறிவுக்கு அப்பாற்பட்டது.

ரிச்சார்டு ஹில்லரி மும்முறை எரிக்கப்பட்டார். முதல் தடவை முகத்தைச் சிதைத்து அவருக்கு வேறு முகம் கொடுத் தனர். அதுவும் வீணுனது. இரண்டாம் முறை அவருடல் வெந்துபோய்க் கரிக்கட்டையானது. தன் வாழ்வின் நோக்கம் மரணத்தால் பூர்த்தி பெற வேண்டும் என்பதற்காகத்தானே, என்னவோ, இறந்தபின் தன் உடலை எரிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். அவ்வண்ணமே ஜனவரி 1943, 12-ஆம்

தேதி, கோல்டர்ஸ் க்ரீனி (Golders Green) ல் அவருடலை மூன்றும் முறையாக எரித்தனர்; கரிக்கட்டை சாம்பலாகியது; சாம்பல் கடலலைகள் மேல் தூவிவிடப்பட்டன.

இங்கு மனிதன் இறந்தான், மாயக் கதை துவங்குகிறது. இந்த இழந்த பரம்பரையின் கதை—நம்பகமற்ற மதப் படையினர், மலட்டுத்தன்மை மாவீரர்கள், எதற்காகவாவது போரிட வேண்டும் என்று விரும்பினர் (எதற்காக என்பதுதான் இன்னும் தெரியவில்லை.)—இவர்களைப்பற்றியது. இது சிலுவையில்லாத புனிதப்போர்; சாவையும் திருணமாக மதித்துப் போரிட்ட வீரர்கள் சிலுவையைப் போன்றதொரு லட்சியம் கிடைக்குமா என்று தேடியோடும் போர். எந்த மத நெறியை அவர்கள் கடைப்பிடிப்பர்? ஏசுவின் நெறியையா? பேரப்பா (Barabbas) ஸின் திருட்டு நெறியையா?—அது இனித்தான் தெரியவேண்டும்.

* 1943, ஏப்ரலில், லண்டன் நகரத்து ஹாரைஸன் (Horizen) பத்திரிகையில் ஒரு மாயக் கதையின் ஜனனம் (The Birth of a Myth) என்னும் தலைப்பில் வெளியாகியது; கடைசிப் பகைவ(The Last Enemy) னது ஆசிரியரான ரிச்சார்டு ஹில்லரி (Richard Hillary) யைப் பற்றியது. அவர் 1939-இல், தமது 19-வது வயதில், ராயல் விமானப் படையில் சேர்ந்தார். பிரிட்டன் போரில் (The Battle of Britain) கடுமையாகத் தகிக்கப்பட்டார். எனினும் பிடிவாதமாக மறுபடியும் வேலைக்கு வந்தார். 1943, ஜனவரி, 8-ஆம் தேதி, தெளிவற்றவகை இரவுப் பயிற்சி கமனத்தின்போது, தம் 23-வது வயதில் இறந்தார்.

# அறிவாளிவர்க்கம்*

அறிவாளிவர்க்கம் (Intelligentsia) என்பது பொருத்திப் பார்க்கச் சுலபமும், வரையறுத்துக் கூறக் கஷ்டமுமான ஒரு சொற்றொடர். அது வாதத்திற்கு வராத தேய்வு, ஆனால், உணர்ச்சிக்கு விளங்கும் தெளிவு; அதைச் சுற்றி ஒரு ஒளிவட்டம், ஏன், பல ஒளி வட்டங்கள், காலத்திற்கும், இடத்திற்கும் தக்கவாறு ஒன்றின் மேல் ஒன்ருக உறைந்துள்ளன. அவற்றின் உதாரணங்களாகக் கற்பனை மிகுந்த காம மனைகள், தொழிலடிப் படையில் மத்திய வகுப்புகள், மாணவர்களின் புரட்சி இயக்கங்கள், 19-ஆவது நூற்ருண்டின் பிற்பகுதியிலிருந்த ரஷ்யச் சீமான்கள், நெப்போலியனுக்குப் பிறகு ஜெர்மனியிலிருந்த தேசியக் கல்லூரிப் படையினர் மாண்ட்மார்ட்ரேயின் உல்லாசகர்கள் என்றெல்லாம் கூறலாம். இவற்றைத் தவிர ப்ளூம்ஸ்பரி மாண்ட்பார்னஸ், காக்னெஸ் முதலான நம் உணர்ச்சியைத் தூண்டும் ஊர்ப்பெயர்களும் உள்ளன. ஆடை அலங்காரம், தலை அலங்காரம், உண்ணும் உணவுகள், பருகும் பானங்கள் இவற்றின் அலாதித் தன்மைகளையும் குறிப்பிடலாம்.

அறிவாளிவர்க்கத்தின் தன்மைகள் அடிக்கடி மாறுகின்றன, அம்மாறுதல்கள் இனம், குழு, கூட்டம் என்றெல்லாம் பாகுபாடு உடையன. இப் பாகுபாட்டு வரம்பும் பின்பற்றுவோர், வால் பிடிப்போர், பெரியமனிதர்கள், கலைக் காப்பாளர்கள் புளியேப் பக்காரர்கள், முட்டாள்கள், வீண் புகழ்ச்சி கூறும் வெறியர்கள், ஆவேசமிக்க இளைஞர்கள்—இவர்களால் உருவற்று தேய்ந்து விடுகின்றது. வெளிப்படையான காட்சிகளைக் கொண்டு அறிவாளிவர்க்கம் என்பதற்குச் சரியான அர்த்தத்தைக் கண்டு பிடிக்கமுடியாது; எனவே ஆக்ஸ்ஃபோர்டு அகராதியில் அதன் உருவான உண்மைப் பொருளைக் காண்போம்.

"அறிவாளிவர்க்கம் (Intelligentzia-sia) ஒரு தேசத்தின் (சிறப்பாக ரஷ்யாவின்) கட்டுப்பாடற்று தம் அறிவைச் செலுத்த விரும்பும் ஒரு பகுதியினர்."

இவ்வாறு ஆக்ஸ்ஃபோர்டு அகராதிச் சுருக்கம் (Concise Oxford Dictionary) 1934, மூன்ருவது பதிப்புக் கூறுகிறது.

ஆனல், 1936-இல், காணுச் செங்கதிர்ப் பருவத்தில், பாமர முன்னணியில் இவ்வார்த்தையின் பொருள் குறிப்பிடத்தக்க வகையில் மாறிவிட்டது.

"பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கும் திறமையுடையதாகக் கருதப்படும் படித்த வகுப்பினர்" (சிறிய ஆக்ஸ்ஃபோர்டு அகராதி 2-வது பதிப்பு, 1936).

பிந்திய வர்ணனை, அமிதமான நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டதெனத்தெளிவாக நிரூபணமாகிவிட்டதெனலாம். எனவே முந்திய வருணனையையே நாம் வைத்துக் கொள்வது நல்லது. அதுவே மிகச் சிறந்தது. 'சிந்தனைச் சுதந்திர ஆர்வமுடையோர்' என்பதே சரித்திர ரீதியில் அறிவாளிவர்க்கம் பூராவுக்கும் பொதுவான இயல்பைக் குறிப்பதாகும்.

ஆனால் தேசத்தின் ஒரு பகுதியில் கட்டுப்பாடில்லாச் சிந்தனை விருப்பம் எவ்வாறு ஏற்படுகிறது? வர்க்கபேதம் நிறைந்துள்ள நம் உலகில் இவ்விருப்பம் நல்வாய்ப்புப் பெற்றவர்களின் அறிவரசர்கள், சுரங்க ஊழியர், மகான்கள், பொதுத் தொழிலினர்—இவர்களின் சுபாவமான சம்மேளனக் கூட்டிற்குரிய விஷயமல்ல இது. ஒவ்வொரு காலத்திலும், ஒவ்வோரிடத்திலும், அறிவாளிவர்க்கம் சமூக அமைப்பின் ஒருமுகப்பட்ட பண்புடைத்தாகவே அநேகமாயிருக்கும். ஓரங்களிலேயே பின்னலில் இசையாத குச்சுகள் தென்படுகின்றன. அறிவாளிவர்க்கத்தில் சேர வெறும் அறிவு மட்டும் அவசியமான, அல்லது போதுமான யோக்யதாம்சமல்ல. அதற்கு மாருக இந்த வர்க்கத்தின் அமைப்பைச் சமுதாய பரிமாணமாகவே கொள்ள வேண்டும். உண்மையில் ஃபிரஞ்சுப் புரட்சிக்குப் பிறகுதான் நவசமுதாயம் சம்பந்தப்பட்டவரையில் அறிவாளிவர்க்கம் என்ற இந்த கோஷ்டி உதயமாயிற்று.

## அறிவாளிவர்க்கமும் மக்கள் அரங்கமும்

சமூகத்தில் பல படிகள் உள்ளன. அவற்றுள் மூன்ருவது படி மக்களின் அரங்கம். இதில் மேம்பட்டவர்களுக்கு சிந்தனைச் சுதந்திரம் வெறும் படாடோபமல்ல, வாழ்க்கையின் போராட்டத்திற்கே அத்தியாவசியத் தேவையாகும். மூச்சுத்திணறும் நிலப்பிரபுத்துவ அமைப்பின் முறையில் சிக்கித் திண்டாடிய முதலாளித்வ மத்தியதர இளைஞர்கள் பரம்பரை பரம்பரையாக வரும் அதன் (Lebensraum) ஆதிக்கத்தின் மேல் வெற்றி கொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. நிலப் பிரபுத்வ அமைப்பின் மிருகவெறிப் போக்கு, கண்டிப்பான கட்டுதிட்டங்கள் இவற்றின் சிந்தனைச் சுதந்திரம் என்ற வெடிமருந்தின் மூலம் தகர்த்தெறிந்தால்தான் இது சாத்தியமாகும். முதன் முதலான நவீனகால மேதைகள் மொழிக் கலைக்களஞ்சிய (Encyclopaedists) கர்த்தாக்களே. உலக வரலாற்றில் அவர்கள் பழமையைச் சிதைப்போர்களாகவும், உருவ வணக்கத்தை உடைப்போர்களாகவுமே தோன்றுகின்றனர். மகாகவி கதே (Goethe) இன்று உயிர்த்தெழுந்தாலும் காலச் சூழ்நிலைக்கேற்ப இரார், வால்ட்டேர் (Voltaire) நம்மிடை பிழைத்து வந்தாலோ இரு வாரங்களில்

ப்ளூம்ஸ்பரி பூராவும் அவரைக் கொண்டாடும், ந்யூ ஸ்டேட்ஸ் மென் வாராந்தரப் போட்டிகளில் அவர் வெகு சுலபமாக வெற்றி அடைவார். ஏனெனில் கதே கடைசி மறுமலர்ச்சியின் கருவான மேதை; லியோனுர்டோவின் நேரான பரம்பரை; தெளிவுற்றுத் தேர்ந்த ஃப்ளாரண்டைன் அரசவைக் கண்களோடு அவர் சமூகத்தைப் பார்ப்பார். ஆனுல் வால்ட்டேர் காலத்தில்தான் முதன் முதலாக நிலப்பிரபுத்வ அமைப்பின் மதிப்பீடுகள் சிதையலாயின.

சமூகத்தில் அதன் நிலே காரணமாக, பெரிதும் அபிலாஷையாலன்றி, நிர்ப்பந்தத்தாலேயே 'சிந்தனைச் சுதந்திரத்தை' வரிக்க நேர்ந்த, தேசத்தின் ஒரு பகுதிதான் இன்றைய அர்த்தத்தில் அறிவாளிவர்க்கமாகத் தோன்றுகிறது. அதாவது தான் விலக்கப்படும் உயர்மதிப்புகளை நிலேகுலைத்து அச்சிதைவுகளுக்குப் பதில் தனக்குகந்த மதிப்பீடுகளைப் புகுத்த முயல்வதே. இந்த ஆக்க மனுேபாவமே அறிவாளி வர்க்கத்தின் இரண்டாவதான அடிப்படைத் தன்மை. உருவ வணக்க உடைப்பாளரிடம் எப்போதுமே ஒரு தீர்க்கதரிசனப் பண்புண்டு, பழமையைச் சிதைப்போரிடம் ஒரு படாடோபம் மறைந்திருக்கும்.

இந்தப் புதிய மதிப்பீடுகளின் மூலம் எது? மார்க்ஸ் தத்துவம் மிதமிஞ்சிய எளிமையான முறையில் இதைப் பாகுபடுத்துகின்றது.

"வரலாற்றுத் துறையில் நடுத்தர வர்க்கம் மிகப் புரட்சிகரமான பங்கேற்றுச் செயல் புரிந்துள்ளது...உற்பத்தி முறையில் இடைவிடாப் புரட்சி, சமூக நிலேகள் யாவற்றினும் இடைவிடாக் கலவரங்கள். நிச்சயமற்ற தன்மையும், கலக்கமும் சாஸ்வதமாயிருப்பது. இவையே நடுத்தர வர்க்க சகாப்தத்தை முந்தையவற்றிலிருந்து பாகுபடுத்துகின்றன. நிலேயாகி உறைந்துபோன மானுட சம்பந்தா சம்பந்தங்கள், அவற்றின் விளைவாய்ப் பழைமையும், பக்தியும் கூடிய வெறுப்பு விருப்புகள். யாவும் அடியோடு அகற்றப்பட்டன; புதிய விருப்பு, வெறுப்புகள் உருக்கொண்டுறையுமுன் பழைமையாக மாறின. அசையாது ஊன்றிக் கொண்டிருந்த கட்டு திட்டங்கள் எல்லாம் காற்றில் பறந்தன. புனிதமானவை யாவும் களங்கமுற்றன. கடைசியில், மனிதன் தன்னுடைய உண்மை வாழ்க்கை நிலேயையும், உலகத்தோடு தனக்குள்ள உறவையும் பற்றி நிதான விவேகத்துடன் ஆலோசிக்க வேண்டி நேர்ந்தது.

"பொருளியல் உற்பத்தியில் போலவே அறிவியல் உற்பத்தியிலும் வேறுபாடுகள் தோன்றின. தனித்தனியான தேசிய இலக்கியங்கள் பொதுப்படையாக மாறின. சுதேசிய பாரபட்சம், குறுகிய மனப்பான்மை முதலியவைகள் அசாத்திய

மாயின. அளவற்ற, பல்வேறு தேசிய, பிராந்திய இலக்கியங் களிலிருந்து உலக இலக்கியம் உருக் கொள்ளுகிறது."

மேற்கண்ட எடுத்துக் காட்டின் முதல் பகுதி மார்க்ஸ், ஏஞ்சல்ஸ், இவர்களது மிகச் சிறந்த பாகமாகும். இரண்டாவது பகுதியில் பொருளாதார அமைப்பு முதல் சமூக மேல்தள அமைப்பு வரை கோரமான குறுக்கு வழி கூறப்படுகிறது. இதில் மரபு, கலை, பொதுஜன மனோநிலை, இவை யாவும் இடம் பெறுகின்றன. மார்க்ஸிய சமூகத்தின் அஸ்திவாரம் பொருள் உற்பத்தி—இலக்கிய உற்பத்தி மேல் கட்டிட அமைப்பு, மாடிப் படியோ தூக்காமோ காணோம். இது அவ்வளவு சுலபமான காரியமல்ல. தையற்காரன் சட்டைக்கேற்ப துணியை வெட்டு வது போல் உலகப் பொருள்களின் உற்பத்திக் கேற்ப மனோ நிலைத் தத்துவ மாளிகைகளைக் கட்ட முடியாது.

மேற்கூறிய மொழிக் கலைக் களஞ்சியங்கள் தேசியச் சட்ட சபைகளின் உத்தரவுப்படி தயாரிக்கப்பட வில்லை. வெற்றி யடைந்த கோஷ்டி, அல்லது வர்க்கம் கடையில் ரெடிமேடு (தயா ரான) சட்டைகளை வாங்குவது போல் ஏற்றுக்கொள்ள ஒரு தேசியத் தத்துவம் உருவாகியிருப்பதைக் காண்பர். இவ்வகையில் மார்க்ஸ், தத்துவ ஞானி ஹெகலையும், ஃப்யூபாவையும், ரிகார்டோ வையும் கடைப்பிடித்தார்; முசோலினி, ஸோரலையும், பரேடோ வையும் தேர்ந்துகொண்டார்; ஹிட்லர் கோபினுவையும், ஹீஸ் டன் ஸ்டுவர்ட் சாம்பர்லினையும், ஜங்கையும் பின்பற்றினர்; ஸ்டாலின் மிசாவலியையும், மகாவீரன் பீட்டரையும் பின் பற்றினர். மேற்கூறிய உதாரணங்கள் முற்போக்கு, பிற்போக்கு இயக்கங்களின் ஒருமித்த களேபரமென்பது வாஸ்தவமே. அவற்றைத் தனித்தனியே கூறவேண்டியதுதான் நியாயம்.

பிற்போக்கு இயக்கங்களில் சற்று முன்னிருந்த தல்லாமல் அதற்கும் முந்திய அல்லது மேலும் முற்பட்ட கந்தலான ஒரு கொள்கையைக் கடைப்பிடித்தால் போதும். கற்பனைக் கனவு களின் பிரமாதமான மறுமலர்ச்சி ஏற்படுத்தி இந்தத் தலைகீழ் மாறுதல் மூலம் போலிப் புரட்சியின் தடபுடலைச் சாதிக்க முடியும். இத்தகைய பழைமை பாடும் இயக்கங்களை முன்னேற்ற மான அறிவுப் பாதையிலிருந்து விலகி முன்னணியிலிருந்து ஆத ரிப்போர் பலருண்டு. இவர்கள் வாழ்வில் ஓய்ந்து போனவர்கள், வக்ரமானவர்கள், போகம் விழைபவர்கள், கனவு காண்பவர்கள், தங்களது வீரிய வெடி மருந்துகளை வெறும் மத்தாப்புக் குச்சி களாக வீணாக்குபவர்கள், ஜங்கர் மந்தர்லாண்ட் எஸ்ரா பாண்ட் போன்றவர்களாவர்.

இவைகளை விட்டுவிடுவோம். உலக வரலாற்றில் உதிக்கும் முன்னேற்ற இயக்கங்களைப் பார்ப்போம். இவை மனித உரி

மைப் பாதையில் நம்மை அழைத்துச் சென்றன; முதன் முதலான உலகத் தொழிலாளிகளின் ஒருமைப் பாட்டை ஸ்தாபித்தன. இவைகள் சற்றைக்கு முந்திய கொள்கைகளைத் தேடுவதில்லை. எனினும் இவைகளுக்கென்றே காலத்துக்கு அவசரமான சரியான புதுக் கொள்கைகள் தயாராகக் காத்திருந்தது எப்படி என்ற புதிர் இருக்கத்தான் செய்கிறது.

பொருளாதார அஸ்திவாரம், புது வாழ்வின் கட்டிடத்தைத் தானே சிருஷ்டிக்க முடியும் என்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. அதை மறுபடியும் மறுபடியும் வற்புறுத்திக் கூறுகிறேன். அப்பட்டமான மார்க்ஸியத்தில் இதற்குச் சரித்திர பூர்வமான ஆதாரங்கள் காட்டப்படவில்லை. அது எதேச்சையான நிகழ்ச்சியுமல்ல. அர்த்தசாஸ்திரமும், கலாசார, முன்னேற்றமும், இன்னதென்று வரையறுக்க முடியாத ஒரே நடைமுறையின் கிளைகளென்றே தோன்றுகிறது.

தெளிவற்ற இவ்வுறுதிக் கூற்றை வேறு துறையிலிருந்து இரு உதாரணங்களால் தெளிவாக்க முயல்வோம். முதல் உதாரணம், அனாதி காலமாயுள்ள உள்ள உடல் பிரச்னை லோகாயத லட்சியவாத கோஷ்டியினருக்கிடையே உள்ள முரண்பாடு; இது அநேகமாகச் சரித்திரக்கால லோகாயத வாதம், லட்சியவாதத்திடையே உள்ள வேறுபாடுகளைப் போன்றதே.

எது காரணம்? எது காரியம்? எதிலிருந்து எது வந்தது? முட்டையிலிருந்து கோழியா? கோழியிலிருந்து முட்டையா? என்ற சச்சரவுகளையெல்லாம் தற்காலிக முடிவுக்குக் கொண்டு வந்த இரட்டை இயல்புத் தத்துவம் தலையெடுக்கும்வரை இது நீடித்தது. உதாரணமாக உனது நரம்புத் தளர்ச்சிக்கு ஜீரண ரஸங்களே காரணம் அல்லது விளைவு என்று கூற முடியாது. இரண்டும் நீ வாழும் வகையின் இரு கிளைத்தன்மைகளேயாகும்.

இரண்டாவது உதாரணம் பௌதிக சாஸ்திரத்திற்கும், கணித சாஸ்திரத்திற்கும் உள்ள உறவைப் பற்றியது. மிக்கல்ஸன்—மால்ரே (Michelson-Molrey) ஃபிஸோ (Fizeau) இவர்களிருவரின் பரிசோதனைகளும் நேர்மாறான முடிவுகளைக் காட்டியதைக் கண்ட ஈன்ஸ்டீனுக்கு, போல்யாவும் ரெயிமானும் கண்டு பிடித்த அர்த்தமற்றுப் பயனற்ற யூக்லிட்டு அல்லாக் கணிதக் கற்பனைகள் சரியான சமயத்தில் சரியான இடத்தில் கிடைத்ததால்தான் மேற்கூறிய கால ஸ்தூல உறவுக் கொள்கையைக் கண்டுபிடிக்க முடிந்தது. ஞான அறிவின் வளர்ச்சி தனிப்பட்ட பல அறிவுத்துணுக்குகளின் சம்மேளனமே என்பதை ஒப்புக் கொண்டாலன்றி காலஸ்தூல உறவுக் கொள்கையின் கணிதத் தன்மையும், பௌதிகத்தன்மையும், ஒரே ரீதியில் முடிவு பெறுவது அற்புதமாகத் தோன்றலாம்.

பொதுஜன சபை அபிவிருத்தியும் அல்லது மத்தியதர வகுப்பினரின் எழுச்சியும், இப்படியே தயை மிக்க அகில லோக தாராள தத்துவத் (Humanistic-Liberal-Philosophy) திற்குக் காரணமுமல்ல, விளைவுமல்ல—இரண்டும் ஒரே வேரில் முளைத் தவை. வண்ணமும், உருவும் ஒரே பொருளில் இணைந்திருப்பது போல் தம்முள் பின்னிப் பிணைந்து ஒன்றுனவை. கலைக் களஞ்சியக்காரர்களும், அதன் பின் வந்த அறிவாளி வர்க்கத் தைச் சேர்ந்தவரும் சமூக அமைப்பின், சுய விளக்க, சுயசிந்தனை உறுப்புகளாவர். சமூக அறிவுத்துறையை வரிசைப்படுத்தி உரைத்தலே இவ்விருவரின் பிரதான ஜோலியாயிருந்தது. இதில் செயலில் உடைப்பும், வார்ப்பும், அழிப்பும், ஆக்கமும் அடங்கி யிருந்தன.

**மக்க ளரங்கத்தின் வீழ்ச்சி**

எப்போதுமே அலாதியான அறிவாளிவர்க்கத்தின் அமைப் பைக் குறித்து இந்த ஜோலி ஒரு தடையமாயுள்ளது.

சமூக மனப்பாங்கைக் காட்டிலும் சமூகப் பழக்கங்களுக்கு மந்த சுபாவம் (inertia) அதிகம். நமது சமுதாய வாழ்க்கை முறைக்கும் குவிந்துள்ள விஞ்ஞான, கலை, செயல் நுணுக்கம்— இவை சேகரித்துள்ள விஷயங்களுக்கும் எவ்வளவோ வித்தியா சம். நாம் யுத்தம் செய்கிறோம், கோயிலுக்குப் போகிறோம், அரசர்களைப் போற்றுகிறோம், புலால் உண்கிறோம், காமத் துறைக் கட்டுதிட்டங்களைக் கடைப்பிடிக்கிறோம், குழந்தை களை நரம்பு வெறியர்களாக்குகிறோம், கல்யாணங்களை கவலைக் களறுகளாக மாற்றுகிறோம், பிறரை அடக்கி யாள்கிறோம், நரம் பையும் அடக்கியாள விடுகிறோம்—ஆனல், நமது பாடப் புத்தகங் களில் வரையறுக்கப்பட்ட நல்வாழ்வின் விதி விளக்கப்படு கிறது; அவ்விதிப்படி நாம் வாழ்வதற்கு எத்தனையோ பத்தாண்டு கள் அல்லது நூற்றுண்டுகள் செல்ல வேண்டும். நம் தினசரி வாழ்வில் நாமே நமது கிண்டல் சித்திரங்களைப் பொம்மலாட் டம் ஆடுகிறோம். புத்தக அறைக்கும் படுக்கை அறைக்கும் உள்ள தூரம் அகண்டமானது. எனினும், இயல் ஞானமும், சுதந்திரச் சிந்தையும் நாம் வேண்டும்போது பொறுக்கி எடுத் துக்கொள்ளக் காத்திருக்கின்றன.

இவ்வாறு பொறுக்கி எடுப்பது தனிப்பட்ட சிலராலேயே முடியும். நாம் வாழும் நெறிக்கும், இன்று சேமித்து வைத் துள்ள விஷய ஞானத்திற் கேற்ப வாழக்கூடிய நெறிக்கும் தொடர் பேற்படுத்தத் தக்கவர்கள் இவர்களே. சமூகத்தில் சௌகர்யமாக வாழ்பவர்களுக்குச் சுதந்திரச் சிந்தனையைப்பற்றி அதிகமாகக் கவலையில்லை; பழைய விதிகளை மாற்றவோ, புதிய

விதிகளை ஏற்கவோ தேவையில்லை. வருங்காலம் நிச்சயமில்லாதிருக்கும் போதுதான் அறிவுத் தேட்டம் உண்டாகிறது; ஆனந்தப்படுபவன் ஆராய்ச்சியில் ஆசைகொள்ளான். ஒடுக்கப்பட்டோர், நாயெனப் பணிபுரிவோர் (underdogs), பொருளற்றவர், பொருள் தேடச் சந்தர்ப்பமற்றவர், அல்லது இரண்டுமற்றவர்—இவர்களே கட்டுப்பாடற்ற சிந்தனையைப் பற்றிக் கவலை கொள்பவர்கள். உள்ள மதிப்பீடுகளை அவர்கள் அப்படியே ஒப்புக்கொள்ளுகின்றனர், அல்லது அப்படியே ஒதுக்கி விடுகின்றனர். இவை மௌனமாய், நோக்கமற்ற வகையில் நடைபெறுகின்றன. எனவே, விலங்கு மனிதன் (homo), வித்தை மனிதன் (sapiens) என்னும் இரண்டையும் பிணைக்க, இருதரத்தாலும் அமுக்கப்பட்டுப் பஜ்ஜியான இடை மனிதனலேயே முடியும். அறிவாளி வர்க்கம் இரு தன்மைகளை இணைக்கும் துணை மிகுந்த ஜவ்வைப் போன்றது.

இவர்கள் மத்யதர வகுப்பினர்களென்று தவருக எண்ணி விடவேண்டாம். உணர்ச்சிக்கும், ஆராய்ச்சிக்கும், தேட்டத்திற்கும் வகைபுரியா சோர்வுணர்ச்சி ஓரளவு அவசியம், எனினும் மிதமிஞ்சியும் கூடாது, மிகக் கம்மியும் கூடாது; ஏதோ, நடுத்தரமான துயரங்கள், மிகைபடாத மேடு பள்ளங்கள்—இவையே தேவை. பழங்கொள்கைகளை ஒப்புக்கொள்ளும் மேல் தளத்திலுள்ளவர்களுக்கு இந்தச் சோர்வுணர்ச்சி இல்லை; அடித்தரமான கீழ் வகுப்பினருக்கு உணர்ச்சிகள் மரத்துப் போகும் அளவுக்கு, அல்லது விறுக்கென்று வெத்து வேட்டாய் வீசி மறையும் வகையில் ஏமாற்றம் அதிகம். தவிர, இது திட்டமானதொரு சோர்வுணர்ச்சியாயிருக்கவேண்டும். அதிருப்தியுண்ட உத்யோகஸ்தர்கள், எழுத்தாளர்கள், கலைஞர்கள்—இவர்கள் சமூகம், தமக்கேற்ற சந்தர்ப்பங்கள் தரவில்லை என்றோ, தொழிற்சாலைகளில் தங்களைப் போட்டு நசுக்கித் துவைக்கிறதாலோ புரட்சி செய்யவில்லை. அவர்கள் வாழ்வில் அறிவை வளர்ப்பதற்கான அளவு சௌகர்யமிருக்கிறது: ஆனல் உள்ள நிலையை மௌனமாக ஒப்புக்கொண்டு திருப்தி அடையும் அளவுக்கு இல்லை. திருப்தி கொண்டோருக்கு அறிவு ஒரு அநாவசியமான ஆடம்பரம்; திருப்தியற்றோருக்கு அவசியமானதோர் தேவை. புதுமைக்கும், பழைமைக்கும், இயலுக்கும், செயலுக்கும் அதிகமான இடைவெளி இருக்கும் வரையில் அறிவு இரு துருவங்களைப் பின்பற்றும்—நனவுலகை உடைப்பது, கனவுலகை சிருஷ்டிப்பது என்பவையே இத்துருவங்கள்.

இவையெல்லாம் இப்போதுள்ள மத்யதர வகுப்பாருக்குச் சிறிதுகூடப் பொருந்தாது. பழைய குடியாட்சிக் கொள்கையின் போது பொருந்தியிருந்தது. இடையில் புரட்சிகரமான நகரவாச

நடுத்தரத் தொழில் வர்க்கத்தவர்கள் பழங்கணக்குப் பார்க்க லாயினர்: உணர்ச்சி யிணைக்கும் ஜவ்வாயிருந்தது போய் ஸமூக உடலின் உறுப்புகளைப் பிணைக்கும் பிசுபிசுப் பிசின்களாயினர். அவர்களது ஏமாற்றங்கள் அமுங்கி அடங்கின; காலத்தில் முன் னேற்றப் பாதையை வகுத்த நடுத்தர தொழில் வர்க்கம் பின் னேற்றப் பாதையின் பெருஞ்சுமை யாகத் தீர்ந்தது.

**அறிவாளிவர்க்கமும் பத்திரிகைகளும்**

இவ்வாறு மக்களரங்கம் முன்னேறிப் போகாமல், சிறிது தேக்கமுற்று, பிறகு பின்வாங்கத் துவங்கியதும் அறிவாளி வர்க்கம் மேலும் தொடர்பற்றுப்போய் உள்ள அமைப்பைச் சிதைத்துப் புதியதை நிர்மாணிக்கும் பணிக்கு அநுசரணையான வலிமை பெற்ற துணைவர்களைத் தேடும் நிர்ப்பந்தம் ஏற்படு கிறது.

இத்தேக்கத்திற்கு வசிகரமிக்க சரியான உதாரணம் 19-ஆம் நூற்றுண்டு ரஷ்யாவே. "...புரட்சி, அறிவாளி வர்க்கத்தினர், அரசியல் விடுதலை, குடியானவர் கஷ்டங்கள், ஸோஷலிஸ சமுதாயம் என்று எதைப்பற்றிப் பேசினுலும் தங்களது குறை களையே அதில் பிரதிபலித்தனர். அவர்களின் சோக நிலைமையே அவர்களை இயக்குவித்தது. சோக நிலையும் பிரதானமாக உலகப் பொருள்களின் தேவையாலல்ல, ஆன்மிகத் தேவையாலேயே ஏற்பட்டது."

ரஷ்ய அறிவாளிவர்க்கத்தின் ஆன்மிகத் தாழ்நிலை நான் முன்பே கூறிய இரட்டைப் பான்மையுடையது: அதாவது ஜடமான, தேக்கமுற்ற, பழக்க வழக்கங்களால் உருவான தினசரி வாழ்க்கை முறைக்கும், 'ஏட்டுக்கொள்கை' 'லட்சிய வாதம்' என்ற உருவங்களில் சேமித்து, பயன்படுத்துவாரற்றுக் கிடக்கும் புறப்பொருளறிவின் போத நெறிக்கும் உள்ள முரண் பாடே. 19-ஆம் நூற்றுண்டு ரஷ்யனுக்கு மேற்கு ஐரோப்பிய நாகரிகம் பிந்தியதன் உருவகமாய் விளங்கியது. பிரிட்டிஷ் பாராளு மன்றம், ஃபிரஞ்சு இலக்கியங்கள், ஜெர்மானிய தத்துவங்கள் முதலியனவற்றிலும் அதைக்கண்டனர். மேற்கில் மானுட மேதைகள் (homo sapiens) வசித்ததாகவும், ரஷ்யமலைச் சரிவுக ளில் வசிப்போர் காட்டுமிராண்டிகள் என்றும் அவர்கள் கருதி னர். ஆனல் சரித்திரத்தின் விபரீதத் தலைகீழ்ப் போக்கில், முதலாளித்துவச் சீரழிவுக்கு நேர்மாறுன, உண்மை லட்சிய சமுதாயத்தை ரஷ்யாவின் கம்யூனிஸ தத்துவம் உள்ளடக்கியிருப் பதாக அறிந்து இரு யுத்த பிற்கால தசாப்திகளுக்கிடையே வாழ்ந்த அறிவாளி வர்க்கமே திக்பிரமை யடைந்து விட்டது.

ரஷ்யாவின், ஷெலபோ, ஸோன்ஜா பெட்ரோவ்ஸ்காஜா, பகூனின், நெசரவி, க்ரொபோட்கின் போன்ற பழைய புரட்சி அறிவாளி வர்க்கத்தினருக்கும் ப்ளூம்ஸ்பரி செங்கதிர் முனையைச் சார்ந்தவர்களுக்கும் எத்தனையோ அடிப்படையான வித்தியாசங்களுண்டு. இவ்வித்தியாசங்களைக் கண்டு எள்ளி நகையாடுவது சுலபம். இரண்டாம் அலெக்ஸாண்டரைக் கொன்றவர் வீரம், ஸைபீரிய தேசப்ரஷ்டர்களின் த்யாக மரணங்கள், ஸ்க்ளூஸல் பர்க் கைதிகள்—இவர்களுடன் வேறுபடுத்திக் காட்டி பின் வந்த புரட்சியினர் பயனில்லை என்பதும் இலகுவே. இவ் வேறு பாடுகளில் ஒன்று இனவேறுபாடு. ஆசிய ரஷ்யர் சகிப்புத்தன்மையும், தலை விதிக் கொள்கையும் உடையவர்: ஐரோப்பிய ரஷ்யர் படபடப்பும், வேகமும் மிக்கவர். எனினும் இது அடிப்படையான வேறுபாடல்ல. பொறுப்புகளின் சுமையால் மக்கள் நெட்டு நிமிர்ந்து வளர்ச்சி அடைகின்றனர்: பொறுப்புகளை நீக்கி விட்டால் கோணிக் குறுகித் தளர்ச்சி யடைகின்றனர்—இதுவே அஸ்திவார தத்வம்.

நெசாங் பல ஆண்டுகள் புழுக்கம் நிறைந்த ஒரு சிறைச் சுவரில் சங்கிலியால் பிணைக்கப்பட்டுக் கிடந்தார். அவரது நண்பர்கள் ஆவன செய்து அவரது விடுதலைக்கு அடிகோலினர். ஆனால், அவரோ அம்முயற்சிகளை மறுத்தார்: தன் விடுதலையைக் காட்டிலும் எத்தனையோ முக்கிய காரியங்களில் அந்நண்பர்கள் முயற்சி செய்யவேண்டும் என்றார். ஆனால், இவரே, பின்னர் ஜெனிவாவில் அகதியாயிருந்தபோது அற்பமும், அசிங்கமுமான பல அவலச் சச்சரவுகளில் ஈடுபட்டு யாரும் அறியா வெறு மனிதராய் மரணமடைந்தார். மரியாதைக் குரிய, மரியாதையை ஏற்கத்தகுதிவாய்ந்த ரஷ்ய மாணவ வீராங்கனைகளும், தியாகிகளும் ஹக்ஸலி, எவ்லின்வா நாவல்களின் கதாபாத்திரங்களை விட வீண்மூர்ச்சனைகளில் எவ்வாற்றானும் குறைந்தவர்களல்ல. லாசேல் ஒரு விநோதச் சண்டையில் உயிர்விட்ட வீணர்: மார்க்ஸ் அங்க அமைப்பிலேயே பிறர் மேற் சாய்ந்து பரவும் பீழையுடையவர்: பகூனின் தன் சகோதரி மீது ஆசையொன்றே நினைவாய் வீர்யமற்று, பும்மையாய் மடிந்தார்; ட்ராட்ஸ்கி யாவரும் காண வியன்னு ஹோட்டல் ஒன்றில் ஒவ்வொரு நாளும் பிற்பகல் பூராவும் சதுரங்க மாடிக்கொண்டிருந்தார்; லெனின் தன் சகோதரன் அலெக்ஸாண்டர் தூக்கிடப்பட்டதும் புண்பட்ட நெஞ்சோடு புலம்பினர்; இந்தப் புண்ணே நடுத்தர தொழில் வர்க்கத்திடம் அவருக்குப் பிடிவாதமானதோர் வெறுப்புண்டாக்கியது: இப்புண்ணின் விசாலமான விரிவே ரஷ்யாவின் புரட்சி.

அறிவாளிவர்க்கத்தினரின் அமைப்பிலேயே நரம்புக் கோளாறுகள் அதிகம் (இதைப் பற்றிச் சற்று நேரத்தில் பேசுவோம்). எனினும் சரித்திரத்திற்கு ஒரு தனி மனிதனின் நோக்கங்களைப் பற்றிக் கவலையில்லை, சாதனைகளைப் பற்றியே கவலை. ஆனால், சில காலங்களில் மாத்திரம் பொறுப்பின் பாரமும், ஆனந்தமும், அறிவாளிவர்க்கத்தினரிடம் ஒப்படைக்கப்பட்டு, மற்றவற்றில் அப்படிச் செய்யாமல் அது வீணாகவும், வியர்த்தமாகவும் விடுவதேன்? பழைய ரஷ்ய, ப்ளூம்ஸ்பரிப் புரட்சிகளின் ஒப்பு நோக்குக் கொந்தளித்துக் குழம்பி இக்கேள்வியிலேயே முடிவடைகிறது. திட்டமாகப் பொறுப்புகளை வகுத்துத் தரும் சரித்திர சந்தர்ப்பச் சூழ்நிலைகள் என்ற கேள்விக்கு ஈர்த்துச் செல்கிறது.

இவ்விரு தேசங்களின் அப்போதைய சமூக அமைப்பை ஒப்பிட்டுப் பார்த்தால் இக்கேள்விக்குச் சுலபமாக விடை கிடைக்கும். 19-ஆம் நூற்றாண்டு ரஷ்யாவில், தொழிற் சங்கங்கள், தொழிலாளர் இயக்கங்கள், கூட்டுறவு அமைப்புகள் எதுவும் கிடையாது. 1862-இல் தான் அடிமைத்தனம் அழிக்கப்பட்டது. அந்தச் சலனமற்றுச் சாய்ந்துறங்கிய பிரம்மாண்ட தேசத்தில் பரம்பரை நிலப் பிரபுத்வ ஆதிக்கம் கொஞ்சங்கொஞ்சமாய் மாறித் தற்கால முதலாளித்வமாகப் பரிணமிக்கவில்லை. நான் குடியானவர்களுடன் பேசியிருக்கிறேன். சிலர் தங்கள் தலைக்கு மேல் பறக்கும் ஆகாய விமானங்களை சகஜமாகக் கருதினர். ஆனால் அவர்கள் ரெயிலையோ, மோட்டார்க் காரையோ பார்த்ததில்லை; சிலர் காரில் சவாரி செய்துள்ளனர், ஆனால், சைகிளென்று ஒன்று உண்டு என்பது அவர்களுக்குத் தெரியாது.

உபதேசம் புரிவதில் நாட்டமுள்ள அறிவாளி வர்க்கத்துக்கு எத்துணை வளமான பூமி! அவர்களில் முதல்வரான நரோத்ந்யா வோல்யா தியாகிகள், குடியானவர்கள் போன்று வேடமணிந்து முன்னர் பயன்படுத்தப்படாத புது மண்ணில் விதை தூவியவரைப் போன்று ஒரு மதக்கோட்பாட்டை உபதேசித்தார். அவருக்குப் போட்டியாக தொழிற் சங்கங்களோ பாட்டாளி அரசியல் வாதிகளோ இல்லை; ஆனால், சிறு நிலக்கிழார்கள் அக்கறை காட்டவில்லை. அவரது வேண்டுகோளை விரும்பி ஏற்கவில்லை. அதற்காகப் புனித உத்வேக மிகுந்த அறிவாளி வர்க்கமும் மனந் தளர்ந்துவிடவில்லை. ஏனெனில் எதிர்ப்புக் கிடையாது; முறையை மாற்றிக் கொண்டனர். பாமரரிடைப் பிரசாரத்துக்குப் பதில் நடவடிக்கைகளி லிறங்கினர்; பயங்கர வாதத்தால் ஆலைத்தொழிலாளிகள், நிலமற்ற பண்ணை யாட்கள், படைவீரர்கள்—இவர்களிடையே தீவிரமாக வேலை செய்தனர். அவர்கள் வேலை செய்த எதுவும் தொடாத புதிய சரித்திரப்

பொதுமைப் பண்ணையில் தங்கள் ஆன்மிக தாகத்தைத் தாராள மாய்ப் பரப்ப முடிந்தது; பழைய நம்பிக்கைகளை அழித்துப் புதி யதை ஆக்கி—ஆசைகளை மகத்தான வரலாற்று முறையில் சாதிக்க முடிந்தது.

இதற்கு நேர்மாருக, மேற்கு ஐரோப்பிய அறிவாளி வர்க்கத் துக்கு உழுது பயிரிடப் புதுப் பண்ணைகளில்லை, இயல்பான அநு சரணைத் தோதுக்களுமில்லை. மார்க்ஸியக் கொள்கைப்படி அறி வாளிவர்க்கத்தினர் தொழிலாளிகளின் திட்டம் வகுப்போராக வும், செயல் திறமையாளராகவும் விளங்க வேண்டும். அந்த அறிவாளி வர்க்கத்தினருக்கு அதற்கேற்ற தைர்யமும், திறனும் இல்லை என்பதற்கு ருஜுவில்லை. 1848-இல் மாணவர்களும் பாட் டாளிகளும் ஒன்ருய்ச் சேர்ந்து தற்காப்பு அரண்களில் சண்டை யிட்டனர், ஃபிரஞ்சு கம்யூனிலும், சென்ற யுத்தத்திற்குப் பிறகு ஜெர்மனி, ஆஸ்ட்ரியா, ஹங்கேரி, பல்கேரியாப் புரட்சி இயக்கங் களிலும், ஸ்பெயின் சர்வதேசப் படை வகுப்பிலும் அவர்கள் சிறந்த வகையில் வேலை செய்தனர். ஆனல், 19-ஆம் நூற் ருண்டு மத்தியிலிருந்து மத்திய—மேலைய ஐரோப்பியத் தொழி லாளர்கள் வெகு வேகமாகத் தங்களுக்கென்றே சொந்தமான அமைப்புகளையும், கட்சிகளையும், வியாபாரக் கூட்டுறவுகளையும், தலைவர்களையும், எல்லாவற்றிற்குமேல் அதிகார வர்க்கத்தையும், இரும்பன்ன உறுதியும், கட்டையன்ன மூளையும் கொண்ட விதி முறைகளையும் வகுத்துக் கொண்டனர். இவ்வாறு வேகமான முன்னேற்றத்தில் மக்களரங்கத்தைக் காட்டிலும் அதிசீக்கிர மாய்ச் செய்தி ஸ்தாபனங்கள் அதிகாரத்திற்கு வராமலே அடங்கிப் போயின. இரண்டாம் சர்வ தேசியம் அரசர்களிட மிருந்து பொருள் உற்பத்தித் துணுக்குகளையும், அரசியல் அதி காரத்தையும் கைப்பற்றியதே அவர்களது சுதந்திரச் சிந்தனை மரத்துப்போகச் செய்யப் போதுமானதாயிருந்தது. மேற்கு ஐரோப்பிய அறிவாளிவர்க்கத்தினரால் தொழிற் கட்சியின் சார் பில் பாராளுமன்றத்தின் அங்கத்தினர்களாகவோ, தீவிரவாதப் பத்திரிகைகளின் ஆசிரியர்களாகவோ, உற்சாகமற்ற மாலைப் பள்ளிக்கூடங்களின் வாத்தியார்களாகவோதான் முடிந்தது. கட்டுப்பாடற்ற சிந்தனையால் நகர்த்த வேண்டிய கல் மலைகள் போன்று சமூகம் அவர்களுக்குக் கிட்டவில்லை. 19-ஆம் நூற்ருண் டின் முடிவில், மேலை அறிவாளி வர்க்கத்தினருக்கு ஒன்று கடுகிவரும் நடுத்தர தொழிலாளி வர்க்கத்திலிருப்பது, இல்லை யேல் பாட்டாளி வர்க்க உபாத்தியாயராவது என்பதைத் தவிர வேறு வழியில்லை.

முதல் உலக யுத்தம் ஒரு குலுக்குக் குலுக்கியது; அக்குலுக் கில் பழையன அழித்து—புதியன ஆக்கும் வேலைகளுக்கு ஒரு

சந்தர்ப்பம் பிறந்தது; எண்ணங்கள் வேரோடு மாறின; ஒப்புமைத் தத்துவம் (Relativity), பகுதி தத்துவம் (Quantum), ஜீவகண மூலரசங்கள் (harmonology), உளக்கூறு ஸாஸ்திரம் (Psycho-analysis), லெனின் கொள்கை, நடைமுறைத் தத்துவம், விமான வித்தை கம்பியில்லாத் தந்தி, உள்ள வெளியீட்டுக் கலை (Expressionism), உள்ள உயர்வுக் கலை (Surrealism) என்ற புதுமைகள் கூடி யுத்தகாலத்தில் ஒரு புது உலகைச் சிருஷ்டித்தன. இவ்வுலகின் கண்கூசும் பேரொளியோடு காலங்கடந்த, தூசும் தும்புமான, தினசரி வாழ்வின் நடைமுறைகளையும், நம்பகங்களையும் தொழிற் படுத்தும் பழங் கொள்கைகளையும் ஒப்பு நோக்கிய அறிவாளிவர்க்கம் அரைப் பைத்யமாயிற்று. பழையன அழித்து புதியன ஆக்க எத்துணை நல்ல சந்தர்ப்பம்? எனினும் இதைச் செய்யக் கூடிய அநுசரணைத் தோதுக்கள் எங்கே? உணர்ச்சியின் ஜவ்வு ஒரேயடியாத் துள்ளியது, ஆனல் இத்துள்ளலை ஏற்றுக் கொள்ளத் தக்க துணைக் கருவி இல்லை. இந்த இரு பத்தாண்டுகளில் லட்சிய சமுதாயப் படைப்பு மூன்றும் ஸர்வ தேசிய அமைப்பின் கையிலிருந்தது. அவர்களது ஐரோப்பியப் புரட்சிக்கான திட்டம், நூற்றுக்கு 80 பேர் படிப்பற்றவர், பத்துக்கொருவரே நகரவாசி என்ற அன்றைய நிலைமைக்கேற்ப வகுக்கப் பட்டது. இந்த இருபது ஆண்டுகளில், புரட்சி இயக்கம், அரை ஆசியச் சர்வாதிகாரமாய் மக்களை ஆண்டது. இப்புரட்சி ஐரோப்பா முழுவதிலும் பரவ அறிவாளிவர்க்கம் வேண்டியிருக்கவில்லை; கடுமை மிக்கு, ஆய்வற்றுப் பணிபுரியும் அதிகார வர்க்கமே தேவையாயிருந்தது. இப்புரட்சியால் அங்கீகரிக்கப் பெற்ற சில மேற்கத்திய அறிவாளி வர்க்கத்தினரும் முதலில் தம் அறிவுரிமையை இழந்தனர், அப்பால் சுதந்திரச் சிந்தையின் ஆசையையே துறந்தனர்; வெறும் கட்சிக் கையாள்களாக மாறினர்; அவர்களுட் சிறந்த அறிஞர் சிலர் அழிந்தனர்.

ஆனல், மேலை அறிஞர்களில் பெரும் பகுதியினருக்கு இந்த ரத்த வெறி ரண மலையில் யாதொரு பங்கும் கிட்டவில்லை. அவர்களை யாரும் வேண்டவில்லை; போகும் போக்கில், வண்டியின் ஐந்தாவது சக்கரமாய் அவர்களும் உருளவேண்டி வந்தது. செங்கதிர் முனையின் அறிவாளி வர்க்கத்திற்குப் பொறுப்பின்றி இருந்ததற்கு பொறுப்பேற்கும் உரிமை அவர்களிடமிருந்து பிடுங்கப்பட்டுவிட்டதே காரணம். நடுங்கும் குளிரில் 'காற்றற்ற வெறுமையில்' அவர்கள் நடுத்தரத் தொழிலாளி வர்க்கத்தின் தேய்ந்த உருவாகினர்; இக்குற்றம் யாருடையதுமல்ல, ஏனெனில், அவர்கள் காலப்போக்கைப் பிரதிபலிக்கும் வெறும் கண்ணாடிகளே தவிர வெளிச்சந்தரும் விளக்குகளல்ல.

நான் மழுப்பவோ, குற்றங் கூறவோ முயலவில்லை. அறிவாளிவர்க்கம், சமூகத்தின் உணர்ச்சி மிக்க ஒரு பகுதி. சரீரத்தில் நோய் ஏற்படும் போது சர்மம் தினவெடுத்துத் தடிக்கிறது. அரசினரின் குள்ளநரிக் குறைகள், தொழிலாளிகள் தூக்க நோய்கள் என்பவற்றைப் போன்று அறிவாளி வர்க்கத்தின் வீழ்ச்சியும் ஆழ்ந்துள்ள ஒரு நோயின் அறிகுறியே யாகும். செயல் பொறுப்பைப் பிடுங்கிக் கொண்டு அறிவினர்கள் பயனற்றவர்கள் என்று குறை கூறுவதும், தோல்விகளுக்கெல்லாம் அவர்களே காரணம் என்பதும் ஒன்று அசல் முட்டாள்தனம், இல்லையேல் வேறு உள் நோக்கத்துடன் வேண்டு மென்றே செய்யும் வீம்பு, ஐரோப்பா கண்டத்து அறிவாளிவர்க்கத்தைத் தொலைத்துக் கட்டுகையில் நாஜி இயக்கம் அதன் சாதக பாதகங்களை நன்கு அறிந்துதான் அப்படிச் செய்தது.

**அறிவாளிவர்க்கமும் நரம்பு நோயும்**

உணர்ச்சியின் ஐவ்வு, சமூகத்தின் பலபடியான மக்களைப் பிணைப்பதோடு மட்டு மல்லாமல், சமூகமாகிய முழு உடலையும் (அவ்வப்போது) தன் சூழ்நிலைகளோடும் பிணைக்கிறது. இந்த உருவக ரீதியில் இன்னும் சற்று நுணுகிப் பார்க்க நம் ஆசை தூண்டுகிறது; அது முழுதும் பயனற்ற செயலுமல்ல. கருப்பையிலுள்ள கருவிற்கு மூளையும், முதுகுநரம்பும், நரம்பிழைகளும் தருவது வெளிக்கவிப்பே, விளிம்பிலுள்ள ஜீவரேணுப்படல (ectoderm) மே, மெல்லிய மிதவையான உடற்குமிழி (plasmatic bubble) யின் மூட்டாமான கரு முட்டையின் மேற்றோலே. மத்திய நரம்புகள் (central nervous), பலர் கருதுவது போல், வலியமூடியால் காக்கப்பட்டுள்ள மூளையின் மையத்திலிருந்து வெளிப்படக் கிளைப்பதல்ல; வெளியிலிருந்து, நமைச்சல், பரபரப்பு, காமம் துன்பம் என்னப் புற உணர்ச்சிகளால் தாக்குண்ணும் சர்மத்திலிருந்து வளர்ச்சி அடைகிறது. அவ்வாறு இடைவிடாது, ஆரவாரித்து வரும் உணர்ச்சி மழை வெள்ளத்தால் தோலின் சுணையிழை (tissues)கள் தம் தடித்தன்மையை விட்டு, அதிசயமான ஒரு மாறுதலடைகின்றன. இம்மாறுதலான புடமிட்டெரிக்கும் போக்கே இன்னதென்று கூற முடியாத தன்னுணர் (consciousness) வின் லேசான வெளிச்சத்தை உற்பத்தி செய்கிறது, மூளையின் புறமூட்டமான பழுப்புக் கோணங்கள்(grey matter)முதலில் வெறும் தோலிழைக (skin tissue)ளாகவே இருந்தன. வெளித் தாக்குதல்களால் வெறியாடிய பிறகே அவை தன்னுணர்ச்சியென்னும் புது ஜனன உச்சத்தைப் பெற்றன. இழிவெண்ணங்களின் ராக்ஷஸரான ஃப்ராய்டு கூடத் தமது இன்ப இயலுக்கு அப்பால்

(Beyond the Pleasure Principle) என்னும் நூலில் மனத்தின் உயிர்ப்பு வளர்ச்சி (biology of the Mind) யைப் பற்றிக் கூறும் போது கவிஞராய்விடுகிறார்.

எப்படியோ, ஒரு தலையோடு வளர்ந்துவிட்ட மனிதனுக்குப் பெட்டிக்குள் கேவியர் (caviar) மீனை அடைப்பது போல் மூட்டத்திகுள் பழுப்பு மூளை பத்திரமாயிருக்கிறது. சமூக நரம்புகளுக்கு (மூளைக்கு) இத்தகைய மூட்டம் ஏதும் கிடையாது. காலில் விழும் ஆணிகளை எவ்வளவு கவனிக்கிறோமோ அவ்வளவுதான் இவற்றைப் பற்றியும் நமக்குக் கவலை. தொடர்ச்சியாக ஆணிகளை மிதித்துக்கொண்டே நடக்கிறோம், தொடர்ச்சியாய் அவையும் லேசாகக் குத்திக் கொண்டேயிருக்கிறது.

உருவகத்திலிருந்து உண்மைக்கு வருவோம், அறிவாளி வர்க்கத்துக்கும் நரம்பு நோய்க்கு முள்ள சம்பந்தம் எதேச்சையானதல்ல, செயல் முறையால் வருவது. கட்டுப் பாடற்ற சிந்தனையும் செயலும் ஒருவரைப் பழைய பழக்க வழக்கப்படி நடக்கும் பெரும்பான்மையோருக்கு எதிரி யாக்குகிறது. சிறுபான்மையோரா யிருப்பதே நரம்பு நோய்க்கனுகுணமான நிலைமை. பழைமையை ஒப்பாதவனுக்கும் பித்துக்குளிக்கும் இடையே யுள்ளது ஒரே ஒரு படிதான்.

சங்கீதக் கச்சேரியில் ஒருவன் இருமினால் பிறரும் இருமுவர், ஒவ்வொருவர் தொண்டையிலும் ஏதோ தினவெடுக்கும், பிறர் செயலைக் காப்பி அடித்தல் சமூகத்தின் உண்மையான சக்திகளில் ஒன்று; அதற்கு மசியாமல் எதிர்ப்பது சூழ்நிலைக்கு விரோதமாய்ப் போவதாகும்; இதனால் நரம்பு இறுக்கமும், ஏதோ தவறு செய்தது போன்ற உணர்ச்சியும் உண்டாகும். தர்க்கவாதி ரீதியில் ஆயிரம் மடங்கு சரியாகவே நடந்து கொள்வதாகக் கருதினாலும், அவனறியாமலேயே பரம்பரை பரம்பரையாக உள்ளுணர்வில் பரிணமித்துவிட்ட தர்ம அதர்ம இயல்புகள் காரணமாக ஏதோ தவறிழைத்து விட்டது போன்ற எண்ணம் தோன்றக்கூடும். சமூகத்தோடு சண்டையிடுவது என்றால் சமூகம் தன்னைப்பாதிக்கும் அம்சங்களை எதிர்ப்பது என்று தான் அர்த்தம். இதனால் நரம்பதிர்ச்சி நிலையில் இரட்டைத் தன்மை ஏற்படுகிறது. யுடிபஸ் மடமை, தன்மதிப் பின்மை, வெட்கமுடைமை. அகந்தை, அதிதாராளம், தலைகீழ்த்தன்மை என்பவை யெல்லாம் ஒரே வேரில் முளைத்த பலபடியான வக்ர நிலைகளே. மேல் நிலைக்குச் செல்லும் வர்க்கத்துடன் துணை கொள்ளும் ஊக்கமூட்டு சக்தி பறிக்கப்பட்ட அறிவாளி வர்க்கம் தன்மீதே ஆத்திரம் கொண்டு வெதுப்பு மனையின் வெறியிற் புழுங்குகிறது; அதாவது அறிவுத்துறை சுயாநுபவத்

திலோ (masturbation), தகா அநுபவத்தி ( incest) லோ முடிந்து விடுகிறது. இதுவே சென்ற பத்தாண்டின் நிலே.

பின்னும் அது போலி அறிவினரை மயக்கி ஆசை கொள்ளச் செய்கிறது. போலி அறிவினர்க்கு சிந்தனேச் சுதந்திரத்தில் ஆர்வ மில்லே; அறிவைப் போன்று பரபரக்கும் நரம்பு நோய் மட்டுமே உண்டு; அவர்கள் வெறுமையான வெதுப்பு மனேயைச் சுற்று கின்றனர்; ஏனெனில் வெளி உலகத்தில் குளிர் நடுக்குகிறது. மெதுவாக அவர்கள் உள்ளே புகுவர்; உண்மைக் குடிகளான அறிவாளி வர்க்கத்தையும் மிஞ்சுவர்; அறிவினரின் மதிப்பு குறைந்து விடும்; காலக் கழிவில் படைப் பாடிச் சேவகர்கள் படையையே விழுங்கி விடுகின்றனர். இது ஒரு துக்ககர மான மாறுதல்; சமூக எதிர்ப்புச் சமூகக் கயமையாகிறது.

ஆனுல், உண்மையான அறிவினருக்கும் நரம்பு நோய் நிலே தவிர்க்க முடியாத ஒரு விளேவே. உதாரணமாகக் காம உணர்ச் சியை எடுத்துக் கொள்ளுவோம். ஒரு பக்கம், காலங்கடந்த காமக் கட்டுப்பாடுகளேப் பற்றி நமக்குத் தெரியும், அவற்றின் அடக்குமுறைகளேயும், அவற்ருல் விளேயும் இடையருது தாக்கும் துன்பங்களேயும் நாம் அறிவோம். மறுபக்கம், தனிப்பட்டவர் களது கட்டுப்பாடற்ற காமநட்பு, பரஸ்பர சுதந்திரக் கல்யாணங் கள் முதலிய பரிசோதனேகளெல்லாம் பரிதாபமாய்த் தோல்வியுறு கின்றன. 'சுதந்திரக் காதல்' (free love) என்னும் சொற்ருெடரில் சகிக்க முடியாத எட்வர்டியன் (Edwardian ) கறை படிந்து விட்டது. அறிவற்ற சமூகத்தில் அறிவுக்குப் பொருத்தமான அமைப்புகள் வெற்றி பெறமுடியாது. உள்ளிருந்தும், வெளியி லிருந்தும் சமூகச் சூழ்நிலே நம்மை அமிதமாகத் தாக்கி நசுக்கு கிறது: இதனுல் இயற்கை கூட நெருக்குண்டு உருமாறித் திகைக் கிறது. இலக்கியங்களிலும் இவ்விளேவைக் காணலம். டி. எச். லாரென்ஸ், ஹெமிங்வே போன்ற தேர்ந்த மேதைகளிடமும் இந் நெருக்கடி நிமைப்பதை நாம் உணருகிறேம். இத்தகைய சந்தர்ப்பத்தில் எழுத்தாளர், "கெட்டுக் குட்டிச் சுவராகட்டும்; காமம், ஒரு இயல்பான செயல்; இருவர் உணவு கொள்வதைக் கூறுவது போல் எளிமையாகவும், இயல்பாகவும் நான் இதை யும் கூறுவேன்"—என்று தமக்குள் முணுமுணுப்பதைக் கேட் கலாம். அப்பால் அந்த எழுத்தாளரைக் கவனிப்போம். அவர் தம் சட்டைக் கைகளேச் சுற்றி விட்டுக்கொள்கிருர், வேலேயில் பிடிவாதமாக முனேகிருர். நெற்றியில் வியர்வை கொட்டுகிறது, கண்கள் நெட்டுப் பிதுங்குகின்றன. அவரது பேனு முனே 'எளிதாகவும், இயல்பாகவும்' எழுதும் முயற்சியின் பாரத்தால் உடைந்து போகிறது. இதனுலேயே லேடி சேடர்லீயின் காத லன் (Lady chatterley's lover) என்னும் நாவலில் குமைந்துள்ள

பாஷா நடையைக் காண்கிறோம், மற்றப்படி அற்புதமான அந்த நாவலில் விபரீதமான இந்த முயலை மணியடிக்காமல் பையி லிருந்து வெளிப்படுத்தும் செயலாகக் குழம்பியுள்ளது.

கலையைக் குமைப்பது போலவே சமூகச் சூழ்நிலை நடை நொடிபாவனைகளையும் குலைக்கிறது. ஒருவர் இக்குமைவை எதிர்க்கலாம், ஆனால் எதிர்ப்பதற்கும் விலையுண்டு, அவ்விலை நரம்பதிர்ச்சி நிலையே, குற்றம் செய்ததாக குறுகுறுக்காத ஒன்றுமே இருந்ததில்லை; மற்றவர்களைச் செல்வர்களாக்க ஒரு வன் செலுத்த வேண்டிய வருமான வரியே இது. படைத் தள வாடங்கள் செய்பவரிடமே பலமுறை நான் கள்ள மில்லா உள்ளத் தைக் கண்டிருக்கிறேன்; ஆனால், உலக சமாதானக்காரர்களில் குற்றம் புரிந்தவனைப் போன்று விழிக்காதவர்களே இல்லை.

நரம்பதிர்ச்சி நிலைக்காக அறிவாளி வர்க்கத்தைக் குற்றஞ் சாட்டுவது காச நோய்க்காகக் கனித் தொழிலாளி (miners) களைக் குற்றஞ் சாட்டுவதைப் போன்றதே. இந்நோய் தொழி லால் வரும் நோய், இதை இவ்வண்ணம் அறிந்தே வெறுப்போ, வெட்கமோ இல்லாமல் சமாளிப்பதே சரியானது.

### அறிவாளிவர்க்கமும் எதிர்காலமும்

பழைய, தாராளம் நிறைந்த, சமுதாய மயமான ஐரோப்பிய அறிவாளி வர்க்கத்தின் ஜோடே இன்று இல்லை. நாஜி தத்துவத் தின் தலைமை கூறியதேபோல 'கலாசாரம்' என்று கேட்டதும் 'என் வெடியை வெடிப்பேன்' என்ற முறையிலேயே அது நடந் தது. அடித்தளத்தில் ஒரு புதிய அறிவாளி வர்க்கம் உருவாகிக் கொண்டிருக்கலாம்; பனி மூட்டத்துக்குள் ஒரு புதிய விதை முளைக்கலாம்; எனினும், பத்திரிகைக் கட்டுரைகள், அறிவியல் சார நூல்கள், ரேடியோ முதலிய பலவற்றின் மூலமும் ஐரோப் பாவின் மனத்தை நாம் அறிந்து கொள்ளமுடியவில்லை; பழங் காலமும், தற்காலமும், வருங்காலமும் அவர்களுக்கு எப்படி இருக்கிறது, எவ்வகையாய் மணக்கிறது, எந்த மாதிரி சுவைக் கிறது என்பதைப்பற்றிச் செவ்வாய் கிரஹத்தைப்பற்றி நமக்கு எவ்வளவு தெரியுமோ அவ்வளவே தெரியும். ஃபிரஞ்சு நாட்டி லிருந்து வரும் இலக்கிய மாதிரிகள் நம்பகமூட்டுவதா யில்லை; நான் பாரபட்சமாகப் பேசுகிறேன் என்று சிலர் கருதலாம், வளர்ச்சி பெற்றுவரும் ஃபிரஞ்சு அறிவியல் தன்மை இசை யிழை யும் மிகைப் பாட்டுடன் இயங்குகிறது. எனினும், இதாலியிலும், பால்கனிலும், ஆஸ்ட்ரியாவிலும், நார்வேயிலும், ஒரு புது அறிவி யல் உற்பத்தியாகலாம், வெளிப்படையாகப் புது நோக்கங்கள் தோன்றலாம். அவ்வியலின்முன் நம்மியல் விக்டோரியா காலத்து வெறும் தத்துப்பித்தாகக் கூடும்: பரவாயில்லை என்று தட்டிக்

கொடுக்கப் பெற்றால் அதுவே நமக்குச் சரித்திரம் வழங்கும் சரியான பரிசாகும்.

இதெல்லாம் ஹேஷ்யங்கள்; பத்தாண்டு பத்தாண்டாக நிகழ்ச்சிகளைக்கூறுவதுபோல் அவ்வளவுசுலபமாய் ஒவ்வோராண்டாக நடப்பதைக் கூறமுடியாது. சரித்திர வளைவு எப்பக்கமாய்ச் சாய்கிறதென்பதை ஒருவாறு யூகிக்கலாம்: ஆனால் அவ்வளைவின் அலைவரிகளையும் நுரைத்தொகைகளையும் அறுதியிட முடியாது. நெடு நாட்களுக்குப் பிறகு பர்ன்ஹேம் கூறுவதுபோல் நேர்ந்தால், பரிபாலன உயர் ஆட்சிப் பீடங்கள் ஏற்பட்டால், அறிவாளி வர்க்கத்தினர் அவ்வரசாங்கத்தில் சிறப்பான பதவிகளை ஏற்பர் என்பது நிச்சயம். இன்றுள்ள நிலையில் இது நடக்கக்கூடாத காரியமல்ல. ரஷ்யாவில் சென்ற 20 ஆண்டுகளாக இந்த நிலையை உணர்ந்து நடக்கத் தொடங்கியுள்ளனர். ஜெர்மனியிலும் சென்ற 10 ஆண்டுகளாக இம்முறையே காப்பியடிக்கப்படுகிறது. ரஷ்யாவில் பிரசுர நிலையங்கள், தியேட்டர்கள், கட்டிட அமைப்புக் கழகங்கள், ஆராய்ச்சி லெபரேடரிகள், கல்லூரிகள், மருத்துவசாலைகள் யாவும் அரசாங்கத்திற்குச் சொந்தமாயுள்ளன. எழுத்தாளன், நடிகன், மனையமைப்போன், விஞ்ஞானி-யாவரும் யதார்த்தத்தில் அரசாங்க உத்யோகஸ்தர்களே. எனினும், ஒயிட் ஹாலின் பிரதிநிதித்துவ சூழ்நிலை அங்கு கிடையாது. ரஷ்யாவின் 'புரட்சி மனோராஜ்யம்' ஸோஷலிஸ இயல்பியல், இசை நாடக இலக்கியம் (Operative Literature), புதுமைத் தேசபக்தி என்னும் இலக்கிய இயக்கங்களும் கட்சி மகாநாட்டாலும், அரசாங்க உத்யோகஸ்தர்களது கூற்றுப்படியுமே நிர்ணயமாகின்றன. கவிதை, நாடகம், கட்டிட வேலை, சினிமா, ஏன், சரித்திர ஆராய்ச்சி, தத்துவ சாத்திரம் யாவினும் இதே நிலைமை தான். இவைகளெல்லாம் படைவீரர்களுக்கு 'இடம் திரும்பு—வலம் திரும்பு—இருந்தபடி இரு' என்று ஆக்ஞையிட்டு கசரத் வாங்கும் வகையிலேயே ஸோவியத் ரஷ்யாவில் நடந்து வருகிறது. ஜெர்மனியின் ரெய்ச்ஸ்குல்டர்க்காமெர்னி (Reichskulturkammern) லும், பர்னஸெஸ் (Parnassus) என்னும் காவியமலை ஒரு போர்க்களப் பாடி வீடாகப் பரிபூர்ணமாய் மாறி விட்டது.

ஆங்கிலோ-ஸேக்ஸன் (Anglo-Saxon) நாடுகளில் இவ்வகையான வளர்ச்சி கஷ்டமானதே, எனினும் அடியோடு அசாத்தியமல்ல. பல பாதைகள் ஒரே இடத்திற்குப் போகக்கூடுமல்லவா? இந்த யுத்தத்தில் எல்லோரும் சேனையிற் சேரவேண்டுமென்ற இயக்கம், மேலை அதிகார வர்க்கமும் மேற்சொன்ன முறையைப் பின்பற்ற வேண்டிய முதல் ஒத்திகையாகவே தோன்றுகிறது. சென்ற இரு ஆண்டுகளில் அறிவினர்களில் அநேகர்

செய்தித் துறை இலாகாவில் பொதுஜன உறவு உத்யோகஸ்தர்களாகவும், பி. பி. சி. (பிரிட்டிஷ் ரேடியோ நிலையம்) யிலும் பதவியேற்றுள்ளனர். தற்போதுள்ள நிலையில் பொதுத் துறைத் தொழில்களும், தனித் தொழில்களும் வேறு வேருயுள்ளன; இன்னுஞ் சில நாளில் நிலைமை மாறிவிடலாம், இரண்டும் இணைந்து ஒரே ஆருக ஓடலாம். ஒரு சிலர் இப்புதிய முறையைத் துவக்கலாம். பிறர் அதைப் பின்பற்றலாம். பின்பற்றுவோர் தங்கள் சொந்த உணர்ச்சிப் போக்குப்படியே நடப்பதாக நம்பலாம். ஆனுல், உண்மையில் தங்களை அறியாமல் மேற்பரிபாலன ஆட்சிமுறையின் புதுமுக மாறுதலுக்கு ஏற்பப் பரிணமிப்பதாயும் அது இருக்கும். இதிலுள்ள ஆபத்து கள்ளங்கபடற்ற முறையில் தங்களைத் தாங்களே காட்டிக் கொடுக்கும் இம்மாறுதல் சாத்யமென்பதே; தமது சொந்தத் துயரங்களை மேற்பரிபாலன ஆட்சி முறையின் திறமையில் மறக்க நினைக்கும் ஆசை மிகவும் பெரியது. புரட்சி இயக்கங்களின் வீழ்ச்சி அறிவினரைத் தற்காப்பு நிலையில் இன்று வைத்துள்ளது. வரப்போகும் சில ஆண்டுகளின் சோதனை முதலாளித்துவமா, புரட்சியா என்பதல்ல, மக்களாட்சி, மனிதத் தன்மை இவற்றின் சில பண்புகளையாவது காப்பதா, முற்றிலும் இழப்பதா என்பதுதான். இவற்றை இழக்காமலிருக்க ஒரே வழி உறுதியாக கட்டுப்பாடற்ற சிந்தனைக் கொடியைப் பின்பற்றுவதே.

இது தற்போது மிகவும் ஜன சம்மதமான கொடியல்ல; இதன் துணி வெறுப்பின் உமிழ் நீரும், இறந்தோரின் ரத்தக் களறியும் படிந்து நனைந்துள்ளது.

---

* 1944, மார்ச்சில், லண்டனில் வெளியாகும் ஹொரைஸன் பத்திரிகையில் முதன் முதலாகப் பிரசுரிக்கப்பட்ட கட்டுரை.

# 1942

## காசினிக் கயவர்கள்*

அவ்வப்போது, பல ஆண்டுகளுக்குப் பிறகு, நாம் நமது பழம் பள்ளிக்கூடச் செய்திகளையும், அக்கப்போர்களையும் பற்றிக் கேள்விப்படுகிறோம்; அது போன்றே என் பழைய கூட்டுக் கொடுஞ்சிறைப் பாடி (concentration camp) யிலிருந்தும் பல செய்திகளையும், கிண்டல் பேச்சுகளையும் நான் கேள்விப்படுகிறேன்; அச்சிறை இன்பகரமான பழைய ஐரோப்பாவின் தனிப்பட்ட சிறப்புடைய ஒன்றாகும்; அதிலிருந்தும் உயிர் பிழைத்துள்ள நாங்கள் பழம் பள்ளிக் கழுத்துப்பட்டை (tie) யை அணிவதுபோல் உடலில் காயப் பட்டையையோ, வயிற்றில் புண்ணையோ, அணிகிறோம். இவை இல்லாவிடினும் துயர் தோய்ந்த நரம்புத் தளர்ச்சியாவது இருக்கும். அந்தச் செய்தி க்ளாஸ்கோவில் பல் வைத்யனுயிருக்கும் 'பி' (B) யைப் பற்றிய தல்ல; முழங்காலில் கௌடலஜராவின் குண்டு தாங்கி 34-ஆம் நம்பர்ச் சிறைக்குடிலுக் கெதிரிலுள்ள கக்கூசில் தற்கொலை செய்துகொண்ட பி (B) யைப் பற்றிய தாயிருக்கும்.

மிகமிகச் சமீப காலச் செய்தியைச் சில வாரங்களுக்கு முன் இந்நாட்டிற்கு வந்த ஒரு இங்கிலீஷ்காரனிடமிருந்துதான் அறிந்தேன். நான் விடுதலை பெற்ற 5 மாதங்களுக்குப் பிறகு அவன் அங்கு கொண்டு வரப்பட்டான்; ஒரு வருடம் சிறையிலிருந்தான். இன்னும் உயிரோடிருக்கும் என் சிறை நண்பர்கள், ஸர்வ தேசியப் பாதுகாப்புப் படையினர், குட்டநோய்க் குழிகளில் வசிப்போர், சிறைக்காவலர், மூட்டைப் பூச்சிகள், எலிகள், என் கைக் கடிகாரத்தைத் திருடிய மடைப்பள்ளி மிமி, தன் குதிரைச் சவுக்கால் க்ளெய்னைச் சாடிய லெப்டினெண்ட் சோம்ப்ஸ்—இவர்கள் பற்றியெல்லாம் அவன் செய்தி கொணர்ந்தான். தொத்து நோய்க் காலத்தில் கக்கூஸ்களின் கவிச்சுகள்; குடில்களிலுள்ள ஈர வைக்கோற் குமட்டல்கள்; வருடக் கணக்கில் அவற்றில் அவதியுற்று வாழும் மக்களின் சோகங்கள், பசி, பனி, அடிகள், பயங்கள், பைத்யங்க ளாகுமுன் கைதிகளின் கண்களிலுள்ள வெறுமை, கை விலங்கிடும்போது காவலனது கண் பார்வை—இவையாவற்றையும் அவன் என் நினைவுக்குக் கொணர்ந்தான்.

நான் அதைத் தனிப்பட்ட சிறப்புடைய சிறை என்று கூறினேன். அதன் பெயர் லீ வெர்னெட் (Le Vernet); பிற சிறைகளிலிருந்து தண்டனை பெறக் கைதிகளை அனுப்பும் கட்டுத்

திட்டம் நிறைந்த பெருஞ்சிறை ஃபிரான்ஸிலேயே இது ஒன்று தான்; பைரெனீஸுக்கு வடக்கில் இப்பேய்த் தீவு இருந்தது. இந்தயுத்தத்திற்கு முன்னணியான ஸ்பானியப் போரில் தோல்வி யுற்ற குடியரசுப் படையினருக்கு ஃபிரஞ்சு நாட்டு உபசாரத் தைக் காட்டவே இச்சிறை கட்டப்பட்டது. அந்தக் காலத்தில் லி வெர்னெட்டில் கைதிகள் தங்கப் பனி உறைந்த நிலத்தில் வெட்டிய படுகைக் குழிகளே உண்டு; அக்குழிகளில் காயம் பட்டவர் இறந்தனர்; ஆரோக்யமுள்ளவர் நோயுற்றனர். இங்கு முதல் முதலாக ஏற்பட்டது இரும்பு முள் வேலியும், அதை அடுத்துள்ள இடுகாடுமே. இவ் விடுகாட்டின் முதல் முதலான சவக்குழிகளின் மேலுள்ள மரச் சிலுவைகளில் ஸ்பானியர்களது மூப்பெயர்களைக் காணலாம். இவைகள் எதிலும் கல்லறைச் சாஸனங்கள் கிடையாது.

பிறகே பல மரக் குடிசைகள் கட்டப்பட்டன; ஒவ்வொன் றிலும் ஆளொன்றிற்கு 21 அங்குல அளவில் 200 பேர்கள் அடைக்கப்படுவர். இவைகள் கட்டி முடிந்ததும் ஏதோ ஒரு கமிஷன், இச் சிறை மனித வாசத்திற்கு லாயக்கில்லை என்று கூறியதால் இதைக் கைவிட்டனர். சில மாதங்கள், எலிகளும் மூட்டைப்பூச்சிகளும் தவிர அது காலியாகவே இருந்தது. பிறகு யுத்தம் மூண்டது. ஃபிரெஞ்சுப் பத்திரிகைகள் காசினிக் கயவர்கள் என்று வருணித்த, விநோதமான பேர்வழிகள் உலகின் பல பகுதிகளிலிருந்தும் இங்கு கொண்டு வந்து நிரப்பப்பட் டனர்.

அவர்கள் பெரும்பாலும் ஃபாஸிஸ ஆட்சியிலுள்ள சகல தேசங்களிலிருந்தும் பிரஷ்டம் செய்யப்பட்டு அமெரிக்க அரசியல் ஈடுபாடு கொண்டவர்களுமேயாவர். ஆனல் போனட்-லவால் கொள்கையின் கையாள்களாய், 1939, செப்டெம்பர் முதலே விச்சி அரசாங்கத்தை மூட்டைகட்டி மூடியிட்டு ஹிட்லருக்கு விற்கத் தயாராய்க் காத்திருந்த ஃபிரஞ்சு ரகஸியப் போலீஸ் ஸ்தாபனம் போரில் முதல் முதல் செய்யவேண்டிய காரியம் ஹிட்லர் எதிரிகளைச் சிறையிடுவதே என்று தீர்மானித்தது. இத்தீர்மானித்தைப் பொது மக்கள் வெறுக்கா வண்ணம் 100-க்கு 20-வீதம் உண்மைக் குற்றவாளிகள், டாபர்கள், அபினி விற்போர், அசம்யச் சிறுவர்கள் என்ன, மாண்ட் மார்ட்ரே சமுதாயச் சாக்கடை வாசிகளையும் எங்களுடன் சேர்த்து வைத்தனர்.

மற்றப்படி, இந்தக் குப்பைத் தொட்டியில் எறியப்பட்ட 100-க்கு 80-பேராகிய நாங்களோ 1930-இல் ஏன் அதற்கு முன்பே ஹிட்லருடன் போர் துவக்கியவர்கள்; முஸோலினியின் விளக்கெண்ணெயை உண்டவர்கள்; புகாரஸ்ட்டில் ஸிகுரான்

ஸாவின் சித்திரவதைப் பலகைகளிற் படுத்தவர்கள்; ல்வாவின் யூதச் சிறைப் படுகையி லிருந்தவர்கள். டாசாவின், ஹிட்லரின் மெய்க்காப்பாளரான எஸ். எஸ். ஸுகளின் இரும்புக்குண்டுச் சாட்டைகளால் அடியுண்டவர்கள்; வியன்னுவிலும், ப்ரேக்கிலும் நாஜி விரோதமான ரகசியத் துண்டுப் பிரசுரங்களை வெளியிட்டவர்கள்; ஸ்பானியக் கடைசித் தீர்க்கதரிசனப் போருக்கு முன்னணியாகச் சண்டையிட்டவர்கள். எனவே லீ வெர்னுட்டின் கல்லூரிக் கழுத்துப்பட்டைக் காய வடுவைப் பற்றி நான் பெருமை கொள்ளுகிறேன்.

1940 ஜனவரியில் நான் விடுதலை செய்யப்பட்டேன்; அப்பால் அங்கு நடந்த செய்திகளைப் பற்றிப் பராரியாக ஏதேதோ கேள்விப்பட்டேன். எனினும், என் விடுதலைக்கு 5 மாதம் கழித்துச் சிறைப்பட்ட இந்த இளம் ஆங்கிலேயனுலேயே முதல் முதலாக நம்பத்தகுந்த செய்தி எனக்குக் கிடைத்தது. அவனுக்கு ஃபிரான்ஸில் பல உறவினர்க ளிருப்பதால் பெயரை மாற்றி முர்தாக் என்று அழைக்கிறேன். ஃபிரான்ஸை ஜெர்மானியர் ஆக்ரமித்துக்கொண்ட சில நாட்களுள் பாரிஸ் நகரில் அவனைச் சிறைப்படுத்தினர்; ரீம்ஸ் அருகிலுள்ள போர்க் கைதிகளின் சிறைப்பாடிக்கு அனுப்பப்பட்டான். அங்கிருந்து அவன் தப்பிச் சென்று ஆக்ரமிக்கப்படாத பகுதியை அடைந்தான்; அங்கு ஆக்ரமிப்பெல்லையை அநுமதியின்றித் தாண்டியதற்காக விச்சி அரசாங்கப் போலீஸாரால் கைதியாகி 1940, ஜுலை முதல் வாரத்தில் விலங்கிடப்பட்டவனுய் அவன் வெர்னுட்டை அடைந்தான்.

அவன் கூறியதில் வெர்னுட்டில் ஒரு வருடத்தில் நடக்கும் வழக்கமான செய்திகள் நிரம்பியிருந்தன. மூன்று மாதங்களுக்குள் 150 பவுண்டிருந்த அவன் எடை 120 பவுண்டாகக் குறைந்தது. ஆறு மாதத்திற்குப் பிறகு டைபாய்டு (typhoid) விஷ ஜ்வரம் வந்தது, பத்து வருடச் சிறை வாசத்தால் பலமிழந்தவர்களைப்போலன்றி, அவன் அதிலிருந்து பிழைத்துக் கொண்டான். 12 மாதங்களுக்குப் பிறகு நெடுநாட் துன்பத்தைவிடச் சில நாட் துன்பமே மேலானதென்று உணவு நிறுத்தம் செய்தான்; நல்ல வேளையாக அவனிடம் பிரயாண அநுமதிச் சீட்டு இருந்தது; மார்ஸேல்ஸில் அவனுக்காக வாதாட ஒரு வக்கீலும் இருந்தார்; எனவே அவனது பட்டினி ஆயுதம் 20 நாட்களுக்குப் பிறகு வெற்றி பெற முடிந்தது. பொதுவாக இக் கழிபடு மக்களுக்கு அநுமதிச் சீட்டோ, அல்லது வாதாட ஆளோ, இவரது சாவுகளைக் குறித்து இம்மியளவேனும் கவலைப்படுபவர்களோ கிடையாது.

மூர்தாக் சிறைக்கு வந்த பொழுதுதான் சமாதான உடன்படிக்கையும், அதன் அபாயகரமான 19-வது ஷரத்தும் வெளியிடப்பட்டன. 19-வது ஷரத்தின்படி ஃபிரான்ஸிலிருந்த ஜெர்மானியர்களை, அதாவது, நாஜீய விரோதிகளான ஜெர்மானியர்களை ஹிட்லரது ரகஸியப் போலீஸிடம் ஒப்படைத்துவிட வேண்டும்,

எனினும் சமாதான உடன்படிக்கை வெளியாகியும் சிறைப்பாடியில் யாதொரு திடுக்கிடும் திகைப்பும் கிடையாது. கைதிகள் ஒன்று சேர்ந்து ஜெர்மானியர் தங்களைக் கைப்பற்ற வருமுன், தங்களில் முக்கியமான சிலரைத் தப்பவிடவேண்டுமென்று சிறை அதிகாரியிடம் விண்ணப்பித்துக் கொண்டனர். அதிகாரி மறுத்துவிட்டார். அவருக்குத் தன் தொழிலில் அதிக விருப்பம் என்று கூற முடியாது; எனினும் மாதம் 10 பவுன் சம்பளத்தை அவர் இழக்கத் தயாராயில்லை. அப்பால் கைதிகள் ஜெர்மன் ரகசியப் போலீஸ் வருமுன் தங்களது பெயர்ப் பட்டியல்களை அழித்துவிட வேண்டினர். அதிகாரியும் அவ்வாறே செய்வதாக வாக்களித்தார். ஆனால், ஜெர்மானியரிடம் எல்லாப் பட்டியல்களுந்தான் சமர்ப்பிக்கப்பட்டன.

முதலாவது நாஜிக் கமிஷன் ஜூலை மாதம் வந்து சேர்ந்தது. அப்போது பயங்கரமான கொடுமை பரவிப் பரிகாசமாகியது. அவர்கள் வர இரண்டு நாட்களிருக்கையிலேயே சிறையைச் சுத்தம் செய்யும் வேலை தீவிரமாகத் தொடங்கிவிட்டது. வைக்கோல்கள் மாற்றப்பட்டன, குடில்கள் செம்மையாக்கப்பட்டன, கக்கூஸ்கள் கழுவி விடப்பட்டன .கமிஷன் வந்தது; இதற்கு முன்பே தற்கொலை செய்துகொண்ட பன்னிருவரைத் தவிர மற்றக் கைதிகள் யாவரும் வரிசையாய், மணிக் கணக்கில், தேசவாரியாய், குளித்துத் தெளித்து, சுத்தமான காதுகளும், கை நகங்களும் கொண்டவராய், சேனை வரிசையின் முழுச் சிறப்போடு, கசாப்புக் கடைக்குச் செல்லும் ஆடுகளைப்போல் காத்திருந்தனர். அந்தக் கமிஷனில் ரகசியப் போலீஸ், எஸ். எஸ். அந்தரங்கக் காப்பினர், பொதுவினர் எனப் பலபடியான பதவி வகித்த பதினாறு பேர்களிருந்தனர். அவர்கள் ஆடு மாடு வாங்கும் வியாபாரிகளைப்போல் தங்கள் முன்னிருந்த மனித மந்தையைக் கண்காணித்தனர், ஃபிரஞ்சுப் போலீஸாரும், அதிகாரிகளும் புன்னகை புரிந்தவாறே அவர்களைப் பின்தொடர்ந்தனர்.

எனினும், ஆச்சரியமே! இந்த நரமாம்ஸ பட்சணத்தைப் பற்றி ஜெர்மானியர்கள் ஏனோ அவசரப்படவில்லை. அடுத்த சில மாதங்களில் முக்கியமான அரசியல் கைதிகள், முறைக்கு மூன்றைந்து பேர்களாக முப்பதின்மரே கொண்டு செல்லப்பட்

டனர். இவர்களுள் ஜெர்மன் கம்யூனிஸ்ட் கட்சியினர், மத்யக் காரியக் கமிட்டியின் அங்கத்தினரான ஹான்ஸ் தாஹ்லெ மும், புகழ் பெற்ற நாஜிக் கொடுமையின் பழுப்பு நூல்களின் ஆசிரியரான ஹான்ஸ் ஷுல்ட்ஸும் சேர்ந்தவர்களே. பிந்தியவர் எனக்கு மிகப் பிரிய நண்பர்; மேற்குக் கம்யூனிஸ்ட் ஸர்வ தேசியத்தின் பிரசாரத் தலைவரான வில்லி ம்யூன்ஸென்பர்க்கின் காரியதரிசி. கெப்பல்ஸுக்கு நிகராகக் கம்யூனிஸ அகிலம் உற்பத்தி செய்த பிரசாரகர் ம்யூஸன்பர்க்கே. (ம்யூஸன்பர்க் க்ரெனேபில் அருகிலுள்ள காட்டில் தூக்கிடப்பட் டிறந்தார். இது கொலையா, தற்கொலையா என்பது இன்னும் நிச்சயமாக வில்லை.)

முக்கியமான கைதிகளைத் தவிர மற்றவர்களைத் திரும்பப் பெறுவதில் நாஜிகள் அக்கறை காட்டவில்லை. ஐரோப்பா முழு மையும் சொந்தமான பிறகு இந்தத் துரதிர்ஷ்டக்காரர்களால் ஏதும் கெடுதல் ஏற்படாதென அவர்கள் கருதினர் போலும். அன்று, அவர்களுக்குத் தேவையானது உழைப்பாளிகளே. புகழ் பெற்ற டோட்ட்(Todt) கமிஷன் ஸீக்பீரீட் அரணைக் கட்டியவர்; (காலஞ் சென்ற அவரது பெயரால் இக் கமிஷன் அழைக்கப்பட்டது) வெர்னுட்டில், தங்கள் அரண்கள், ஆலைகள், கனிகள் முதலியவற்றில் வேலை செய்யக் கூலிகளைச் சேர்க்க ஒரு ஸ்தாபனத்தை நிறுவியது. எந்தக் கட்சியாய் இருந் தாலும் பரவாயில்லை, ஆரிய இனமாய் இருந்தாற்போதும், வியாதியற்றவனாய், கடினமான தொழிலில் விருப்பமுடைய வனாய்க் கிடைத்தாற்போதும், நாளொன்றுக்குச் சுமார் 10 ரூபாய் வீதம் சம்பளம் தரப்படும் என்றெல்லாம் ஆள் பிடித் தனர். கூலிக்காரர் தேவை எவ்வளவு அதிகமாயிருந்ததென் பது இதனாலேயே விளங்கவில்லையா?

ஆயினும் எது வந்தாலும் சரி என்று மனதை இரும்பாக்கிக் கொண்ட பேர்வழிகள் டோட்ட் கமிஷனிடம் தங்களைப் பதிவு செய்துகொண்டனர். அவர்களில் பெரும்பான்மை யோர் அரசியலைச் சாராத குற்றவாளிகள், ஸர்வ தேசியப் பாதுகாப்புப் படையினர் ஒரேமுகமாய் மறுத்து விட்டனர். என் செய்தியாளர், அப்படையினரில் ஒருவர் கமிஷன் கேட்ட கேள்விக்கு அளித்த விடையை நேரே செவியுற்றவர். 'ஜெர் மனிக்குத் திரும்பிச் செல்லத் தயாரா?' என்றாராம் கமிஷனர். 'ஆஹா, சந்தோஷமாய், த்யேல்மான் ஜனாதிபதியானதும்'— என்றாராம் கைதி. (த்யேல்மான் 1932-இல் சிறையிடப் பட்ட ஜெர்மன் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்). அக்கைதிக்கு யாதொரு தண்டனையும் அளிக்காததும் அதிசயமே.

மற்ருெரு ஆயிரம் கைதிகள் ஃபிரஞ்சு அதிகாரிகளால் ஸஹாராப் பாலைவன ரெயில் அமைப்பி (Trans-Sahara Railway)ல் அடிமை வேலை செய்ய வட ஆப்பிரிக்காவுக்கும் பலாத்காரமாக அனுப்பப்பட்டனர். ஜெர்மனிக்குச் செல்ல எவ்வளவு பயந்தார்களோ அவ்வளவு ஆப்பிரிக்கா செல்லவும் கைதிகள் பயந்தனர். செய்தித் தணிக்கையையும் மீறி வந்த கடிதங்களிலிருந்து மொராக்கோ அடிமைகள் கொல்லும் வெப்பத்தாலும், பசியின் கொடுமையாலும், களைப்பின் கடுமையாலும், நோயின் நொடிப்பாலும் ஈசலைப்போல் மடிந்தனர் என்று தெளிவாகியது.

ஜெர்மன் ரகசியப் போலீஸ், அல்லது ஸஹாரா பாலைவனத்துக்கு மாதா மாதம், வாராவாரம், இரவும் பகலுமாய் வெர்னெட் கைதிகளை வெருட்டினர். எதிர்காலத்தைப் பற்றி அவர்களுக்கு நம்பிக்கையில்லை, வேட்டையாடப்பட்ட பழங்காலம் வெறும் கனவாகியது. எனினும் பன்னிருவருக்கே பைத்யம் பிடித்தது; பன்னிருவரே தற்கொலை செய்து கொண்டனர். மற்றவர்கள் தங்கள் தைர்யத்தை இழக்கவில்லை. ரத்தப் புரட்சியில்லாது சிறை அதிகாரிகளையும் எதிர்த்தனர்; இவ்வெதிர்ப்பில் ஒரு முறை வெற்றியும் கண்டனர்.

இந்தப் புரட்சியை நடத்தியவர்கள் கைதிகளின் முதுகந்தண்டு போன்ற 700 ஸர்வதேசியப் படையினர். அவர்கள் நான் விடுதலை பெற்ற பின் வேருெரு சிறையிலிருந்து வெர்னெட்டுக்கு வந்தவர்கள். ‘அவர்களில்லையேல் நாங்கள் யாவரும் இறந்திருப்போம்’ என்கிருர் செய்தியாளர்.

1940-இன் பனிக் காலத்தில் இப்புரட்சி துவங்கியது. அப்போது பட்டினி கிடக்கும் அளவுக்குச் சாலையில் உணவுப் பற்ருக் குறை ஏற்பட்டு விட்டது. ரொட்டி உணவு 9 அவுன்ஸாகக் குறைக்கப்பட்டது;மற்றப்படி காலையில் அரைப்‘பைன்ட்’ கருங்காப்பியும், நாளொன்றுக்கு ஒரு பைன்ட் ‘ஸூப்’ புமாகத் தீர்ந்தது. இவையும் இடையில் உக்ராண அதிகாரியால் திருடப்பட்டு ஒரு பகுதி கள்ள மார்க்கெட்டில் விற்கப்பெறும்; மற்ருெரு பகுதி சிறையின் சிற்றுண்டிச்சாலையில் அமித விலைக்குப் பணக்காரக் கைதிகளுக்கு விற்கப்படும். இந்தச் சிற்றுண்டிச்சாலையை நடத்தியவள் மிமி டிஜூன் என்பவள்; அவள் இரவில் சிறை அதிகாரி லெப்டினென்ட் கோம்புடன் படுத்துக்கொள்வாள், பகலில் அவனுடன் லாபத்தில் பங்கு கொள்வாள். திருடப்பட்ட உருளைக்கிழங்குகளுக்கும், கேரட்டுகளுக்கும் பதில் அசட்டு முள்ளங்கியை உபயோகித்தனர். 1940, டிஸம்பரில், ஒரு நாள் பனியால் விறைத்த முள்ளங்கிகளைச் சாக்கடையில் எறிந்து விட்டுக் கைதிகளெல்லாம் ஒருமுகமாக ‘நாங்கள் பட்டினி கிடக்கிருேம், எங்கள் உரிமைகளுக்கு

மரியாதை கொடுங்கள்' என்று கோஷமிட்டனர். அது பல மணி நேரம் ஒலித்தது. கடைசியில் முள் வேலிவட்டத்திற்குள் தம் காவலாளிகளுடன் சிறை அதிகாரி வந்தான். 'நான் மூன்று எண்ணுவதற்குள் நீங்கள் கலைந்து போகவேண்டும்'— என்றான். மூன்றும் எண்ணினான்; ஆனால் ஒருவரும் அசையவில்லை, சிறிது தயங்கினான். சுட உத்தரவிட்டால் தேவையான கைதிகளைக் கொன்றுவிடலாம்; ஆனால் அதற்குள் தன் காவலரிற் சிலரும் சாக நேரிடும்; அவ்வாறு நேர்ந்தால் அவன் வேலையே போய்விடும். 'ஏன் மறுபடியும் எண்ணுவது தானே?' என்றது ஒரு குரல். அவ்வளவே, அதிகாரியும், அவனது காவலர்களும் அங்கிருந்து பேசாமற் போய்விட்டனர்.

இவ்வாறு, முதல் வெற்றி கிடைத்தது. கைதிகளின் பிரதிநிதிகள் உக்ராணத்திலிருந்து தமக்குரிய உணவுப் பண்டங்களை சரியாய் எடைபோட்டு வாங்க அநுமதி தரப்பட்டது.

இரு மாதங்களுக்குப் பிறகு இரு சிறை முகாம் பிரதிநிதிகள் தங்கள் உணவுப் பங்கீட்டில் குறைகள் கண்டு ஏற்க மறுத்தனர். சிக்கலான நீண்டதொரு போராட்டம் துவங்கியது. முதல் இரு சிறைப் பாடியினர், பின்னர் அரைவாசிக் கைதிகள், பட்டினிப் போர் தொடுத்தனர். இப்போராட்டம் முழுமையிலும் கைதிகள் ஆச்சரியப்படும் வகையில் அஹிம்ஸையைச் சாதித்தனர்; எத்தகைய பலாத்காரத் தூண்டுதல்களுக்கும் இடங்கொடுக்கவில்லை; காவலர்கள் தாக்கிய போதும் வெறுமே கை கட்டிக்கொண்டு நின்றனர்; உணவை மட்டும் மறுத்து, ஓயாது மணிக்கணக்கில் 'நாங்கள் பசியாயிருக்கிறோம்', 'எங்கள் உரிமைகளுக்கு மரியாதை கொடுங்கள்' என்ற இரு கோஷங்களையே, காட்டு விலங்கோட்டும் டமாரம் போல் திரும்பத் திரும்பக் கூறிக் கூச்சலிட்டனர். இதன் முடிவு சிறை அதிகாரி அருகிலிருந்த நாட்டுப்புற ஊர்களிலிருந்து இரு போலீஸ்ப் படையினரைத் திரட்டிக் கைதிகளின்மேல் ஏவிவிட்டதே. எதிர்க்காத கைதிகளை அவர்கள் எச்சரிக்கையின்றி தங்கள் துப்பாக்கிக் கட்டைகளால் தாக்கினர்; 106-பேரை, அதிலும் இஷ்டமானபடி இஷ்டப்பட்டவரைப் போலீஸார் இழுத்துச் சென்றனர். அவர்களை அவ்வூர் ஜெயிலில் தள்ளி ஓரிரவு பூராவும் அடி அடி என்று அடித்து மறுநாள் வேறு சிறைக்கு அனுப்பினர். இவ்வகையில் தன் அந்தஸ்து காப்பாற்றப்பட்டதும் சிறை அதிகாரி கைதிகளின் பிரதிநிதிகளைக் கலந்து அவர்களது தேவைகள் யாவற்றையும் அநேகமாய்ப் பூர்த்தி செய்தார். மன உறுதியால் மட்டுமேயான இந்த மகத்தான வெற்றி ஆச்சரியப்படத்தக்கதே.

மூர்தாக் விடுதலையான பொழுது வெர்னுட் சிறையில் 2000 பேர்கள் இருந்தனர். சில பெல்ஜியர்கள், ஸ்விஸ் நாட்டினர், டச்சுக்காரர்கள் அவரவர்கள் நாட்டுக்குத் திருப்பி அனுப்பப்பட்டனர்; 1000 பேர்கள் டோட்ட் கமிஷன் கீழ் ஜெர்மனிக்கு அடிமைக் கூலிகளாய்ச் சென்றனர், 800 பேர் ஆப்பிரிக்காவுக்குப் போயினர். எனினும் அவ்வப்போது புதுப் புதுக் கைதிகள் வந்து கொண்டே இருந்தனர். புதிதாக வந்தவர்களில் பெரும் பான்மையோர் வெளிநாட்டிலிருந்து வந்து ஃபிரஞ்சுப் பாதுகாப்புக்காகப் போரிட்டவர்கள்; சிலர் போரில் காயம்பட்டவர்கள், சிலர் சாகஸ காரியங்களுக்காகப் பதக்கம் பெற்றவர்கள். இப்போது அவர்கள் களைப்புத்தரும் வெர்னுட்டின் கக்கூஸ் அரண்களில் தங்கள் போர்க்களக் கைவரிசையைக் காட்டினர்.

உண்மையான ஐந்தாம் படையினராய் மூன்று நான்கு பேர்களே சிறிது நாட்களுக்குத் தங்கி என் பழைய வெர்னுட் கொடுஞ்சிறைக் கூட்டுப்பண்ணையின் மகிமையைக் குலைத்தனர். பெல்ஜிய நாட்டு ரெக்ஸிஸ்ட் கட்சித் தலைவனை வியான் டெக்ரேல் ஸர்வ தேசியப் படையினருடன் 17-ஆம் நம்பர்ப் பகுதியில் சில நாள் அடைக்கப் பட்டிருந்தான்; செஞ்சட்டைக் காட்டுமிராண்டிகள் தன்னைக் கொன்று விடுவார்கள் என்று நினைத்தான்; அவர்கள் அவனைத் தொடக்கூட இல்லை; ஏதோ கண்ணுடியூடு பார்ப்பதுபோல் அவனூடு பார்த்தனர்; சமாதான உடன்படிக்கைக் கையெழுத்தாகு முன்பே அவன் விடுதலை செய்யப்பட்டான். அப்போது சிறை அதிகாரி அவனைப் பார்த்துப் பழைமையான இலக்கியப் பாணியில் கிண்டலாக 'மகாகனம் பொருந்திய டெக்ரேலே! உன் சொந்த மோட்டார் கீழ்த்திசையில் வெற்றியுடன் 'உனக்காகக் காத்திருக்கிறது' என்றுனும்.

என் பழைய நண்பர்களைக் கூட்டிச்செல்ல எந்தக்காரும் வரவில்லை; நோய்ப் படுக்கையில் அவர்கள் வெளித்தள்ளப்பட்டனர். மேரியோ மட்டுமே மொராக்கோவிற்குக் கடத்தப்பட்டு அநேகமாய் அதிசயமான வகையில் தப்பிப் பிழத்தவர்.

வெர்னுட்டைப் பற்றி எனக்குக் கிடைத்த கடைசிச் செய்தி ஸர்வதேசிய தயாளச் சங்கத்தினரால் வெளியிடப்பட்ட அந்தரங்க அறிக்கையே. அதில் :—

"லீ வெர்னுட்டில் ஒரு தொத்து நோய் பரவியது. 1941–செப்டெம்பர், அக்டோபரில், குறைந்தபட்ச சுகாதாரக் கண்காணிப்புக்கூட இல்லாமையால், நாளொன்றுக்கு இரண்டு மூன்று விழுக்காடு சாவு விழுந்தது. பட்டினிச் சாவு என்பது அசல் அப்பட்டமான உண்மை. இனி இறந்து விடுவார்

என்ற நிலையிலேயே அவர்கள் சிறை ஆஸ்பத்திரியில் அநும திக்கப்பட்டனர். அங்கே பெருவாரியாக மடிந்தனர்."

பின்னர்க் குடியாட்சியின் வெற்றி. இன்று 1942, ஜூன் மாதம். இன்னும் அவர்களுள் எத்துணை பேர் உயிரோடிருக் கிறார்களோ? சி பகுதியின் இரும்புவலைக் கிராதியூடு அடுத் துள்ள இடுகாட்டில் நாளுக்கு நாள், வரிசைக்கு வரிசை சமாதிச் சிலுவைகள் அதிகமாயின. புனிதச் சிலுவைப் போருக் கப்பால் பலதரப்பட்டவரின் மண்டை ஓடுகள் புதைந்தது இப்போதுதான் எனலாம். இவர்களும் புனிதப்போர் வீரர் களே; மயங்கி மாயும் ஐரோப்பா கண்டத்தில் மனிதகுல மதிப்பைக் காக்கப் போரிட்டு மடிந்தனர். பின்வரும் வரலாற் றாசிரியர்கள் புதையுண்ட இவர்கள் கதையை ஸர்வதேசப்படை யினர் வீரத்தை, என் கொடுஞ்சிறைப் பண்ணையான வெர்னுட் டின் வியப்பை அறிந்து காசினிக் கயவர் என்னும் தலைப்பை மாற்றி 'காசினி உரத்தர்' என மேன்மைப்படுத்தக்கூடும்.

---

* 1942, ஜூன், லண்டன் ஈவினிங் ஸ்டாண்டர்டு பத்திரிகையில் வெளி யானது.

# அட்டூழியங்களில் அவநம்பகம்*

அடிக்கடி, தவருமல் எனக்கு ஒரு கனவு தோன்றுகிறது;-

இருட்டு; இருட்டில் ஒரு புதர் முழைவில் நான் கொல்லப்படுகிறேன்; பத்து கஜங்களுக்கப்பால் நடமாட்டம் மிகுந்த ஒரு பாதை; நான் உதவி வேண்டிக் கூச்சலிடுகிறேன்; என் கூச்சல் எவர் காதிலும் விழவில்லை; பாதையிற் போவோர் சிரித்துக்கொண்டும், பேசிக்கொண்டும் தங்கள் பாட்டிற் போயினர்.

இதே மாதிரிக் கனவு, சிற்சில மாறுதல்களுடன், எல்லோருக்கும் ஏற்படுவது எனக்குத் தெரியும். உள நூல் பண்டிதர்களிடம் நான் இதைப்பற்றிச் சண்டை பிடித்துள்ளேன், ஜங் வியதியின்படி இது உள்ளத்தின் ஒரு உருவகம் என்பதை நான் நம்புகிறேன்; மரணத்தின் எதிரிலோ, அகில அட்டூழியத்தின் முன்போ ஏற்படும் தனிமைப்பாட்டின் உச்சம்; இதைப் பிறருக்கு உணர்த்த முடியாது; இதுவே அட்டூழியங்களைப் பற்றிய பிரசாரம் அவலமாவதற்கு மூலகாரணம்.

பார்க்கப்போனல் சிரித்துக் கொண்டு தெருவில் போவோர் நீங்களே; எங்களைப் போன்ற சிலர் கொலையுண்ணுமல் தப்பி வந்தவர்கள், அல்லது புதர் முழைவில் நடந்ததைக் கண்ணுல் கண்டவர்கள். எங்கள் நினைவால் பேய் வெறி கொண்டு ரேடியோ மூலம் கதறுகிருேம், பத்திரிகைகள் மூலம் கத்துகிருேம், பொதுக் கூட்டங்களில், தியேட்டர்களில், சினிமாவிலெல்லாம் பிரசாரம் செய்கிருேம், சிற்சில சமயங்கள் ஒரு நிமிடம் உங்கள் காதுகளிலும் எங்கள் பேச்சு ஏறி விடுகிறது. இந்தச் சமயங்களை நான் நன்ருய் உணர்கிறேன். பேச்சற்ற ஒரு வியப்பு உங்கள் முகங்களில் பரவுகிறது; உங்கள் கண்களில் கண்ணுடி போன்ற ஒரு வெறுமைப் பார்வை புகுந்துகொள்ளுகிறது. எனக்கு நானே சொல்லிக்கொள்ளுகிறேன்; உண்மை உங்களுக்குத் தெரிந்து விட்டது: அதைப் பிடித்துக்கொள்ளுங்கள், விட்டு விடவேண்டாம்; என்றும் உம்முள் அது விழிப்பாயிருக்கட்டும் என்று. ஆனுல், ஒரு நிமிடத்தில (கணத்தில்) அது மறைந்து விடுகிறது. தன் கம்பளி உடலிற் பட்ட தண்ணீரை நாய்க்குட்டி உதறி விலக்குவது போல் நீங்களும் இவ்வுணர்ச்சியை உதறி விடுகிறீர்கள்: கண்ணுடித் திரை விழுகிறது, நீங்கள் உங்கள் பாட்டுக்குச் செல்லுகிறீர்கள்; கனவின் படல், ஒலிகளை அமுக்கி விடுகிறது.

நாங்கள் சென்ற 10 வருஷங்களாகக் கத்துகிருேம். வலிப்பு மிக்க டெர் லப்பே வண்டி ஜெர்மன் பாராளுமன்றத்திற்குத்

தீ வைத்த அந்த இரவுதான் எங்கள் கூச்சலை ஆரம்பித்தோம். இப்போதே இத்தீயை அணைக்காவிட்டால் உலகம் முழுவதும் இது பரவி அழிக்கும் என்று சொன்னோம்; எங்களைப் பைத்யம் என்றனர். இப்போது வெப்ப நீராவியாலும், மின்சாரத்தாலும், உயிரோடு புதைப்பதாலும் ஐரோப்பாவின் யூதர்கள் யாவரும் கொல்லப்படுவதைப்பற்றிக் கூற முயல்கிறோம். இதுவரையில் 30 லக்ஷம் பேர் இறந்துள்ளனர். உலக வரலாற்றில் இவ்வளவு பெரிய பொதுஜனக் கொலை ஏற்பட்டதில்லை. இக்கொலை ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு மணியும், கடிகாரத்தின் துடிப்பைப்போல் ஒழுங்கு தவறாது நடக்கிறது. இதை எழுதும் போது, என் முன், என் மேஜையின் மேல், இதைப் பற்றிய பல போட்டோப் படங்கள் உள்ளன; இவற்றாலேயே இவ்வளவு ஆவேசமும், வெறுப்பும். போலந்திலிருந்து அவைகளை ரகசியமாய் வெளிப்படுத்த முயன்ற எத்தனையோ பேர் இறந்துள்ளனர்; அவ்வாறு இறப்பதை அவர்கள் பெருமையாகக் கருதினர். இந்த உண்மைகளெல்லாம் கைப் புத்தகங்கள், வெண் புத்தகங்கள், பத்திரிகைகள், மாசிகைகள் யாவற்றிலும் பிரசுரமாயுள்ளன. அன்றொரு நாள் பேர்போன ஒரு அமெரிக்கப் பத்திரிகையாளரை நான் கண்டேன். அவர் சொன்னார்: சமீபத்தில் நடந்த பொதுஜன அபிப்பிராயக் கணிப்பில் பத்துக்கொன்பது அமெரிக்கர்கள் நாஜிகளின் இந்த அட்டூழியங்களை நம்ப மறுத்தார்களாம். இவை யாவும் பிரசாரப் புளுகு என்று கூறினராம். இந்த தேசத்தில் (இங்கிலாந்தில்) சென்ற 3 வருஷங்களாகப் படையினருக்கு இவற்றைப் பற்றிப் பிரசங்கம் செய்கிறேன்; அவர்களும் நம்பத் தயாராயில்லை. கட்டாயக் கடுஞ்சிறைகள், பட்டினியால் மடிந்த க்ரேக்கக் குழந்தைகள், ஃபிரான்ஸில் சுட்டு வீழ்த்தப்பட்ட அகதிகள், போலந்தில் சகட்டுக் கடுக்கிய சவக்குழிகள்-இவை ஒன்றிலும் அவர்களுக்கு நம்பிக்கையில்லை. ஒரு மணி நேரம் அவர்களை நம் பால் ஈர்த்து நம்ப வைக்கலாம்; உடனே அவர்கள் நம்பிக்கையை உதறுகிறார்கள்; மனத்தின் தற்காப்பு தன் வேலையைத் துவங்குகிறது. மின்சார வைத்யத்தில் அதிர்ச்சி தீர்ந்ததும் பழைய நிலை ஏற்படுவது போல் ஒரு வாரத்துக்குள் அவநம்பகம் மறுபடியும் குடி கொள்ளுகிறது.

எனக்கும், என்னைப் போன்றோருக்கும் இது ஒரு பைத்யமாகி விட்டது. மற்றவர்கள் சுகமே, இயல்பாய் உள்ளனர்; எங்களுக்கு மட்டும் ஏதோ வெறி பிடித்திருக்கிறது. பைத்யக்காரர்களுக்கு உலகத்தோடு சம்பந்தமில்லை; அவர்கள் வேறுபட்ட மனோ உலகில் வசிக்கின்றனர். ஆனால் இந்த விஷயத்தில் உண்மை நேர்மாறானது போலும்; எங்களைச் சுற்றியுள்ள உண்

மையை ஆரோக்யத்தோடு கத்தும் நாங்களே இயல்பாக அறிந்து கொள்ளுகிறோம்; உண்மையைக் காணச் சக்தி அற்றவர்களாய், நரம்பு நோயுற்று, நீங்கள்தான் திரைக்குப் பின்னுள்ள கனவுலகத்தில் தள்ளாடுகிறீர்களோ என்னமோ? அப்படி இல்லாமலிருந்தால், இந்தப் போரைத் தடுத்திருக்கலாம்; உங்கள் பகற் கனவு காணும் கண்களுக்குமுன் கொலை செய்யப்பட்டவர்கள் இன்றும் உயிரோடிருப்பர்.

அப்படி இருக்கலாம் என நான் கூறினேன்; ஏனெனில் மேற்சொன்னவை அரை உண்மையே. கத்துபவர்கள் எக்காலத்திலும் உண்டு; தீர்க்கதரிசிகள், குருமார்கள், உபாத்தியாயர்கள், பித்துக்குளிகள் இவர்கள் யாவரும் தங்கள் காலத்துத் தடித்தன்மையைச் சபித்துள்ளனர்; இன்றும் அன்றும் முறை ஒன்றேதான், என்றும் புதர் முழைவிலிருந்து கத்துபவர்களும் உண்டு; அதைக் கேளாமல் பாதை வழியே போவோர்களும் உண்டு. காதிருந்தும் அவர்கள் கேட்பதில்லை, கண்ணிருந்தும் பார்ப்பதில்லை; எனவே, இது வெறும் தடித்தன்மை மட்டுமல்ல.

ஒரு வேளை இது கத்துபவர்களின் குறையாயிருயிக்கலாம்; சில சமயங்களில்—'எனினும், இதுவே எப்போதும்' என்று நான் நம்பவில்லை. ஆமஸ், ஹோஸி, ஜெர்மியா முதலியோர் மிகச் சிறந்த பிரசாரகர்கள்; எனினும் அவர்களால் மக்களை அசைத்து எச்சரிக்க முடியவில்லை, கேஸன்ட்ராவின் குரல் சுவர்களைத் துளைத்துக்கொண்டு சென்றதாம்; எனினும் ட்ரோஜன் யுத்தம் நிற்கவில்லை. நம் காலத்தில் எம். ஓ. ஐ.யும், பி. பி. சி.யும் பிரசார வேலையைத் தக்கபடியே செய்கின்றன. அநேகமாய் மூன்று ஆண்டுகளுக்கு தங்கள் தோல்வியின் மேல் தோல்விச் செய்திகளைக் கொண்டே எப்படியோ நாட்டில் சகஜநிலை நிறுத்துவதில் வெற்றியும் பெற்றனர். அதே சமயத்தில், தங்களைச் சுற்றி என்ன நடக்கிறது, எத்துணைப் பெருமிதமான, பயங்கரமான காலத்தில் அவர்கள் பிறந்துள்ளனர் என்பதை மக்களுக்கு உணர்த்துவதில் வருந்தத்தக்க முறையில் அவைகள் தவறிவிட்டன. வழக்கமானபடி அவை தம் கடமையைச் செய்தன; அக்கடமை கொல்லுவதும், கொல்லப்படுவதும் நிறைந்தது என்பதை மறந்துவிட்டன. கற்பனை யற்ற காரியத்தேட்டம் ஆங்கிலோ-ஸாக்ஸன் இனத்தின் மாயப்பண்புகளில் ஒன்று; இது லத்தீனியர் வெறிகளுக்கு நேர்மாறானது; நெருக்கடியான சந்தர்ப்பங்களில் இச்சமனத்தன்மை உயர்வாகக் கருதப்படுகிறது. ஆனால் இம்மாயப் பண்பு நெருக்கடிகளினிடையே என்ன நேருகிறதென்று சொல்லுவதில்லை.

இந்தப் பண்பு ஆங்கிலோ ஸாக்ஸன்களுக்கு மட்டும் தனி உரிமையானதல்ல; ஆனால், அவர்களைப் போல் வேறு எவரும் இதையே குணமாகக் கொள்ளுவதில்லை, குற்றமாய்க் கருதுகின்றனர். இது வெறும் மனோ பாவனையுமல்ல; பிடிவாதக்காரர்களைக் காட்டிலும் கலங்காதவர்களின் காட்சி அகன்றது. இது நம் மனோ தர்மத்தில் இயற்கையாயுள்ள ஒரு குறை, நம் உளநூல் ஆராய்ச்சியிலும், அரசியல் நெறிகளிலும் இக்குறையை நாம் போதியபடி கவனிக்கவில்லை.

'நான் இதை நம்புகிறேன்', 'நான் இதை நம்பவில்லை'; 'இது தெரியும்,' 'இது தெரியாது' என்றெல்லாம் இரண்டும் ஏதோ வெளுப்பும் கறுப்பும் போல வேறுபாடுகளென்றெண்ணி சகஜமாகக் கூறுகிறோம். உண்மையில் தெரிவதும், நம்புவதும் எத்தனையோ மாறுபாடான இடைச்சாயைகளால் இழைந்தவை. ஸ்பார்டேகஸ் என்று ஒருவர் இருந்தார்; அவர் ரோமாபுரி அடிமைகளின் புரட்சியை நடத்தினர் என்று எனக்குத் தெரியும்; ஆனால் ஏதோ ஒரு காலத்தில் வாழ்ந்த அவரது நினைவைக் காட்டிலும் லெனினைப் பற்றிய நினைவும், நம்பகமும் எனக்கு அதிகம். சுரிகுழல் நீகாரிகைகளை நான் நம்புகிறேன்; ஒரு தொலைநோக்காடி மூலம் அவற்றைக் காண்கிறேன். அவற்றின் தூரங்களைக் கணக்கிடுகிறேன்; எனினும் எனக்கு என் எதிரிலுள்ள இங்கிப் பெட்டி அவற்றைக் காட்டிலும் உண்மையானது. காலதேசத் தொலைவு நம் காட்சியின் கூர்மையை, அறிவின் ஆழத்தைக் குறைக்கிறது. 17-ஆவது எண், நண்பனைப்போல் எனக்கு மிகவும் சமீபத்திலுள்ளது; 5 லட்சம் கோடி ஒரு வெறுஞ் சொல்லே. காரடியில் சிக்கி மாண்ட நாய் நம்மைக் கலக்குகிறது; போலந்தில் 30 லட்சம் யூதர்கள் கொல்லப்பட்டது அவ்வளவாகப் பாதிப்பதில்லை. ஜனமானக் கணிதங்களில் ரத்தம் குமுறுவதில்லை; செயல் நுணுக்கங்களே முக்கியமானவை. பூரண நடைமுறையையும் நாம் உணர்வதில்லை, சிறு சிறு உண்மைத் துணுக்குகளிலேயே நாம் கவனம் செலுத்துகிறோம்.

இதுவரையில் கூறியவை அறிவிலும், நம்பிக்கையிலுமுள்ள அளவுகளைப் பற்றியது; இணையும் இழைகளையும், சாயைகளையும் பற்றியது. ஆனால் நாம் காலதேச வரன் முறைகளைக் கடந்து நித்யம் அகண்டம் என்ற மகா உண்மையின் முன் நிற்கப் போகும்போது கால தேச வரம்புகள் கழிந்து விடுகின்றன; தெரிவது, நம்புவது என்பதெல்லாம் வெறும் வாய் வார்த்தைகளாகின்றன. உதாரணமாக மரணம் என்பது மகா உண்மைகளில் ஒன்று; அதிலுள்ள நம் நம்பிக்கையோ வெறும் வார்த்தை அளவிலேயே. மனிதரது சராசரி வயது, ஜன

கணிதப்படி, 65 என்பது எனக்குத் தெரியும். எனவே, இன்னும் 27 வருஷங்கள் நான் வாழ்வேன் என்று எதிர்பார்க்கலாம். ஆனால், 1970, நவம்பர் 30-இல் நான் இறந்து விடுவேன் என்று நிச்சயமாய்த் தெரிந்தால், இந்த அறிவே எனக்கு விஷமாய் விடும்; நாள்தோறும் நாள்தோறும் திரும்பத் திரும்ப நான் நாட்களையும், மணிகளையும் எண்ணுவேன்; கழியும் ஒவ்வொரு கணத்திற்காகவும் கவலைப்படுவேன். இதுவே என் நரம்புகளைக் குலைக்கும் வியாதியாய் விடும். இதற்குச் சராசரி வயதுக்கும் மேலான ஆயுளுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை; மரணத் தேதி முன்குறித்ததைவிடப் பத்து வருஷம் தள்ளி வந்தாலும் இதே கதைதான்.

எனவே, நாம் பிளவுண்ட இருவகையான அறிவியல்களுடு வாழ்கிறோம். சாவியல், சிற்றியல் என்று அநுபவ அறிவு இருவகையில் இயங்குகிறது. இவைகளிடையே மந்திர மொழிக்கும் பாமரமொழிக்குமுள்ள அத்துணை வித்யாசமுண்டு.

இந்த உணர்வுக் குறைபாடுகள் பிரசார மூலம் அறிவூட்டலையும் பாதிக்கின்றன. ஜனங்கள் ஸினிமாப் பார்க்கிறார்கள், அங்கு நாஜிகளின் சித்திர வதைகளையும், கூட்டங்களைச் சுட்டு வீழ்த்துவதையும், சகதிக்குழியின் சதித்திட்டங்களையும், தன்னலத் தியாகங்களையும் பற்றிய படங்களைப் பார்க்கின்றனர்; விம்முகின்றனர், விதிர் விதிர்க்கின்றனர்; சிலர் அழுதே விடுகின்றனர். எனினும், தங்கள் அன்றாட வாழ்க்கையோடு அவற்றை இணைத்துப் பார்ப்பதில்லை. அது கற்பனை, அது கலை, மேம்பட்ட விஷயம், சமயபாஷை; உண்மைக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. நாம் ஜெக்கில் அண்டு ஹைட் மாற்று ஜீவ்ய அமைப்பான ஒரு சமூகத்தில் வாழ்கிறோம்.

எக்காலத்திலும் இது இதே அளவில் இருந்ததில்லை. எதெனிலும், பழைய மறுமலர்ச்சியின்போதும் ரஷ்யப் புரட்சியின் ஆரம்ப காலத்திலும் சமூகத்தின் சில அடுக்குகள் உயர்வான மனக் கூட்டுறவோடு விளங்கின; கண்ணைத் துடைத்துத் தூக்கத்தை விலக்கியவர்களாய் மக்கள் விழிப்போடு வந்தனர்; அவர்களது அகண்டக் காட்சி அதிகரித்தது, தங்கள் காலத்தோடும், உலகத்தோடும் அவர்களுக்குள்ள தொடர்பு அகன்றது, அர்த்தமிக்க முழுமையானது; சாவியலும் சிற்றியலும் ஒரு மையத்தில் தழைந்து தழுவின.

இதைப் போன்றே தேய்வுண்டு சிதறிய காலங்களும் உண்டு. ஆனால், இன்று போல் என்றும் இருந்ததில்லை. ரோமாபுரி, பைஸேண்டியம் இவைகளது மகத்தான வீழ்ச்சியின் போதும் இவ்வளவு வெளிப்படையாக, பொதுமக்களின் பெருநோயாக, இப்பிளவுபட்ட சிந்தனை இருக்கவில்லை; மனித

உள்ளம் இத்துணைத்தூரம் மதோன்மத்தத்தின் உச்சத்தை எட்டவில்லே. பரஸ்பரப் போக்கு வரவுச் சாதனங்கள் அதி கரிக்க அதிகரிக்க உலகை உள்ளதை உள்ளபடி தெளியும் உணர்ச் சியும் குறைந்து கொண்டே போகிறது, இன்று உலகம் முழு வதும் நாம் காணத் திறந்திருக்கிறது. எனினும், நாம் சிறைப் பட்ட கைதிகளைப் போல், நமக்கு நாமே இயற்றிய சிறு கூண்டு களில் உலாவுகிறோம். கடிகாரம் காலத்தை அளந்துகொண்டே போகிறது. கத்துபவர்கள், வாய்வலிக்கும் வரை கத்துவ தைத் தவிர வேறென்ன செய்ய முடியும்.

வாரம் ஒன்றுக்குப் பத்து பிரசங்கங்கள் செய்பவர் ஒருவரை எனக்குத் தெரியும். அவர் லண்டனில் ஒரு பிரபல பிரசுரகர்த்தா. ஒவ்வொரு கூட்டத்திற்கு முன்பும், ஒரு அறையில் தம்மைப் பூட்டிக் கொண்டு இருபது நிமிடங்கள் போலந்தில் கொலே யுண்ட ஒருவராகத் தம்மைக் கற்பனையில் காண்பார். சாவு ரெயிலில் க்ளோரைட் (Chloride) புகையால் மூச்சுத்திணறி மடி பவரைச் சிந்திப்பார்; மற்றொருமுறை குறிதவறிச் சிதறும் பீர ங்கி வெடிபட்டு தங்களுக்காகத் தாங்களே தோண்டிய சவக் குழியில் இறப்பவரைப் பாவனை செய்வார். அப்புறம் மேடை ஏறிப்பேசுவார். இவ்வண்ணம் ஒரு வருடம் கடந்தது. பின் நரம்புடைந்து மடிந்தார். மக்கள் இவர் வசப்பட்டனர், இது மிக நல்ல காரியமே. மைல்கணக்கில் தொலேவாக இருந்த இரு துருவங்களை அங்குல அளவேனும் சமீபத்தில் கொண்டு வந்தார்.

இவர் உதாரணத்தை நாமும் பின்பற்ற வேண்டு மென்று நான் கருதுகிறேன். நாளொன்றுக்கு இரண்டே நிமிடங்கள், காலேப் பத்திரிகைகளைப் படித்துவிட்டுக் கண்ணை மூடிக் கொண்டு இவ்வண்ணம் தியானம் செய்வது யோகமுறையில் ஆச னங்கள் போடுவதையும், ப்ராணுயாமம் செய்வதையும்விட முக் கியமானது. கோயிலுக்குப் போவதற்குப் பதில் இத்தகைய த்யானத்தில் ஈடுபடலாம். பாதையில் செல்வோரும், புதரில் மடிவோரும் கனவுப் படல்களால் மறை பட்டிருக்கும் வரை நம் நாகரிகம் வெறும் மாயையே.

---

* 1944, ஜனவரி, நியூயார்க் டைம்ஸில் முதன் முதலாக வெளியானது.

# துருவேறிய கவச வீரர்

"என்னுடைய சொந்த அநுபவத்திலிருந்த ஜனநாயக முறைக்காகக் கடைசிவரைப் போரிட மக்களுக்கு நம்பகம் அளிப்பது" யாது என்பதைப் பற்றி இப்பத்திரிகையின் ஆசிரியர் ஒரு கட்டுரை வேண்டுகிறார். இக்கேள்வியின் அமைப்பிலேயே எதிர்மறையாக அதன் விடை ஓர் அளவு பதுங்கி இருக்கிறது. படாஜோஸ் முதலாகப் போர் முனையிலும், ஆஸ்பத்திரிகளிலும், சிறைகளிலும், கூட்டு கொடுஞ்சிறைப் பண்ணைகளிலும் இறப்பவர்கள், இறக்கச் செல்பவர்கள் பலரை நான் பார்த்திருக்கிறேன். அவர்கள் ஏதோ அருவமான குடியாட்சி முறையிடமுள்ள ஆசையால் உயிர்விட வில்லை. குளறுபடியான அரசியல் கொள்கைகள் ஒரு புறமிருக்க இப்போது இந்த யுத்தத்தில் ஈடுபட்டு இருப்போரில் எத்துணை பேருக்கு பிரிட்டிஷ் தொழிற் சங்கத்துக்கும் ஜெர்மன் தொழிலாள முன்னணிக்கு முள்ள வேறுபாடுகள் தெரியும்.

இந்த யுத்தத்தின் இதிஹாசம் போன்ற ஒரு மகிமையைப் பார்ப்போம். இதுவரையில் எவருமே கேட்டிராத சின்னஞ்சிறிய கிரேக்கப்படை பென்னம் பெரிய முஸோலினியின் வெறிப் படையை வென்றது ஆச்சரியகரமான செய்தியே. இத்தனைக்கும் தத்துவஞானி ப்ளாட்டோ எழுதிய ரிப்பப்ளிக் (மக்களாட்சி) என்ற உயரிய நூலுக்குக் கூட தடைபோட்ட முட்டாள்தனமான காலஞ்சென்ற மெட்டாக்ஸஸ்ஸின் ஃபாஸிஸ சர்வாதிகாரத்தின் கீழ் அவர்கள் போரிட்டனர். இன்னும் சமீபகாலத்து அதிசயமான ஸ்டாலின்கிராட் பாதுகாப்பை எடுத்துக்கொள்ளுவோம். அதில் போரிட்ட ஆண்களையும் பெண்களையும் பணிவோடும், நன்றியோடும் பாராட்டுகிறோம். அவர்களிடமிருந்து நம்மைப் பிரிக்க முயல்வோர் ஹிட்லர் வேலையைச் செய்கின்றனர். ஆனால், அமெரிக்காவின் வழி குடியாட்சி வழி தான் என பசப்புவோர் ஒன்று அதிமேதாவிகள், இல்லையேல் அதிமுட்டாள்கள்.

## 2

உள்ளவற்றைக் குலைப்பதில் உண்டாகும் அற்ப குதூகலத்திற்காக நான் இவைகளைக் கூறவில்லை. ஆரம்பத்திலிருந்ததைக் காட்டிலும் இந்த யுத்தம் மிக மிகச் சிக்கல்கள் நிறைந்ததாய் விட்டது.

விளம்பரச் சுவரொட்டிகளில் காணும் வீரர்களை விட்டு விட்டு போரில் ஈடுபட்டுள்ள உண்மை மக்களின் மேல் நாம்

கவனம் செலுத்தவேண்டும் என்பதையே நான் குறிப்பிடு கிறேன். உண்மை மக்களைப்பற்றிப் பேசும்போது அவர்களை இரு பிரிவாகப் பிரிக்கலாம். ஒன்று நாஜிகளின் ஃபாஸிஸ முறை களை நேரிலேயே அநுபவித்தவர்கள்; மற்ெருன்று அவ்வாருன அநுபவம் இல்லாதவர்கள்.

முதல் பிரிவினர், அதாவது தாங்கள் எதற்காகப் போரிடு கிறோம் என்பதை அறிந்த ஐரோப்பிய மக்கள்; புண்ணுற்றோன் அவற்றின் வலிகளை உணர்வது போல் தங்கள் துயரங்களை உணர்ந்தனர். ஆனால் இத்துயரங்களுக்கு மாற்று என்ன வென்று அவர்களுக்குத் தெரியுமா? நோய் உணர்ச்சி டாக்டரின் மருத்துவ மதியை நமக்குக் கொடுக்குமா? இருட்டுக் கண்டமான ஐரோப்பாவிலிருந்து தப்பி வந்தவர்களுடன் பேசப் பேசச் சந்தேகம் தான் அதிகரிக்கிறது.

ஜெக்கோஸ்லோவாகியர்கள், போலந்தர்கள், ஃபிரெஞ்சுக் காரர்கள், பெல்ஜியர்கள், டச்சுக்காரர்கள் முதலியோருக்கு இந்த யுத்தம் வெறுமே உயிர் வாழ்வதற்காகச் செய்யும் யுத்தம் என்பது நன்கு தெரியும். அவர்களுக்கு அருவமான ஃபாஸிஸத் திடம் வெறுப்பில்லை. தங்கள் வீடுகளையும் நண்பர்களையும் கொன்ற கண்கூடான ஜெர்மானியன் மேல் தான் வெறுப்பு. குடியாட்சி என்னும் அருவத்திற்காக அவர்கள் போரிடவில்லை. உருவான தங்கள் தேசிய விடுதலைக்காகவே போரிடுகின்றனர். ஐரோப்பிய தேசிய ஐக்கியத்தைப் பற்றிப் பேசினால் அவர்கள் நம்மை அலட்சியம் செய்வர். தவருன முறையில் ஹிட்லர் ஐரோப்பிய ஐக்கியத்தை ஸ்தாபிக்க முயன்றார். அதனால் தனித் தனியான தனிப்பட்ட தேசிய உணர்ச்சிகள் தலையெடுக்கலாயின. ஐரோப்பாவின் வளர்ச்சி இன்னும் 50 வருடங்களுக்காவது தள்ளிப்போடப் பட்டுவிட்டது. நீ விரும்பினாலும் விரும்பா விட்டாலும் தியாகியான ஐரோப்பாவின் கனவு மகத்தான மற்ெருரு வார்சேல்ஸ் (Versailles) உடன்படிக்கையே. தற்கால ஸ்லோகம் தனித்தனி தேசிய அதிகாரமே.

இரண்டாவது பிரிவினர், ஃபாஸிஸத்தைப் பற்றிச் சொந்த அநுபவ மில்லாதவர்கள், ஆங்கிலோ-ஸாக்ஸன் நாடுகளின் பொது மக்கள்—அவர்களுக்கு குடியாட்சி என்பது அர்த்தமற்ற சொல். தாங்கள் மூச்சுவிடும் காற்றைப்போல் அவர்கள் அநுபவிக்கும் உரிமைகளும் அவர்களுக்கு சர்வ சகஜமாகத்தான் உள்ளது.

யோசித்துப் பார்த்தால் இதுவே மிதவாத ஸகாப்தத்தின் சிறப்பான உச்சம் என்பது தெரியவரும். ஒரு கனவானின் சரியானபடி தைக்கப்பட்ட சட்டையை எப்படி எவரும் தனி யான வகையில் நோக்குவதில்லையோ அதே போல நெறியான முறையில் நடைபெறும் குடியாட்சித் தத்துவங்களையும் மக்கள்

கவனிப்பதில்லே. பிரிட்டிஷ் பாமர மக்களுக்கு கெஸ்டாபோ சர்வாதிகாரமும் கூட்டுக் கொடுஞ்சிறைப் பண்ணைகளும் லாச் நெஸ் (Loch ness) ஏரியின் பூதத்தைப் போன்ற அளவிற்குத்தான் உண்மையானது. ஆரோக்கியமான கற்பனைக் குறைவை எதிர்த்துச் செய்யப்படும் அட்டூழிய பிரசாரங்கள் யாவும் பயனற்றவை. நான் இவ்வண்ணம் முயன்று பார்த்துள்ளேன். படை வீரர்களிடம் கூட்டு கொடுஞ் சிறைகளேப்பற்றி எத்தனேயோ முறை பிரசங்கம் செய்துள்ளேன். நான் பேசும்பொழுது அவர்கள் என்னே நம்பினர். என் பேச்சு முடிந்ததும் நேற்றைய பயங்கரக் கனவை இன்று மறப்பதுபோல் என் பேச்சை மறந்து விட்டனர்.

## 3

இதுவரையில் அரசியல் சம்பந்தப்படாத பொதுஜனங்களேப் பற்றி நான் கூறினேன். ஒற்றுமைப்பட்ட சகோதரத்துவ மிக்க ஸோஷலிஸ சமுதாயத்தை ஐரோப்பாவில் நிறுவுவதைப் பற்றி கனவு கண்டு அக்கனவை நினேவாக்க உழைத்த எங்கள் கதி என்ன. இன்று நாங்கள் முட்டாள்களேப் போல் கருதப்படுகிருேம் என்பதை ஒப்புக்கொண்டாக வேண்டும். என் மட்டில் என்னுடையவும், என் நண்பர்களுடையவுமான அழுகைகளும் முணுமுணுப்புகளும் போதும் போதுமென்ருகி விட்டது. இதற்குப் பதில் நம்முன் உண்மைகளே உள்ளபடி கணித்து அதில் நமது ஸ்தானத்தைச் சரியாகத் தெரிந்துகொள்ளுவோம்.

மகத்தான சர்வ தேசிய இயக்கங்கள் தோல்வியடைந்தன. இரண்டாவது அகிலம் 1914-ஆம் ஆண்டின் யுத்தத்தைத் தடுக்க முடியாமல் தோல்வியுற்றது. 1933-இல் ஹிட்லர் பதவிக்கு வந்ததைத் தடுக்க முடியாமல் மூன்ருவது அகிலம் தோல்வியுற்றது, இதுவே ரஷ்யாவின் வெளிநாட்டுக் கொள்கையின் பதிப்பாக விளங்கியது. எனவே நாஜிகளின் ஆபத்தை எதிர்க்கத் தோன்றிய பழமை விரும்பிகள், முன்னேற்றச் சக்திகளின் தற்காப்புக் கூட்டு முதலிலிருந்தே பழமை விரும்பித் தலேவர்களின் தலேமையின் கீழ் வேலே செய்தது. புனித யுத்த உத்வேகிகளல்ல. விரோதியைத் திருப்திபடுத்திச் சண்டையைத் தவிர்க்க விரும்பியவர்களே இந்த யுத்தத்திற்கு நம்மைத் தூண்டி விட்டவர்கள். ஏனெனில் எத்துணே ஆயிரம் மடங்கு சரியான கொள்கைகளே உடையவர்களாயினும் புனிதப் போர்த் தவிப்பினர் லட்சியத்திற்காக போரிடுவோர் பலமுறை தோல்வியுற்றதால் மக்களின் நம்பிக்கையை இழந்து விட்டனர். விரோதியை திருப்திப்படுத்தும் கொள்கையினரோ எத்துணே தவறுகள் செய்து இருந்தாலும் மக்களின் மதிப்பை இழக்கவில்லே.

காரணம் பெரும்பான்மை மக்களின் மந்த சுபாவம் அவர்களுக்கு சாதகமாக விளங்கியதே.

இக்காரணங்களால் இந்த யுத்தம் ஆரம்ப முதற்கொண்டே திட்டப்படி மட்டுமின்றி கொள்கைப்படியும் தற்காப்பு முறையிலேயே நடந்தது. பெருகிவரும் புது உலகத்துப் புது நெறிகளுக்கு விரோதமாக 19-ஆம் நூற்றாண்டு மதிப்பீடுகளைக் காப்பாற்றவே நாம் அன்றும் போரிட்டோம், இன்றும் போரிடுகிறோம். சமீப காலத்தில் நேச நாட்டினர் படை தற்காப்பு முறையிலிருந்து தாக்குதல் முறைக்கு தாவிய பொழுதும் அதன் நோக்கம் தற்காப்பும் பழமை நாட்டமுமே. அமெரிக்கத் தேர்தல், டார்லனின் வெறிக் கூத்துகள். துக்ககரமான கிரிப்ஸின் பின்வாங்கல் முதலியவைகள் யாவும் தராசு முனை பழங் கட்டுப்பாட்டுப் பின்னேற்றப் பக்கம் சாய்கிறது என்பதைத் தெளிவாகக் காட்டுகின்றன. வெற்றியைச் சமீபிக்கச் சமீபிக்க இப்போக்கும் அதிகரிக்கிறது. மக்களும் இதைப்பற்றிக் கவலைப்படவில்லை. கிரிப்ஸ் பின்வாங்கலைவிட எட்டாவது படையின் முன்னேற்றத்திலேயே அவர்கள் அக்கறை காட்டினர்.

எனவே எதிர்பாராத அதிசயம் நிகழ்ந்தாலன்றி வரப்போகும் வெற்றி பழங்கட்டுப்பாடுகளின் வெற்றியே யாகும்; அதனால் பழங் கட்டுப்பாடுகளுக்கு நிம்மதி ஏற்படும். ஐரோப்பாவின் சிக்கலான சூழ்நிலையில் திண்டாடும் சிறுபான்மையோரின் குறைகளுக்கு எந்தவிதமான நிரந்தர நிவாரணமும் இதனால் ஏற்படாது. முதலாளித்துவ அமைப்பின் சுபாவமான கோளாறுகளுக்கும் இது பரிகாரம் அளிக்காது. மனித ஜாதியின் வளர்ச்சியில் தீர்மானமாக ஒருபடி முன்னேற்றத்தைக்கூட இது சாதிக்காது. எனினும் ஐரோப்பா முழுமைக்கும் தற்காலிகமான ஒரு பெரிய கஷ்ட நிவாரணம் கிட்டும். கொலையுண்ணத் தயாராயிருந்த கோடிக்கணக்கான மக்களுக்கு இது உயிர்ப் பிச்சையளிக்கும். வரம்புக் குட்பட்ட சுதந்திரம், மரியாதை, பந்தோபஸ்து இவற்றையும் வழங்கும். சுருக்கமாக ஹிட்லருக்கு முந்திய நிலைமையே கொஞ்சம் அபிவிருத்தியுடன் கூடிய முறை, அதாவது, பயங்கரமான நிகழ்ச்சிகள் சூழ்ந்த 20வது நூற்றாண்டின் முற்பாதியில் 19-ஆம் நூற்றாண்டின் பண்பு புதுமைபோல வரலாம். இந்தப் பழைமை புதுமையை இணைக்கும் ஒட்டு வேலை சரியான திறமையோடு செயற்படின் இன்னும் இருபது ஆண்டுகளுக்காவது மற்றொரு யுத்த ஆறு மூச்சுவிட அவகாசம் கொடுக்கும். அடுத்த படுநாச யுத்தத்தின் அதோகதியைத் தடுக்க ஒரு சந்தர்ப்பமாவது இது அளிக்கும்.

எனவே இந்த யுத்தம் கடைசி யுத்தமல்ல, இருட்டுக்கும் ஒளிக்கும் உள்ள சண்டை இன்னும் தீரவில்லை, ஒரு வேளை

இதுவே இனி நெடு நாட்கள் தொடர்ந்து வரப்போகும் புதிய உலகம் உருவாகும் வரையில் காக்காய் வலியே போன்ற போர்களின் ஆரம்பமோ என்றெல்லாம் நாம் சிந்திக்கத் தொடங்கி விட்டோம். இந்த மூச்சுவிடும் இடைநேரத்தை எவ்வளவு நன்ருக உபயோகிக்க முடியுமோ அவ்வளவு நன்ருக உபயோகிப்போமாக. ஒவ்வொரு நாள் காலையிலும் தூங்கி எழுந்தவுடன் 19-வது நூற்ருண்டின் பின்னுரையான இச்சூழ் நிலையாவது மிஞ்சியதற்கு கெஸ்டபோ சர்வாதிகாரமும், சாளரத் தடியில் காவலும் இல்லாமல் கடவுளைத் துதிப்போமாக. இரண்டு ஆண்டுகளுக்கு முன் நடந்த ஃபிரெஞ்சு வீழ்ச்சியின்போது இருந்த எவர்தான் அதை நம்பினர். என்னைப் பொறுத்த மட்டில் நான் நம்பவில்லை.

4

தீவிரவாத அறிஞன் என்று நீங்கள் குறிப்பிடும் கூட்டத்தில் ஒருவனுன எனது இந்த கோட்பாடு மிதவாதமாகத் தோன்றலாம்; என் நண்பர்கள் வசைகூறி என்மேல் கல் எறியலாம். என்னைப்போலவே அவர்களும் எப்படியோ ஏறத்தாழக் கண்ணைத் திறந்து கொண்டே உதவியற்ற ஒன்றுமில்லாத ஒரு அரசியல் வெறுமையை அடைந்து விட்டோம் என்பதை உணரக் கூடும்.

முன்னேற்றப் போர் என்ருல் வேறுபட்ட தனித்தனி வர்க்கங்களிடையே ஸோஷலிஸ அரண்களிலிருந்து சண்டையிடுவது என்றே நாங்கள் கருதுகிருேம். ஆனுல் அமைப்பிலிருந்து சிதறிக் கிளம்பிய சமுதாய இயக்கங்களைச் சமாளிக்கும் பெரும் பிரச்னை தொன்றி விட்டது. தொழிலாளர்களில் பெரும் பகுதியினர் ஃபாஸிஸப் பகைவர்களுடன் ஒன்று கூடுவதைக் கண்டோம். பழங்கொள்கை டோரிக் கட்சியினர் தீவிரவாதத் தொழிற்சங்கங்களில் சேருவதைப் பார்த்தோம். அதிகார வர்க்கமும், நிர்வாக வர்க்கமும் கேந்திரஸ்தலங்களில் ஊன்றிக் கொண்டு இருப்பதையும் அறிந்தோம். நாமோ நின்ருேம், துருப் பிடித்த பழங் கவச வீரர்களாய் பின்பற்றுவோரின்றி திகைப் புற்று நிற்கிருேம். நமக்கு வழிகாட்டியாக நம்மிடம் இருப்பது மார்க்ஸ்—ஏங்கெல்ஸ் வாக்கியங்களின் கோவையான ஒரு சிறு நூலே. என்னே பரிதாபம்! அது சென்ற நூற்ருண்டின் உண்மையான ஆழ்ந்த கருத்துகள் அடங்கிய சமுதாய வழி காட்டியே யானுலும், இந்தத் தலைமுறையின் யுத்த களத்தில் அதன் உபயோகம் மிக அற்பம்தானே!

இந்தச் சித்திரத்தில் ஊக்கம் தரக்கூடிய ஒரு அம்சமும் உண்டு. சென்ற 15 வருடங்களாக துருப்பிடித்த கவசமணிந்த

வீரர்கள் சுதந்திரம் சமத்துவம், சகோதரத்துவம் என்று எழுதப் பட்டுள்ள கேடயங்களைத் தாங்கித் தோல்வித் தரப்பில்தான் போரிட்டுள்ளனர். ஷாங்ஹாய், அடிஸ் அபாபா, மாட்ரிட், வியன்னு, ப்ரேக் எல்லாம் நீண்டு தொடர்ந்த தோல்விகளின் ஒரு துயரச் சங்கிலி; எனவே இடைவிடாத தோல்வி எங்களுக்கு சர்வ சகஜமாய் விட்டது. இது துன்பத்தின் ஒரு நிரந்தரமான தெய்வ தரிஸனம். தோல்வியை மிதமிஞ்சி அநுபவிப்பது ஆபத் தானது. அதுவே பழகிப் போய்விடும்.

இப்போதுதான் முதன் முதலாக நாங்கள் வெற்றி பெறு வோம் என்று தோன்றுகிறது. நாங்கள் கனவு கண்ட வெற்றி இது அல்ல என்றாலும் இதனால் பெரிய மாறுதல் ஏற்படலாம். தோல்வி வழக்கத்திலிருந்து எங்களை அது மீட்கலாம். ஒரு முறை வெற்றிப்பாதையில் கால்வைத்துவிட்டால், எங்கள் பழைய கவசங்களைத் தற்காலத்திற்கு ஏற்பப் புதிப்பித்து விட் டால், எங்களது முயற்சி எங்கு போய் நிற்கும் என்பதை எவர் தான் கூறமுடியும்?

* 1943, ஜனவரி, நியூயார்க் டைம்ஸ் மாகஜினில் முதன் முதலாக வெளி வந்தது.

# நம்பகமற்றோர் சங்கம்*

இந்த யுத்தத்தில் அரை உண்மையின் பெயரால் நாம் ஒரு முழுப் பொய்யை எதிர்த்துப் போரிடுகிறோம். இன்று வழக்க மாகக் கூறப்படும் வாதங்களில் இதுவே மிக மிதமானது. இதைத் தற்காலிகமாக ஒப்புக்கொள்ளுவோமானால் இன்றைய குழப்பங் களும் நாளைய ஏமாற்றங்களும் ஓரளவு குறைவாகக் காணப் படும்.

நாஜிகளின் நவசமுதாய மார்க்கத்தை நாம் முழுப்பொய் என்கிறோம்; ஏனெனில் அது மானுடப் பண்பையே மறுக்கிறது. வலிமையே உரிமை என்பதால் நாகரிகச் சட்டங்களைக் காட்டு மிராண்டிக் கொட்டமாக்குகிறது; இன உயர்வு பேசுவதால் மானுட சமுதாய இயலை பிராணிவர்க்க இயல்பாக மாற்று கிறது. இந்தத் தத்துவத்தோடு ராஜி போவதற்கே இடமில்லை; இது முழுமையாக அழியவேண்டியதே.

நிற்க, நாமோ அரை உண்மைகளின் பருவத்தில் வசிக்கி றோம். நாம் இன உயர்வுக் கொள்கையை எதிர்க்கிறோம். எனினும் நம்மிடையே இனப் பாகுபாடுகள் இன்னும் தீர்ந்த பாடில்லை. நாம் மக்களாட்சிக்காகப் போரிடுகிறோம், எனினும் மக்களது நான்கு சுதந்திரங்களில் இரண்டையாவது மறுக்கும் ஒரு சர்வாதிகாரமே நமது முக்கியமான பலம் பொருந்திய துணை யாகும். மறுக்கமுடியாத இவ்வுண்மையைக் கூறும்போதே கோபம் வருகிறது. அவ்வளவு தூரம், எங்கும் நிறைந்துள்ள பிசின் போன்ற அரை உண்மைப் படலம் நம் கண்ணை மறைக் கிறது.

"எனவே, இதைச் சொல்லிக் காட்டுவானேன்? இது போர்க்களம், பாவ மன்னிப்பு மேடையல்ல" என்று சிலர் கூறலாம். இதற்குப் பதில் ஒன்றுதான். வெற்றி சமீபத்திற்கு வரவர அட்லாண்டிக் சமுத்திரத்தின் இரு கரை மக்களும் பரபரப்படைகின்றனர். எங்கும் ஏதோ இனந்தெரியாத ஒரு கலக்கம் குடிகொண்டுள்ளது:—வெற்றிக்கொண்டாட்டத்தை முந்திக்கொண்டு இக்கலக்கம் முன் நிற்கிறது.

டங்கர்க் (Dunkirk) குக்குப் பிறகு அமெரிக்கா நடுநிலைமை வகித்தபோது, ரஷ்யா கிழக்குப் பக்கம் ஹிட்லர் இரண்டாவது போர் முனையை எப்போது துவங்குவார் எனக் காத்திருந்த காலை, இந் நாட்டிலுள்ளோர் ஏதாவது அற்புதமே தங்களைக் காப்பாற்ற முடியுமென்று எண்ணினர். உயிருக்கே ஆபத்தான ஆபரேஷனின்போது ஒரு நோயாளியைப் போல், நாமும் "கடவுளே, இம்முறை மட்டும் நான் தப்பிப் பிழைத்தால்,

ஒரு புதிய வாழ்க்கையைத் துவங்குவேன்—ஆஹா! அது எத்துணை நல்ல வாழ்க்கையாக இருக்கும்!" என்றுதான் கூறிக்கொண்டோம். அந்த அதிசயமும் நடந்துவிட்டது; ஆபரேஷன் வெற்றி பெற்றது, நோயாளியும் நோய் தீர்ந்து விடுதலை அடைந்தான்—ஆனால் மீண்டும் பழைய படலம் தான்—தன் வீடு இன்னும் தாழ்ந்த பகுதியில் தவிப்பதைக் காண; தன் தபாற்பெட்டி நிறையக் கடன் தரவேண்டிய, 'பில்'களைப் பார்த்துப் பழைய படியே தன் மனைவியின் ஒத்தைக் கண் உருட்டலையும், ஓங்கி எழும் ஓலத்தையும் அநுபவித்து, நாள் முழுதும் தன் அவலட்சணக் குழந்தை மூக்குச் சிந்தி முனகுவதை நோக்க அவன் மறு நாளே வெம்பி வியர்த்து முணுமுணுத்தால், தனக்கு வெற்றி அளித்த விதிக்காக அவன் நன்றி செலுத்தவில்லையே என்று யாராவது குறை கூற முடியுமா?

வட ஆப்பிரிக்காவில் ஆபரேஷன் வெற்றியடையத் தொடங்கியது முதல் நேச நாட்டு மனைகளில் கடன் 'பில்'கள் குவியலாயின, குரல்கள் ஓங்கி ஒலித்தன, ஒத்தைக் கண் ஓரப் பார்வைகள் அதிகரித்தன. நாளை உலகை ஆளப்போகும் நேச நாட்டுக் கூட்டாளிகளிடை நல்லெண்ணம், ஒற்றுமை என்ற வேண்டுகோட்களெல்லாம் கூர்மையற்ற வெற்றுக் கூக்குரல்களாயின. அரசாங்கங்கள் குறுகிய தமது தரமாக இயங்கும் பொருளாதாரச் சமூகத் துறைகளினூடுதான் ஏதாவது செய்யமுடியும். சென்ற 50 ஆண்டுகளில், வலிமை படைத்த ஒரு சர்வ தேசியமே, படுக்கைக் கோடாய்ப் பரவி அகலும் அகில நெறியே உலகச் சிக்கலை உலகப் பொதுமையால் விடுவிக்க முடியும் என்ற எண்ணம் தெளிவுற்று வந்தது. இந்நூற்றாண்டின் முற்பகுதியில், அதிலும் இரு உலக யுத்தங்களுக்கிடையே, இத்தகைய பக்கப் பாய்ப்பான பரவல் நெறி, போட்டியிடும் செங்குத்தான தேசியச் சிறு முனைப்புகள் யாவற்றையும் அடியோடு அழித்துவிடும் என நாங்கள் உறுதியாக நம்பினோம். முன்னேற விரும்பும் மக்களெல்லாம் சர்வதேச சங்கம், இரண்டாவது மூன்றாவது அகிலங்கள் முதலியவற்றிலிருந்து பெருநன்மைகளை எதிர்பார்த்தனர். பழங்கொள்கைக்காரர்களும் பரவலியல்களான போப்பாலயம், இயேசு தர்மம், மெஸ்ஸானிக் சகோதரத்வம் என்பவற்றை ஏறத்தாழப் பின்பற்ற முனைந்தனர்.

நம் காலத்தின் முக்கிய அம்சம் பரவற்கொள்கைகளின் படுதோல்வியே. எனவே, நம் உண்மைகளெல்லாம் அரை உண்மைகளாயின. இந்தக் கசப்பான நிலையை மறுதளிக்கும் எண்ணத்தைச் சமாளித்தாலன்றி நமது இன்றைய நிலையோ, நாளைய போக்கோ நன்கு விளங்காது.

துயரம் மிகுந்த ஐரோப்பியனது கண்ணேட்டத்தில் பார்க்குங்கால், அதிலும் என்போன்ற, ஸ்டாலினர்களால் ட்ராட்ஸ்கியர் என்றும், ட்ராட்ஸ்கியர்களால் ஏகாதிபத்திய ஆணவர் என்றும், அதிகார ஆணவத்தினரால் ரத்த வெறி பிடித்த செஞ்சட்டைப் புரட்சியாளர் என்றும் குறை கூறப்படும் தீவிரவாதிகளின் கண்களூடு நோக்கினல், தீவிரவாதப் பரவற்கொள்கைகளெல்லாம் வெற்று வெறுமையாகி விட்டன என்பது நன்கு விளங்கும். அழுகி உளுத்துப்போன நிலையில் மூன்ரும் கம்யூனிஸ்டு அகிலம் அதிகார பூர்வமாய்ப் புதைக்கப்பட்டது. மிஸ்டர் ஜனதிபதி ரூஸ்வெல்ட்டுடன் ஆடிய ஒட்டுமை அரசியல் சதுரங்கத்திலிருந்தே அமெரிக்கத் தொழிற் கட்சியின் அவல நிலைமை தெளிவாகியது. ரஷ்யாவிலோ அரசியல் வளையம் ஒரு சுற்றுச் சுற்றித் தந்தை நாடு, படைஞர் பள்ளி, வைதிக மாதா கோயில்கள் என ஆரம்ப ஸ்தானத்திற்கு வந்துவிட்டது. பிரிட்டிஷ் தொழிற் கட்சி வானிஸிடார்ட்டைட் தீர்மானத்தால் நாஜிகளுக்கு எதிராகத் தேர்தலில் வாக்களித்த 130 லட்சம் ஜெர்மானியத் தொழிலாளர்களை நாஜிக் குற்றங்களுக்குப் பொறுப்பாளிகளாக்கிச் சமுதாய ஸாம்யப் பரவற்கொள்கையில் தமக்கிருந்த பிடிப்பின் கடைசிப் பாசாங்கையும் கைவிட்டது.

பிரிட்டனில் ஸோஷலிஸம் ஏற்பட நல்ல வாய்ப்பு என்ருவது இருந்ததென்ருல் அது டங்கர்க் பின்வாங்கலுக்கும், டோப்ருக் வீழ்ச்சிக்கும் இடையிலிருந்த காலமே. போரை நடத்திய முறைகளைப் பற்றிய பொதுஜன வெறுப்பு உச்ச நிலையிலிருந்து ஒரு டஜன் உபதேர்தல்களில் அரசாங்கம் தோல்வியுற்றது. தனி மனிதரது சொத்துக்களையெல்லாம் தேசியமாக்க—அரசாங்கத்திற்குச் சந்தர்ப்பம் ஏற்பட்டது; எனவே, உள்நாட்டுப் போரோ, புரட்சியோ இல்லாமல் வெறும் அரசியல் நெருக்கடியாலேயே அரசியல் சமுதாயப் பொது உடைமை சுலபமாக ஏற்பட்டிருக்கலாம். ஏனெனில், ஃபிரஞ்சு முதலாளிவர்க்கம் பொது ஜனங்களை விட்டு ஹிட்லரோடு சேர்ந்தது போலல்லாமல் பிரிட்டிஷ் முதலாளி வர்க்கம் நாஜி அதிகாரத்தின் கீழ் வாழ்வதைவிட செஞ்சட்டை பிரிட்டனில் வாழ்வதே மேலென்று கருதின. வரலாற்று வகையில் இந்த வித்யாசம் மிகமிக முக்கியமானது. தகுதி வாய்ந்தவரின் உயிர் பிழைப்பு என்ற கொள்கைப்படி பிரிட்டனுக்கு இதுவே இக்கட்டான சோதனைக் காலமாயிருந்தது. எனினும் அரசியல் முதிர்ச்சி இல்லாமையினல் பாட்டாளிவர்க்கத்தினர் இந்த சந்தர்ப்பத்தை இழந்து விட்டனர். அறிவுள்ள டோரிக் கட்சியினருக்கு டங்கர்க் முதல் சிங்கப்பூர் வரை ஏற்பட்ட நெருக்கடிக்குப் பிறகும் முதலாளித்வம் நிலையாயிருப்பது இன்னும் ஆச்சர்யமாகவே இருக்கிறது.

சந்தர்ப்பங்களை ஸோஷலிஸம் இழந்த சங்கிலித் தொடரில் இது ஒரு சிறு வளையமே. இரு யுத்தங்களுக்கிடையே புதிய வாழ்வில் எத்துணை ஆசை இருந்தது? அது எவ்வளவு மோசமாகத் தோல்வியுற்றது? ஃபாஸிஸம் இத்தோல்வியினாலேயே லாபகரமான வெற்றி யடைந்தது. மறுபடியும் மறுபடியும், ஃபிரஞ்சு மக்கள் கூறுவதுபோல் படுக்கையறை வாயிலில் தைரிய மிழக்கும் விட புருஷனைப்போல் பயனற்ற வகையில் சோஷலிஸ இயக்கம் சந்தர்ப்பத்தை நழுவிவிட்டது. மாற்றுச் சுபாவமுள்ள ஒரு மங்கை போன்றது சரித்திரம், அவளை விரும்பும் காதலன் எல்லாம் இழந்து தனக்கு அளிக்கப்பட்ட சந்தர்ப்பங்களை இழந்து கொண்டே போனால், கொஞ்ச நாளில் காதல் வெறும் பாசாங்காகிறது - இந்தக் கட்டத்தில் அந்த இளங்காதலி அம் முதிய காதலனது கையணைப்பில் தானாக வந்து விழுந்தால், அதைப்போன்று அவனைத்திகைக்கவைக்கக்கூடியது வேறொன்று மில்லை.—மிஸ்டர் அட்லி திடீரென்று இங்கிலாந்தின் மார்க்ஸியப் பிரதம மந்திரியானதைக் கற்பனை செய்துபாருங்கள்!

அரசியல் இயக்கங்களுக்கும் பிற உயிர்களைப் போன்றே வளர்ச்சி—தேய்வு விதிகள் உண்டு. அவைகள் வளர்கின்றன—வளர்ச்சியின் உச்சத்தில் அதிகாரத்தைக் கைப்பற்றாவிடில், தேய்ந்திழிந்து மங்கி மடிகின்றன. இந்நூற்றாண்டின் பரவற் கொள்கைகளுக்கெல்லாம் ஏற்பட்ட கதி இதுவே. சர்வதேச சங்கம் எலும்புருக்கியால் முடிந்தது; அதிகார பூர்வமான கோயில்கள் அரசியல் துறையில் திகைப்புற்றுத் தேம்புகின்றன; இரண்டாவது சர்வ தேசியம் இரத்த நாளத் தடிப்பால் இறந்தது; மூன்றாவது அழுகி மறைந்தது. வளர்ந்து வந்த தொழில் வர்க்க வலிமையில் மிச்ச மிருப்பது தொழிற் சங்கங்களே. அவற்றின் முக்யெத்துவத்தை நான் குறைக்கவில்லை; எனினும் அவை பொருளாதாரப் பாதுகாப்புகளே தவிர, புதிய அரசியலை சிருஷ்டிக்கக்கூடிய வலிமை படைத்தவையல்ல.

இந்தப் படுக்கைக்கோட்டுப் பரவற்கொள்கையின் தோல்வி ஏதோ இடையில் நேர்ந்த சிறு கணத் தோல்வியல்ல; இந்நூற்றாண்டின் மிதவாதக் கட்சியினரும், ஸோஷலிஸ்டுகளும் பின்பற்றிய முறைகளின் தோல்வியே யாகும். மேற்போக்கு கீழ்ப்போக்கு என்பதெல்லாம் நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளுவதே; நாம் ஒரு மலைத் தொடர் ரெயிலில் செல்லவில்லை; ஒரு குருட்டுச் சந்தில் குமைகிறோம். இன்று, அதிகரித்து வரும் போக்கு வரவுச் சாதனங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் ஸர்வ தேச மயமான எண்ணங்கள், உணர்ச்சிகள், செயல்கள், யாவற்றிலும் இருபது ஆண்டுகளுக்கு முன்பிருந்ததைக் காட்டிலும் இன்று அதிகமாக நாம் தள்ளிப்போய் விட்டோம் என்பது

தெளிவாய்த் தெரிகிறது. யுத்தத்திற்குப் பிறகு நாம் போடும் சமாதானத் திட்டங்களெல்லாம் செங்குத்தான் அதிகார கேந்திரங்களுக்கிடையே தற்காலிகப் பாலங்க ளமைப்பது போன்றதே. அவைகள் வரப்போகும் பத்திருபது வருடங்களை எப்படியாவது நெருக்கடிகளின்றித் தாண்டிவிட வேண்டும் என்ற அரைகுறை உண்மையான, அக்கறையான முயற்சிகளே யாகும். இந்தப் பத்திருபது வருடங்கள் நிரந்தரமான எந்தச் சிக்கலையும் தீர்க்கா; இது மாறுதலுக்கான இடைக்காலம், அரைகுறை உண்மைகளாலான அந்திமாலைச் செக்கர்; நாம் போட்டிருக்கும் பாலம் உடைந்து விடலாம், செங்குத்தான தேசியத் தன்னலராக்ஷஸர்கள் தங்கள் அழிவு வேலையைத் துவங்கினாலும் துவங்கலாம் என்ற பயம் நிறைந்த காலம்.

இதுவரையில் நாம் கூறியது எதிர்கால நம்பகமற்ற ஒரு சித்திரம்; எனினும் வெளிப்படையான உண்மைகளின் பிம்பமே என்றுதான் நான் நம்புகிறேன். இனி வருவது எதிர்கால இயல்புகளைப்பற்றி; இவற்றைச் சிலர் பைத்யம் என்பர். எனினும், எலும்பும் உருகும் வகையில் இதைப்பற்றித் தெளிவற்ற முறையிலாவது எண்ணுபவர் பலருண்டு என்பது எனக்குத் தெரியும்; இத்தகையோரிடமே நான் இவற்றைப் பேசுகிறேன்,

இடைக்காலம்—பழங்கொள்கைகளின் வீழ்ச்சியின் மேல் விளையும் குழப்பம் நெடுநாள் நீடித்திருந்ததில்லை. இந்த இடைக்காலம் தீர்ந்து புதுமையின் பரவலான மறுமலர்ச்சி ஏற்படும் காலம் சமீபத்திலேயே இருக்கிறது என்பதை நான் நம்புகிறேன். அது ஒரு கட்சியாகவோ, குழுவின் கொள்கையாகவோ இராது; உலக முழுமையுமான ஒரு உணர்ச்சி. இயேசு தர்மம், தெய்விகச் சீர்திருத்தம் போன்ற ஆன்மிக இயல்பாகத் திகழும். இத்துடன் வரலாற்றுத் துறையில் கலீலியோ நியூடன், கொலம்பஸ் என்பவருடன் ஆரம்பமான மனித குலத்தின் இளமைப்பருவம், விஞ்ஞான விதிகளாலும், அளவைகளாலுமான காலப்பகுதி, பயன் முறைவாதம், ஆன்மாவை அமுக்கி எழுந்த அறிவியல்பு-என்ற சகாப்தம் தீர்ந்துவிடலாம். இந்த சகாப்தத்தின் சாதனைகள் மகத்தானவை; இதன் சாவுப் போராட்டமும் சகிக்கமுடியாது பயங்கரமாய்த் தானிருக்கும். ஆனால் இந்தச் சங்கடம் நீடிக்க முடியாது; வலிப்பும் கோணலும் அதிகமாக ஆக, அவற்றின் ஆரவாரத் தாக்குதல் மிகுதிப்படப்பட, கடைசியில் அளவிட்டுக் காணும் அண்மையில் சோர்வு வந்துவிட்டது. இன்னும் இரண்டொரு உலக யுத்தங்கள் நடைபெறலாம்; ஆனால் டஜன் கணக்கில் போர்கள் வராது, இந்த நிலைமை ஏற்பட நூற்றுண்டுகளாகாது; பத்தாண்டுகளே போதும்.

வரப்போகும் புத்துலக மறுமலர்ச்சியின் மதிப்பை அறிய உலக வரலாறே தடையங்கள் தருகின்றன. பழங்காலத்தில் சமூகச் சமுதாய உணர்ச்சி படிப்படியாக உயர்ந்து வருவதைக் காண்கிறோம். லௌகிக உணர்ச்சி மிகுந்ததும் சமயச் சண்டைகள் தீர்ந்தன; பொருளாதார முறை பிரதானமான முக்கியத்துவம் பெற்றதும் ஜமீன்தாட்சி ஒழிந்தது; இனிப் பொருளாதார (தொழிலாள) மனிதனது போராட்டங்களால் புத்துலகத்தின் புது ஒழுக்கங்கள் ஏற்படும். பெரும் வழக்குகள் அவற்றின் சமநிலையில் தீர்க்கப்படுவதில்லை. அவற்றிற்கு மேலான ஒன்றாலேயே தீர்க்கப் பெறுகின்றன. இரண்டாவது, மூன்றாவது சர்வதேசியங்கள் குருட்டுச் சந்துகளில் குமைந்த காரணம், அவை முதலாளித்துவத்தை முதலாளித்துவ முறையிலேயே எதிர்த்தன; நம் எலும்புகளுக்குள்ளும் இழையும் விருப்பத்திற்கு ஆன்மிக மேன்மையாகச் சக்தியில்லை.

உலக வரலாற்றில் அடுத்துள்ள புதிய உயரிய நிலையிலிருந்து பார்க்கும்போது பழைய சச்சரவுகள் பயனற்றவையாகவும் அர்த்தமற்றவையாகவும் தோன்றுகின்றன; இதற்கு எதிர்மாறாக பழைய நிலையிலிருந்து புதிய நிலையின் பண்புகளைக் கணிக்க முடியாது. இன்னும் நாம் இடைக்காலத்தில்தான் இருக்கிறோம். எதிர்கால நம்பகமுடையவர்களே உண்மையை உணர்ந்து தற்கால நம்பகமின்மையை அவலம்பிக்க முடியும்;நம்பகமில்லாதவர்களுக்கே அரைகுறை உண்மைகள் தேவை; இடைக்காலத்தின் அடுத்த பத்து வருடங்கள் துன்பமும், துயரும், பல்லைக் கடித்தலுமாகக் கழியும். வரலாற்றலையின் தாழ்வான பகுதியில் நாம் இருப்போம். இதனால் நடக்கிறபடி நடக்கட்டும் என்று விதியின் கையில் நம்மை ஒப்படைத்து விட்டு நாம் சும்மா இருக்கவேண்டுமா?

இல்லை என்றுதான் நான் நினைக்கிறேன். நமக்குத் தேவை சுறுசுறுப்பான தற்காலிக எதிர்கால நம்பகமற்றோரே. அவர்கள் உடனடியான அடிப்படை மாறுதல்களை விரும்பமாட்டார்கள்,ஏனெனில் அலைப்போக்கின்குழைவில் இம்மாறுதல்கள் சாத்யமில்லை என்பது அவர்களுக்குத் தெரியும்; சமூக உடலைச் சத்திர சிகிச்சை செய்கிறேன் என்று அவர்கள் கத்தியை நீட்டமாட்டார்கள்; ஏனெனில் தங்கள் கத்திகள் பழுதுற்றவை என்பதை அவர்கள் அறிவர். கட்சி மூட்டங்களால் மறைக்கப்படாத திறந்த விழிகளோடு, புதிய பரவல் கொள்கையின் பிறப்புக்கான அறிகுறிகளைக் கவனிப்பர்; வரும்போது அதன் உதயத்திற்கு உதவி செய்வர்; இவ்வுதயம் தம் வாழ் நாட்களுள் ஏற்படாவிட்டாலும் அதற்காகக் கவலைப்படமாட்டார்கள். இப்புது உலக உதயம் இந்தந்தக் கட்சியிலே, தொழிலாள, உத்

யோகஸ்த வகுப்பினரிடையே உதிக்கும் என எதிர்பார்க்கமாட்டார்கள்; ஆனால் ஏழை எளியவர்கள், துன்பமுற்றோர் இவர்களிடையே தான் இப்புத்துலகம் பிறக்குமென்பது அவர்களுக்குத் தெரியும். இதற்கிடையில் இடைக்காலப் பொட்டலிடையே அவர்கள் பசுமைத் திடல்களை உற்பத்தி செய்ய முயல்வர்.

பெரிய வலிமிக்க நாடுகளில், பிரிட்டனே, தன் பழைய பழக்க வழக்கத் திண்மையாலும், அலைபடாது ஸ்திரமான சமுதாய இயல்பாலும் இத்தகைய பசுந்திடல்களை உற்பவிப்பதில் மிகுந்த சக்திவாய்ந்துள்ளது. இடைக்காலங்கள் உலக வரலாற்றில் கீழ் நோக்கிச் செல்லும் மலைச் சரிவுகள்; இந்தக் கட்டத்தில் என்ஜினைக் காட்டிலும் ரெயிலைச் சரியாது தடுக்கும், 'ப்ரேக்'குகளே முக்கியமானவை. சென்ற நூற்றாண்டில் நம் பிரேக்குகள் கவனிக்கப்படவில்லை. எனவே, சக்தி நிறைந்த சர்வாதிகார என்ஜின் தாறுமாறாய்த் தன்னிச்சைப்படி ஓடியது. வேறு வார்த்தையில், சர்வாதிகாரம் அல்லது குருட்டுணர்ச்சி இவைகளில் ஏதாவது ஒன்றை ஏற்கவேண்டுமென்றால் நான் குருட்டுணர்ச்சியையே ஏற்றுக்கொள்வேன். குருட்டுணர்ச்சி என்னைச் சில்லறைத் தொல்லையாக எண்ணி அங்குமிங்குமாய் தடுமாட விடும்; ஆனால், அறிவுடைய சர்வாதிகாரமோ சாந்தமாக என்னைச் சுட்டுக் கொன்றுவிடும். வேறுவகையான வரலாற்றுப் பருவங்களில் குருட்டுணர்ச்சியே வரலாற்றுக்குத் தடையாக நிற்கும். வரும் பத்தாண்டுகளில் குருட்டுணர்ச்சியின் தெளிவற்ற நல்லொழுக்கமும், பாசாங்காயினும் பழைமை விருப்பமும், எதிர்காலத் தக்குதலைச் சமாளிக்கத் தேவையான சிறப்பாய் விளங்கும்.

1917-இல் புத்துலகக் கனவு நனவாகும் போலத்தோன்றியது. இன்றோ இடைக்காலத்தால் தள்ளிப்போடப் பட்டுவிட்டது. எனவே, நாம் பாலைவனப் பசுந்திடல்களை உற்பத்தி செய்வோமாக.

---

* 1943, நவம்பரில் நியூயார்க் டைம்ஸ் மாகஜினில் வெளியானது.

# அரசன் இறந்தான், அரசன் வாழ்க

அம்மை போட்டு ஃபிரஞ்சு அரசன் இறந்ததும் அரசவையினர் "அரசன் இறந்தான், அரசன் வாழ்க" என்று கத்தினராம். "ஹிட்லர் இறந்தான், ஃபாஸிஸம் வாழ்க "என்பது இன்னும் சில வருடங்களுக்கேனும் நம் காதுள் ஒலிக்கக்கூடிய கோஷம். நாம் சன்னத்தமா யிருப்பது நல்லது. அப்போதுதான் சிங்கத்தின் வாயில் தலையைக் கொடுத்துத் தூங்கிய காவற்காரனைப் போல் துன்பமிகும் ஆச்சரியத்தால் திகைப்படைய மாட்டோம். போர் முனையில் மட்டும் ஃபாஸிஸத்தைக் கொன்று விட முடியாது; மக்களின் மூளைகளில், இதயங்களில், கணமூல (glands)ங்களில் அதைக் கொல்லவேண்டும்; ஏனெனில், அது பழைய ஒரு மனவியாதிக்கு ஏற்பட்ட புதிய பெயரே. எங்கெங்கு நீக்ரோக்களையும், ஷீனிகளையும், கிக்ஸிகளையும் பற்றிப் பேசப் படுகிறதோ, எங்கெங்கு அதிகாரியோ, தனிமனிதனே, மக்களது காம இயல்புகளையும், அரசியல் கொள்கைகளையும் வேவு பார்க்கின்றனரோ, எங்கெங்கு அதிகக் கூலி கேட்பது செஞ்சட்டையின் ஆபத்தாகக் கருதப்படுகிறதோ, எங்கெங்கு சட்ட ரீதியான வேலை நிறுத்தம் ஈயத் தோட்டாக்களாலும், துப்பாக்கிக் குண்டுகளாலும் தீர்க்கப்படுகிறதோ—அங்கெல்லாம் ஃபாஸிஸமும் இருக்கிறது. உன் கண் முன்னுலேயே இருக்கிறது. அதற்காக வண்ணச் சித்திர கெஸ்டாபோவை சினிமாவுக்குப் போய் காணவேண்டிய அவசியமில்லை.

சுதந்திரம் பலபடியானது, தனிச்சிறையில் குமையும் கைதியைக் காட்டிலும் தேகப் பயிற்சிக்கு அநுமதிக்கப்படும் வெளிச் சிறைக் கைதி சுதந்திரம்மிக்கவன்; நாஜி ஜெர்மனியுடன் ஒப்பிட்டால் ஃபாஸிஸ இத்தாலி சுதந்திரதேசம். ஆனல் ஃப்ரான்ஸுடன் ஒப்பிட்டால் சுதந்திர மற்ற தேசமாகும். ஆனல் ஃபிரஞ்சுக் குடியாட்சி பெண்களுக்கு வோட்டுரிமையை மறுத்தது; கணவனின் கருணை மிக்க அநுமதியின்றி பெண்கள் பாங்கிக் கணக்கு வைத்துக் கொள்ளுவதைத் தடுத்தது. இவற்றைக் காட்டுமிராண்டித்தனமாகக் கருதும் அமெரிக்கர்கள் தங்கள் தேசமே பூரண விடுதலை பெற்ற தேசம் என இறுதியாய் நம்புகின்றனர். தற்கொலை செய்துகொண்ட ஒரு வியன்னு இளைஞனை எனக்குத் தெரியும். அவன் கழுத்தில் ஒரு அப்ப (sandwich) மசியில் விளம்பரப் பலகையைக் கட்டி விட்டனர். அதில் 'நான் ஒரு அசிங்கமான ஸெமிதன் (semite), தயவு செய்து என் மேல் காறி உமிழுங்கள்' என்று எழுதியிருந்ததாம்; அவன் அமெரிக்காவின் அதிட்டக் கரையை அடைகிருன்; அங்குள்ள ஒரு தனிப்

பட்ட ஹோட்டலில் அவனுக்கு இடங்கிடைக்கவில்லை. இப்படிப்பட்ட ஒரு தடையும் இவ்வுலகத்தில் உண்டு என்பது அவனுக்குத் தெரியாது.

நான் ஃபாஸிஸத்துக்கும் குடியாட்சிக்கும் உள்ள வித்தியாசம் வெறும் அளவைப் பற்றியதே என்றதும் பத்திரிகைச் சுதந்திரம், பிரதிநிதித்துவசபை முதலிய அரசியல் நிர்ணயங்களைக் காட்டி என் கூற்றை ஆட்சேபிக்கலாம். இவை உண்மையே. வாதம் செய்பவனைக் காட்டிலும் ஸர்வாதிகாரத்தினின்றும் வந்தவனுக்கே குடியாட்சி அமைப்பின் முக்யத்வம் நன்கு விளங்கும். இத்துடன், சட்டத்தின் வாக்யங்களுக்கும், அவற்றைப்பிரயோகப்படுத்தும் பான்மைக்குமுள்ள வித்தியாசத்தையும் அவன் அறிவான். ஒளிவுமறைவு வேண்டாம். ஹிட்லருக்குக் கூடத்தான் ஒரு பாராளுமன்றமிருந்தது; வேண்டுமானால் ஹிட்லரையும் விலக்கக்கூடிய சக்தி பெயரளவிலாவது அதற்கும் உண்டு. ஹோர்த்தியின் ஆட்சியில் ஹங்கேரியின் தொழிற் கட்சி சட்டபூர்வமாக ஒப்புக்கொள்ளப்பட்டது; சில மாதங்களுக்கு முன்வரையில் அக்கட்சி ஒரு தினசரிப் பத்திரிகையையும் பிரசுரித்து வந்தது. 1936-ஆம் ஆண்டு ஸோவியத் அரசியல் சாஸனம் உலகத்திலேயே மிகச் சிறந்த குடியாட்சிச் சாஸனம்; இதை வைத்துக்கொண்டே ரஷ்யாவில் எல்லாக் கட்சிகளையும் விரட்டும் ஒரே கட்சி அரசாங்கம் நடத்த முடிகிறது.

அதாவது, அரசியல் சட்டங்கள் உறுதி அளிக்கும் உரிமைகளை எண்ணி நாம் வாளாயிருக்க முடியாது. ஃபாஸிஸத்தைப் பற்றி அது ஒரு கனமான, நம் வாழ்க்கை முறையிலிருந்து வேறு வழியான அமைப்பென்றே நாம் கருதி வந்துள்ளோம். அது ஒரு ஆவிப்புகை; அதை எந்தப் பாத்திரத்தில் வேண்டுமானாலும், அப்பாத்திரத்தின் வடிவம் எப்படி இருந்தாலும் போட்டு அடைத்து வைக்கலாம் என்று வர்ணிப்பதே சரியானது. துர் நாற்றக் கவிச்சு வீசும் சூழ்நிலையில் ஒரு முறை வசிக்கப் பழகி விட்டால் பின் அக் கவிச்சை நாம் உணர்வதில்லை; அதன் விஷம் நம் உணர்ச்சிகளை மரத்துப் போகச் செய்கிறது. திடீரென்று ஒரு நாள் காலையில் எழுந்ததும் ஒரு ஃபாஸிஸ உலகத்தைக் காண்போம் என்பதல்ல நம் ஆபத்து. ஃபாஸிஸம் நம்மை அறியாமல் நம்மைச் சூழ்ந்துகொள்ளும்போது நாம் தூங்கி விடுவோமானால் அதுதான் ஆபத்தானது.

## 2

இம் மிகைக்கூற்றுகளை கேஸெண்ட்ரா (Cassandra எவரும் நம்பாத தீர்க்கதரிசனங்களைக் கூறிய ஒரு ட்ராயின் கன்னிகை) தீர்க்கதரிசனங்களௌன எவரும் கருதக்கூடா தென்று நான்

விரும்புகிறேன். இரு யுத்தங்களுக்கும் இடையிலிருந்த கேஸெண்ட்ராக்கள் தாங்கள் அவநம்பக (pessimists), தம்மி யில் துன்பினர் (masochists), பயப்ரசாரகர்(scare-mongers) என் பதாலோ, அல்லது, 'நான் முன்பே கூறவில்லையா' என்னும் வெறும் திருப்திக்காகவோ தம் தீர்க்கதரிசனங்களைப் பற்றி கோஷமிட வில்லை. அவர்களுள் ஒரு சிலரே இன்று உயிரோடிருக் கின்றனர். எனவே எவ்வகையிலும் அவர்கள் பேசுவதில்லை. அவர்கள் உங்களை எச்சரித்தது கனவுகள் கண்டல்ல, தம்முட லில், தம்மிலேயே உண்மைகளைக் கண்டதாலேயே. ஸோஷலி சர்கள் டாசௌவையும், ஓரானியன்பர்க்கையும் அறிந்ததாலேயே ஹிட்லரைப் பற்றி உங்களை எச்சரித்தனர். ஃபிரஞ்சுக்காரர்கள் தம் நாட்டின் மேல வரப்போகும் படை எடுப்பை எண்ணியே பாதுகாப்பு வேண்டினர். சிறிய தேசங்கள் மூன்று, நான்கு, ஐந்து என்ற வலிய தேசக் கூட்டுறவு அதிகாரத்தைப் பற்றி எச்சரித்தன; ஏனெனில், அவ்வதிகாரச்சுமை தங்கள் தலை மேலேயே விழும் என்பது அவற்றுக்குத் தெரியும். யூதர்கள் இனப் பாகுபாட்டைப்பற்றி எச்சரித்தனர்; ஏனெனில், கல் கத்தா, வார்ஸா, டெட்ராயிட் என எந்த ஊரில் என்ருலும் சரி வெறும் திட்டில் ஆரம்பிக்கும் வகுப்பு வெறுப்பு சவுக்கடியிலும், படுகொலையிலும் முடியுமென்பதை அவர்கள் அறிவர். இவறு, ஃபாஸிஸத்தின் பிறப்பையும், வளர்ச்சியையும் கண்ட நாங்கள் உங்களை எச்சரிக்கிருேம். அம்மை நோயை வெறும் முகப் பருக்க ளெனக் கருதி அலட்சியமாயிருக்க வேண்டாம்.

துன்பத்தால் மட்டுமே ஞானம் வராது; எனவே, எங்கள் அநுபவத்திற்கும் உங்கள் அநுபவத்திற்கு முள்ள வித்தியாசங் களைக் கூறும்போது எங்களை ஆணவங் கொண்டவர்களாகக் கருதாதீர்கள். உயிர்த் தியாகிகளெல்லாம் உண்மை மகான்கள் என்பதல்ல, பெரும்பாலும் அவர்கள் முட்டாள்களாய் நடக்கின் றனர். யூதர்களுக்கு அடுத்தபடி மிக மிகத் துன்பம் அநுப வித்தவர்கள் போலந்தர்களே; எதிரிகள் அவர்களைப் படுகொலை செய்தனர், நேசர்கள் கைவிட்டனர். எப்படி அவர்கள் நலனை அவர்களே கெடுத்துக் கொண்டனர் என்பதைப் பாருங்கள். தங்கள் நிலையைப் பற்றிய சரியான பாடத்தை அவர்களால் படிக்க முடிய வில்லை. சரித்திரம் சரியான உபாத்யாயனல்ல என்று கூறுவது தவருகாது; அது முதலில் தண்டனையைக் கொடுத்து விடுகிறது; பின்னர், அத்தண்டனையிலிருந்து மாண வன் தன் பாடங்களைப் படித்துக் கொள்ள வேண்டு மென்று விட்டு விடுகிறது. போலந்தர்கள் மட்டுமே சரியாகப் பாடம் கற்காத மாணவர்கள் என்று எவரும் நினைக்க வேண்டாம். அழிக் கப்பட்டுள்ள ஐரோப்பாவின் பெரும் பகுதியில் இன்று தேசியத்

தன்னலமும், பழிவாங்கும் உணர்ச்சியும் வளர்ந்து வருகின்றது; இதைத் தடுக்கும் சேனைகளும் விடுதலையுற்ற தேசங்களிலும் சரி, ஆக்ரமிக்கப்பட்ட தேசங்களிலும் சரி, தமக்குள் வெளிப் படையாகவோ அல்லது மறைவாகவோ, சண்டையிட்டுக் கொள்ளுகின்றன.

எனினும், துயருற்றோருக்கும் துயரற்றோருக்கும் ஒரு வித்தியாசம் இருக்கத்தான் இருக்கிறது. பஞ்சமும், பயமும், தாழ்வும் அநுபவித்த கோடிக்கணக்கான ஐரோப்பியர்களில், ஒரு சிலராவது ஒன்றிரண்டு படிப்பினைகளைக் கற்றுள்ளனர். வெறுமையான ஐரோப்பாவின் சொத்தும், நம்பிக்கை ஒளியும் அவர்களே. அவர்கள் மிதவாதிகளை விடத் தீவிரவாதிகளிடையே அதிகமாகக் காணப்படினும் எந்தக் கட்சியையும் சார்ந்தவர்களல்ல. இன்றுள்ள நிலையில் அவர்களே ஒரே தரமான கொள்கையையுடைய தனி மனிதர்கள். இன்னும் சில வருடங்களுக்குப் பழைய கட்சிகளும், கிழக்கு மேற்கு இணைப்பு நாடுகளும் தங்கள் திட்டத்தை ஐரோப் பாவின் மேல் திணிக்கும் என்பது சாத்தியமே. எனினும் இவர்கள் சிறு தொகையினர் என்பதால் உதாசினம் வேண்டாம். உலக வரலாற்றில் இத்தகைய அறிவுமிக்க சிறு தொகையின ராலேயே எல்லா முன்னேற்றங்களும் துவங்கப்பட்டுள்ளன. சமூகத்தின் ஸ்திரத்தன்மையை அவர்களது தெளிவு கலக்கும் போதுதான் மக்கள் தங்கள் சொந்த நலனை அறிந்துகொள்ளு கின்றனர். இவர்களில்லையேல் ஃபிரஞ்சு நாட்டு பேஸ்டில் சிறை பிளக்கப்பட்டிராது; அமெரிக்கா ஐக்கிய மடைந்திராது. இவர்களே சரித்திரத்தின் சரியான மாணவர்கள், அதன் படிப் பினைகளை நல்ல முறையில் போதிப்பவர்கள்.

இப்போது, இந்தச் சிறுபான்மையோர், அமெரிக்க அறிஞர் களிடையே போலவே நார்வேயிலும், ஃப்ரான்ஸிலும், ஏன்; எங் குமே இருக்கின்றனர். ஆனால் இங்குதான் துயரும் அநுபவமும் உள்ளவர்கள், இல்லாதவர்கள் என்ற பாகுபாடு தோன்றுகிறது. இல்லாதவர்களிடையே அறிஞர் கூட்டம் மிகச் சிறியது, தனித்து நிற்பது. அவர்களது கேஸெண்ட்ரா தீர்க்க தரிசனங்கள் கனவிற் பிறப்பவை, அநுபவத்திலிருந்து வராதவை. அவர்கள் எத்துணை வேண்டுமானாலும் கத்தலாம்; அது எவருடைய இதயத்தையும் தொடுவதில்லை. ஏனெனில், இந்த ஒலிபரப்பைக் கேட்கக்கூடிய துயரமும், அநுபவமும், கற்பனையும் நிறைந்த அலைவரிக்கு மக்க ளாகிய ரேடியோக் கருவிகள் திருப்பி விடப்படவில்லை. எனவே மக்கள் எதைப்பற்றி இந்தப் பித்துக்குளி இவ்வளவு ஆவேசங் கொள்ளுகிறது என்று அறியாமல் தம்பாட்டுக்குப் போகின்றனர். இந்தக் கேட்பாரற்ற நிலைமை கேஸெண்ட்ராக்களையும் பாதிக்

கிறது. தனிமை கசப்பெண்ணத்தை உற்பத்தி செய்கிறது; இதனல் பொது மக்களுக்கும் இத்தகைய அறிஞர்களுக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லாமற் போகிறது. 19-ஆம் நூற்ருண்டு ஃபிரஞ்சுக் குடியானவர்கள் துயரத்தாலும், பசியாலும் பண்படாமலிருந்தால், டாண்டனும், ஸெய்ண்ட் ஜஸ்ட்டும் ந்யூ ரிபப்ளிக் அல்லது பார்டிஸான் ரெவ்யூ போன்ற பத்திரிகைகளின் ஆசிரியர்களாய்த் தம் காலத்தை வீணுக்கியிருப்பர்.

வெளிப்படையாக, ஐரோப்பா கண்டத்துப் பருவங்களும், பண்புகளும் மாறிவிட்டன. குறைந்தபட்சம் அங்குள்ளோரது மதோன்மத்தம் தீர்ந்து விட்டது; அமெரிக்கப் போர் வீரனிடமும், அதிகாரியிடமுமுள்ள, இதெல்லாம் என்னவென்று விளங்காத, அந்த இனிமையான, மென்மையான, மகத்தான அறியாமை அழிந்துவிட்டது. அமெரிக்க ராக்ஷஸ டாங் (Tanks)கிகளைச் சூழ்ந்து ஃபிரஞ்சு அல்லது பெல்ஜியன் கிராமப்புறத்தவர் நிற்கும் போட்டோப் படங்களை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா? அவர்கள் சாக்லெட் வாங்கக் கைநீட்டுகிருர்கள்; கோபுரச் சிகரத்தின் மேல் பூத்தூவுகிருர்கள். அவர்களில் ஒவ்வொருவரும் அநுபவத்தில் உள்ளிருக்கும் பையன்களுக்கு ஒரு நூற்ருண்டு மூத்தவர்கள். சிரிக்கும்போதும் அவர்கள் கண்களிலே இவ்வொளியைக் காண்கிருேம்; மோட்டாரோட்டியை முத்தமிடும் அந்த இளம் பெண்ணிடமும் இதைக் காணலாம். இவர்களே அநுபவமுடையவர்கள், (உள்ளவர்கள்). இவர்களே நமது எதிர்கால நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்கள். இந்தச் சிறுபான்மையோர் தனிப்பட்ட வெற்றறிவுக் கூட்டத்தினின்றும் வந்தவர்களல்ல; தடுப்பியக்கங்களினின்றும் தோன்றிய செயல் திறமையும், உணர்ச்சிவிறலும் மிகுந்தவர்கள். ஒப்பிட்டுப் பார்க்கும் போது இத்தகையோர் எண்ணிக்கை கொஞ்சம் அதிகமே; இவர்களுக்கும் பொது மக்களுக்குமுள்ள இணைப்பு மனிதத்தன்மை மிக்கது, நெருக்கமானது; எனவே, இவர்கள் வார்த்தைகளுக்கு, கொஞ்ச நாட்களுக்குப் பிறகாவது, மக்கள் சுலபமாகச் செவி சாய்ப்பர். ஏனெனில் சலனமற்ற ஜன சமூகமும் உணர்ச்சியால் வசீகரிக்கப்பட்டுள்ளது. இதனுலேயே போட்டோவிலுள்ளவர்கள் உள்ளிருக்கும் பையன்களைக் காட்டிலும் முதியவர்களாய்த் தோன்றுகின்றனர்.

'துன்பமுற்ருேர் துயரை மறவார்' (souffrir passe : avoir suffert ne passe jamais). எனவே, உடனடியாக அரசியல் உருவம் பெருவிடினும், கொஞ்ச காலத்துக்கு வெளிப்படாமல் மறைந்திருப்பினும் துன்பத்தின் அநுபவ நினைவு அவர்களை விட்டு நீங்காது. அவர்களும் முட்டாள்தனமும் குற்றங் குறைகளும் புரியலாம். ஆனல் அவை பழைய முட்டாள்தனவ்

களாகவும், குற்றங் குறைகளாகவும் இருக்கா! ஏன் அவை அவர்களது குற்றங் குறைகளாலன்றி, வெளியாரால் சுமத்தப் பட்டதாகவும் இருக்கலாம்; எனவே இவர்களது சச்சரவையும் கண்டதும்—இவர்கள் பழைய முட்டாள்களே; துன்பம் இவர்களை மாற்றிவிடவில்லை என்று ஒரேடியாகக் கூறிவிடவேண்டாம். பழைய காலத்தில் இந்த சந்தர்ப்பம் அவர்களுக்கு அளிக்கப்படவில்லை; இன்றுள்ள நிலையில் அவர்கள் ஒரு சிறிது வெறிகொள்ளுவது மன்னிக்கத்தக்க குறையே.

ஆனால், உங்களுக்கு இத்தகைய மன்னிப்பிற்கு இடமேயில்லை. அதிகார அடக்குமுறையாலோ, கைவிட்டுவிடுவோமென்ற பயத்தாலோ உங்கள் விதியை நிர்ணயிக்கும் இரு பெரு தேசங்களுக்கிடையே சிக்கி நீங்கள் பஜ்ஜியாகவில்லை. இன்னும் சில நூறு ஆண்டுகளுக்காவது உங்களது ராஜ்யங்களின் மேல் தென் அமெரிக்க வெனிஸூலன் படைகள் தண்டிறங்கப் போவதில்லை. அல்லது, உங்களிடையே ஒரு தேசியப் புரட்சி இயக்கத்தைக் கனடா உற்பத்தி செய்து பொருளுதவி அளித்து ஆதரிக்கப் போவதில்லை. ஒரு தலைமுறைக்குள்ளாக நீங்கள் மேற்கு ஐரோப்பா அடிமையாவதைத் தடுத்துக் காத்திருக்கிறீர்கள். முதல் தடவை ஃபிரஞ்சு சமாதிகளில் புதையுண்டுள்ள உங்கள் வீரர்களின் த்யாகப் புகழைப் பறித்துக்கொண்டீர்கள். மறுபடியும் அவ்வாறே செய்யப்போகிறீர்களா என ஐரோப்பா தன்னைத் தானே கேள்வி கேட்டுக்கொள்ளுகிறது.

## 3

சுதந்திரம் சூழ்நிலை அளவைப் பற்றியது; எனவே, நம்மை அறியாமலேயே நாம் படிப்படியாக அடிமைத்தனத்தை அடையக்கூடும். இது மேலை நாகரிக முழுமைக்குமே பொருந்தும். உலக வரலாற்றில் ரோமாபுரியின் வீழ்ச்சியைப் போன்ற பெரும் பெரும் வீழ்ச்சிகள் ஒரு நாளில் திடீரென்று வந்தவையல்ல. பல நூற்றாண்டுகள், பத்தாண்டுகள் மலைச் சரிவில் மெதுவாக வழுக்கி வழுக்கி வந்தவை.

மனித இயற்கையின் ஒரு விநோதமான தன்மை, உண்மையான துயரங்கள் மென்மையான சில்லறை விஷயங்களால் மூடி மறைக்கப்படுவதே. காச நோயின் ஆரம்பம் எலும்புருக்கி நோயைப் போன்று அவ்வளவு படாடோபமுடையதல்ல. மனோவியாதிகள் ஆபத்தில்லாத அற்பங்களில் ஆரம்பிக்கின்றன; ஆனால் நரம்பு நோயோ படபடத்துப் பொங்குகிறது. போரிடையே உள்ள அமைதி நேரத்திலேயே வானமும், வயல்களும் கனவு காணும் சாந்தமயமான கனிவுகளாய்த் தோன்றுகின்றன என்பதை ஒவ்வொரு போர்வீரனும் அறிவான். நோயாளி

அற்பமென்று ஒதுக்கிய எண்ணங்களாலும், கனவுகளாலுமே அந்த மனோ வியாதி வந்துள்ளதென்பது ஒவ்வொரு மனோ வைத்தியனுக்கும் தெரியும், ஒரு வருடத்திற்குப் பிறகு ஒருவன் தன் தினசரி (டைரி) குறிப்பேட்டைப் பார்ப்பானாயின், அவன் முக்கியமாகக் கருதிய செயல்கள் தம் முக்கியத்தை இழப்பதைக் காண்பான்; இந்த விதி சொந்த வாழ்க்கை வரலாறுகளுக்கும் பொருத்தமானதே.

விநோதமாகத் தோன்றினாலும் இதன் காரணம் வெளிப்படையானதே. வாழ்வின் பெரும் தாக்குதல்களைச் சிதறடித்துச் சில்லறைத் துளிகளாக மாற்றக்கூடிய ஒரு சல்லடை வலைக்குள்ளேயே மனித மனம், சாய்தல், வளைதலின்றித் தன்னிலையில் நிற்க முடியும். இச்சல்லடையில்லையேல் இளவயதிலேயே நாம் பைத்தியக்காரர்களாயிருப்போம். எனவே, இது மிக மிக அவசியமானது, எனினும், இதிலும் குறைகளில்லாமலில்லை. ஆபத்துக் காலத்தில் நம் அறிவை இது காப்பாற்றுகிறது; மற்ற சமயங்களிலோ மழுங்கிப் போய் மதோன்மத்தமான திருப்தியை உற்பத்தி செய்கிறது. இங்கிலீஷ்காரரது, மிதமதிப்பிடுத்தன்மை இதனடியாகப் பிறந்த குணம். இக்குணம் இங்கிலாந்து அதிகார மிதப்பிலிருந்த விக்டோரியா ராணியின் காலத்திலேயே முளைத்து விட்டது.

துன்பம் இச்சல்லடையின் துளைகளைப் பெரிதாக்குகிறது; இதுவே இல்லாதவனைக் காட்டிலும் உள்ளவனுக்கு உயர்வு தருவது. ஒழுக்க நெறி உபதேசங்களெல்லாம் சல்லடைத் துளைகளைப் பெரிதாக்கும். இந்த வித்தையை நாம் இயல்பாகச் செய்ய வேண்டும் என்பதாலேயே, இது மிகவும் கஷ்டமான காரியம்; இதனாற்றான் சமாதான முயற்சியைக் காட்டிலும் போர் முயற்சி சுலபமாயுள்ளது...!

# மாயையின் கூடு

நாஸ்திக சகாப்தங்களே புதிய குருட்டு நம்பிக்கைகளின் தொட்டில்கள்

—அமில்

ந்யூடன் ப்ரின்ஸிபியா (Principia—பௌதிக சாஸ்திரத்தைப் பற்றிய கணித நூல்) வை மட்டும் எழுதவில்லை. நரகத்தின் அமைப்பைப் பற்றியும் எழுதினர். இன்றுவரையில் நாம் அநுபவிப்பதற்கும், அநுபவசாத்தியத்திற்கும் விரோதமான பல நம்பிக்கைகளைக் கொண்டிருக்கிறோம். நம்பிக்கையென்னும் வெப்பமான நீராவியும், ஆராய்ச்சியென்னும் பனிப்படலமும் நம்முடைய மூளைக்குள் பக்கம் பக்கமாய்ப் பொருத்தப்பட்டுள்ளன. எனினும் அவை ஒன்றையொன்று பாதிப்பதில்லை, நீராவி உறைவதில்லை, பனிக்கட்டி கரைவதில்லை. அடிப்படையில் மனித மனம் பிளவுபட்டது (sehizophrenic); குறைந்தபட்சம் ஒன்றையொன்று தழுவாத இரு பிளவுகள் உள்ளன. இவ்விரு பகுதிகளுள் ஒன்று நோய் கொண்டது, மற்றொன்று சாதாரணமானது; இரண்டும் அறிவிற்கு அப்பாற்பட்ட தன்மைகளே; முன்னது தனிப்பட்டது. பின்னது பொதுவானது. வானநூல் கருவிகளிலும், கிறிஸ்தவக் கொள்கைகளிலும் நம்பிக்கையுடைய வானஸாஸ்திரியும், படைப்பாடிப் புரோகிதனும், (மதகுருவும்); தொழிலாளக் கோடீஸ்வரர்களை ஒப்புக்கொள்ளும் கம்யூனிஸ்டும், மணம் செய்து கொள்ளும் மனோதத்துவ ஆராய்ச்சியாளனும், தன் எதிரிகளைக் குறைகூறும் பிடிவாதக்காரனும் இத்தகைய—பிளவுபட்ட மூளை யுடையவர்களே. பூர்வ குடிகளுக்கு தாங்கள் வணங்கும் விக்ரகம் ஒரு மரப்பொம்மை என்பது தெரியும். எனினும் அதற்கு மழை பெய்விக்கும் சக்தி உண்டென்று அவர்கள் நம்பினர். அப்படியே நம் நம்பிக்கைகள் படிப்படியாக மெருகேறின. எனினும் அடிப்படையான மனத்தின் இருமை மட்டும் மாறவேயில்லை.

இந்த இருமை தனிப்பட்ட சில நரம்பமைதிகளோடு சம்பந்தமுடையது என்பதற்கான அறிகுறிகள் தோன்றுகின்றன. சமீபகால ஆராய்ச்சியிலிருந்து சில முடிவுகள் ஏற்பட்டுள்ளன. உணர்ச்சியும், ஊக்கமும் முதன் முதலாக உற்பத்தியான தால்மஸ் (thalamus) என்னும் மத்திய மூளைப்பகுதியைப் பற்றியன; வாதப்பண்பும், அறிவு ஆராய்ச்சியும், மூளையில் புதிதாகத் தோன்றும் இரு அரை வட்டங்களின் பாலியல் கார்டெக்ஸ் (pallial cortex) என்னும் மேற்பகுதியை இடமாகயுடையன.

மிருகங்களைப்பற்றிய பரிசோதனைகளிலும் சென்ற யுத்தத்தில் தலைக்காயம்பட்டு வந்தவர்களைப்பற்றிச்செய்த ஆராய்ச்சிகளிலும் ஒரு விஷயம் வெளியாயிற்று. கொடுக்கப்பட்ட சந்தர்ப்பத்தில் ஒருவன் மத்திய மூளை (thalamus) ப்படியும், மூளை விளிம்பு (cortex)ப் படியும் என்ன, இருவகையாக நடந்துகொள்ளுகிருன். முன்னது உணர்ச்சி மயமானது; பின்னது ஆய்வு மயமானது. குருட்டு நம்பிக்கைகள் உணர்ச்சியின்பாற்பட்டன, அவை உண்மைபோலத் தோன்றுகின்றன. நம்பகத்தை உடல் குழைவுகளிலுள்ள சதை வளைவுகளினுல் காணும்காட்சி (viscera) யென்று வரையறுக்கலாம். மத்திய மூளைப்படியான நம்பகம் விருப்பத்தாலோ, பயத்தாலோ ஏற்படுவது. குரங்குகளிடமும், காட்டு மிராண்டிகளிடமும், குழந்தைகளிடமும் நம் தினசரி வாழ்வில் 24 மணியில் 23 மணி நேரம் நம்மிடமும் இத்தகைய நம்பிக்கையைக் காணுகிருேம். மூளை விளிம்பினுல் ஏற்படும் நம்பகம் பாரபட்சமற்ற அறிவு ஆராய்ச்சியின் விளைவு. அது மனிதன் புதுமையாகப் பெற்ற மேன்மையான பரிசு. சதைத்திகழ்ச்சியில் ஒரு சிறு உரசல் ஏற்பட்டாலும் உடனே தனக்குத் தாகுைவே இயங்கும் தந்திகளான நரம்புகள் அதை மத்திய மூளைக்கு அறிவித்துவிடுகின்றன. ஒரு முறை எழுச்சி கொண்ட மத்திய மூளை மனிதனது சகல காரியங்களையும் அடக்கியாளுகிறது.

சென்ற 50 ஆண்டுகளில் மனித இயல்நூ (anthropology) லும் மனநூ (psychology)லும் ஒரேவகையான முடிவுக்கு வந்துள்ளன. லெவிப்ருல் பூர்வகுடிகளின் மனம், வாத இயல்புக்கு முந்தியது என நிரூபித்தார்; தத்துவஞானி கேண்ட் கூறிய பொது மூலங்களான காலமும், இடமும். காரணமும் பழைய மூளையில் கிடையாது; அம்மூளை அறிவு ஆராய்ச்சியுடையதல்ல, முன்பே தயாராயிருந்த நம்பகங்களை ஏற்பது; ஃப்ராய்ட் எண்ணங்களின் வேரோட்டத்தை பழங்குடிகளின் விதிவிலக்கு (totem and tabu) கள் வரையில் ஆராய்ந்தார். ஜங் சில பழமையான உருவகங்களும், நம்பகங்களும் மனித ஜாதியின் பொதுச் சொத்து என்பதை விளக்கிக் காட்டினுர். இன்றைய மொழி (philology) நூலும் ஏறத்தாழ இதே முடிவுக்கு வந்துள்ளது. ஆக்டென்னும், ரிச்சர்ட்ஸும் வார்த்தைகளும் வாக்கியங்களும், பழங்குடி மக்களின் உருவ, உருவகங்களையே குறிப்பிடுவதைத்தெளிவாக்கியுள்ளனர். எனவே இறுதியில் விஞ்ஞானம் தன் அறிவு மூலம் மனித நடையுடை பாவனைகளின் அறிவற்ற,அறிவிற்கு அப்பாற்பட்ட தன்மையை ஆராய்ந்தது.

இவ்வாராய்ச்சி விளைவுகளால் பாதிக்கப்படாதது அரசியல் மட்டுமே. இரண்டாவது, மூன்ருவது சர்வ தேசிய இயக்கங்

களும், சர்வ தேசிய சமுதாயப் பொதுவுடைமையும் தோல்வி யுற்றதற்கு அடிப்படையான காரணம் மனித மனத்தின் அறிவிற்கும் அப்பாற்பட்ட தன்மையைப் பொருட்படுத்தாததே. சோஷலிஸ தத்துவமும், தீவிரவாதப் பிரசாரமும் மனிதனை அறிவு ஆராய்ச்சிமயமானவன் என்றே கருதுகின்றன. எனவே வாதத் தாலும், மாலைப் பள்ளிக்கூடங்களாலும்? அறிக்கைகளாலும், பெங்க்வின் சிறு நூல்களாலும் மனிதனது, உணர்ச்சியைத் தூண்டி அதற்கு ஏற்ப ஊக்கத்துடன் தொழிற்படுத்தலாம் என்று நம்பின. உள்ளுணர்ச்சி, பழமையான மூளையின் பகுதி, உருவக உறையுள், கனவுலகம், கணமூலகங்கள் (ductless glands), தன்னிச்சையாய் இயங்கும் நாடி நரம்புகள், இன்னதென்று தெரியாத அகம் (id)-இவையே மனித மாட்சி (homosapiens) யின் 100-க்கு 90 பகுதி. இப்பகுதியை மேற்கூறிய இயக்கங்கள் கவனிக்கவில்லை. எனவே தீவிரவாதத்தால் பகுத்தறிவோடு பொருத்திவைத்து ஃபாஸிஸத்தை வெற்றிகொள்ளமுடியவில்லை. இதனாலேயே இப்போதுள்ள பயங்கரப் படுகுழியில் விழும் தருணத்திலும் தீவிரவாதம் தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்ளு கிறது; ஆழமற்ற நம்பகத்தோடு ஆரவாரிக்கிறது.

## 2

தீவிரவாதத்தின் தோல்விக்கு அதன் தலைவர்களின் குறை கள் மட்டுமே காரணமல்ல. தோல்வியின் வேர் இன்னும் ஆழத்திற்குப் போகிறது.

18-ஆம் நூற்றாண்டின் முடிவுவரையில் புரட்சி இயக்கங் கள் சமயத்தின் அடிப்படையிலோ அல்லது சமயசம்பந்த மாகவோ நடைபெற்றன. அறிவுக்குப் பொருத்தமான வாழ்க் கையின் முன்னேற்ற லட்சியங்களையும், அறிவுக்கு அப்பாற் பட்ட அகண்டத்தின் ஆசையையும் இப்புரட்சிகள் இணைத்தன. வேறு வார்த்தையில் இவை உணர்ச்சிகள் நிரம்பித் ததும்பிய திணிப்புகள். ஆனால் ஃபிரெஞ்சுப் புரட்சி ஒரு பெரிய மாறுதலை உற்பத்தி செய்தது.

சமயச் சீர்திருத்த இயக்கம் குறைகள் மிகுந்த மதகுருமார் களைக் கடவுளின் பெயரால் தாக்கியது. ஆனால், கடவுளை இருந்த படியே நிலை நிறுத்தியது. ஃபிரெஞ்சுப் புரட்சியோ நேரடியாக மதக் குருமார்களை மட்டுமல்ல, கடவுளையும் தாக்கியது. ராபெஸ் பரி கடவுளுக்குப் பதில் அறிவுத் தேவதையை உருவாக்கினர். ஆனால் அவர் முயற்சி வெற்றி பெறவில்லை. அதிர்ஷ்டவசமாக கடவுளின் ஸ்தானத்தில் வேறு அகண்டங்கள் தோன்றின. சுதந்திரம் (liberte), சமத்துவம் (egalite), சகோதரத்துவம் (fraternite), முதலியவை வெறும் கூச்சல் அல்ல, விண் உருவகங்

கள். இவை போன்றவையே மூவர்ணமும், ப்ரிக்கிய (Phrygia) தலைகரும், ரோமாபுரிப் பண்பாடுகளும், கௌன்சிலர்களும், தேச பக்தர்களும், புதுப் பஞ்சாங்கமும். இவையே இப்புது மதத்தின் புராணங்களாயின. கிறிஸ்தவக் கோயில் கடவுள் ராஜ்யத்தை உலகில் பரப்புவதற்குப் பதில் மனித உரிமை மதத்தைப் பரப்பும் ஒரு கருவியாயிற்று. அமெரிக்காவின் சுதந்திர சாசன (The American Declaration of Independence)த்தில் கீழ்க்கண்ட வாக்கியம் வருகிறது: "எல்லா மனிதர்களும் சமமாகப் படைக்கப்பட்டவர்களே...இதை நிரூபணத் தேவையற்ற நிதர்சன உண்மையென்று நாங்கள் நம்புகிறோம்." இவ்வாக்கியத்தில் 'நிரூபணத்தேவையற்ற நிதர்சனங்கள்' என்னும் சொற்றொடரே முக்கியமானது. இதுவே அடிப்படை நம்பகங்களை இயக்கும் அச்சாணி; அறிவியல் வாதத்திற்கு அப்பாற்பட்ட ஆன்மிக தரிசனம்.

எனினும் இப்புதிய தேவதைகள் அதிக நாள் மக்களை வசிகரிக்கவில்லை. இவைகளின் ஆட்சி 2000 வருடக் கிறிஸ்தவக் கதைகளின் ஆட்சியோடு ஒப்பிட்டுப் பார்த்தால் ஒரு நூற்றாண்டுக்கு மேலில்லை. காரணங்கள் வெளிப்படையானவை. கிறிஸ்தவ சமயமும், சடங்குகளும் மனித வரலாற்றில் மிக மிகப் பழங்காலத்திலிருந்தே வேரூன்றி வளர்ந்தவை; ஜூடுவா (Jedua) ஸுமேரியா (Sumerta), பாபிலோன் (Babylon) வழியாக கற்கால (neolithic) மனிதரது ஜாலவித்தைகளையும், மிருக வணக்கங்களையும் அடிப்படையாகக் கொண்டவை. மனித உள்ளத்தின் தெளிவற்ற அடித்தட்டிலேயே முளைத்தவை. ஆனால், 1789-இல் உற்பத்தியான தேவதா உருவங்களோ அறிவாராய்ச்சியின் மூலம் பிறந்தவை. கொஞ்சகாலமே தெய்வ மற்ற வெறுமையைக் குறைகளின் உச்சமான (fautc de mieux) இந்தச் சிந்தனை பூர்வ உருவங்களால் நிரப்பமுடிந்தது, எனினும் இவ்வுருவங்களுக்கு உயிர் நீடிக்கவில்லை; இவற்றால் அகண்டத்திடம் மனுதனுக்குள்ள ஆர்வத்திற்கு உருவம் கொடுக்க முடியவில்லை; அகில அமைப்பில் அவனுக்குள்ள குறைகளையும், ஏமாற்றங்களையும், பழைய பயங்களையும் நீக்க முடியவில்லை. உணர்ச்சிமயமான மத்திய மூளையில் அவற்றிற்கு இடமில்லை. அவை உலகாயத சம்மேளனமான மாதிரி (ersatz)களே. கடவுளர் கார்முகில் ககனத்திலும், புன்மாலை மயக்கத்திலும் வசிப்பர். தீவிரவாதிகளின் தெய்வங்களோ ஃபிரெஞ்சுக்காரர்கள் கூறுவதுபோல் தெளிவுற்ற அறிவுச் சகாப்தத்தின் வரம்பில் உதித்தவர்கள்.

19-ஆவது நூற்றாண்டின் மத்தியில், 1848-க்குப் பிறகு இப்புதிய மதங்கள் தங்கள் பயபக்தி சக்தியை இழந்து விட்டன.

தேப் (Thabes) ஸுக்கு விரோதமான ஏழுவீரர் (epigones) களைப்போன்ற ஃபிரெஞ்சுப் புரட்சியின் புரோதான், ஃப்ரோரியர் ஸெயின்ட் ஸைமன், முதலியோர் தீர்க்கதரிசிகளல்ல, பித்துக் குளிகள். தேய்ந்து வரும் கிறிஸ்தவ மதத்தின் வாரிசாகத்தக்க தடைபடாத உணர்ச்சி மிக்க இயக்கங்கள் எதுவும் தோன்ற வில்லை.

தற்கால சோஷலிஸவாதிகள் இதன் அவசியத்தை நன்கு உணர்ந்தனர். மதம் மக்களுக்கு அபினி மயக்கம் போன்றது. அதை விளக்க அறிவுக்குப் பொருத்தமான நல்ல உணவு போன்ற கொள்கைகள் தேவை. விஞ்ஞானத்தின் வேகமான வளர்ச்சி டார்வின் பரிணும தத்துவத்துடன் கூடி அறிவாராய்ச் சியில் அசையாத நம்பிக்கையை உற்பத்தி செய்தது. இதனுல் விளைந்த பளிங்கு போன்று தெளிந்த ஒளிமயமான உலகில் நிழ லுக்கும்,புன்மாலைச்சாயைகளுக்கும்,புராணக்கதைகளுக்கும் இட மில்லை. இந்தச் சூழ்நிலையில்தான் விஞ்ஞானமயமான மார்க்ஸிய சமுதாய சோஷலிஸத் தத்துவம் பிறந்தது. குதிரைக்கும் அதன் மேல் சவாரிபோவோனுக்கும் உள்ள சம்பந்தமே உணர்ச்சிக்கும் அறிவிற்கும் இருப்பதாகக் கருதப்பட்டது. குதிரைமேல் செல் வோன் எண்ணமயமான அறிவு; குதிரை நம் முன் இருக்கும் மிருகத்தனமான கருப்புணர்ச்சியின் கரு. இன்று நாம் மிகப் பணிவுள்ளவர்களாய் விட்டோம்; வெறுங் குதிரைக்கு பதில் கிரேக்கப் புராணத்தில் வரும் ஸெண்டார் (centaur) என்னும் நரக்குதிரையே பொருத்தமான உபமானம் என்று கருதுகிருேம். ஆனுல் இடையில் மற்றவர்களைக் குதிரை சவுக்கால் அடித்து ஓட்டவிட்டு, சவாரி செய்வோனிடம் வாதம் புரிவது நம் வழக்க மாய் விட்டது.

இதன் விளைவுகள் எதிர்பார்த்தவையே. ஒன்றரை நூற் ருண்டுக்குள் எத்தனையோ இயக்கங்கள் ஒன்றன்பின் ஒன்ருய் வந்து வந்து மடிந்தன. ஜாகோபினிஸம் (Jacobinism) ஃபோரியரி ஸம் (fourierism), யுடிலிடேரியானிஸம் (Utilitarianism—காரிய வாதம்), முதலாவது, இண்டாவது சர்வதேசியங்கள் (Internationals) ஓவெனிஸம் (Owenism) தொழிற்சங்க இயக்கம் (Trade Unionism), அராஜகம் (Anarchism) ஃபேபியனிஸம் (Fabianism) வில்ஸோனிஸம் (Wilsonism) சர்வதேச சங்கம் (League of Nations) வேமார் குடியரசு (Weimar Republic), 3-வது சர்வதேசியம் (Third International)—இவைகள் யாவும் அறி வாராய்ச்சி சகாப்தத்தில் வேர்கொண்ட விருட்சத்தின் கிளைகளே. பத்து இருபது வருடங்களுக்குள் இக்கிளைகள் ஒவ்வொன்றும் செத்த கிளைகளாய்ச் சிரழிந்தன.

எனினும் இவ்வாறு அரைகுறைக் கருவாகத் தோன்றிய இயக்கங்களின் அநுபவபூர்வமான விளைவுகள் சரித்திரத்தில் ஒப்பு உவமை காண முடியாத அளவுக்கு அபாரமானவை. இவ் விளைவுகளை எள்ளிநகையாடுவோர் மார்க்ஸ் எழுதிய கேபிட்ட லில் வரும் சென்ற நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஆலைகளில் இருந்த குழந்தைத் தொழிலாளிகள் பட்ட கொடுமைகளையோ, அல்லது ஸ்பிட்ஹெட்டிலும் நோரிலும் நடந்த புரட்சியின் கதை யையோ அல்லது மாகாம் (Maugham) எழுதிய லாம்பத்தின் லிஸாவையோ படித்துப் பார்ப்பார்களாக. 1500-வருடங்களில் கிறிஸ்தவ மதம் செய்த நன்மைகளைக் காட்டிலும் இந்த உலக யுத்த இயக்கங்கள் 150 வருடங்களில் மக்கள் வாழ்வில் எத் தனையோ நிதர்சமான முன்னேற்றங்களை வகுத்துள்ளன. ஆனால் இந்த முன்னேற்றங்களெல்லாம் உலகப் பொருள்களைப் பற்றிய வையே. இவற்றை இவற்றின் நோக்கங்களைக் கொண்டு அளந்து பார்த்தால் மிஞ்சுவது தோல்வியே. இவற்றைக் குறித்து இவ் வியக்கங்கள் ஆரம்பமாகவில்லை. ஒவ்வொன்றும் கனக மயமான ஒரு கனவுலகைக் காண்பதற்காகவே ஏற்பட்டது. திவாலான ஒரு கோடீஸ்வரனைத் தூக்கிலிட்ட பிறகு பிணத்தின்மேலுள்ள சிறுசொத்துக்களைத்தூக்குச் சேவகர்கள்பங்கிட்டுக்கொள்ளுவது போல் கொஞ்ச நஞ்சமுள்ள அநுபவபூர்வமான வெற்றிகளும் ஏறத்தாழ இவ்வியக்ககங்களின் தோல்விகளால் விளைந்தவையே. எனவே லௌகிக துறையில் இத்தீவிரவாத இயக்கங்கள் நிதான மான, எனினும் நிச்சயமான சமூக முன்னேற்றத்தைக் கொடுத் திருப்பினும், மனோநிலையில் வளர்ந்துகொண்டே போகும் எத் துணையோ ஏமாற்றங்களையும், திகைப்பையுமே விளைவித்துள் ளன. இழந்துவிட்ட அகண்ட நம்பிக்கைக்கும், உயர்ந்த உண் மைக்கும், நிலையான ஒழுக்க நெறிகளுக்கும் பதிலாக இவைக ளில் எதுவுமேயில்லை. முன்னேற்றம் என்பது சென்ற காலத்தில் வேர் கொள்ளாமல் வருங்காலத்தையே எதிர்பார்ப்பதால் ஆழ மற்ற அற்பமாகிறது. தீவிரவாத உணர்ச்சிகள் மேலும் மேலும் வேரற்றுத் தள்ளாடும் விருட்சங்களாயின. அவற்றின் ரஸசத்துக் கள் வறண்டு போயின. பிரிட்டிஷ் தொழிற்கட்சி (British Labour) யும் ஜெர்மன் சமுதாயக் குடியாட்சி (German Social-Democrats) யும் அதிகாரத்திற்கு வந்தபொழுது ஏற்கனவே மேற்கூறிய ரஸசத்துத் தீர்ந்து விட்டது; உள்ளத்தின் அடித்தட்டிலிருந்த உணர்ச்சிகள் யாவும் வெட்டப்பட்டன; வெற்றறிவு மயமான நீதிகள் ஏற்பட்டன; ஃபிரெஞ்சுப்புரட்சியின் விளைவு வால்டேரின் வெறும் சமயோசித விநோதங்களே.

ஒரு கம்யூனிஸ்ட் எழுத்தாளர் மகாநாட்டில், வீரியமிக்க புது உலக அமைப்பைப்பற்றிய மணிக்கணக்கான பிரசங்கங்

களுக்குப் பிறகு ஆண்ட்ரி மால்ராக்ஸ் அவசரமான ஆரவாரத்தோடு ''டிராம் வண்டியின் கீழ் சிக்கி இறந்த மனிதனைப் பற்றி என்ன செய்வது?'' என்று கேட்டார். வெறுமைப் பார்வைகளே அவருக்குப் பதில் கூறின. எனவே அவர் அக்கேள்வியைப் பின்னும் வற்புறுத்தவில்லை. எனினும் நமக்குள்ளே ஒரு குரல் இருக்கிறது, அக்குரல் வற்புறுத்திக் கேட்கிறது "தனிப்பட்ட ஜீவன், யாவற்றையும் விட நாம் விரும்பி வெறுக்கும் நம் ஆன்மன் சாஸ்வதமானது என்ற நம்பிக்கை அறுத்தெறியப்பட்டது. அப்புண்ணின் வடு இன்னும் சொஸ்தமாகவில்லை. போரில் மடிவதும்,விஞ்ஞானத்திற்காக உயிரை விடுவதும் ஓர் அளவு இக்குறையைச் சமனம் செய்கின்றன. ஆனால் டிராம் வண்டியில் சிக்கி இறப்பவனையோ அல்லது நீரில் மூழ்கி மடியும் குழந்தையையோ பற்றி என்னவென்பது. பழங்கால மனிதனிடம் இக்கேள்விக்கு விடை இருந்தது. வெளிக்கு அசந்தர்ப்பமாகத் தோன்றும் ஆபத்துக்கள் மேலான ஒரு அமைப்பின் பகுதிகளே. விதி குருடல்ல. புயல், எரிமலை, பெருவெள்ளம், தொத்து நோய்கள் யாவும் உயர்தரமான நுண்ணிய ஒரு திட்டத்தின் ஒன்றிய உறுப்புகளே. நம் வாழ்க்கையை மேலிடத்து தெய்வங்கள் கவனிக்கின்றன. நரமாமிச பட்சிணிகள், எஸ்கிமோக்கள், ஹிந்துக்கள், கிறிஸ்தவர்தள் எல்லோரிடமும் கேள்விகளிலெல்லாம் மேலான இக்கேள்விக்கு விடையுண்டு. எவ்வளவுதான் அமுக்கப்பட்டாலும், கேலிசெய்யப்பட்டாலும் வெட்கத்தோடு மறைக்கப்பட்டாலும் இக்கேள்வியே நம் காரியங்களை இயக்குவிக்கும் காரணம். எனினும் நெடுநேர மௌனத்திற்குப் பிறகு மால்ராக்ஸுக்குக் கிடைத்த விடை இதுவே.

"பூரணமான சோஷலிஸ சமுதாயப் போக்குவரவு அமைப்பில் விபத்துகளே இரா".

## 3

முதலாவது உலக யுத்தம் முடிந்ததும் குமுங்கிக் கிடந்த ஏமாற்றம் வெடித்தது. ஒதுக்கப் பட்டிருந்த நம்பகவேட்கை, அகண்டமான வினு விடைக்கு அப்பாற்பட்ட ஒரு உண்மையின் உறுதி ஐரோப்பா முழுவதிலும் பரவலாயிற்று. இது அமுக்கப் பட்ட வற்றின் புனர்ஜன்மம்; மூளையின் விளிம்பு ஆதிக்கமிழந்து தோல்வியுற்றது. மத்திய மூளை பழிவாங்கத் தொடங்கியது. ஒவ்வொரு இடத்திற்கும் தக்கவாறு இந்த மின்வேக வெறி விறுவிறுத்தது, சில நாடுகளில் வெற்றியின் விளைவுகளால் இதன் வளர்ச்சி மெதுவாகியது. வேறு சில தேசங்களில் இதுவே காமக்களறியாய் ஜாஸ் (Jazz) வாத்தியத்தின் அகோர ஆரவாரமாய், அபாரமான உடல் உணர்ச்சியாய் வெறிகொண்டு துள்ளி

யது. வரலாற்று முறையில் நம்பகத்தின் இந்த மறுமலர்ச்சி இரு வகையாகப் பரிணமித்தது. ஒன்று ஃபாஸிஸம்; மற்றொன்று பயபக்தியூட்டிய ஸோவியத் கொள்கை.

ஸோவியத் பயபக்திக் கொள்கை என்பதில் நான் ரஷ்யாவின் உள்நாட்டு விவகாரங்களைக் குறிப்பிடவில்லை. அது ஐரோப்பிய தீவிரவாதிகளின் மனோநிலையை எவ்வாறு பாதித்துள்ளது என்பதையே குறிப்பிடுகிறேன். கிறிஸ்தவ மாயக் கதைகளை இயேசுநாதரைப் பற்றியும் அவர்களது தோழர்களைப் பற்றியும் கண்டுபிடிக்கப்பட்ட சரித்திர உண்மைகள் எவ்வாறு பாதிக்கவில்லையோ அவ்வாறே சோவியத்துகளின் பயபக்திக் கொள்கையும் சரித்திர உண்மைகளால் பாதிக்கப்படவில்லை. இத்தனைக்கும் சரித்திர உண்மைகளின் மேலேயே அக்கொள்கைகள் கட்டப்பட்டிருப்பதாகக் கூறுகின்றனர். இவை ஆழமான தெளிவற்ற உள்ளுணர்ச்சிகளின் ஆசையை மட்டுமே தூண்டிவிட்டது: இதையே நான் நிரூபிக்க முயல்கிறேன்.

## 4

ஃபாஸிஸ்டுகள், ஸோவியத்துக்கள் என்ற இரு வகுப்பினரின் பயபக்திக் கொள்கைகளும் ஒழுங்கான அளவைகளோடு கட்டப்பட்டவையல்ல. பழமையான உருவகங்களின் மேலேயே உருவானவை. எனவே வெறும் மூளையை மட்டுமில்லாமல் முழு மனிதனையுமே அவர்களால் வசிகரிக்க முடிந்தன. இரண்டும் உணர்ச்சி வெள்ளம் உறைய வழி செய்தன.

ஃபாஸிஸ்டுகளின் பயபக்திக் கொள்கை ஒளிவு மறைவற்ற வெளிப்படையானதே. அதன் தலைவர்கள் எல்லோர் எதிரிலுமே தங்கள் கட்சி கோட்பாடென்ற அபினியை மக்களுக்கு வழங்கினர். மண்ணும் குருதியும் (Blood & Soil); அரக்கரைக் கொல்லும் அமானுஷிக மனிதன், துறக்கமான வல்ஹாலா (Valhalla) வின் வீரத் தெய்வங்கள், யூதர்களின் சாத்தான் சக்திகள் யாவும் தேச சேவைக்காகப் பயன்பட்டன. ஹிட்லரின் மேதையில் ஒரு பகுதி, மக்களின் உள்ளுணர்ச்சி வீணையின் சரியான தந்திகளைச் சரியானபடி இயக்கியதே. மற்றொரு பகுதி பலவற்றினின்று பல பகுதிகளை ஒன்றாகத் தொகுப்பது. பொருளாதாரம், சிற்பம், திறமை நுணுக்கம், பிரசாரம், போர் இவைகளில் தற்கால அப்-டு-டேட் முன்னணி முறைகளைப் பின்பற்றுவது. இன்றுள்ள சூழ்நிலையில் பழைமையான நம்பகங்களைப் புதுப்பித்ததே ஃபாஸிஸத்தின் பெருமை. நாஜியக் கட்டிடம் ஒரு விண்ணெட்டும் மாடம் அது பாதலத்தின் எரிமலைகளிலிருந்து பாய்ந்துவரும் வெப்ப மயமான குழாய்களால் பொருத்தப்பட்டுள்ளது.

மறுபுறம், சோஷலிஸ்ட் இயக்கக் கட்டிடம், அது கூரை மேல் ஓர் நீர்த்தொட்டியுடன் கூடியது. என்ருவது ஒரு நாள் மழை பெய்து அத் தொட்டி நிரம்பும் என சோவியத்துக்கள் நம்பினர். ரஷ்யப் புரட்சி மழையை மட்டும் கொண்டு வரவில்லை, வேனிற் காலத்து வெறி பிடித்த மேகங்களையும் கொண்டு வந்தது. அது வரையில் உலர்ந்திருந்த தண்ணீர்க் குழாய்கள் திடீரென்று வெள்ளம் குமுறி வீறிட்டன.

முதல் சில வருஷங்களில் சோவியத் பயபக்திக் கொள்கை ரஷ்யாவின் யதார்த்த நிலைமையைப் பெரும்பான்மை ஒத்துப் போயிற்று. அது ஒரு வீர சகாப்தம், புராணக் கதைகள் வளர்ந்த காலம், புகைக்குப் பின்னல் உண்மையாகவே நெருப்பு இருந்தது.

ஆகா! நெருப்பு! மக்கள் அரசாங்க அதிகாரத்தைக் கைப் பற்றிவிட்டனர், உலகத்தில் ஆறில் ஒரு பகுதி மேல் ஆட்சி செலுத்தினர். சொந்தச் சொத்துடைமை, லாப நோக்கம், காமக் கட்டுப்பாடுகள், சமூகப்பழக்க வழக்கங்கள் யாவும் ஒரேயடியாக ஒழிக்கப்பட்டன. உள்ளவனில்லை, இல்லாதவனில்லை; பணக் காரனில்லை, ஏழையில்லை; எஜமானுமில்லை, சேவகனுமில்லை; பதவியாளனுமில்லை, பாமரனுமில்லை. மனைவியின் மேல் கணவனும், குழந்தையின் மேல் பெற்றோரும்; மாணவன் மேல் வாத்தியனும் அதிகாரம் செலுத்த உரிமையில்லை. மக்களின் வரலாறு அடியோடு புதிதாய்விட்டதுபோல் தோன்றியது. முன்பின் கேட்டிராத இந்த ஆக்ஞைகளின் எதிரொலி இடிபோல் ஒலித்தது. ஸினாய் மலையிலிருந்து வந்த மோஸஸின் பத்து கட்டளைகளைக் கூறிய குரலின் வெறி இவற்றிலும் இருந்தது. இதைக் கேட்டோர் தமக்குள் இறுகிக் கிடந்த ஒரு பாறை பிளப்பது போல் உணர்ந்தனர். அவநம்பகம், சோர்வுணர்ச்சி எல்லாம் விலகி, பொது அறிவு திடீரென உதயமானதை உணர்ந்தனர். தங்களுக்குச் சாத்தியமென்று இதுவரையில் எண்ணாத புதுமையான உணர்ச்சி ஆவேசம் ஒன்று பொங்கியது. ஆழத்தில் அமுக்கப் பட்டு யாருமே அறியாத ஏதோ ஒன்று விடுதலையுற்றது. புதைந்து போய் மறந்த நம்பகம் பொருக்கென்று எழுந்தது. பல பத்தாண்டுகள், ஏன் ஒன்றரை நூற்றுண்டுகள் தீவிரவாதிகள் வரப் போகும் புரட்சியைப் பற்றிப் பிரசாரம் செய்தனர். ஆனல் அது வந்ததும் எல்லோரும் திகைத்தனர். ஒரு கிறிஸ்துவ குரு தனது வாராந்தர உபதேசத்தை முடித்துப் பிறகு திடீரென்று கடவுள் ராஜ்யம் (Kingdom of Heaven) உலகத்தின் ஸ்தாபிதமாகிவிட்டதென்று ரேடியோ செய்தியைக் கேட்டால் எவ்வளவு திகைப்படைவாரோ அத்துணைத் திகைப்பு மக்களுக்கும் ஏற்பட்டது.

தீவிரவாதிகளின்படி இப்புரட்சி பூரணமாக அநுபவத்திற்கு வந்த ஒரு தெய்விக தீர்க்கதரிசனமேயாகும். புத்தகங்களில் மட்டுமேயிருந்த தொழிலாளக் குடியானவ அரசாங்கம் (The Government of Workers and Peasants), எஜமானர்களின் எஜமானத்வ ஒழிப்பு (the Expropriation of the Expropriators) பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் (the Dictatorship of the Prolctatriat) என்னும் கோஷங்களெல்லாம் வெறும் இங்கி (மசியாய்) யாக இருந்ததுபோய் ரத்தமாக மாறின. நாம் முன்பே கண்டபடி தீவிரவாதம் பழைமையின் மேல் கட்டப்பட்டதல்ல. ஏதோ எதிர்பார்க்கும் வருங்காலத்தை உத்தேசித்து உற்பத்தி செய்யப்பட்டது. அந்த வருங்காலம் வந்து விட்டது. குருதியற்ற அக் கனவுலகம் உண்மை மக்களுடன் கூடிய ஒரு உண்மை உலகமாக உருவெடுத்து விட்டது. சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய வண்ண ஆடைகள் அணிந்த மக்கள் ஆசைப் பாட்டுகள் பாடி அப் புத்துலகை வரவேற்றனர். அவ்வுலகம் இவ்வாறுன கற்பனைகளுக்கு இடம் அளிக்கும் வகையில் தொலைவிலிருந்து முன்னேற்றம், நீதி, சமுதாயம் பொதுவுடைமை—இவைகள் வெறும் வெறுமையானஎண்ணங்கள்;கனவுகாணத்தக்க கனல்அவைகளிலில்லை; வணங்கி அன்புற்று ஒருமையாய் அவற்றை அணைந்து கொள்ள முடியாது. ஆனுல் இப்போதோ தங்களுக்கென்று ஓரிடமும் இல்லாத அவர்கள் ஒரு தாய் நாட்டைப் பெற்றனர்; கொள்கைக் கென்று ஒரு கொடியை உயர்த்தினர். வக்ரமான மங்கோலிய (Mongolian)க் கோணலோடும் குறுகுறுக்கும் பளிச்சிடும் கண்களோடும் ஒரு தேசத் தந்தையின் நிழலுக்குத் தாடியும் வைத்தனர். ஒரு மகத்தான மக்களின் மகா காவியம் போன்ற போர்கள் விடுதலைச் சண்டைகள்,இடையே பாலலைக்கா(Balalaika) இசைக் கருவியின் பாடல்கள், இவை யாவும் உணர்ச்சிப் பசிகொண்ட ஐரோப்பியத் தீவிரவாதத்திற்கு இதுவரை யில்லாத அதிகாரத்தைக் கொடுத்துத் திருப்தியளித்தது.

இவ்வகையிலே சோவியத்துக்களின் புராணக் கதை பிறந்தது, பொய் புனர்ஜன்மம் எடுத்தது. ஏனெனில் மனித குலத்தின்மிகப்பழைமையான உணர்ச்சி உருவகங்களைப்புதுமையாகப் படைக்கும் ஸ்தலமாகவும், சந்தர்ப்பமாகவுமே, ரஷ்யா விளங்கியது. பழைய உருவங்களான பொன்னுலகம், நம்பக நாடு, கடவுளின் ராஜ்யம் என்பனவற்றைப் போன்றே ஸோஷலிஸமும் ஏமாற்றமும், பயனற்று மடிவதுமான வாழ்க்கைக்கு மகத்தான ஒரு உருவக உயர்வை அளித்தது. கம்யூனிக் கட்சியில் இருந்த நமக்கு ஸோவியத்து புராணம்—ரஷ்யர்களுக்கல்ல, வெளியிலிருந்து ரஷ்யாவை வணங்கியவர்களுக்கு எத்தகைய பூரணமான வெற்றியைக் கொடுத்தது என்பது நன்கு தெரியும்.

இவ்வாக்குறுதி வரத்தின் இயல்பு வெற்றியின் பலாத்கார மான புரட்சியே. கடைசித் தீர்ப்பு (The Last Judgement), வால் நட்சித்திரம் வருகை முதலானவைகள் அப்புரட்சியில் மிகுந்தன. இதனாலேயே ஸோஷலிஸத்தை மெதுவான சீர்திருத்த முறை களால் அடைவதை இரத்த வெறிபிடித்த கம்யூனிஸ்டுகள் இயல் பாகவே எதிர்த்தனர். புரட்சியின் இரத்தமயமான தீர்க்கதரிச னம் வெற்றிகரமான புத்துலக உற்பத்திக்கு அவசியமாயிருந்தது.

மேற்கு நாடுகள் அரைகுறை உணர்ச்சியோடு படை பலத் தால் போல்ஷிவி (Bolshevism) சத்தைக் கொல்ல முயற்சித்தனர். அதனால் ஸோஷலிஸச் சீடர்களின் உணர்ச்சியும் ஊக்கமும் மிகுந்ததுதான் மிச்சம். ரஷ்யா தியாக பூமி யென்னும் திவ்ய தேஜஸ் பெற்றது. ஐரோப்பாவில் மிகப் பெரிய படை பலம் பெற்று போலந்தை (Poland)யும், பால்டிக் நாடுக (Balticstates) ளையும் விழுங்கி ஏப்பம் விட்ட பிறகும் ரஷ்யாவின் இந்த தேஜஸ் மறையவில்லை. "ரஷ்யாவைத் தொடாதே" என்ற அரசியல் சார்பான கோஷம் வெகு சீக்கிரத்திலே மத வெறி போன்ற வலிமை பெற்றது. இந்த முறையில் தீவிரவாதமற்ற பத்தி ரிகைகளில் வரும் விமரிசனங்களும், விவாதங்களும் விலக்கப் பட்டன. எவ்வளவு நல்ல எண்ணத்தோடும், நேசப்பான்மை யோடும், விருப்பு வெறுப்பற்ற முறையில் ரஷ்யாவைப் பற்றி குறை கூறினாலும் அக்குறை மிதவாதிகளின் கையில் இழிவான ஆயுதங்களாய்விடுமென்று ரஷ்ய அதிகார பீடம் வியாக்கியானம் செய்தது. இது உணர்ச்சியை விளக்கும் யுக்திவாதமே தவிர வேறொன்றுமில்லை. தினசரி மெயில் (Daily Mail) நிருபர் இல்லாத இடத்தும், சொந்த இடத்தில் செய்யப்படும் விமர்சனங்களும் ஸோஷலிஸ பக்தர்களால் குற்றமாகவே கருதப்பட்டன, ரஷ் யாவைக் காக்க வேண்டு மென்ற உணர்ச்சி உண்மையினின்று விலகி நின்றது. பிற நாட்டினரின் சம்சய வாதத்திலிருந்து ஸோஷலிஸக் கோட்பாட்டைக் காப்பாற்றும் முயற்சியாக முடிந்தது,

தான் இழந்த மதத்தை முன்னேற்றம் மீட்டுக் கொண்டது. ஸோவியத் ரஷ்யா மக்களின் புது அபினி (மயக்கம்) யாகியது.

## 5

ரஷ்யப் புரட்சியின் அடிமையாக ஐரோப்பா முழுமையிலும் ஜெர்மனி, இத்தாலி, ஹங்கேரி, பால்கன்ஸ் முதலான புரட்சிகள் யாவும் ஒன்றன்பின் ஒன்றாகத் தோல்வியுற்றன. இந்நூற்றாண் டின் 2-ஆம் பத்து வருடங்களிலேயே முழு ஐரோப்பியப் புரட்சி யைக் கைவிட வேண்டியதே என்ற முடிவு ஏற்பட்டுவிட்டது. அதுவரையில் ஸோவியத் ராஜாங்கமே இப்புரட்சிகளின் உச்சித்

தலைவனாக விளங்கியது, அப்பால் தன்னையே காத்துக் கொள்ளும் பின்னணிப் படையாகியது. சைனா முதல் ஸ்பெயின் வரையில் நடந்த தொடர்பான புரட்சிகளின் தோல்வியில் இப் படை தற்கொலைப் படையாகவே செயல் புரிந்தது. ஸோவியத் அரசாங்கக்ஷேமத்தை முன்னிட்டு உலகப் பொதுத் தொழிலாளர் இயக்கம் இரண்டாம் தரமாகக் கருதப்பட்டது. கம்யூனிஸ்ட் அகிலம் (Communist International) ரஷ்யாவின் வெளி நாட்டு விவகாரங்களுக்கு ஏற்ற ஒரு கருவியாக மாறியது, மற்ற ஐரோப்பிய நாட்டு கம்யூனிக் கட்சிகளில் ஏற்பட்ட திடீர் மாறுதல்கள் ரஷ்யாவின் அரசியல் தந்திரத்தால் விளைந்தவையே, ஒரு மோட்டார் காரோடு இணைக்கப்பட்ட இணைப் பெட்டிகளைப்போல் ரஷ்யாவைப் பின்பற்றிய பிறநாடுகள் தத்தித் தத்தித் தள்ளாடின.

இவ்வாறான மாறுதல் 'ஒரு நாட்டின் ஸோஷலிஸம்' என பகுத்தறிவு வகையில் பாகுபடுத்தப்பட்டது. ரஷ்யாவே தொழிலாளர்களின் தாய் நாடு. அத் தாய் நாட்டின் கோட்டையின் அரண்களை, பிறநாட்டுக் கட்சித் தலைவர்களைத் தியாகம் செய்தேனும், காப்பாற்றவேண்டும். வருங்காலத்தில் கோட்டை அரண் போதுமான அளவு வலிமை பெற்றவுடன் ரஷ்யப் படை பிறநாட்டுத் தொழிலாளிகளின் விடுதலைக்காகப் போர் செய்யப் புறப்படலாம். அவர்களது தியாகம் உரிய காலத்தில் பயன் பெறுவதற்காக நெடுங்கால முதலீடாகும். எனவே ரஷ்யா உலகத் தொழிலாளிகளைக் கைவிட்டு விடவில்லை. கொஞ்ச காலத்திற்குப் பிறகு அவர்களுக்குப் பெரியதொரு வெற்றி கொடுப்பதாக வாக்களித்தது. ஐரோப்பியத் தொழிலாள வர்க்கத்தினின்று ஸோவியத் ரஷ்யா பிரிந்ததும், மக்கா யாத்திரை போல் முன்னமே ஏற்பாடு செய்யப்பட்ட சில பகுதிகளைத் தவிர ரஷ்யாவின் பிற பகுதிகள் எவருமே காணமுடியாதபடி ஒளிக்கப்பட்டதும் கூடி, ரஷ்யா உண்மையை மூடிவைத்தது. கற்பனையைத் தூண்டியது. பயபக்திக் கதைகளை உற்பத்தி செய்தது.

## 6

இந்த மாறுதலால் ஐரோப்பிய தீவிரவாதிகளிடையே ஏற்பட்ட அபாயகரமான விளைவுகளைச் சரித்திரம் நன்கு அறியும். ஐரோப்பா முழுவதிலுமுள்ள கம்யூனிஸ்ட் கட்சிகள் தாமாகவே ஃபாஸிஸத்தின் செவிலிகளாயின. இதைத் தடுத்த அறிவும், தைரியமுமிக்கத் தலைவர்கள் யாவரும் தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டனர்; அல்லது கொல்லப்பட்டனர்; அல்லது போலீஸாரிடம் பிடித்துக்கொடுக்கப்பட்டனர். 3-ஆவது கம்யூனிஸ்ட் சர்வதேசியமான கோமின்டார்ன் (Comintern) ஸோவியத் சர்வாதி

காரத்தைப் பிரதிபலித்தது. ஐரோப்பிய தொழிலாளிகள், அறிவாளிகள் இவர்களது நிலைமையையும் மனப்பான்மையையும் ரஷ்யா கவனிக்கவில்லை. படிப்பற்ற அரைகுறை ஆசியர்களான பாமரரை நடத்துவது போலவே பிற நாட்டுக் கம்யூனிஸ்ட் கட்சியினரையும் நடத்தியது. ட்ராட்ஸ்கி (Trotsky) முதல் போர்கானவ் (Borkenau) வரையில் இதை விரிவாகவும் தெளிவாகவும் தெரிவித்துள்ளனர். ஆனல் இத் தெளிவு அரசியல் துறையை மட்டுமே பற்றியது. ரஷ்யாவின் இந்த நிலையை பிறநாட்டுக் கம்யூனிஸ்டுகள் எந்த மனோபாவத்தோடு ஏற்றுக்கொண்டனர் என்பது இனிமேல் தான் விளக்கப்படவேண்டிய விஷயம்.

இடைவிடாத மனித வேட்டைகள், அடிக்கடி நேரும் முன்னுள்வரை பொதுஜனத் தலைவராயிருந்தவர்களின் தேசப் பிரஷ்டங்கள், கட்சியில் பலபடியான கட்டுப்பாடின்மை, ஆயிரக் கணக்கில் கட்சி ஆட்கள் எதிரிகளோடு சேர்ந்துகொண்டமை, பழைய கோஷங்களைப் புதிய எதிர்மாறன அர்த்தத்தில் திருப்பி தில்லுமுல்லு செய்தல்; நேற்றைய உண்மைகளை இன்று வன்மையோடு எதிர்த்தல், குறைகூறல், காட்டிக் கொடுத்தல், அதிகார வர்க்கத்தை அடிமைகள் போல் வணங்கல்—இவையாவற்றையும் மேற்கு ஐரோப்பாவின் கோடிக்கணக்கான மக்கள் எவ்வாறு தம்மிச்சையாக ஒப்புக்கொண்டனர்? ஐரோப்பாவில் கெஸ்டாபே (Gestapo)வோ அல்லது ஜி. பி யூ. (G.P.U.) போலீஸோ ஆன சர்வாதிகாரங்கள் தான் கிடையாதே.

இவ்வாறன, தங்கள் பகுத்தறிவுச் சக்திகளை தடையற்று அடிமைப்படுத்தும் தன்மை ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்ட காரணுதீத (a priori)மேயாகும். இதை நரம்பதிர் நிலை என்றும் கூற ஒருவர் விரும்பலாம். ஆனல் நாஸ்திகன் அல்லது ட்ராட்ஸ்கியின் (Trotskyite — ட்ராட்ஸ்கியைப் பின்பற்றுவோர்)—இவர்களைக் காட்டிலும் உண்மையான நம்பிக்கையுடையவர்கள்—அந் நம்பிக்கை, இயேசுநாதரைப்பற்றி இருந்தாலும் அல்லது ஸோவியத் புராணத்தைப் பற்றியதாயினும் நிறையும், நிர்ண்ணயமுமான இன்பமும் கூடியவர்கள். ஆழ்ந்த உருவக நம்பகங்கள் சந்தேகத்தோடு போட்டியிடுங்கால் நரம்பதிர் நிலையிலே முடிந்துவிடும். எனவே சந்தேகத்தை ஓட்ட நெளிவு, சுளிவு கூடிய அரண்கள் ஏற்படுத்தப்பட்டன. கத்தோலிக்கர்கள் போலவே ரஷ்ய அதிகாரமும் ட்ராட்ஸ்கி இலக்கியம், சந்தேகாஸ்பதமான பேர்வழிகள், விரோதிகள், இவர்களை ஒதுக்கியது. இவ்வொதுக்கம் இன வெறுப்பை உண்டாக்கிற்று. நல்லவர்களும் வியக்கத்தக்க வகையில் பலாத்கார வெறி பிடித்தவர்களாயினர். இதுவே ஸோஷலிஸத்தின் வெளி அரண்.

உள் அரண் தெளிவற்ற உள்ளுணர்ச்சிகளைப் பற்றியது. தன்னம்பிக்கையைச் சுற்றி மனமே பின்னும் மாயவலையைப் போன்றது. இந்த மாயவலைக்குள்ளான வாதங்கள் அறிவு முறையில் நடத்தப் பெறுவன அல்ல. ஒருவகையான அறிவின் சாயலால் இயங்குவன. மாயவலைக்குப் புறம்பாக உடனே ஒதுக்கப்படும் முட்டாள்தனங்களும், முரண்பாடுகளும் வலைக்குள் அறிவுபோன்ற போலியால் அநுமதிக்கப்படுகின்றன. மனோ சக்திகள் அதிகமாக அதிகமாக இத்தகைய மாயவலைப் பின்னல் களும் அதிகமாகின்றன. பரம்பரைக் கொள்கை (scholasticism), தால்மத் (Talmud) மதம், ரஸவாதம் முதலியவை வியக்கத்தக்க முறையில் சாதுர்யமிக்க முரண்பாடுகள் கூடியன. மத்திய மூளை யின் அறிவில் ஒருவகையான யூக்ளிட் (Euclid) க்ஷேத்ர கணித மில்லாத இயல்பான வாத வளைவு ஒன்று உண்டு. இவ்வளைவு சில அடிப்படைக் கொள்கைகள் (axioms) மேலும், கோட்பாடுகள் (dogmas) மேலும் அமைந்துள்ளது. கம்யூனிஸ்ட் பாஷையில் இதை "யந்திரம் போன்ற அமைப்பில் சரியானதே. ஆனால் வரன்முறை வாதத்தின்படி (dialectically) தவறானது" என்பர்.

சோவியத் பொய்க்கும் உண்மைக்கும் உள்ள இடைவெளி விரிவாகியது. கம்யூனிஸத்தை நம்பினவர் மனத்தில் வரன்முறை வாத வளைவு அதிகரித்தது; அதிகரிக்கவே ஜெர்மானிய அதிகாரி ரிப்பன்ட்ராப்பிடம் புரட்சி மகிமையைக் காண்பதிலும், கோடீஸ்வரனை ஏழைத் தொழிலாளி என்பதிலும், ஒரு மேஜையை வாத்துக்குட்டை என்பதிலும் யாதொரு தவறும் இருப்பதாகத் தோன்றவில்லை. தினசரி பாட்டாளி (Daily worker) என்னும் பத்திரிகையின் சென்ற 10 வருஷகால தலையங்கங் களைப் படிக்கும்பொழுது அதிசய உலகின் ஆலி (Alic in Wonderland) என்னும் அழகிய நூலை அதிசய உலகின் வெறுப்பு மகள் (Malice in Wonderland) என மாற்றிப் படிக்கத் தோன்றுகிறது.

## 7

இந்தச் சூழ்நிலையில் மாயக்கதைகளை விரும்புவோர்களிடம் பொது விஷயங்களையோ, சொந்த விஷயங்களையோ பற்றி விவாதிப்பது வீணே. ஆரம்பத்திலிருந்தே இத்தகைய விவாதங் களில் பாரபட்சமற்ற தன்மை கிடையாது, வாதப் பிரதிவாதங் கள் அவற்றின் தகுதிக்கு ஏற்ப மதிப்பிடப்படுவதில்லை; அவை தம் கொள்கையோடு பொருந்துகின்றனவா, இல்லையேல் அவற் றைப் பொருத்துவது எப்படியென்ற அளவோடு ஆராய்ச்சி நின்றுவிடும். ஒரு குழந்தை தன் கையில் கிடைத்த பண்டத்தை சாப்பிடக்கூடியதாயில்லையா, அழகானதா, அசிங்கமானதா என்ற ஒரு நோக்கத்தோடு நோக்குவது போலவே பொய்யை

விரும்புவோரும் வாதப்பிரதிவாதங்களை மதிப்பிடுவர். உதாரண மாக நீ ரஷ்ய செஞ்சேனையை உற்பத்திச் செய்தது ட்ராட்ஸ்கியே எனில் சரித்திரம் காட்டும் உண்மையாகக் கருதப்படாது. அரு வருப்பான ஒன்றைக் கூறிவிட்டாய், எனவே அதற்கேற்ற தண்டனையை ஏற்றுக்கொள்ளத் தயாராய் இருக்கவேண்டும்.

மேற்காட்டிய இயல்பின் கொந்தளிப்பு வெளிப்படையாகத் தெரியவேண்டுமென்று அவசியமில்லை. அது எண்ணெய் போட்டு மெதுவாக உருளும் ஒரு இயந்திரத்தைப் போன்றது. வேறு வழியில்லாமல் போகும்போது இந்த பயபக்திக்கொள்கை இயக் கம் பிரச்னையைப் பசப்புகிறது. அல்லது வெறுமையான வார்த் தைகளைச் சுற்றிச் சுழற்றுகிறது. எனவே எதிரி பல சந்தர்ப்பங் களில் தன் நிதானத்தை இழந்து பரபரப்படைகிறான். மாயக் கதை வாதியோ மதகுரு போல் பிடிவாதத்தோடு அமைதி குலையா மல் புன்னகை பூக்கிறான். இதுவே வெறுங்கதைகளை நம்பும் சோஷலிஸ பௌராணிகர்களுக்கும் அவற்றின் மாயத்தை உணர்ந்த மற்றவர்களுக்குமுள்ள வித்தியாசம்.

பயபக்திக்கொள்கையின் எதிரி வேறு சில தொல்லைகளையும் சமாளிக்கவேண்டியிருக்கிறது. தான் விரும்பாத தோழர்கள், மிதவாதிகளின் பாராட்டுதல்கள், நான் முன்னமே சொன்னேனே என்ற பிறரின் வெற்றித் தம்பட்டங்கள்—இவற்றால் அவன் பரபரப்படைகிறான் தவறான காரணங்களால் அவர்கள் சரியான முடிவிற்கு வந்தனர். தான் விரும்பிய பயபக்திக் கொள்கை மதுவுண்டோன் சரியான காரணங்களால் தவறான முடிவுற்கு வந்தான். அவனது முட்டாள்தனத்தைக்கண்டு அவன் நெஞ்சம் அலக்கணுறுகிறது. தன் பழைய குற்றங் குறைகளை விடாப்பிடியாகப் பற்றி நிற்கும் ஒருவனை எவர்தான் விரும்புவர்! இதனாலேயே, இளம் பருவ மலர்ச்சி. நரம்புகளைத் துடிக்கவைக்கிறது. இவ்வலக்கழிக்கும் துடிப்பு சிலரிடம் வெறுப் பாக மாறுகிறது. இவ்வெறுப்பு ட்ராட்ஸ்கியமான பான் மையை உற்பத்தி செய்கிறது. ஏமாற்றப்பட்ட காதலன் தன் மனைவியின் அடங்காப்பிடாரித்தனத்தை எல்லோருக்கும் பிர கடனம் செய்வதுபோல் அவன் தன் வெறுப்பை வெளிப்படுத்து கிறான். எனினும் தான் சொல்வது நிரூபணமாகும் ஒவ்வொரு சமயத்திலும் கோப வெறிகொண்டு கொந்தளிக்கிறான். மாயத்தை இழப்பது மகாகோரமான விளைவுகளை உண்டாக்கும்.

இதே சமயத்தில் நேர் எதிர்க்கொள்கைக்கு—தாவுதலும் ஆபத்தானது. ஒரு காலத்து ஃபிரெஞ்சு கம்யூனிஸ்டுக் கட்சி யின் அங்கத்தினர்களாயிருந்த லவால்(Lavals)களும், டொரியட் (Doriots)டுகளும் இதற்குச் சரியான, எச்சரிக்கையான உதார ணங்களாவர். மலைச் சரிவில் ஏற்றமுடைய நோக்கங்களிலி

ருந்து எதிர் மறையான துரோகிகளாக மாறியவர்களால் மழ மழுப்பாக்கப்பட்ட சாய்ப்பில் வழுக்கி விழுவோமோ என்ற பயம் ஏற்படுகிறது. சரிவின் மத்தியில் நிற்பதும் சங்கட மானதே—தனிமையானது கூட.

## 8

ஸோவியத் பௌராணிக வெறுமையைச் சுற்றியுள்ள மாயப் படலம் கம்யூனிஸ்ட் கட்சியின் அங்கத்தினர்களை மட்டும் பாதிப் பதல்ல. தெளிவற்ற வகையில் சமுதாயச் சாம்யவாதிகள், தாராளக்கட்சியினர் முன்னேற்ற அறிஞர்கள், தெளிவுற்ற மதகுரு மார்கள், யாவரையும் பாதிக்கின்றது. இரண்டு யுத்தங்களுக்கு இடையிலான துயரம் நிறைந்த காலத்தில், தீவிரவாதம் தொடர்பான தோல்விகளையும் ஏமாற்றங்களையும் கண்ட நேரத் தில், விலைவாசி உயர்வும் வேலையில்லாத் திண்டாட்டமும் ஃபாஸி ஸமும் ஒன்றன் பின் ஒன்ருக ஒவ்வொரு தேசத்தையும் விழுங்கிய பொழுது வாழ்வதற்கும் மரணமேற்பதற்கும் ரஷ்யாவைத் தவிர வேறு உன்னத லட்சியம் எதுவும் இருக்கவில்லை. நம்பகமற்றவர் களுக்கு அந்நாடே நம்பகமளித்தது. ஓய்ந்துபோனவர்களுக்கு ஊக்கமளித்தது. ஏமாறியவர்களுக்கு எதிர்கால இன்பத்திற்கு உறுதியளித்தது. வெளிப்படையாகப் பார்த்தால் ஸோஷலிஸ நேசர்களின் சொற்கள் குறை கூறுவதுபோலத் தோன்றும். எனினும் உள்ளூற அவர்களும் ஸோவியத் மாயையில் சிக்கினவர் களே. ஸோஷலிஸ வைதிகக் கட்டுப்பாடுகள் இல்லாமையால் அவர்களால் மத விரோதமாகவும் பேச முடிந்தது. வெறுமை யான கேலிகள் செய்யமுடிந்தது. அவர்கள் கூறிய குற்றங் குறைகள் உள்ளூற இருந்த நம்பிக்கையைக் குறைக்கத்தக்க சக்தி வாய்ந்தவையல்ல. அவை சந்தர்ப்பத்திற்கு ஏற்றபடி இழுபடக் கூடிய தெளிவற்றிருந்தன. எனினும் இவைகளின் அசைக்க முடியாத மையத்தில் விந்தையான ஒரு சாம்யம் குடிகொண் டிருந்தது. "எது எப்படியானுலும் ரஷ்யாவே உண்மை யானது," "வருங்கால வளப்பத்தைக் காட்டவல்லது," "கடைசி யான நம்பகத்தின் கருவூலம்" என்றெல்லாம் அதைக் கூறலாம். பயங்கொண்ட வியாபாரத் தரகர்களும் அறிவுமிக்க வியாபாரி களும் துயரமிக்க காலங்களில் "பார்க்கப்போனுல் அதில் ஏதோ இருக்கத்தான் இருக்கிறது" என்று ரஷ்யாவைப் பாராட்டுவர். நாஸ்திகன் ஒருவன் சாகும் தறுவாயில் கடவுளை வேண்டிக்கொள் வது போன்றதே இது, சாகும்போது சங்கர சங்கர என்ப தையே ஒக்கும்).

தெளிவற்று கம்பிளி இழைகள் போல் சிதைவுற்று இருப்பி னும் இந்த நம்பிக்கை மத நம்பிக்கைகள் போல் மிக அருமை

யாகவும் அந்தரங்கமாகவும் காப்பாற்றப்படுகிறது. ந்யூ ஸ்டேட்ஸ்மன் அன்ட் நேஷ ஈஸில் (new statesman and nations) வரும் ஸ்டாலின் கொள்கையைப்பற்றிய வியாக்கியானங்களில் வாத விளைவுகள் அதிக மேன்மையுடையதாயிருப்பினும் அதிகாரவர்க்க ஆதரிப்பின் வழவழத்தன்மையைக் காணலாம். ஸோஷலிஸ நேசர்களின் வாதம். விரிவுற்ற உயர்வுடையது, கத்தோலிக்கக் கோட்பாடுகளைக் காட்டிலும் ஆஸ்திகனது நம்பிக்கை அகன்று இருப்பதுபோல — எனினும் இரண்டு நம்பிக்கைகளும் அறிவிற்குப் பொருந்தாதவையே.

## 9

பயபக்திக்கொள்கை மதுவுண்டவனது தற்காப்பை மேற்சொன்னவைகளால் குறைத்துவிட முடியாது. வேரூன்றிய எல்லா நம்பிக்கைகளையும் போலவே இதுவும் தனது அடிப்படையையே தாக்கவரும் யாவற்றையும் தன்னிச்சையின்றி வன்மையாக எதிர்க்கும் சக்தியுடையது. உதாரணமாகச் சோவியத் ரஷ்யாவில் முதலாளித்துவ மனோதத்துவ சாஸ்திரம் விலக்கப்பட்டுள்ளது. காரணம் அது மக்கள மனத்தை இனப் போராட்டத்தினின்றும் திருப்பிவிடும் என்பதே. கம்யூனிஸ மனோதத்துவ சாஸ்திரப்படி பொருளாதாரத் துறையில் ஒருவனது ஸ்தானத்தை நிர்ணயிக்கும் இனப் பாகுபாட்டு உணர்ச்சி (Class-Consciousness) ஒன்று இருக்கிறதாம்; ஆனால் உயிரோடுள்ள எந்த மதத்திலும் இந்தவகையான ஒரு உணர்ச்சியிருப்பதாக எந்த மனோதத்துவ சாஸ்திரியும் நிரூபித்ததில்லை. எனவே ஒரு அடிப்படையான நம்பகம் அதனை ஆராயும் அடிப்படையான மார்க்கத்தை விலக்குவதால் சரியானது என்று கொள்ளப்படுகிறது. இந்த நிலை மன நோய் வைத்தியர்களுக்கும் சமய சரித்திரம் எழுதுவோர்க்கும் நன்ருகத் தெரிந்த ஒரு விஷயமே.

கிறிஸ்தவ மதத்தைப்போலவே களை பிடுங்கிக் காப்பாற்றும் வேலை இரு வகையானது. உண்மைக்கும் மாயைக்கும் உள்ள வேறுபாடு அதிகமாவதால் ஏற்படும் தேய்வும், அதிலிருந்து உண்மையோடு அதிகமாய்ப் பொருத்தமுடைய ஒரு புத்துணர்ச்சியின் பிறப்பும் எனலாம்.

# மாயையும் உண்மையும்

முந்திய கட்டுரை ஸோவியத் மாயையின் மனோவியல் அம்சங்களைப் பற்றியது; இந்தக் கட்டுரை ஸோவியத் உண்மையைப் பற்றியது. உள்ள இடத்திற்குள், கிடைத்த செய்திகளைக் கொண்டு, உண்மையிலோ, அல்லது பாவனையிலோ சோவியத் அமைப்பு ஸமுதாயப் பொது உடைமைதானு? இல்லையா? என்பதை ஆராய்வதே இதன் நோக்கம்.

இவ்வாராய்ச்சி உண்மையைச் சுற்றி வளையங்களான பல தடைகளையும் தாண்டித்தான் நடைபெற வேண்டியுள்ளது. வெளி வட்டமான தடை காதடைக்கும் பிரசார முன்னணியே. இப்பிரசாரம் துருவங்களின் ஆய்வு, வாயுமண்டல விளக்கம், மாஸ்கோவின் நிலவறை (சாக்கடைகள்)கள் என்றபடி எதுவாகவேண்டுமெனுலும் இருக்கலாம். இவைகளுக்கும் ஸோஷலிஸத்திற்கும் சம்பந்தமில்லை. எனினும் இருப்பதுபோல் அபிப்பிராயம் ஏற்படுத்துகின்றன. இவ்வகையான மிகமிகச் சமீப காலத்துப் பிரசார அரண்களைக் கீழ்க்கண்டவாறு சுருக்கிக் கூறலாம்:

1. ஸோவியத் மக்கள், சிறப்பாக ஸ்டாலின்க்ரட் பாதுகாப்புப் படையினர், ஜெர்மானியர்களை முறியடித்தனர்; ஏனெனின் தாங்கள் எதற்காகப் போரிடுகிறோம் என்பது அவர்களுக்குத் தெரியும். ஸ்டாலின் ஆட்சி மிகமிக உயர்ந்தது, அதைக் குறை கூறுவோர் பொய்யர்கள் என்பதை ரஷ்யாவின் இந்த வெற்றிகள் நிரூபித்து விட்டன.

இத்தகைய அன்றுடப் பிரச்னை அடிப்படையான வாதங்கள் நுணுகிய சோதனையைச் சமாளிக்க முடியாதென்ற நிலை ஏற்பட்டால் உள் வட்ட பாதுகாப்பு ஏற்பாடுகள் வெளிப்படுகின்றன. அவை பின்வருமாறு;—

2. மூடி மழுப்புதல், அல்லது உண்மையை மறுத்தல், (மறுத்த உண்மைகள் மறுபடியும் ஒப்புக்கொள்ளப்படலாம்) உதாரணம்—1932-33 பஞ்சம்.

3. உள்ளுண்மை, வெளியுண்மைத் தத்துவம். மேலை ஐரோப்பியர்களுக்கு மிகையாகத் தோன்றும் வகையில் சில அதிகார பூர்வமான அறிக்கைகள் ரஷ்யப் பொது மக்கள் கவனத்திற்கானவை, வெளி நாட்டினர்க்கான விவரங்களல்ல; என்றும் கூறுதல் (உ-ம்) ஸினோவிவ் (Zinoviev) பிரிட்டிஷ் ஒற்றர்களில் ஒருவன் என்றது.

4. திட்டத்திற்கும் தில்லுமுல்லுக்குமுள்ள வேறுபாடு. ஸோவியத் ஆட்சியின் பிற்போக்கான செயல்கள் தற்காலிக

அவசர முறைகள் என்ற வகையில் சரியானவையே. (உ-ம்) வேலை நிறுத்தம் செய்வோருக்குக் கொலைத் தண்டனை.

5. முடிவுக்கேற்றபடி முறைகள் சரியானவை. ஒரு முதலாளித்வ நாட்டின் முறையற்ற முறைகள் ஸோவியத் நோக்கங்களுக்கு அனுகுணமாயிருப்பின் பாராட்டத்தக்கவையே. (உ-ம்) ஸ்டாலின்—ஹிட்லர் ஒப்பந்தம்.

6. அசைக்கமுடியாத அடிப்படைத் தத்துவம். இதுவே ஸோவியத் வாதியின் கடைசித் தற்காப்பு. இதுவே ட்ராட்ஸ்கியர்கள், ஸமுதாய வாதிகள், குறைகூறும் சகாக்கள் யாவரையும் ஸோவியத் மாயையுடன் ஒன்றாக இணைக்கும் முடிச்சு. ஸோவியத் ஆட்சியின் பலஹீனங்கள், தோல்விகள், குற்றங்கள் உட்பட ஒப்புக்கொள்ளப்படும்; எனினும் இவை மேலெழுந்தவாரியான அலைக்கலக்கங்களே; பொருள் உற்பத்தியைத் தேசியப் பொது உடைமையாக்கி லாபநோக்கத்தை அழிக்கும் உறுதியின் மேல் நிற்கும் ஆபத்துள்ள ஸோவியத் ஐக்யத்தின் அடிப்படையான முன்னேற்றத் தத்துவ அஸ்திவாரத்தை இவை பாதிப்பதில்லை. இந்த அடிப்படைத் தத்துவங்கள் இருக்கும் வரையில் ரஷ்யா ஒரு பொதுவுடைமை நாடென்றே கருதப்பட வேண்டும்; உலகத்திலுள்ள தீவிரவாதிகளெல்லாம் அதன் விவகாரங்களில் அக்கறை காட்டவேண்டும் என்றெல்லாம் வாதம் செய்கின்றனர்.

ஸோவியத் ஸமாதானங்கள் அடிக்கடி மாறுபட்டாலும், அவையாவற்றையும் மேற்காட்டிய ஆறு தலைப்புகளுக்குள் அடக்கி விடலாம். இனி, இவற்றை நுணுக்கமாக ஆராய்ந்து பார்ப்போம்.

## 2

யுத்தகால மனோ நிலையில் முதலாவது வாதம், வாதம் என்ற முறையில் மிகவும் பலஹீனமானதாயினும், உணர்ச்சி வகையில், பாமரரை மட்டுமன்றி மற்றவரையும் வசப்படுத்தும் சக்தி வாய்ந்திருந்தது. செஞ்சேனையின் வெற்றி, ஐரோப்பியப் பொது மக்களிடையே ரஷ்யாவின்பால் அணைகட்டமுடியாத ஓர் ஆர்வத்தைக் கிளப்பியது; குறைகூறுவோர்கள் சங்கடத்தோடு வாயடைத்த மௌனிகளாயினர்.

ரஷ்யப் படை வீரனின் போர்த்திறமையையோ, ஸோவியத் ராணுவ யந்திரத்தின் அமைப்புச் செம்மையையோ யாரும் குறைகூற முடியாது. ஜெர்மன் சேனையின் தோல்வி சரித்திர பூர்வமாக முதன்மையான முக்கியத்வம் வாய்ந்தது: எனினும், அதில் அதிசயமொன்றுமில்லை. ரஷ்யா ஜெர்மனியைப்போல் இரண்டத்தனை ஜனத்தொகை உடையது; 1939-இல் ஸோவி

யத் மதிப்பீடுகளின்படி, ரஷ்யாவின் கைத்தொழில் உற்பத்திகள் ஜெர்மனிக்கு நிகாரனவை; அதன் விசாலமான வெறுவெளிகளும், பருவ நிலைகளும் எந்த எதிரியையும் முறியடிக்கக்கூடிய இயல்பு மிக்கவை. எனவே, பிரிட்டிஷ், அமெரிக்க ஈடுபாடுகளை ஒதுக்கிப் பார்த்தாலும் ஜெர்மனியிடம் ரஷ்யா தோற்பதற்கு எவ்விதமான அடிப்படைக் காரணமும் கிடையாது.

ரஷ்ய வீரனின் சகிப்புத்தன்மையும், தலைவிதிக் கொள்கையும் பழமொழிகளான உண்மைகள். 1815-இல் அவர்கள் நெப்போலியனை முறியடித்தனர். 1914-இல் ரஷ்யாவின் கைத்தொழில் முதலீடு ஜெர்மனியைப்போல் ஐந்தில் ஒரு பங்கு கூட இல்லை; எனினும், புகழ் பெற்ற ப்ரஸிலாவ் (Brussilov) தாக்குதலில் முதல் படை அணிவகுப்பு துப்பாக்கிகளோடும், காலணிகளோடும் போருக்குச் சென்றது; இரண்டாவது அணிவகுப்பு வெறுங்காலணிகளோடு சென்றது; மூன்ருவது அணிவகுப்புடன் துப்பாக்கிகளுமில்லை, காலணிகளும் இல்லை; போகும் போக்கில் இறந்த தம் தோழர்களிடமிருந்து அவற்றை எடுத்துக்கொண்டனர். எனினும், முன்னர் ஜா(Tsar)ருக்காகவும், பின்னர் கெரென்ஸ்கிக் காகவும், அப்பால் போல்ஷிவிக்குகளுக்காகவும், நான்கு ஆண்டுகள், அவர்கள் சிறிதும் தவருது போரிட்டனர். ஜெர்மனியிற் போலவே, ரஷ்யாவிலும், ராணுவ பலமும், சாதனங்களும் ஓய்ந்த பிறகே புரட்சி ஏற்பட்டது.

ரஷ்யாவின் 1944-ஆம் ஆண்டின் வெற்றி மற்ற ஸமுதாயக் கொள்கைகளைக் காட்டிலும் ஸ்டாலின் நெறியே உயர்ந்தது என்பதையே நிரூபிக்கிறது என்ற ஸோவியத் வாதம் உண்மையெனில், 1815-இன் வெற்றி ஃபிரஞ்சுப் புரட்சிக் கொள்கைகளைக் காட்டிலும் ஜார் அரசாங்கத்து அடிமைத்தனமே உயர்ந்தது என நிரூபித்ததாகக் கொள்ளலாமல்லவா? இவ்வகையான உவமை வாதம் இந்தப் போரில் ஈடுபட்டுள்ள யாவருக்கும் பொருந்தும். ஜப்பானியத் தற்கொலைப் படையின் தேசியக் கொடி பக்திக்கு வேறு எந்தப் படையின் பக்தியும் நிகராகாது. ஸாலமாவா (salamaua)ப் பாதுகாப்புப் படையில் கடைசி ஆள் வரை இறந்து விட்டனர்; ஸ்டாலின்க்ராட் படையினரைப் போன்றே அவர்களது தியாகத்தால் மிக்கேடோ (Mikado)வின் ஆட்சியே உலகத்திலேயே மிகச்சிறந்த முன்னேற்றமான ஆட்சி என்று ஏற்பட்டு விடுமா? வணக்கம் நிறைந்த இதயங்களுக்கு என் வார்த்தைகள் வல்லடி வழக்காய்த் தோன்றலாம். ஆனல் நாம் இப்போது உணர்ச்சிகளைப் பற்றிப் பேசவில்லை, அவற்றை அறிவால் ஆராய்ந்து பார்க்கிருேம். ஜெர்மன் படை மிகமிகச் சிறப்பாகச் சண்டையிட்டது என்பதை எவரும் மறுக்கமுடியாது. இதனுல் நாஜிஸம் சரியானது என்பதா? கெஸ்டேபோ

சர்வாதிகாரத்தின் கொடுமைகளைப் பற்றிக் குறைகூறுவோர் கோளுரைப்போர்; அவர் வாய் அடைக்கவேண்டும் என்றால் நியாயமாகுமா? பத்து வருடகாலம் தன்னந்தனியாக சீனக்காரர்கள் ஜப்பானியரை எதிர்த்தனர். இதனால் ஐரோப்பிய நாடுகள் யாவும் சீனாவின் சமுதாயக் கொள்கைகளைப் பின்பற்ற வேண்டும் என்பது சரியா?

இதிலுள்ள வாத நியதிக் குறை நன்கு விளங்குகிறது; எனினும், எதற்காகப் போரிடுகிறோம் என்பதை அறிந்ததாலேயே ரஷ்யர்கள் நன்றாகப் போரிடுகின்றனர்; அதை அறியாததாலேயே ஜெர்மானியரும், ஜப்பானியரும் நன்றாகப் போரிடுகின்றனர் என்று நம்பும் வண்ணம் உணர்ச்சி வகையில் ஸோவியத் மாயக்கதை நம்மை ஆட்கொண்டுள்ளது. ஜெர்மானிய வீரனது தியாக உணர்ச்சி நாஜிஸம் விரும்பத்தக்கதென்று நிரூபிக்கவில்லையெனில், ரஷ்ய வீரனின் தியாக உணர்ச்சியும் ஸ்டாலினிஸம் விரும்பத்தக்கதென்று நிரூபிக்கவில்லை என்பதுதானே வாதத்தின்படி சரியானது? எனினும், அறிவுக்குப் பொருந்தாத, முடிவை முன்னிட்டு அதன் காரணத்தைப் பின்னிடும் வக்ரமான வகையில் ஸ்டாலின் முறை நல்லதென்றும் நாஜி முறை கெட்டதென்றும் நாம் முன்கூட்டியே தீர்மானித்து விடுகிறோம்.

ஒரு சேனையின் ஒழுக்கத்திற்குப் பற்பல காரணங்கள் உண்டென்பதைச் சரித்திரம் தெளிவாகக் காட்டுகிறது. இவற்றுள் எதற்காகப் போரிடுகிறோம் என்ற உணர்வும் ஒன்று; அதிலும், இரண்டாம்பட்சமானதே. முட்டாள்தனம், மூதறிவு, முன்னேற்றம், பின்னேற்றம். தங்களது சொந்த வாழ்வில் கொஞ்சமும் சம்பந்தப்படாத கொள்கைகள், சில சமயம் எதிர்மாறான நோக்கங்கள் — இவைகளுக்காகச் சரிசமானமான ஆர்வத்துடன் எத்தனையோ பேர் போரிட்டு மடிந்துள்ளனர். பூர்வ குடிகள் மேய்ச்சல் வெளிகளுக்காகச் செய்யும் போர்களிலும், நாகரிக மக்கள் தங்கள் கட்டுத் திட்டங்களைத் துறந்து பழமை வேண்டித் திரும்பும் உள்நாட்டுக் கலகப் புரட்சிகளிலுமே அறிவாலறிந்த பொருளாதாரச் சமூகத் தன்னலத்தைக் காணமுடியும். மற்றப்படி, போர் வீரர்களின் தன்னலத்திற்கும், போரின் நோக்கமெனக் கருதப்படும் பொதுமைக்கும் இடையே மானஸிகக் கட்டுப்பாடுகளால் அமைந்த பல சங்கிலிப் பிணைப்புகளுள்ளன. இவற்றால் ஒருவன் தன் அடிமைத்தனத்திற்காகக்கூட ஆவேசத்தோடு போரிடுவதும் ஸாத்யம். எனவே போர் வீரனது உணர்ச்சி ஒழுக்கத்தினின்றும் போர்க் காரணமான கொள்கையை மதிப்பிடுவது தவறு.

பூர்வ குடிகளின் ஜாதி மதிச் சங்கேத (totemistic) உணர்ச்சி முதல் இன்றுள்ள தேசியம் வரை யுத்தங்களை விளைவிக்கும் சக்தி மிகுந்த மனோ நிலைகளில், அந்நியர்மீது வெறுப்பும், அச்சமும் (Xenophobia) மிகமிக முக்கியமானது. இது கூடப் பெரும் பாலும் தன்னலத்தைப் பற்றியதல்ல. 1920-இல் வார்ஸா (Warsaw) ஸோஷலிஸத் தொழிலாளிகள் ரஷ்யப் புரட்சிப் படையினரை எதிர்த்துப் போரிட்டனர். யூதர்கள் பாலஸ்தீனத்துக்குள் வருவதால் தங்களுக்குப் பொருளாதாரத் துறையில் மதிப்பிடற்கரிய நன்மைகள் ஏற்படும் என்பதை அறிந்து பாலஸ்தீன அரபியர்கள் அவர்களைப் படை கொண்டு போரிட்டு விலக்க முயன்றனர். போரில் எங்கெங்கு ஸமுதாயக் கொள்கைகளுக்கும், தேசியத்திற்கும் தகராறு ஏற்பட்டதோ அங்கெல்லாம் தேசியமே வெற்றி பெற்றது. மெடாக்ஸஸின் கீழிருந்த ஃபாஸிஸக் க்ரீஸ். இதாலிய ஃபாஸிஸப் படையை எதிர்த்துப் போரிட்டது; பிரிட்டிஷ் குடியாட்சி ஸ்பானிய ஃபாஸிஸத்தோடு குலாவியது; ஜப்பானிய மான்யாதிகார முறை (Feudalism) ரஷ்யப் போல்ஷிவிஸத்துடன் ஒத்துப்போனது; வேறு வார்த்தைகளில், இந்தக் கொள்கைகளெல்லாம் இல்லாதிருந்தாலும் போரிடுவோர்களின் இணைப்பு இன்றுள்ளபடிதான் இருந்திருக்கும். கூச்சலிடும் கோட்பாட்டுக் கோபுரங்களின் (facade-வளைவு முகப்புகள்) கீழ் நடந்ததென்னமோ வெறும் தேசியப் போர்களே. தேச நலனைக் காக்க, தற்காப்பாக தேச எதிரியை முறியடிக்க, தேசிய உணர்ச்சி முழுமையையும் செலுத்திச் செய்யப்பட்ட யுத்தங்களே. தீவிரவாதிகளின்படி இந்த யுத்தம் ஃபாஸிஸ சக்தியின் உச்சத்திற்கு எதிரானது; எனவே இது கடமை; எனினும், நேச நாடுகளும், அரசியலில் அக்கறையில்லாத பொது மக்களும் எந்தக் கொள்கைக்கும் சார்பாகவோ, விரோதமாகவோ சண்டை பிடிக்கவில்லை; தேசியமும், 19-ஆம் நூற்றாண்டு மதிப்பியல்களும் வாழவே போரிட்டனர்.

மற்ற முதலாளித்வ நாடுகளுக்கெல்லாம் மேற்சொன்னதே விதியென்றும், ரஷ்யா மட்டும் இவ்விதிக்கு விலக்கென்றும் கம்யூனிஸ்ட் வாதம் கூறுகிறது. இதற்குச் சாட்சி என்ன? ரஷ்யப் படைகள் சர்வதேசியக் கோஷங்களின் கீழ் யுத்தம் செய்தனர் என்றே வைத்துக்கொண்டாலும், அவர்கள் உணர்ச்சிகளை ஊக்கியது அதிகார வர்க்கத்தின் கோஷங்களா? அல்லது, தங்கள் சொந்த நாட்டைப் பறிக்க வந்த பகைவர்களை விரட்ட வேண்டும் என்ற வெறியா? என நிச்சயிப்பது கடினம். ஆனால், இந்த யுத்தத்தில் ரஷ்யா சர்வதேசிய கோஷங்களை அடியோடு கைவிட்டு விட்டது; புரட்சிக்கு முந்திய பழைய கோஷங்களையே கையாண்டது. ஸர்வ தேசிய கீதம் புதியதொரு தேசிய

கீதமாக மாறியது; புரட்சிச் சேனையின் ஆணை தேசிய ஆணையாகப் பரிணமித்தது; படையிலிருந்த எல்லாச் சமனத்தன்மைகளும் எழுந்தன; புரட்சி ஒழுக்கம் அதிகார ஒழுக்கமாகியது; ஃபிரஞ்சுப் புரட்சியை எதிர்த்த பழைய ஜார் (Tsar) படைத் தலைவர்கள் தேசிய உதாரணங்களாய்ப் புனர்ஜென்மமெடுத்தனர்; புதிதாகப் பிறந்த கிறிஸ்தவக் கோயில்கள் கடவுள் வாழ்த்துக்களை வழங்கின. இதைப்பற்றி விரிவாகப் பின்னர்ப் பேசுவோம்.

எனவே, முதலாவது வாதத்தினின்று ஏற்படும் முடிவு இதுதான். ஒரு தேசத்தின் போர்த்திறமையிலிருந்து நேரடியாக அதன் ஆட்சி முறையின் முன்னேற்றப் பின்னேற்றத் தன்மைகளைக் கணிக்கமுடியாது; அத்திறமை பழமையான பரம்பரைக் கொள்கைகளின் உணர்ச்சி உத்வேகத்தாலேயே ஊக்கப் படுகிறது. ஸோவியத் ஆட்சியும் பிறநாடுகளிலிருந்து தன்னை வேறுபடுத்திச் சிறப்பளித்த புதிய கோஷங்களை விட்டு விட்டுப் பழைய கோஷங்களையே பின்பற்றியது; இந்த வாதம் எதையாவது நிரூபிக்கிறதென்றால், என்றுமே கடவுளின் பேரால், தேசத்தின் பேரால், அரசாங்கத்தின் பேரால் திறமையோடு போரிட்ட ரஷ்ய வீரன் இன்றும் கடவுளின் பேராலும், தேசத்தின் பேராலும். அரசாங்கத்தின் பேராலும் திறமையோடு போரிடுகிறான் என்பதையே நிரூபிக்கிறது.

இதனால் ரஷ்யா ஒரு ஸோஷலிஸ தேசமாக இருக்கமுடியாதென்பதல்ல; ஆனால், இப்போதுள்ள வாதங்களால் அதை நிரூபிக்க முடியாது. போர் முறைகளை மட்டுமே கவனித்தோமானால், ரஷ்யா, தன் ஸோவியத் தன்மையை உலகம், ஏன், தன் மக்களும், போர் வீரர்களுமேகூட அறியாவண்ணம் மிகமிக ஜாக்ரதையாக ஒளித்து வைக்கிறது என்றுதான் கூறவேண்டும்.

## 3

ஸோவியத் உண்மைகளை மறைப்பதில் இருவகை உண்டு. ஒன்று தெரிந்தே மறைப்பது, மற்றொன்று தெரியாமல் மறைப்பது; முந்தியது அடுத்த தலைப்பின் கீழ் வரும். பெரும்பாலான மறைப்பு மனமறிந்தன்றி தெரியாத்தனத்தால் நேர்பவையே.

ஸோவியத் மாயையில் மயங்கியவர்களது ஸோவியத் உண்மையைப் பற்றிய அறியாமை அளவு கடந்தது. உதாரணமாக ரஷ்யாவில் தொழிலாளிகளின் வேலை நிறுத்த உரிமை அழிக்கப் பட்டுள்ளது; வேலை நிறுத்தமோ, அல்லது அதற்குத் தூண்டுதலோ கொலைத் தண்டனைக்கான பெரிய குற்றங்கள். தேர்தல்களில், ஒவ்வொரு தொகுதிக்கும் ஒரே ஒருவராகச் சர்க்கார் நியமித்துள்ள அபேட்சகர்களுக்கு 'வேண்டும்,வேண்டாம்'என்று

வாக்களிப்பதே (வோட்டுப் போடுவதே) பொது மக்கள் வேலை என்பதை பத்தில் ஒன்பது பேர் நம்பத் தயாராயில்லை. இவ்வறியாமையின் காரணங்கள் இருவகைப்படும்; ஒன்று ஸோவியத் உண்மைகளைப் பற்றிச் சரியான செய்திகள் கிடைப்பதில்லை; மற்றொன்று அச் செய்திகளால் தங்கள் நம்பகம் எங்கு குறைந்து விடுமோ என்ற பயம். ரஷ்யாவின் முக்கியத்வம் மக்கள் மனத்தில் அதிகமாக ஆக அதன் உண்மைகளை அறிய வேண்டுமென்ற விருப்பம் குறைந்து கொண்டே போகிறது என்றால் தவறாகாது. நம்பகம் என்றாலே அறியும் ஆவலில்லை என்று தான் பொருள்; எல்லோரும் விவிலிய வேதத்தைப் படிக்கின்றனர்; எனினும், எத்துணை பேர் ப்ளாவியஸ் ஜோஸெபஸை (Flavius Josephus)ப் படிப்பவர்கள்?

தாமறியாமலேயே ஏமாற்றுக்கு இடமளிக்கும் தீவிரவாதிகளிடையே ஸோவியத் பிரசாரம் சரித்திரத்தில் எவரும் கண்டிராத மகத்தான வெற்றி பெறுகிறது. இவ்வெற்றிகளுக்காகக் கையாளும் வழிகள் இரண்டு; ஒன்று மறைமுகமானது, மற்றொன்று நேர்முகமானது; முன்னது செய்திகளை மறைத்தல், பின்னது (பொய்ச்) செய்திகளைப் பரப்புதல், இவ்விரு வழிகளையும் தனித்தனியே பார்ப்போம்.

## செய்தி மறைப்பு

வெளி நாட்டுப் பத்திரிகைகள் ரஷ்யாவில் தடை செய்யப்பட்டன; தடை செய்யபட்டுள்ளன. நாஜிகளால் கூட முடியாத அளவில் ஸோவியத் பத்திரிகைகள் அடக்கியாளப்படுகின்றன. மாஸ்கோ உட்பட ஸோவியத் யூனியனின் ஒவ்வொரு ஊரிலும் இரு காலைப் பத்திரிகைகள் உண்டு-ஒன்று சர்க்கார் சார்பானது, மற்றொன்று கட்சிச் சார்பானது. எல்லாச் சர்க்கார் பத்திரிகைகளிலும் ரேடியோ மூலமும், தந்தி மூலமும் சர்க்கார் தரும் ஒரே தலையங்கமே வெளியாகும்—இதுவே மாஸ்கோவின் இஸ்வெஸ்ட்யா (Isvestia) தலையங்கம். கட்சிப் பத்திரிகைகளிலெல்லாம் மாஸ்கோ ப்ராவ்டா (Pravda)ப் பத்திரிகையின் தலையங்கத்தைக் காணலாம். உள்நாட்டு, வெளி நாட்டுச் செய்திகள் அதிகாரபூர்வமான டாஸ் (Tass) செய்தி ஸ்தாபனத்தின் மூலம் மேற்கண்ட முறையிலேயே யாவருக்கும் வழங்கப்படும். அந்தந்த ஊரின் சொந்தச் செய்திகளும் அதிகாரிகளால் விநியோகிக்கப் படுவனவே.

இவ்வாறு செய்திகள் யாவற்றையும் ஒரு மையத்திலிருந்து பரப்பும் முறையால் அகண்ட இடைவெளியுடைய ரஷ்ய நாட்டினருக்கு வெளி நாட்டுச் செய்திகள் மட்டுமல்ல, உள் நாட்டில், தங்கள் ஊர்களுக்கு அடுத்தாற்போல் நடக்கும் செய்திகளைக்கூட

சரிவர அறிய முடிவதில்லை. இச்செயல்முறையை அறிய ஒரு உதாரணம் தருகிறேன்:

1932-33, மாரிக்காலத்தில், நான் உக்ரேய்ன் (Ukraine) தலை நகரான கார்க்கவ் (Kharkov) நகரிலிருந்தேன். நிலங்களை யெல்லாம் கூட்டுப் பண்ணையாக்கிய ஆபத்தான மாரிக் காலம் அது. குடியானவர்கள் தங்கள் கால்நடைகளைக் கொன்று விட்டனர்; தானியங்களை எரித்தனர், அல்லது ஒளித்தனர்; காச (typhoid) நோயாலும், பசிநோயலும் பலர் மடிந்தனர்; உக்ரெய்னில் மட்டும் 20 லக்ஷம் பேர் இறந்ததாகக் கணக்கிடப்பட்டது. நாட்டுப்புறங்களில் பிரயாணம் செய்வது, பலரால் பலபடி தாக்கப்பட்டுத் தவறு செய்த ஒரு போர் வீரன் ஒரு சந்தில் ஓடுவது (running the gantlet) போலிருந்தது; வழி இடங்களிலெல்லாம் கால் கை வீங்கிய குடியானவப் பிச்சைக்காரர்களையும், வண்டிச் சாளரத்திற்கு நேராக குச்சியான கால்கைகளும், முன் துருத்திய மொட்டா வயிறுகளும், ஆடி அசையும் பனங்காய்த் தலைகளும் உடைய கோரமான சிறு குழந்தைகளைக் காட்டிப் பிச்சை கேட்கும் பெண்களையும் காணலாம். ஒரு சிறு ரொட்டித் துண்டுக்கு, பூ வேலை தைத்த கைக்குட்டையையோ, தேசிய ஆடையையோ, அல்லது படுக்கை உறைகளையோ வாங்கலாம்; இரு காலணிகள் அல்லது காலுறை(stocks)கள் கொடுத்தால்போதும்; கட்சியைச் சேர்ந்தவள் தவிர அநேகமாக எந்தப் பெண்ணையும் அநுபவிக்கலாம். கார்க்கவில் நானிருந்த ஓட்டல் சாளரத்தின் வழியே தினந்தினமும் பலப்பல பிண ஊர்வலங்கள் செல்வதைப் பார்ப்பேன். நகர மின்ஸார சப்ளை (விநியோகம்) திடீரென நின்றுவிட்டது; ஊரில் விளக்கு வெளிச்சம் கிடையாது. ஒரு நாளைக்கு ஒரு மணி நேரமே டிராம் வண்டிகள் ஓடும்—அதுவும் ஆலைத் தொழிலாளிகளை அழைத்து வரவும், அனுப்பிவைக்கவுமே. தவிர நகரில் அடுப்புக்கரியோ, பெட்ரோலோ கிடையாது; உக்ரெய்னுக்குக்கூட அது மிகுந்த குளிர்காலம்; குளிர் பனிநிலைக்கு 30 டிகிரி குறைந்திருந்தது. வாழ்க்கையே ஒரு நெருக்கடியில் வந்து நின்றுவிட்டது; ஆட்சி யந்திரம் உடையும் தருவாயிலிருந்தது.

இந்த நிலைமையே பழைய போல்ஷிவிக்கர்களை ஸ்டாலினுக்கு விரோதமாய்க் கிளர்ச்சி செய்யத் தூண்டியது. இக் கிளர்ச்சி ஏமாற்றத்தின் எல்லையில் விளைந்த மனமற்ற சதிச் செயலே; பின் நடந்த மனித வேட்டைக்கும், குற்ற விசாரணைகளுக்கும் இதுவே காரணம். இன்று, 1932-33 நெருக்கடியை ஏறத்தாழ சோவியத் வட்டாரங்கள் ஒப்புக்கொள்ளுகின்றன; ஆனால், அன்று, இதைப் பற்றி எள்ளத்தனை அளவுகூட எந்தப் பத்திரிகையிலும் பிரஸ்தாபமே கிடையாது; ஏன், உக்ரெய்ன்

பத்திரிகைகளிலும் கிடையாது. ஒவ்வொரு நாள் காலையிலும் கார்கவின் கம்யூனிஸ்ட் (Kommunist) பத்திரிகையைப் பார்ப்பேன்; அதில் திட்டக் கணக்குகள் மேலும் மேலும் அதிகரிப்பதையும், ஆலைத் தொழிலாளிகளின் அதிர்வேட்டுப் படையினரின் போட்டிப் பந்தயங்களையும், செங்கொடிப் பரிசுகளையும், யூரல் (Ural) மலைப் பிரதேசத்தில் துவக்கப்பட்ட புதிய ராக்ஷஸத் தொழிற்சங்கங்களையும், எனப் பலவற்றைப் படிப்பேன். அதில் வரும் போட்டோப் படங்கள் யாவும் இளவயதினர், எப்போதும் சிரித்த முகத்தினர், கொடி பிடித்து வருவோர் அல்லது, வண்ணச் சித்திர உடைகளணிந்த உஸ்பெகிஸ்தான் (Uzbekistan) முதியோன், சதாபுன்னகை, சதா எழுத்தெண்ணி வாசிப்பு என்றிருப்பதைப் பார்க்கலாம். ஆனால், பஞ்சத்தைப் பற்றியோ, தொத்து நோய்களைப் பற்றியோ, கிராமம் கிராமமாய்ச் சாவதைப்பற்றியோ ஒரு வார்த்தைகூடக் கிடையாது. கார்கவ் நகரில் மின்ஸாரம் தவறிய விஷயத்தைப் பற்றி அந் நகரத்துப் பத்திரிகையிலேயே ஒரு முறை கூடக் குறிக்கப்படவில்லை. இவைகளெல்லாம் ஏதோ கனவு வகைபோன்ற பிரத்தியட்சி விரோத நிலையைப் பிரதிபலிப்பதாகவே இருந்தன; நம் தினசரி வாழ்க்கைக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. அந்நாட்டு ரேடியோக்களும் இப்படித்தான்.

இதனால் கார்கவைப்பற்றி, அதைக் காட்டிலும் தொலைவிலுள்ள டாஷ்கொண்ட், ஆர்ச்சேஞ்சல், வ்ளாடிவாஸ்டாக் முதலிய நகரங்களைப் பற்றி மாஸ்கோவில் பெரும்பாலோருக்கு ஒன்றுமே தெரியாது. அந்நாடோ 12 நாள் பிரயாணப் பெருந் தொலைவுள்ளது; ரெயில்களும் அதிகாரிகளுக்கென்றே ரிஸர்வ் (பிரத்யேக இடம்) செய்யப்படும்: அவ்வதிகாரிகளோ பேசா மௌனிகள்—எனவே எதைப்பற்றியும் இந்நாட்டில் எதையும் எவரும் தெரிந்துகொள்ளமுடியாது, எங்கும் ஒரு லேசான போர்வை; கட்சியின் அந்தரங்கத்திலுள்ள சிலரைத் தவிர எவர்க்கும் ஒன்றும் தெரியாது.

இரண்டாவது மௌனப் படலம் வெளி உலகத் தொடர்புகளிலிருந்து உள் நாட்டைப் பிரித்து விட்டதே. வெளி நாட்டுத் தூதர்கள், நிருபர்கள் யாவரும் மாஸ்கோவிலேயே இருந்தனர். தலைநகரம் என்ற முறையில், உணவுப் பொருள்கள், நிலக்கரி, கைத்தொழிற் பண்டங்கள், பல் துலக்கும் 'ப்ரஷ்'ஷுகள், உதட்டுச் சாயங்கள், கருத்தடைக் கருவிகள் முதலான அவசியமற்ற ஆடம்பரங்களிலும் மாஸ்கோ தலைமை வகித்தது; அதன் வாழ்க்கைத்தரம் ரஷ்யாவில் வேறு எவ்விடத்திலும் இல்லாதது. மாஸ்கோ வாசிக்கே தன் சொந்த நாட்டைப் பற்றி ஒன்றும் தெரியாதென்றால், பிற நாட்டினரைப் பற்றிக் கேட்பானேன்?

அவர்கள் பாதுகாப்பு அதிகாரிகளில் ஒருவரை, துபாஷி, வழி காட்டி, மோட்டார் ஓட்டி, யதேச்சையாகச் சந்தித்தவர், அல்லது காமத் தரகர் எனத் துணைவராய்க் கொண்டுதான் பிர யாணம் செய்யமுடியும். சோவியத் அதிகாரிகளைத் தவிர வேறு எவரையும் அவர்களுக்குத் தெரியாது. பிற நாட்டினரோடு குலவும் உள் நாட்டான், என்றும் தேசத்ரோகக் குற்றத்திற்கு அஞ்சவேண்டியவனே. இவைகளை மீறிச் செய்திகளை அறிந் தாலும் அவற்றை வெளியில் அனுப்புவது பெருந்தொல்லையான காரியமே. தணிக்கையாளர் தணிக்கை செய்து விலக்கிய செய் தியை வெளி யனுப்புவது பிரஷ்டமடையத்தக்க பெருங்குற்றம்; இதன் கோரவிளைவுகளை வாழ்வா சாவா என்ற பிரச்னை ஏற்பட் டாலன்றி பத்திரிகையாளர்களோ அவர்களின் எஜமானர்களோ ஏற்கமாட்டார்கள். பிரச்னை என்பதற்குப் பல வகையிலும் பொருள் கொள்ளலாம். இடையருத நிர்ப்பந்தங்கள் காரண மாக மனச்சாட்சி தவருத நிருபர்கள்கூட உண்மைச் செய்திகளை யும் ஓரளவு ஒப்பேத்திப் பட்டும் படாமல், படித்தோரன்றிப் பாமரர் அறியாச் சில பரிபாஷைகளால் அனுப்பி வைப்பர். இச் செய்திகள் அரை உண்மைகளாலும், அறிந்தே அமுக்கிவிட்ட செய்திகளாலும் அலங்கோலமாயிருக்கும். இதுவே சோவியத் நேரடிப் பிரசாரத்தின் அஸ்திவாரம்.

**நேர்முகப் பிரசாரம்**

சோவியத் வெளிப் பிரசாரம் ஒன்றுக்கொன்று உதவியான இருவகையாக இயங்கியது. இவற்றுள் முதலாவது, மனித ரிடைப் பிரதி விளைவுகளை மறைத்துப் புள்ளி விவரங்களை மட்டும் தருவது; இரண்டாவது, உபயோகமற்ற ஒரு உண்மைக்கு முக்கியத்வமளித்துப் பிறவற்றை மறைப்பது.

முதலாவது முறை, புள்ளி விவரக் கரடி வித்தையால் அமெரிக்க மயமான நம் மனப்பான்மையை ஏமாற்றுகிறது. உற் பத்தி, கட்டிட வளர்ச்சி, கல்வி, போக்கு வரத்து, கூலி மிகுதி என்பவற்றைப் பற்றிய ஆடம்பரமான கணிதப் படைகள் நம் கண்களைப் பறிக்கின்றன. இக்கணக்குகளின் கூச்சலுக்கும் புகைப்படத்திற்கும் பின்னுல் உள்ள மனிதப் பண்பு, சோவியத் தினசரி வாழ்வு—யாவும் மறைந்து போகின்றன.

ரஷ்யாவில் ஒரு பெரிய தொழிற் புரட்சி நடந்தது என் பதை எவரும் மறுக்கமுடியாது. இதே போல் 18-19-ஆம் நூற் ருண்டுகளில் இங்கிலாந்து,ஜெர்மனி, அமெரிக்கா, ஜப்பான் இங் கெல்லாம் புரட்சி நடந்தது. ரஷ்யாவில் பாட்டாளிப் புரட்சிக்கு அப்புறமே ஆலைத்தொழில் அபிவிருத்தி ஏற்பட்டது; இதனுலேயே ஆலைகளையும் ரெயில்வேக்களையும் முதன்முதலாகச்

சிறப்பாகத் தாங்களே நிறுவியதாக சோவியத்துப் பிரசாரம் செய்கிறது. இதற்கு வரலாற்று முறையில் முன் கூட்டிய உதார ணங்கள் உண்டு. அந்த உதராணம் லெனின் காலத்துக்கும் போகி றது. லெனின் சொன்னர், 'சோஷலிஸம் சோவியத்துகளுடன் கூடிய மின்சார அமைப்பே'—என. அகாவது பூரா பண்ணைத் தொழில் மிகுந்த பிற்போக்கான குடியானவ நாட்டைக் காட்டி லும் முற்போக்கான யந்திரத்தொழில் மிகுந்த நாட்டிலேயே சோஷலிஸம் ஏற்படுவது ஸாத்யம் என்ற அர்த்தத்திலேயே லெனின் இவ்வாறு கூறினர். வேறு வார்த்தையில், சோஷலிஸ சமுதாயத்தை அமைக்க யந்திரமயமான சமூகமே லாயக்குள்ளது. இந்த அடிப்படையான உண்மையை ஸ்டாலினீயப் பிரசாரம் திரித்துத் தெளித்தது; மக்கள் யந்திரசாலைகள் கட்டுவதையே சோஷலிஸம் என எண்ணலாயினர். நீப்பர் அணை, துருக்கி-ஸைபீ ரிய ரெயில் ரோடு, வெண் கடல் கால்வாய், மாஸ்கோ பாதாள ரெயில் முதலியவை இவைபோன்று இங்கிலாந்து, அமெரிக்காவி லுள்ள யந்திர சாதன நுட்பங்களுடன் ஒப்பிடத்தக்கவையென மக்கள் நினைக்கவில்லை; இவ்வுலகமே இதுவரையில் கண்டிராத, தனிப்பட்ட சிறப்புடன் கூடிய, சோஷலிஸத்தின் பயனாய் அரும்பி, மலர்ந்து, காயாகிக் கனிந்த பெருமை எனக் கொண் டாடினர். ரஷ்யப் பொதுமக்களின் பெரும்பான்மையோர் உலகத் திலேயே பாதாள ரெயிலுடைய ஒரே ஒரு பட்டினம் மாஸ் கோவே என்று நம்பினர்.

மேற்கூறிய பிரசார சாம்யம், அதாவது, சோஷலிஸம் யந்திரத் தொழிலுக்கு நேரானது என்பது, உள் நாட்டில் மட்டுமன்றி யந்திர நாகரிகத்தில் அநுதாபமுள்ள எல்லா நாட் டினரும் ஒப்புக்கொள்ளும் தன்மையிலிருந்தது. சோவியத்தின் பொய்ப் புராணமாயத்தில் சிக்கியவர்களுக்கு நீப்பர் அணையும், பாதாள ரெயிலும், வாயு மண்டலப் பிரயாணமும், துருவ யாத்திரையும், ஆகாய விமானங்களும், அக்னிப் படைகளும் காதலியின் கேசக்குஞ்சம் போல் பவித்திரமான தெய்விகச் சின் னங்களாய் விளங்கின. இந்த மதத்தின் தெய்விக தரிசனம் 137-ஜெர்மானியர்களைச் சோஷலிஸ முறையில் சுட்டுக்கொன்ற ஸ்னிப்பர் லட்மில்லா பாவிட் சென்கோ (Sniper Ludmilla Pawlitchenko) என்னும் ரஷ்ய மாதின் வெறி பிடித்த கூச்சல் நிறைந்த ஊர்வலத்தில் சாட்சாத்காரமாகியது—இதை அவள் முதலாளித்வ நிருபர்களுக்கு ஸோஷலிஸ உண்மையோடு விவரித்தாள்; அழுத்தம் திருத்தமான அவளது உரைகளெல் லாம் சோவியத் பத்திரிகைகளின் தலையங்கங்களிலிருந்தெடுத் தவை.

இரண்டாவது முறையான, பயனற்ற ஒரு செய்தியைப் படாடோபப் படுத்துவது வெளிப்படையானது. (வெளி) யாத்திரிகரும், நிருபரும், படம் எடுப்போரும், முன்னேற்பாடு செய்யப்பட்ட மாதிரி ஆலைகள்; குழந்தை விடுதிகள், தொழிலாளர் கிளப்புகள், ஆரோக்யசாலைகள் முதலியவற்றிற்கு அழைத்துச் செல்லப்படுவர். இந்த மாதிரி நிலையங்கள், நூற்றில் ஒருவருக்கு பயன்படலாம்; மற்றுள்ள 99 பேர்களுக்கும் இவற்றிற்கும் சம்பந்தமே இல்லை. யுத்தத்திற்கு முன், அநுமதிச் சீட்டுப் பெற்று, ஃபாஸிஸ இத்தாலி, நாஜி ஜெர்மனி உட்பட, எந்த நாட்டிலுள்ள எங்கு வேண்டுமென்றாலும் தடையின்றிச் செல்லலாம். ரஷ்யாவில் மட்டுமே குறிப்பிட்ட சில இடங்களுக்குத் தான் போகமுடியும்.

தவறான கருத்தைப் பரப்பவே இத்தகைய மயக்குக் காட்சி வித்தைகளைக் கையாளுவதாகக் குற்றஞ்சாட்டினால் சோவியத் அதிகாரிகளுக்குக் கோபம் வருகிறது. இக்குறையைத் தீர்க்கச் சரியான வழி, 'எல்லோரும் வாருங்கள். வந்து யாவற்றையும் பாருங்கள்' என்பதே. ஆனால், அவ்வாறு செய்ய சோவியத்துகள் தயாராயில்லை: ஏனெனில் பிற நாட்டு யாத்திரிகர்கள் ஒவ்வொருவரும் ஒற்றர்களாகவும் காட்டிக் கொடுப்பவர்களாகவும் இருக்கலாமாம். சோவியத் அநுதாபிகள் இந்த வாதத்தை சரியானதே என்று ஒப்புக்கொண்டனர். இது எவ்வளவு முட்டாள்தனமான வாதம் என்பது கண்கூடு. 1933 முதல் 36 வரை தன் படைப் பலத்தை ரகஸியமாக விஸ்தரித்த ஜெர்மனிகூட இத்தடை முறைகளைக் கையாளவில்லை; சர்வாதிகாரத்தின் கீழுள்ள போலீஸ் படையே ராணுவ ரகசியங்களையும், அரசியல் அக்ரமங்களையும் பிறர் அறியாவண்ணம் மறைக்கப் போதுமானதாக அவர்கள் கருதினர். இவ்வாறு ரஷ்யர்கள் மறைத்தது ராணுவ ரகசியத்தை அல்ல; தன் மக்களின் தினசரி வாழ்க்கையையே. கணக்கு வரிசைகள், அறிகுறிகள், சின்னங்கள் முதலிய வாண வேடிக்கைகளுக்குப் பின்னால், இருட்டிலும், மறைவிலுமாக சோவியத் உண்மை இருந்தது. இவ்வுண்மை யாதெனில்?—காஸான், ஸாரடாவ், அஷ்காபாத் அல்லது டாம்ஸ்க், மற்றும், மாஸ்கோவின் சுற்றுப் புறங்களிலும் மக்கள் வாழ்ந்த பரிதாபமான தினசரி வாழ்க்கையே. வெண் கடல் அருகிலுள்ள பலாத்காரக் கூலிப் பண்ணையர், ஸைபீரிய-மத்திய ஆசியத் தேசப் பிரஷ்டர்கள்-இவர்களைப் பற்றிக் கூற வேண்டுவதில்லை. தொலைநோக்காடி (Telescope)யில் தெரியும் சந்திரனின் இருட்பகுதியளவே இவைகளைப் பற்றி வெளி நாட்டு நிருபர்களுக்குத் தெரியும்.

## உள்ளுண்மையும் வெளி உண்மையும்

ஒரு தலைமுறை முழுதும் ரஷ்யா இருபுறமும் நிழல் வீசும் ஒரு சீனச்சுவரால் பிரிக்கப்பட்டிருந்தது. பிற நாட்டைப்பற்றி ரஷ்யாவின் அறியாமை, ரஷ்யாவைப் பற்றிய பிற நாடுகளின் அறியாமையைக் காட்டிலும் அதிகமானது. தங்கள் கஷ்டங் களுக்கிடையே அவர்களுக்கிருந்த திருப்தி முதலாளித்வ நாடு களில் வாழ்க்கை இன்னும் மோசமானது என்ற நம்பிக்கையே. தங்கள் கழிவு நரக (purgatory)த்திலிருப்பின், பிறரோ, அசல் நரகிலிருப்பதாக அவர்கள் எண்ணினர். சினிமா, ரேடியோ, பத்திரிகை, இலக்கியம்-இவை யாவும் நெகாரேலி (Negoreloye) க்கப்பாலுள்ள உலகம், மணிக்கொரு உடை உடுத்தும் கொழுத்த பாங்கர்களாலும், அவநம்பகம் இறுக்கிய முகமுடைய நடுத்தர தொழிலாளிவர்க்கத்தாலும், பாதாளச் சிறைகளில் சதி செய்யும் பட்டினியான பாமரர்களாலும் நிரம்பியதாகக் காட்டின; பழைய ரஷ்ய அபூதக் கதைகளில் வரும் கொடிய உலகமாக வெளி நாடுகள் தோன்றின,

1933-இல் மாஸ்கோவில் நான் ஒரு படம் பார்த்தேன். அதில் ஜெர்மனியவிஞ்ஞானி ஒருவனைக் கறுப்பு முகமூடி அணிந்த கத்தோலிக் குருமார்கள், நாஜிச் சூறாவளி படை உதவி கொண்டு சவுக்காலடிப்பதாகக் காட்டப்பட்டது. இந்தப் படம் மாஜி கல்வி மந்திரியான லனுச்சர்ஸ்கியின் முகவுரையுடன் கூடியது. இது உள் நாட்டுக்காகத் தயாரிக்கப்பட்டதால் வெளி நாட்டுப் பிரசாரத்திற்கான உயர்ந்தரகப் படங்களிலிருந்து வெகுவாக மாறுபட்டிருந்தது.

இன்னொரு சம்பவமும் தெளிவாக எனக்கு நினைவிருக்கிறது. பிரபலமான உக்ரேன் எழுத்தாளர் ஒருவர் என்னை ஒரு சந் தேகம் கேட்டார். அவர் லண்டனில் நடந்த சம்பவமாக ஒரு கதை எழுதினார். ஒரு ஞாயிற்றுக்கிழமை, வீதியிற்சென்ற ஒரு தொழிலாளியை ஒரு போலீஸ்காரன் நடைபாதையிலி ருந்து தள்ளிவிட்டான் என்ற கட்டத்தில் அக்கதை தடைப் பட்டு நின்றது. இந்த சமயத்தில் அந்தப் போலீஸ்காரன் என்ன கூறியிருப்பான், எந்தப் பாமர பாஷையில் என்ன சாபம் போட் டிருப்பான் என்பதே கேள்வி.

'அந்தப் போலீஸ்காரன் அவனை ஏன் தள்ளவேண்டும்?' என்றேன் நான்.

'அவன்தான் கழுத்துப்பட்டையும், நாடாவுமற்ற தொழி லாளியாயிற்றே'—என்றார் அந்த எழுத்தாளர்.

ஞாயிறு தோறும் லண்டன் போலீஸ்காரர்கள் வீதியிற் போவோரைத் தள்ளி விலக்குவர் என அவர் உண்மையாகவே நம்பினர். இத்தனைக்கும் அவர் படிப்பற்ற பாமரரல்ல. சோவியத் கல்லூரியில் கற்றுத் தேர்ந்தவர். வளரும் புகழுடைய எழுத்தாளர். டெய்லி மெயில் வாசகனுக்கு போல்ஷிவிசத்தைப் பற்றி என்ன அபிப்பிராயமோ அதே மாதிரி அபிப்பிராயந்தான் முதலாளித்வத்தைப் பற்றி ரஷ்யனுக்கு.

உள்நாட்டு எதிர்ப்பைச் சமாளிக்கவும் ரஷ்யா இதே வெண்பட்டை கரும் பட்டை முறைகளையே அநுஷ்டித்தது. சர்வாதிகாரத்தின் கீழ் ஒரு கட்சிக்குள்ளேயே பல தனி அபிப்பிராயங்கள் இருக்கக் கூடுமென்பது மறுக்கப்பட்டது. இதனுலேயே மாஸ்கோ விசாரணையில் குற்றஞ்சாட்டப்பட்டவர்கள், நியாயமான அரசியல் மாறுபாடுடையவர்களாகக் கருதப்பட்டனர்.

குற்றம் சாட்டப்பட்டாவர்கள் தங்கள் தங்கள் இயல்புகளுக்கேற்பப் பலவித காரணங்களால் இந்த விபரீதங்களுக்கு உட்பட்டனர், புகாரினைப் போன்றவர்கள் தங்கள் மேல் குற்றஞ் சாட்டியவர்களின் கொள்கைகளையே பின்பற்றியவர்கள்; எனவே, தாங்களாகவே குற்றங்களை ஒப்புக்கொண்டனர். வாழ்வில் தாங்கள் சேவை செய்த கொள்கைக்காகச் சாவு மூலமும் செய்யும் செவை அது என்று கருதினர். கெமனுவைப் போன்ற வேறு சிலர் தாங்கள் மடிந்தாலும், தங்கள் குடும்பங்களைக் காக்க விரும்பினர். மற்றும் சிலர் சித்திரவதையால் சிந்தையிழந்து உயிர்ப்பிச்சை அளிப்பதாகக் கூறிய பொய் வாக்குறுதியை நம்பி தம்மேற் சுமத்தப்பட்ட குற்றச்சாட்டுகளை ஒப்புக்கொண்டனர். இதைத் தவிரக் குற்றச் சாட்டைக் கிளறிவிடுபவர்களும் உண்டு; மாஸ்கோ விசாரணைகளில் குற்றவாளிகள் தம் குற்றங்களைத் தாமாக ஒப்புக்கொண்டதன் ரகஸியம் பொதுவான ஏதோ ஒன்று என்று நினைத்ததாலேயே விளங்கவில்லை; ஆளுக்குத் தக்கபடி காரண காரியங்கள் மாறின.

சோவியத் உள் நாட்டுப் பிரசாரம் ஒரே தன்மைத்தாய்ச் சுலபமாக்கப்பட்ட முறையிலேயே அரசியல் கைதிகள் தங்கள் குற்றங்களை ஒப்புக்கொள்வதும் வழக்கமாகி விட்டது. ஒருமுறை வழக்கத்திற்கு வந்த பிறகு இதிலிருந்து மாற வழியில்லை. இதனுலேயே 1943-இல் கார்கவில் நடந்த ஜெர்மன் யுத்தக் கைதிகளின் விசாரணையில் ஜெர்மன் ஆபீஸர்களும், என். சி. ஓ. (N.C.O.)க்களும் டாஸ்டோவிஸ்கி நாவலில் வரும் பாத்திரங்களைப் போல் நடந்து கொண்டனர். அவர்களில் ஒருவன் கூட்டமாக ரஷ்யர்களைச் சுட்டு வீழ்த்தியபோது பக்கத்திலிருந்த ஒரு போர் வீரனது துப்பாக்கியைப் பிடுங்கிக் குழந்தையுடன்

வந்த ஒரு தாயைக் கொன்றதாக ஒப்புக்கொண்டான். இந்த விசாரணை படமெடுக்கப் பெற்று லண்டனில் வெளிப்படையாகக் காட்டப்பட்டது. இதைக் கண்டவர்கள் இதுவும் மாஸ்கோ விசாரணைகளைப் போன்று பொய்யானவையே என்பதை அறிவர். ஜெர்மானியர்கள் ரஷ்யாவில் மேற்கு ஐரோப்பியர் நினைக்க முடியாத கொடுமைகளை இயற்றினர் என்பதிற் சந்தேகமில்லை. எனினும் இந்த ஜெர்மானியனது வாய்மொழியைத் தவிர வேறு சாட்சியில்லை. எனில் சோவியத் நீதி விசாரணை வெறும் பிரசாரக் .கருவியாகியதென்பது நன்கு விளங்குகிறது; எனவே உண்மையும் பொய்யாகிறது.

பிரசாரக் கருவியான நீதி நெறி, அபத்த விளைவுகளிலேயே முடியும். மாஸ்கோ விசாரணைகளின்படி ட்ராட்ஸ்கி பிறர் குறுக்கீட்டைச் செம்படைக்குத் தலைமை தாங்கி வென்ற பொழுதுங்கூட வெளி நாட்டு கைக்கூலியாக்கப்படுகிறார்; இதற்கு முன்பே இறந்தவர்களையும், ஸ்டாலினையுந் தவிர மற்றக் கம்யூனிஸ்டுகள் பிரிட்டிஷ், ஜெர்மன், ஜப்பான் ரகசியத் தூதுவராலயச் சேவகர்களாக்கப்படுகின்றனர். அவர்கள் சவ்வீரப் பாஷாணத்தால் கோர்க்கியைக் கொன்றார்கள், ரகசியப் போலீஸ் **(D. P. U )** தலைவரை (பின்னர் அவரும் இவர்களைச் சேர்ந்தவரே என்பது வெளியாயிற்று) பாதரஸ ஆவியால் கொல்ல முயன்றார்கள், யந்திரங்களில் திருப்பான் (spanners) களைப் போட்டுச் சிதைப்பதிலும், சொந்த நாட்டைத் துண்டுத் துணுக்குகளாக இழுக்கான வெளி நாட்டாருக்கு விற்பதிலும், தந்தையான ஸ்டாலினைக் கொல்லச் சதி செய்வதிலுமாக செஸ்டர்டனது வியாழக்கிழமையாயிருந்த மனித (**The Man who was Thursday**) னைப் போல் நடந்து கொண்டனர். இந்த முரண்பாடுகளையும் முட்டாள்தனங்களையும் ஸோவியத் அநுதாபிகளிடம் கூறினால் முதலில் மறுக்க முயல்வர்; ரஷ்ய அறிக்கைகளைக் காட்டி இவற்றை நிரூபித்தால் இவை யெல்லாம் அறிவற்ற பாமரர்களுக்காக மிகைப்படுத்திக் கூறப்பட்டவை என்று மழுப்புவர்.

உண்மையில், ரஷ்யப் பொது மக்கள், சமயத்துக்கேற்றபடி பெரிய அரசியல் நிபுணர்களாகவோ, முட்டாள்களாகவோ திகழ்வர். 20-ஆம் ஆண்டு வெளியுண்மையால் அவர்களிடம் ஏற்பட்ட விளைவுகளை அடுத்த பகுதியில் விவாதிப்போம்.

## 5

### லட்சியமும் சமாதானமும்

"......பிரிட்டிஷ் அரசாங்கம் 'ஜெர்மனியுடன் செய்யும் இந்த யுத்தத்தில் எங்கள் நோக்கம் ஹிட்லர் தத்துவத்தை அழிப்பதைத்தவிர அதிகமாகவோ குறைவாகவோ வேறு எதுவுமில்லை'

என்று பிரகடனம் செய்துள்ளது. இதனால் பிரிட்டனும், ஃபிரான்ஸும் பழைய மதப் போர்களை நினைவுறுத்தும் வண்ணம் உயர்ந்த ஒரு லட்சியத்திற்காகவே ஜெர்மனியின்மேல் போர் தொடுத்ததாகத் தெரிகிறது—இத்தகைய போருக்கு யாதொரு நியாயமும் கிடையாது. ஹிட்லரின் கொள்கையை ஒருவர் கொள்ளலாம், தள்ளலாம்; அது அவர்களது அரசியல் அபிப்பிராயத்தைப் பொறுத்தது, ஆனால், ஒவ்வொருவரும் அறிய வேண்டிய ஒன்று, பலாத்காரத்தால் எந்தக் கொள்கையையும் ஒழித்துவிட முடியாது; யுத்தத்தால் எந்த நோக்கத்தையும் அழித்துவிடலாகாது. எனவே குடியாட்சி என்ற பெயரால் ஹிட்லரிஸத்தை அழிக்கப் போர் தொடுப்பது அர்த்தமற்றது மட்டுமல்ல; பெருங் குற்றமுமாகும்''

இது 1939, அக்டோபர், 31-ஆம் தேதி ஸோவியத் ஸுப்ரீம் கவுன்ஸில் கூட்டத்தில் மக்களதிகாரி வெளிநாட்டிலாகாத் தலைவர் மாலடோவ் கூறியது.

ஸோவியத் ஆதரவாளன் இதுபோன்ற பேச்சுக்களையும், 1939—41-இல் ரஷ்ய நடவடிக்கைகளையும் அவகாசம் பெற ரஷ்யா கையாண்ட அரசியல் நெருக்கடிச் சமாளிப்பு முறைகள் என்று உடனுக்குடனே விளக்கம் கூறுவான். ஸ்டாலின்-ஹிட்லர் ஒப்பந்தம் தாக்குதலுக்குத் தன்னைத் தயாராக்கிக்கொள்ளுவதற்கு அவகாசம் பெறுவதற்குத் தோதாக ஜெர்மனியைச் சமாதானப்படுத்த ஏற்பட்டதே; இதே போல், கம்யூனிஸ்டு அகிலம் ஒழிக்கப்பட்டதும், ப்ரௌடரின் முதலாளித்வ ஆதரிப்பும், உலகப் புரட்சிக்கு ஏற்ற சமயம் வரும் வரை நேச நாடுகளை நல்ல பிள்ளைகளாய் வைத்திருக்கவே. எல்லா விதமான பிற்போக்கு முறைகள், அறிக்கைகள், உரைகள் முதலியன யாவும் உள்நாட்டிலும் சரி, வெளி நாட்டிலும் சரி, இதே மாதிரியான வாதத்தால் நியாயமாகக் காட்டப்படுகிறது.

இப்பழைய வாதத்திலிருந்து எழும் பிரச்னை, முடிவு சரியாயின் முறைகளும் சரியாகுமா என்பதே. இதன் நீதி நெறிகளைப் பற்றி நான் இப்போது பேசவில்லை. அநுபவ ஸாத்யமாகப் பார்த்தால் இந்த மிசியாவலியன் தகிடுதத்த முறைகள் ஸோவியத் ரஷ்யாவுக்குப் பெரிதும் பயன்பட்டிருக்கலாம். ஆனால், ஐரோப்பியத் தொழிலாளர்களை வஞ்சித்து, வளைத்து, ஒன்றுமற்ற வெறுமையாக்கிவிட்டன. ரிப்பன்ட்ராப்பை வரவேற்க மாஸ்கோ விமான தளத்தில் ஸ்வஸ்திக் கொடியை ஏற்றியதும், செம்படையினர் நாஜி தேசியப் பாட்டைப் பாடியதும் முதலாளித்வ நாடுகளில் நடந்திருந்தால் வெறும் சந்தர்ப்ப வாதச் சமர்த்துக்களாகக் கருதப்படும். ஆனால், உலகத் தொழிலாளக் குடியானவத் தாய் (தந்தை) நாடான ரஷ்யா இவற்றைச் செய்வதால்

ஏற்படும் விளைகவுள் விபரீதமானவை. இவற்ருல் ரஷ்யாவுக்குக் கிட்டிய நன்மைகளைக்காட்டிலும் ஸோஷலிஸத்திற்கு ஏற்பட்ட தீமைகள் அதிகம். இவற்றின் பலாபலன்களை யெல்லாம் கணக்காக அறுதியிட்டுக் காண முடியாது; ஏனெனில் இவை கணிதத்திற்கு அப்பாற்பட்ட நிர்ணயிக்க முடியாத முடிவுகளை வுடையன. 1940-இல் ஃபிரஞ்சு வீழ்ச்சி அதன் ஐந்தாம் படையால் மட்டும் ஏற்பட்டதல்ல. "இது பணக்காரர் போர், தொழிலாளருக்குச் சம்பந்தமில்லை" என்ற கோஷமே வீழ்ச்சிக்குக் காரணம், ஸோவியத் ரஷ்யா இம்முறையால் பெற்ற நன்மைகள் பெரிதா? அல்லது உலக யுத்தத்தின் முதல் முன்னணியான ஃபிரஞ்சுப் படை வகுப்பை இழந்தது பெரிதா? யாரால் கூற முடியும்? 1939—41-இல் கம்யூனிஸ்டு அகிலப் பத்திரிகைகளும், பிரசார முறைகளும் ஹிட்லரைத் திருப்திப்படுத்த நேச நாடுகளுக்கு விரோதமாயிருந்தன. இரண்டாண்டுகளுக்குப் பிறகு சர்ச்சிலையும், ரூஸ்வெல்டையும் திருப்திப்படுத்தவே போலும் கம்யூனிஸ்டு அகிலமே கலைக்கப்பட்டது. பழைய வேலைக்காரனைத் திடீரென்று நீக்கிப் புதிய வேலைக்காரனை வைத்துக்கொள்ளுவதுபோல் ஸர்வ தேசியத் தொழிற் தத்துவத்தை ஒரேயடியாக ஒழிப்பது முறையல்ல; வரவு செலவுக் கணக்கை மாற்றி அமைப்பது போல் பற்பல தேசங்களைச் சார்ந்த கோடிக் கணக்கான மக்களின் ஆதர்சங்களையும், தியாகங்களையும் இஷ்டப்படி மாற்றுவது சரியல்ல.

ரஷ்யாவின் உள்நாட்டு விவகாரத்திலும் விஷயம் இதுவேதான். ஸோஷலிஸ அமைப்புக்கு அடிப்படையானது பொது ஜன அரசியல் கல்வி என்பதை யாவரும் ஒப்புக்கொள்ளுவர். ரஷ்யப் பொது மக்கள் மிகக் கீழ்த்தரமான படிப்பற்ற பாமர நிலையிலிருப்பதால் அவர்களுக்காகச் செய்யப்படும் பிரசாரங்களும் மிகமிக எளிதானவை என்பதும் யாரும் ஒப்பும் செய்தியே. இந்த நிலையில் முழுதும் முன்பின் முரணான பிரசாரத்தால் ஏற்பட்ட பயன் என்ன? முரண்பாட்டால் பிரமையுற்ற மக்கள், ஆவேசக் கனலுரைகளுக்கப்பால், தங்களுக்குத் தெரியாத ஏதோ அரசியல் தத்துவம் இருப்பதாக எண்ணினர். தங்கள் பகுத்தறிவைப் பலியிட்டனர். 25-வருடங்களுக்கு முன்பிருந்த பழைய பாமர மட்டத்திற்கு இறங்கினர் என்பது வெளிப்படை.

எனினும், இவ்வகண்ட அறியாமைக்குச் சில மாற்றுகளும் உண்டு. தீர்மானிக்கும் சக்தி பறிக்கப்பட்ட அவர்கள் வசைபாடஊக்கமூட்டப்பட்டனர்; திருப்தியின்மையைச் சமனம் செய்ய வசைப் பரிபாஷைகள் தரப்பட்டன; 'பைத்திய நாய்கள்', 'பேய்கள்', 'கழுதைப் புலிகள்', 'கிரந்திக் கிருமிகள்' என்ற அரசியல் வசவு அகராதியே தயாராகியது.

இந்த, ஸோஷலிஸப் புனர் போதனையின் உச்சம் பகிரங்கமாய்க் கூட்டங்கூட்டமாய்ச் செய்யப்பட்ட கொலை விழாக்களின் புதுப்பிப்பதன் மூலம் சாதிக்கப்பட்டது. காரகாவ் விசாரணையின் பிறகு குற்றவாளிகள் தூக்கிலிடப் பெறுவதை 30 முதல் 40 ஆயிரம் மக்கள் தரிசித்தனர்; இது சினிமாப் படமாக எடுக்கப்பட்டது; கழுத்துச் சுருக்கு இறுகிக் கலங்குவதை அணிமைக் காட்சி (close-up)யாகக் காட்டினர்; இப்படத்தை ரஷ்யா முழுமையும், ஏன் பிற நாடுகளும்கூடக் கண்டன. இதை 'டைம்ஸ்' பத்திரிகை 1943, டிசம்பர், 31-ஆம் தேதி இதழில் அநுதாபத்தோடு கீழ்க் கண்டவாறு வர்ணித்தது :—

"இந்த விசாரணையே போதனை முறையில் முக்கியமானதோர் கட்டம். மக்களின் கொந்தளித்துக் குமுறும் நீதி உணர்ச்சி அதன் கொடுமையான சின்னத்தால் திருப்தி அடைந்தது; அது மட்டுமா, அங்கு ஆயிரக்கணக்கில் குழுமி இருந்தோர் ஜெர்மானியன் எதிர்வெற்றி கொள்ள முடியாத சூரனல்ல, ஃபாஸிஸ குணம் அடிப்படையிலேயே உளுத்துப்போனது என்பதை உணர்ந்தனர்...தண்டனை பெற்றோர் வண்டிகள் நகரும்போது, தூக்குக்கயிறு சுருக்கித் துடி-துடித்து அவர்கள் உடல்கள் நழுவும் காலை, அப்பெருங் கூட்டத்தினின்றும் ஆழ்ந்த திருப்தியின் அடங்கிய குரலொன்று எழும்பியது. சிலர் இறக்கும் குற்றவாளிகளின் விம்மலுக்கேற்ப விசிலடித்துத் தங்கள் வெறுப்பைக் காட்டிக் கொண்டனர். பிறர் கை தட்டிப் பாராட்டினர்."

இந்த வர்ணனையின் தலைப்பு 'மறு போதனை முறை' என்பதே; இது வேடிக்கைத் தலைப்பல்ல, வினையான தலைப்பே.

* * *

உலக வரலாறு உன்னிப் பார்ப்பதில்லை. முறைகள் கொடூரமானவை (கொடூரமானவையே) என்பதல்ல நம் வாதம்; இவைகளின் விளைவு இன்னதென்று நிர்ணயிக்க முடியாதென்பதே நாம் கூறுவது. முன்கூட்டியே அவற்றைத் தீர்மானிக்க முடியாது; பின்கூட்டி அவற்றிற்குச் சமாதானம் கூறலாம். ரஷ்யாவினுள்ளும் வெளியும் கோடிக்கணக்கானவர்கள் கொடுமையாகப் பலியிடப்படுவதையும், இதனால் ஸோஷலிஸ இயக்கத்திற்கு ஏற்படும் தீங்கையும், அதன் ஒழுக்க நெறி உளுத்துப் போனதைக் கண்டும் நாம் கலங்கலாம்; ஆனால் மெதுவாகவோ, கோணல் மாணலாகவோ ரஷ்யா ஸோஷலிஸத்தையே நோக்கிப் போகிறது என்பதை நாம் நம்பும் வரையில் இப்புதிருக்கு விடை ஏற்படாது. எனினும், இவ்வாறு நம்புவதற்குச் சான்றுகள் யாவை? இதுவே பிரச்னையின் அடிப்படை அம்சம். லண்டனிலிருந்து நான் எடின்பரோ செல்கிறேன்; இரவில் என் ரெயில் வடக்கு

நோக்காது தெற்கு நோக்கிப் போவதைக் கண்டு சிறிது திகைக்கிறேன்; ஒரு வேளை மலைப்பிராந்தியத்தில் ரெயில் பாதை வளைந்து வளைந்து செல்லலாமென்று எனக்கு நானே சமாதானம் செய்துகொள்ளுகிறேன். ஆனால், மறு நாள் காலை நான் போர்ன் மௌத்திலிருப்பதாகக் கண்டால், அந்த ரெயிலோட்டி லண்டனிலிருந்து ஸ்காட்லந்துக்குச் செல்லும் பாதை அவ்வழியாகத்தான் போகிறதென்று கூறினால், அவன் கூற்றை நான் சந்தேகிப்பது ஸகஜந்தானே?

பாதை யிடையே திருப்பங்கள் தவிர்க்க முடியாதவை, எனினும், சரியான பாதையில்தான் போகிறோம் என்பதை நிச்சயிக்கப் போதுமான காலமும், பொதுவான பாதைப் போக்குமே சாதனங்களாகும். சோவியத் தலைவர்களின் பேச்சுக்களால் பயனில்லை; வரலாற்று வகையில் அவர்கள் உண்மையாளர்கள் என்பதற்கும் அர்த்தமில்லை. பலபடியான ஸோவியத் சாதனைகளே இதனை நிச்சயிக்கத்தக்க கருவிகளாகும். பின்வரும் பகுதிகளில் ஸமூகத் துறையில் ரஷ்யாவின் சாதனைகளைப் பார்ப்போம்.

## 6

### பரம்பரை பாத்தியதை சொத்து வாரிசு

ஸோஷலிஸக் கொள்கைகளின் ஆதாரக் கோட்பாடுகளில் ஒன்று உலகத்தில் பிறக்கும் ஒவ்வொரு குழந்தைக்கும் கல்விக்கும் வாழ்க்கைக்கும் சமசந்தர்ப்பம் தரப்படவேண்டும் என்பதே. இதற்காகப் புரட்சியினடியாகப் பரம்பரைச் சொத்துரிமையும், உயிலுரிமையும், இன்ஷ்யூரன்ஸுகளும் விலக்கப்பட்டன.

1. சட்டப்படியோ, அல்லது உயிலின்படியோ ஆன பரம்பரைப் பாத்தியம் இதனால் அழிக்கப்படுகிறது. இறந்த ஒருவரின் ஸ்தாவர—ஜங்கம சொத்துக்கள் அரசாங்க (R.S.F.S.R.)த்தைச் சாரும்.

2. இன்ஷ்யூரன்ஸைப் பற்றிய சட்டம் ஏற்படும் வரையில், இன்ஷ்யூரன்ஸ் செய்து இறந்தவர்களின், வேலைக்கு லாயக்கற்ற உறவினர்களுக்கு மீதியுள்ள சொத்தில், ஒரு பகுதி தரப்படும்.

3. 10,000 ரூபிள்களுக்கு மேற்படாத, நிலம், வீட்டுச் சாமான்கள், கருவிகள் முதலியவற்றாலான சொத்துக்கள் இவ்

வுத்தரவின் இரண்டாம் சட்டப்படி தற்காலிகமாக இறந்தவரது உறவினர்களின் மேற்பார்வையில் விடப்படும்.

1918, ஏப்ரல், 27-ஆம் தேதி உத்தரவு,

வி. டி. எஸ். ஐ. கே.

(ஸர்வ ஐக்ய மத்திய செயலாற்றுக் கமிட்டி)

1919, நவம்பர், சட்டத் தொகுப்பு (Code of Laws) 56-542-இன்படி எல்லா வகையான இன்ஷ்யூரன்ஸ்களும் ஒழிக்கப்பட்டன. இதனால் பாதிக்கப்பட்ட கிழவர்கள், அங்கஹீனர்கள், சிறுவர்கள் யாவரும் அரசாங்க கண்காணிப்பின் கீழ் வந்தனர்.

1936-இன் புது அரசியல் சட்டம் பிறவி முதலே உயர்வு தாழ்வை மறுபடியும் ஸ்தாபித்தது. (அரசியல் சட்டத்தின் 10-வது விதிப்படி) பரம்பரைச் சொத்துரிமை சட்டபூர்வமாக்கப்பட்ட, தன் சொத்தை தன் இஷ்டப்படி உயில் மூலம் வழங்கும் உரிமை ஒவ்வொருவருக்கும் கொடுக்கப்பட்டது. உயிரின்ஷ்யூரன்சும் அநுமதிக்கப்பட்டது. பணக்கார நகரவாசிகள் அரசாங்க இன்ஷ்யூரன்ஸ் ட்ரஸ்ட் (Slate Insurance Trust-Cosstrakh) டில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டுமென்று விளம்பரம் செய்தது. பங்கொன்றுக்கு 5000 ரூபிள்கள்; இது இறந்தவரின் உறவினர்களுக்கு வழங்கப்படும். (உதாரணம்: 1943. அக்டோபர், 9-இல் லிடரேட்டுரா இ இஸ்குஸ்த்வோவில் வந்த விளம்பரம்.)

பிறப்பு முதலே பூரண சமத்வம் என்பது பெற்றோர்களின் வரும்படியில் தாரதம்யங்கள் இருக்கும் வரையில் வெறும் கனவேயாகும். ஒவ்வொருவரும் தம் சக்திக்கேற்ப வேலை செய்து, வேலைக்கேற்ப கூலி பெறவேண்டும் என்னும் ஸோஷலிஸ முதற்படியிலிருந்து, ஒவ்வொருவரும் தம் சக்திக்கேற்ப வேலை செய்து தேவைக்கேற்பப் பயன் பெறும் இரண்டாம் படிக்கு மாறும்போது இவையாவும் ஸகஜமே. கண்டிப்பான விமர்சகன்கூட உடனடியாகத் திடீரென்று ஸர்வஜன ஸமத்வம் ஏற்படுமென்று எண்ண முடியாது. எனினும் மெதுவாயென்றாலும் ஸோஷலிஸத்தை நோக்கிச் செல்லும் அரசாங்கம் பிறவியிலேயே உள்ள பேதங்களை ஒழிக்கச் சிறிதாவது முயற்சி செய்ய வேண்டாமா? ஸோவியத் கொள்கை இதற்கு நேர்மாறாகப் போகிறது. பரம்பரைச் சொத்துரிமை மறுபடியும் நிலைத்துவிட்டது. இன்ஷ்யூரன்ஸ் ஆதரவு பெறுகிறது. தவிர மேலிடத்து குழந்தைகளுக்கு வயது வரும் வரை அரசாங்க உதவி அளிக்கப்படுகிறது. ஒரே ஒரு உதாரணம் :—

"தோழர் என். எம். பாவிகார்ப்பவ் என்னும் விமான மேதை, ஸோஷலிஸத் தொழிலாள வீரர், ஸோவியத் உச்சக் கழகத்தின் உதவித் தலைவர். கடுமையான நோய் கொண்டு இறந்ததும் ஸோவியத் அரசாங்கம் அவரது மனைவிக்கும் பெண்ணுக்குமாக 100,000 ரூபிள் முதலும், மனைவிக்கும், சகோதரிக்கும் உயிரோடிருக்கும் வரையும், பெண்ணுக்குப் படிப்பு முடியும் வரையும் முறையே 1,000, 400, 500 ரூபிள்கள் மாதா மாதம் உபகாரச் சம்பளம் தரவும் முன்வந்துள்ளது."

எனவே, பாவிகார்ப்பவின் இளம் பெண் மாதம் சுமார் உழைப்பின்றி வரும் 3,000 ரூபிள் வரும்படியும், 100,000 ரூபிள் முதலீடும் உள்ள மூவரேயான ஒரு குடும்பத்தில் வளர்வாள். அவளே முதுமை அடைந்த அல்லது அங்கஹீனமான தந்தையுடன் ஒரு சாதாரண ரஷ்யத் தொழிலாளியின் குடும்பத்தைச் சேர்ந்தவளாயிருப்பின் 3,000 ரூபிள்களுக்குப் பதில் 30 முதல் 75 ரூபிள்கள் மாத வரும்படியுடன் வாழநேரும். 1939, சட்டத் தொகுப்பு, நெ, 1 ப்படி வரும் கணக்கு.

**28-12-38 உத்தரவுப்படி முதியோர் மாதாந்தர உபகாரச் சம்பளம்**

| | வரும்படியற்ற ஒருவருள்ள குடும்பம் ரூபிள் | இருவர் அல்லது மேலுள்ள குடும்பம் ரூபிள் |
|---|---|---|
| சுரங்கம் முதலிய அபாயத் தொழிலினர் | 60 | 75 |
| ரெயில்வே போன்ற கனத்தொழிலினர் | 50 | 60 |
| மற்றையோர் | 30 | 40 |

**கல்வியில் பாரபட்சம்**

இந்தப் பாரபட்சம் வயது வந்த தொழிலாளர்களை மட்டும் பற்றியதல்ல, தொட்டிலிற் தூங்கும் குழந்தைகளையும் பற்றியதே. காரணம் அரசாங்கம் தெரிந்தே கையாளும் கொள்கையே. முதலாளித்வ நாடுகளிற் போலவே ஸோவியத் ரஷ்யாவிலும் குழந்தைகள் ஏழைகளாகவோ, பணக்காரர்களாகவோ தான் வளர்கின்றனர். சமத்வக் கோட்டை இடிந்து விழுவதற்காகப் போடப்பட்ட முதல் வேட்டு பரம்பரைச் சொத்துரிமை எனில் இரண்டாவது வெடி இலவசக் கல்வி மாறிப் படிப்பிற்கும் பணக் கட்டணம் ஏற்படுத்தியதே.

1940, அக்டோபர் 2-ஆம் தேதி அரசாங்க உத்தரவு நடுத்தரப் பள்ளிப் (கலை, வேலை நுணுக்கம், விவசாயம், வைத்யம்) படிப்புக்கு வருடம் ஒன்றுக்கு 150 முதல் 200 ரூபிள் வரைச் சம்பளமென்றும், உயர் கலாசாலைப் படிப்புக்கு 300 முதல் 500

என்றும் சட்டம் செய்தது. இந்தச் சட்டம் பிரகடனமான ஒரு மாதத்திற்குள் இச் சம்பளங்கள் கொடுபட்டு விடவேண்டும். இதனால் 600,000 ஏழை மாணவர்கள் பள்ளிக்கூடங்களை விட்டு விலகினர்.

எனவே, பணக்காரர், யந்திர நிபுணர்கள், புது அறிவாளி வர்க்கம் இவர்களின் 15 வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளே உயர்தரக் கல்வி பெற முடிந்தது. நேரடியான சம்பள முறை ஏற்படுவதற்கு நெடு நாட்களுக்கு முன்பே இத்தொல்லை ஆரம்பித்து விட்டது. 1928, ஜூலை, 13, 'ப்ராவ்டா'வின்படி, 1932-ஆம் ஆண்டு வரை உயர்தர என்ஜினீரிங் கல்லூரி மாணவர்கள் 100க்கு 65 பேர் தொழிலாளர் குழந்தைகள். இதனால் பணக்காரர்கள் உயர்தரப் பள்ளிகளை விட்டு ஏழைகளை விரட்டுவது தடைப்பட்டது. 1932, செப்டம்பர், 19இல் இக்கொள்கை கைவிடப்பட்டது. இதன் விளைவாய் உயர்தரக் கல்வி நிலையங்களிலிருந்து ஏழை மாணவர்கள் படிப்படியாகக் குறைந்து வந்தனர் :—

| | 1933 | 1935 | 1938 |
|---|---|---|---|
| | | நூற்றுக்கு | |
| கல்லூரிகள் | 50·3 | 45· | 33·9 |
| நடுத்தரப்பள்ளிகள் | 41·5 | 31·7 | 27·1 |

அரசியல் அதிகாரக் கேட்டுகளான கைத்தொழிற் கலாசாலைப் புள்ளி விவரங்கள் இதை இன்னும் நன்ருய்த் தெளிவாக்குகின்றன. 1938-இல்,

| | நூற்றுக்கு |
|---|---|
| தொழிலாளிகள், அவர்கள் குழந்தைகள் | 43·5 |
| குடியானவர், அவர்கள் குழந்தைகள் | 9·6 |
| பணக்காரர், சிறப்புத் தொழிலினர், அவர் குழந்தைகள் | 45·4 |

இந்த மாறுதலின் உச்சம் 1940-இல் பள்ளிச் சம்பளம் ஏற்படுத்தியதே. ஆனால் இது இத்துடன் நின்று விடவில்லை. 1943, ஆகஸ்ட், 23-ஆம் தேதி அரசாங்க அறிக்கைப்படி பணக்காரர், படை வீரர், ஆபீசர்கள் குழந்தைகளுக்கென்று தனிப்பட்ட பள்ளிக்கூடங்கள் நிறுவப்பெற்றன. 1940, அக்டோபர், 2-இல் நடுத்தரப்பள்ளிச் சம்பளம் தரமுடியாதவர்கள் நான்கு வருஷம் பலாத்கார அடிமைச் சேவகர்களாய் வேலை செய்ய வேண்டுமென்ற விதி ஏற்பட்டது. 6 மாதம் முதல் 2 வருடம் வரைத் தேர்ச்சிக்குப் பிறகு நாலு வருடங்கள் உத்தரவிட்ட இடத்தில் அவர்கள் சேவை செய்ய வேண்டும். இவற்ருல்

ஏழைகள் ஏழைகளாகவே இருந்தனர்; மேலிடத்தவர்கள் பதவிப் பாதையில் மேலும் மேலும் உயர்ந்தனர்.

ஏழைகளுக்கென்று உபகாரச் சம்பளங்கள் இருப்பது வாஸ்தவமே; ஆனால், முதலாளித்வ நாடுகளைக் காட்டிலும் இம் முறை இங்கு மோசமானது. பரீட்சையில் மூன்றுக்கிரண்டு பங்கு மார்க் வாங்கினால்தான் இந்தச் சலுகை கிடைக்கும். சிறப்பான அறிவுத் திறமை காட்டினாலொழியச் சாதாரணமாய்ப் பணக்காரனுக்குக் கிடைக்கும் சலுகை ஏழைக்குக் கிடைக்காது. எனவே, ஏழைகளில் தனிப்பட்ட சிலரே உயர் நிலையை அடைய முடியும்.

இந்த வளர்ச்சியை இரு படிகளாகப் பிரிக்கலாம். முதலாவது, வருமான அடிப்படையில் மக்களிடையே பாகுபாடு ஏற்பட்டது. இது தவிர்க்க முடியாததா யிருந்தது; இரண்டாவது, இவ்வகுப்பு வித்தியாசத்தை அரசாங்கம் தன் ஆட்சி முறையால் பிறவி வித்தியாசமாக்கிவிட்டது. பணக்காரர், யந்திர நிபுணர், படை வீரர், முதலிய புது ஜாதிகள் உற்பவித்தன. உற்பத்தி சாதனப் பொது உடைமைகள் அரசியல் அதிகார வளையங்களின் ஆட்சியாகியது. உலக வரலாற்றில் வரும் பழைய வகுப்பு வாதம் பழைய முறையிலேயே மறுபடியும் தலை எடுத்தது.

இந்த அரசாங்க உத்தரவுகளெல்லாம் தவிர்க்க முடியாத சமய சந்தர்ப்ப வாதங்களென்று சமாதானம் கூற முடியாது. பரம்பரைச் சொத்துரிமை சட்டத்திலேயே இடம் பெற்றபின் அதை ஒரு அவசரச் சந்தர்ப்ப நெறி என்று எப்படிக் கூறுவது? 1932-இல் ஒழிக்கப்பட்ட தொழிலாளர் மைய (the Workers Nucleus)க் கொள்கை சர்ச்சிலையோ, ரூஸ்வெல்ட்டையோ சமாதானம் செய்யவா ஏற்பட்டது? கல்விக்குக் கட்டணம் போட்டது இரண்டாவது போர் முனையை விரைவில் ஆரம்பிக்கவா?

சென்ற பத்து ஆண்டுகளில், ஸோவியத் ஆட்சி, ஏழைகளின் படிப்பிற்காக ஏதாவது ஒரே ஒரு சட்டம் இயற்றி இருப்பினும், அதன் கொள்கைகளின் நேர்மையைப் பற்றி நம் சந்தேகம் குறையும். ஸோவியத் மாயையில் மயங்கியவர்கள் இத்தகைய ஒரு அரசாங்க உத்தரவையாவது காட்டமுடியுமா என்றே நான் சவால் விடுகிறேன்,

பள்ளிகளில் உள்ள கல்வி முறையிலும், படிப்பிலும் கூட இதே நிலைதான். ஸோவியத் கல்வியிலிருந்த புதுமைகள், அநுபவங்கள் முன்னேற்ற முறைகள் யாவும் விலகிவிட்டன. ஆண் பெண் கூட்டுப் படிப்பு அகற்றப்பட்டது; 12-வது வயது முதல் இருபாலரும் பிரிந்தே படித்தனர். மாணவர்கள், உபாத்தியாயர்கள் இடையே போட்டாபோட்டிகள் தீர்ந்தன. மாணவனது அறிவை அவன் உள்ளத்தின் மூலமே விரிவாக்கும் அமெரிக்கன்

கல்வி முறை பொய் முறை என்றும், மார்க்ஸியத்திற்கு விரோத மானதென்றும் ஒதுக்கப்பட்டது. மார்க்ஸிய முறை என்று கீழ்க்கண்ட விதிகள் ஏற்பட்டன :—

“தலைமை உபாத்தியாயரே பள்ளிக்கூடத்தின் தனிப்பட்ட தலைவர்—உபாத்தியாயர்கள் தங்கள் மாணவர்களை உத்தர விடவோ தேவையானல் தண்டிக்கவோ பயப்படலாகாது”.

“சிறந்த ஆசிரியர்களின் நிறைந்த அநுபவப்படி பலவந்த மும், தண்டனையும் தவறென்பது பொய்த்து விட்டது. கெஞ்சு வதைக் காட்டிலும் நேரிய அளவு கடும் நடவடிக்கையே மிகுதி யாகப் பயன் தருவது.”

“மெதுவாக இணங்கச் செய்வது...ஒழுங்குக்குட்பட்டவர் களின் பயிற்சிக்குத் தடங்கலானது. தேச பக்திக் கல்வி முறைகள் தேச பக்தியை உற்பத்தி செய்வதில் கவனம் செலுத்தாத கேடு செய்யும், அவநம்பகமானது.”

இப்படியே பல. இவைகள் பழங் கொள்கைகளை விரும் பும் இங்கிலீஷ் பள்ளிக்கூடங்களில் சரியாக இருக்கலாம். (ஆனல் ஸோவியத் நாட்டிற்குச் சரியாகுமா?)

## 7

### ஏழையும் கோடீஸ்வர ஏழையும்

அரசியல் மாற்றத்தின்போது நெடுங்காலத்திற்கு வரும்படி ஏற்றத்தாழ்வுகள் இருக்கத்தான் செய்யும்; எனவே, ரஷ்யாவை இதற்காகக் குறைகூறுவது தவறு என்று நான் வற்புறுத்தி யுள்ளேன். எனினும் ஏற்றத்தாழ்வுகளின் அளவென்ன? இவை வளர்கிறதா? குறைகிறதா என்பதைக்கொண்டு நாம் ஒரு முடிவுக்கு வரலாம்.

லெனின் தத்துவத்தின் ஆரம்ப விதி, அவரே அரசாங்கமும் புரட்சியும் (**State and Revolution**) என்னும் நூலில் குறிப்பது போல், ‘மிகைப்பட்ட வரும்படி’—அதாவது, ஒரு சிறந்த தொழிலாளிக்குக் கிடைக்கக்கூடிய ஊதியத்திற்கு மேல் அரசாங்க அதிகாரிகளுக்கு (பிரஸிடெண்ட் உட்பட) கிடைக்கக் கூடாது. இது அடிப்படையான மூன்று கொள்கைகளில் ஒன்று, இதனல் அதிகார வர்க்கத்தின் அடங்காப்பிடாரித்தனம் நீக்கப் படும். (மற்ற இரு அடிப்படைகள்; அரசியல் செயல் துறை, நீதி பரிபாலனத் துறை இரண்டும் இணைவதும்; வேண்டாத அதிகாரியை வாக்காளர் வேலையிலிருந்து விலக்கும் உரிமையும்.)

இந்தச் சமனத்தன்மை ஆரம்பகாலத்தில் அப்படியே அநுஷ்டிக்கப் படவேண்டும் எனக் கருதப்பட்டது. லெனினே உள்நாட்டுக் கலகத்தின்போது, உயிர் காக்கும் படைத்தலைவர்

களுக்குச் சில தனிச்சலுகைகள் காட்டவேண்டியிருந்தது. இது தவிர்க்க முடியாத அவசர நிர்ப்பந்தத்தின் விளைவு. ஆனால் பின்னர் இந்த அதிகார வர்க்கம் கொஞ்சம் கொஞ்சமாய் நிலைக் கலாயிற்று.

முதலில் இச்சலுகைகள் சமூக சேவைகள் பதவிகள் எனப் பண்டங்கள் ரூபத்திலேயே நடைபெற்றன. கட்சி அங்கத்தினர்களின் உச்ச வருமானம் மாதமொன்றுக்கு 400 ரூபிள்; இதற்கு மேல் அதிகச் சம்பளம் வாங்கிய அதிகாரிகள் வெறுப்புடன் நோக்கப்பட்டனர். ஆனால் முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் போதே வரும்படித் தராதரங்கள் தலைகாட்டலாயின. 1931, ஜூனில் ஸ்டாலின் பேச்சு பெரிய அடிப்படையான மாறுதலை உண்டுபண்ணியது. அது சம்பளச் சமனத்திற்கு நேர் விரோதமானது.

அந்தச் சமனம் அடியோடு அழிக்கப்பட வேண்டும்; அது 'ஸமுதாய உற்பத்திச் சக்திக்கு இடைஞ்சல் செய்கிறது'; அது 'முதலாளித்வச் சார்பான சாய்ப்பு,' 'ட்ராட்ஸ்கிய'க் கொள்கை என்றெல்லாம் ஸ்டாலின் சொன்னார். இப்பேச்சு, இதன் தத்துவம் தேசமெங்கும் பிரசாரம் செய்யப்பட்டது. சமவரும்படிக் கொள்கை (Uravnilovka) தவறென்றும், சம்பள ஏற்றத் தாழ்வும் ஸோஷலிஸத்தின் அடிப்படையான ஒரு கொள்கை என்றும் மக்கள் நம்பலாயினர்.

இக்கொள்கை மாற்றத்திற்குக் காரணம் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் நடைமுறையில் தோன்றியகஷ்டங்களே. 1927-இல் முதலாளித்வ நாடுகளை மீறிய முன்னேற்றத்தை வெகு சீக்கிரத்தில் அடைந்து விடுவோம் என்ற வாக்குறுதிகளும், அவற்றால் ஏற்பட்ட ஆவேசமும் பயனற்றுப் போயின. வாழ்க்கைத்தரம் உயர்வதற்குப் பதில் புரட்சிக்கு முன்பிருந்த நிலைமையை விடவும் தாழ்ந்தது. இந்நிலைமையைச் சமாளித்து புது ஊக்கமளிக்க ஏதாவது செய்யவேண்டி வந்தது. எனவே, வருமான ஏற்றத்தாழ்வுகள் வகுக்கப்பட்டன; சீக்கிரத்திலேயே இவை முதலாளித்வ நாடுகளில்கூட இல்லாத அளவுக்கு அதிகமாயின. தவிர, இப் புதுக் கொள்கை நெருக்கடியைச் சமாளிக்க வந்த தற்காலிக நெறியல்ல, ஸோஷலிஸத்தின் நிரந்தரமான வெற்றிநெறியாகக் கூறப்பட்டதை நோக்குக.

ஸோவியத் கைத்தொழிலின் இளம் பருவத்தில் அவசியமாகவும், அவசரமாகவும் மற்றொன்றும் செய்யவேண்டியிருந்தது; தனி நபர் உற்பத்தி முறையை மாற்றித் தொழிலாளர்களைப் பலபடியாகப் பிரித்து வேலைவாங்க நேர்ந்தது. ஸ்டெகனோவிஸம் (Stakhanovism) என்ற பெயரில் இதைப் பொது

மக்கள் விரும்பும்படி செய்தது. இந்தப் பிரசாரம் சரித்திரத்திலேயே ஒரு விசித்திரமான பிரசாரம்.

1933, ஆகஸ்ட், 30-ஆம் தேதி இரவு, அலெக்ஸைஸ் டெகனுவ் என்னும் இளவயது நிலக்கரிச் சுரங்கத்தொழிலாளி—(டோனட்ஸ் படுகையிலிருந்த) நிலக்கரிச் சுரங்கத்தின் இளந் தொழிலாளி—வழக்கமான 7 டன் நிலக்கரி வெட்டுவதற்குப் பதில், 6 மணி நேரத்திற்குள் 102 டன் வெட்டினுன். சில நாட்களுக்குப் பிறகு அவனே 175, அப்பால் 227 டன்கள் வெட்டிக் காட்டினுன்.

இந்த அதிசயத்தை, லோர்ட்ஸில் பெர்னடெட் தெய்விகத்தைப் போல் தேசம் பூராவிலும் ரேடியோக்களும், பத்திரிகைகளும், பிரசங்கிகளும் பிரசாரம் செய்தனர். உடனே வேறு அதிசயங்களும் நடைபெற்றன. ட்யுகோனுவ் சுரங்கத் தொழிலாளி ஒருவன் ஒரு நாள் ஒரு வேளைக்குள் 125 டன் வெட்டினுன், நோகின் நெசவாலையில் இ. வினேக்ரேடோவா, எம். வினேக்ரேடோவா இருவரும் 16-24 தறிகளுக்குப்பதில் முறையே 144-150 தறிகளை ஓட்டினர்; ப்ராவ்டாவின்படி ஒரு மில்லர் (தகடடிப்போன்) 63, திட்டமிடுவோர் 55, இணைப்பாளர் 15, தட்டாளர் செய்யும்அளவு வேலைசெய்தானும்.ஒவ்வொரு ஆலையிலும்100-க்கு 200, 500, 1000, 2000-முமாக வேலை செய்பவர்கள் மிகுந்தனர்.

இவ்வதிசயங்களின் உளவை ஸ்டெகனேவே முதலாவது ஸ்டெகனேவிட் மகாநாட்டில் கீழ்க்கண்டவாறு கூறினுன்:

"நிலக்கரிச் சுரங்கத்தில் துளையிட்டு நிலக்கரி எடுக்கும் போது எடுத்த நிலக்கரிக் குவியலை அகற்றவும், மறுபடி எடுக்கத் துவங்கவுமாக இடையில் வேலை தடைப்படுவதைக் கவனித்தேன்.—எனவே நான் ஒரு முடிவுக்கு வந்தேன்; ஒருவன் கூட்டாக வேலை செய்தால், அதாவது ஒருவன் நிலக்கரி வெட்ட, பலர் அதை வேறிடத்திற்கு ஒதுக்கினுல் உற்பத்தி அதிகமாகுமென்று கண்டேன்.

வேறு வார்த்தையில் வேலைப் பாகுபாடு ஏற்பட்டது. எல்லா முதலாளித்வ நாடுகளிலும் இப்பாகுபாடு ஏற்கனவே இருந்தது தான். இதை ரஷ்யத் தொழிலாளி எதிர்க்காமலிருக்கவே ஸ்டெகனேவிஸப் பிரசாரம் செய்யப்பட்டது.

இவ்வாறு அறிவுக்குப் பொருந்த வேலைப் பாகுபாடும், வருமான வேறுபாடும் தவிர்க்கமுடியாதவை. எனினும், முதலாளித்வ நாடுகளில் இல்லாத அளவுக்கு வருமான வேறுபாடு வளர்ந்தது போலவே, இவ்வேறுபாடும் ஸோஷலிஸத்தின் நிரந்தரக் கட்டுப்பாடாக வளர்ச்சியுற்றது.

"ஸ்டெகனேவிஸ்ட் இயக்கம் ஸோவியத்துக்கே சொந்தமானது; ஸோஷலிஸத்தின் தனிப்பெருமை"—என்று கனத்

தொழில்களின் தலைமை அதிகாரியான ஆர்ஷோனிகிட்ஸ் ஸ்டெக னேவிட் மகாநாட்டில் கூறினர். "இது அமிதவேலைக்கு நரம் புகளை முறுக்குவதல்ல...வேலையின்போது ஒவ்வொரு கணத் தையும், நிமிஷத்தையும் கணக்கிட்டால்தான் ஒரு ஒழுங்கான அளவைப்பண்பு (rhythm) உண்டாகிறது...கலாசாரத் தன்மை கனிகிறது. எனவே இது வேலைக்கு அமிதமாகத் தன்னை அலட்டிக்கொள்வதல்ல, வேலையைக் கலைப்பண்போடு நோக்கு வதாகும்" என்று மாலடோவ் அழுத்தம் திருத்தமாக விளக்கம் கூறினர்.

இந்தக் கலாசாரம் ஸோவியத் கைத்தொழிலில் வெகுவாக முன்னேறிற்று. ஸ்டெகனேவிட்ஸ் (முதலாளித்வ நாடு களில் மேஸ்திரி, ஃபோர்மென் என்பதைப்போல்) களுக்கு தனிப்பட்ட சாப்பாட்டறைகள் விடப்பட்டன; சராசரிக்கு 20 மடங்கு மேலாகச் சம்பளம் தரப்பட்டது. 1936, ஜனவரி, 20-ஆம் தேதி மாஸ்கோ பத்திரிகையான 'ட்ரட்'டின்படி டோனட்ஸ் சுரங்கத்தில் 60 பேர் தலா ஒன்றுக்கு மாதச் சம்பள மாக, 1000 முதல் 2500 ரூபிள்களும், 75 பேர் 800 முதல் 1000 ரூபிள்களும், 400 பேர் 500 முதல் 800 ரூபிள்களும், மற்றுள்ள ஆயிரம் பேர் சராசரி 125 ரூபிள்களுமாகப் பெற் றனர். 1500 தொழிலாளர்களையுடைய ஒரு சுரங்க அமைச்சர் (Director) அறிவாற்றலில் ஒரு நடுத்தரக் கூலியை ஒத்தவரே. எனினும், டைரக்டர்கள், என்ஜினியர்கள், செயலாளர் முதலிய மேலிடத்தவர்கள் சம்பளம் தொழிலாளரின் உச்சச் சம்பளத் திற்கு 100 மடங்கும், தாழ்ந்த சம்பளத்தைப்போல் 300 மடங் கும் அதிகமாகப் பெற்றனர். இவ்வாறு 1943-இல் முதல் முத லாக ஸோவியத் பத்திரிகைகளால் வரவேற்கப்பட்ட கோடீஸ்வ ரர்கள் தோன்றினர்.

இந்தக் கட்டத்தில் ஸோவியத் ஆதரவாளர் இதெல்லாம் மாதச் சம்பளந்தானே, முதலாளித்வ நாடுகளிற்போல் லாப மில்லையே என விவாதிக்கலாம். இவ்வாதம் நாம் பின்னர் கூறப் போகும் "அசைக்க முடியாத ஸோவியத் அஸ்திவாரங்க"ளி னின்றும் எழுவது. அநுபவபூர்வமாகப் பார்த்தால் முதல் முதலாக ஸோவியத் கோடீஸ்வரராகக் கொள்ளப்பட்ட காஸக் ஸ்தான் அரசாங்கப் பண்ணை அமைச்சரான தோழர் பெர்த்யே பெக்குவுக்கு, அப்பண்ணை சொந்தமாயிருந்தாலென்ன, அதை நடத்தும் உரிமைமட்டும் இருந்தாலென்ன. இப்போதுள்ள சட்டப்படி தொழிலாளர்கள்மேல் அவருக்குள்ள அதிகாரம் முதலாளித்வ நாடுகளில்பண்ணைச் சொந்தக்காரர்களுக்குக் கிடை யாது; அவரது குழந்தைகள் பணக்காரக் குழந்தைகளாய்ப்

படிப்பு வசதிகளும், பதவி வசதிகளும் பெறும். அவர்கள் வரும்படி முதலாளித்வ நாட்டில் கோடீஸ்வரனது குழந்தைகளைப் போலவே உழைத்துப் பெருத ஊதியமேயாகும். ஒரே ஒரு வித்யாசமே அவருக்கும் முதலாளித்வப் பணக்காரர்களுக்கும் உண்டு; அவர் சொந்தமாக நிலமோ ஆலேயோ வாங்க முடியாது. எதற்காக வாங்கவேண்டும்? சொத்திலிருந்து சொந்தக்காரனைக் காட்டிலும் அதிகமான சுக சௌகரியங்கள் கிடைக்கும்போது இம் முதலில்லா வியாபாரத்தை விட்டு முதலீடு செய்வானேன்?

இந்த ஏழைக் கோடீஸ்வரர்களின் நிலைமையை ஸோவியத் வெறும் ஏழைகளின் நிலைமையை ஒப்பிட்டுப் பார்த்தால்தான் நன்கு புரிந்து கொள்ளமுடியும். உலகத்திலேயே தம் மக்களின் வாழ்க்கைத்தரத்தையும், வரும்படி வகையையும் புள்ளி விவரங்களால் விளக்காத நாடு ரஷ்யா ஒன்றுதான். ரஷ்யாவில் வாழ்ந்து, பொது மக்களின் பரிதாப நிலைமையை அறிந்து, வெளிநாட்டிற்கு வந்த உண்மையை உரைத்த சிலிகா, ஸெடவ், யுவான், ஸெர்ஜ் போன்றவர்களை ரஷ்யா ட்ராட்ஸ்கியப் பொய்யர்கள் என்று ஒதுக்கிவிடுகிறது. எனினும், ரஷ்ய அரசாங்க அறிக்கைகளிலிருந்தே உண்மையை ஒருவாறு ஊதிக்க முடியும். திட்டச் சிக்கனம் (Planovoie Khoziaistvo) என்னும் ரஷ்யப் பத்திரிகையில், 1938-இல் ஸார் ஆட்சியில் ஸெயிண்ட் பீடர்ஸ்பெர்க் நெசவாலைத் தொழிலாளிக் குடும்பத்தின் உணவுச் செலவைப்பற்றி ஒரு கட்டுரை வந்தது. அதை அடிப்படையாகக் கொண்டு ஹப்பர்ட் கீழ்க்கண்ட புள்ளி விவரங்கள் தருகிறார்:

| | 1913 | 1929 | 1937 |
|---|---|---|---|
| ஒரு வார உணவுச் செலவு—ரூபிள்— | 3.40 | 5.90 | 49.60 |
| உணவு விலைகளின் அளவு—நூற்றுக்கு— | 100 | 172 | 1449 |
| சராசரி ரூபிள் வரும்படி—ரூபிள் — | 25 | 66 | 245 |
| உண்மையான கூலியின் அளவு-நூற்றுக்கு- | 100 | 154 | 68 |

எனவே புரட்சிக்குப் பிறகு, 1929 இல் வாழ்க்கைத்தரம் 54 சத வீதம் உயர்ந்தது; 1937-இல், புரட்சிக்கு முன்பிருந்த நிலையைக் காட்டிலும் 32 சதவீதம் தாழ்ந்தது.

ஸோவியத் ரிகார்டுகளிலிருந்தும், விலைவாசிப் புள்ளி விவரங்களிலிருந்தும், ஸோவியத் பத்திரிகைகளால் ஒப்புக்கொள்ளப்பட்ட அமெரிக்கத் தூதராலய அறிக்கைகளிலிருந்தும் ஆராய்ந்து எப். ஃபாரெஸ்ட் என்பவரும் மேற்கண்ட முடிவுக்கே வருகிறார்.

| | 1913 | 1928 | 1940 |
|---|---|---|---|
| விலைவாசிகள் | 100 | 187 | 2248 |
| பணக் கூலி | 100 | 233 | 1383 |
| உண்மை வரும்படி | 100 | 125 | 62 |

காலின் க்ளார்க் (Critique of Russian Statistics) என்பவர் ஸோவியத் அரசாங்க அறிக்கைகளை மட்டுமே துணையாகக் கொண்டு மேற்கண்ட முடிவுக்கே வருகிறார். 1913-இல் இருந்ததைக் காட்டிலும் 1934-இல் ஒரு நபர் உணவு 100.க்கு 30 விழுக்காடு குறைந்து விட்டது. இது மிகக் கொஞ்சம் உணவுண்டு வாழும் 100-க்கு 10-ஆன பிரிட்டிஷ் ஏழைகளின் தரத்தைவிட 100-க்கு 30 குறைந்தது என பொலான்யீ கூறுகிறார்.

எனக்குத் தெரிந்தவரையில் இந்தப் புள்ளி விவரங்களை எந்த ஸோவியத் கம்யூனிஸ்ட் அதிகாரியோ, ஆராச்சியாளனோ இதுவரையில் மறுத்ததில்லை, மறுக்கவும் முடியாது. ஏனெனில் இவையெல்லாம் உணவு உற்பத்தி, சராசரிக் கூலி, ஜனத்தொகை முதலியவை பற்றிய ஸோவியத் அரசாங்க அறிக்கைகளிலிருந்தே கணிக்கப்பட்டுள்ளன.

1933, பெப்ரவரியில், குடியானவர்களுக்கு ஸ்டாலின் செய்த பிரபலமான என்ரிச்சிஸ்ஸஸ் வோஸ் பிரசங்கம் விவசாய வரும்படியிலும் ஏற்றத்தாழ்வுகளைப் புகுத்தியது. நிலங்களெல்லாம் கூட்டுப் பண்ணைகளாய்த் தொகுக்கப் பெற்று, அவற்றின் விளைவில் எல்லாக் குடியானவர்களும் சரிசமானமான பங்கு கொள்ளும்போது ஏற்றத்தாழ்வுகளை எவ்வண்ணம் புகுத்துவதென்பது கொஞ்சம் சிரமஸாத்யமாய்த் தானிருந்தது; ஆனால், சீக்கிரத்திலேயே இதற்குச் சாமர்த்தியமான வழி ஒன்று கண்டு பிடிக்கப்பட்டது. நிலத்தின் விளைவுகள் குடியானவர்களுக்கெல்லாம் சரி சமானமாகப் பங்கிடப்படவில்லை நாளொன்றுக்கு அவரவர்கள் செய்யும் வேலைக்குத் தக்கபடிக் கூலியாகக் கொடுக்கப்பட்டன. "ஒரு நாள் வேலை" என்பதன் மதிப்பு ஆளுக்குத் தக்கபடி மாறலாயிற்று. இவ்வகையில் சாதாரணப் பண்ணையாளின் 'ஒரு நாள் வேலை' அரை நாளாகவும், யந்திரக் கலப்பை ஓட்டுவோனுக்கு 5 நாளாகவும், பண்ணையை நடத்தும் காரியதரிசிக்கு 5 முதல் 10 நாளாகவும் கணக்கிடப்பட்டுக் கூலியும் கொடுத்தனர். முதலாளித்வ பாஷையில் குடியானவர்கள் கூலிகளாயினர்; பிறர் மேஸ்திரிகளாயினர். முன்பே கூறியபடி கோடீஸ்வரன் பெர்டிபெகவ் மிகுந்த ஏழ்மையான காஸக் ஸ்தானத்து இத்தகைய பண்ணை அதிகாரியே.

தொழிலாளிகள், குடியானவர்கள், போர் வீரர்கள், என்ற மூவகுப்பினருமே ஸோவியத் அரசாங்கத்தைத் தாங்கும் தூண்கள். எனவே, போர் வீரர்கள் மட்டும் பிறரது வருமான உயர்வு தாழ்வுகளில் பங்கு கொள்ளாமலிருக்க முடியுமா? இன்று ரஷ்யாவில் ஒரு சாதாரணப் போர் வீரன் மாதம் ஒன்றுக்கு 10 ரூபிள் சம்பளம் பெறுகிறான்; லெப்டினென்ட் சம்பளம் 1000 ரூபிள், கர்னலுக்கு 2400, பிரிட்டனில் சாதாரண ஸோல்ஜருக்கும், படை அதிகாரிக்கும் உள்ள சம்பளத் தாரதம்யம் ஒன்றுக்கு நாலு; அமெரிக்காவில் ஒன்றுக்கு மூன்று; ஸோவியத் ரஷ்யாவில் ஒன்றுக்கு நூறு, இதைப்பற்றி ஸோவியத் ஆதாவாளர் கூறும் சமாதானம் ருசிகரமாய்த் தானிருக்கும். 1943-இல் வெளியான, ரெக் பிஷப் எழுதிய ஸோவியத் கோடீஸ்வரர்கள் **(Soviet Millionaires)** என்ற கைப் புத்தகத்தில்;

(ரஷ்யாவைப் பற்றி) தவருகக் கருதப்படுபவைகளில் போர் வீரர் சம்பளமும் ஒன்று. செஞ்சேனையின் சாதாரணப் போர் வீரனது சம்பளம் அற்பமே; ஆபீஸர்களில் லெப்டினென்ட் மாதம் 1000 ரூபிள்கள் பெறுகிறான், கர்னல் 2000 க்குமேல், இவ்வாறே பதவிக்கேற்பச் சம்பளமும் உயர்ந்து போகிறது.

"இதனால் ஸோவியத் கோடீஸ்வரர்கள் தங்கள் பணத்தை சொந்த வளர்ச்சிக்குப் பயன்படுத்துகிறார்கள் என்பதில்லை; இதனால் வகுப்பு வித்தியாசமும் ஏற்படுவதில்லை, இது ஸோவியத் கொள்கையின் நேர்மையான சம்பளப் பாகுபாட்டு முறையாகும்.

"ஒவ்வொரு ஸோவியத் ஆணும் கொஞ்ச காலத்திற்கு ராணுவத்தில் பயிற்சி பெற்றாக வேண்டும். பயிற்சிக் காலத்தில் அவன் கைச் செலவிற்காகச் சிறிது பணம் கொடுக்கப்படுகிறது. அப்புறம் அவன் ராணுவத்தை விட்டு விலகுகிறான்; இப்பயிற்சி, வாழ்வில் அவனுக்கு மிகவும் பயன்படுகிறது. அவனுக்குத் தரப்படும் சம்பளம் அற்பமே ஆனாலும், அத்துடன் பல இலவசச் சௌகரியங்களும் இணைக்கப்பட்டுள்ளன. இலவசத் தபால் வில்லைகள், இலவசப் பிரயாணம், இலவசமான கழுவும் கருவிகள், ஸினிமாக்கள், சிகரெட்டுகள் முதலியன. எனவே மற்ற நாட்டுப் போர் வீரர்களைவிட அவன் வாழ்க்கை எவ்வாற்றாலும் தாழ்ந்ததல்ல."

வாரமொன்றுக்கு 18 பென்ஸ் சம்பளமென்றும், ஆனால் ராணுவ அணிவகுப்புக்கு இலவசமாகப் பிரயாணம் செய்யலாமென்றும், காசில்லாமல் 2 தபால் வில்லைகள் 18-கழுவிகள், ஒரு போர்வை, ஸினிமாக் காட்சி எல்லாம் பெறலாமென்றும் ஏற்பட்டால் பிரிட்டிஷ் சோல்ஜருக்கு எப்படி இருக்கும்?

## 8

**தொழிலாளர் நிலைமையும் தொழிற் சங்கங்களும்**

மாலடோவ் வாக்கின்படி தொழிலில் கலாசாரப் பண்மைப் புகுத்தும் தொழிற் சட்டங்கள் ஃபாஸிஸ இத்தாலியிலும், நாஜி ஜெர்மனியிலும்கூட இல்லாத அளவுக்குத் தொழிலாளர்கள்மேல் கட்டுப்பாடுகளைச் சுமத்தின. ஆலைத் தலைவர்களும், மேஸ்திரிகளும் 20 நிமிஷத்திற்கு மேற்பட்டு நேரங்கழித்து வந்தாலும், நேரமாகுமுன் வேலையை விட்டுச் சென்றாலும், சோம்பியிருந்தாலும், உற்பத்தியின் அளவு குறைந்தாலும் காலவரையின்றி வேலையாட்களை நீக்கி வைக்கலாம்; சோம்பேறித்தனத்திற்காக விலக்கப்பட்டவர்கள் (ரேஷன் இருந்தவரையில்) தம் சோற்றுச் சீட்டையும், தங்குமிட உரிமையையும் இழப்பர். 1939-இல் சம்பளம் வாங்கும் ஒவ்வொருவருக்கும் ஒரு தொழிற் பதிவுக் கைப்புத்தகம் தரப்பட்டது. இது அதிகாரிகளிடம் இருக்கும். இதில் சம்பந்தப்பட்ட தொழிலாளியின் குணமும், குற்றங் குறைகளும், சுறுசுறுப்பும், சோம்பலும் குறிக்கப்படும். இப்புத்தகத்தைக் கொடுக்காத தொழிலாளியை வேலைக்கமர்த்திக்கொள்ளுவது பெருங் குற்றமாகக் கருதப்பட்டது.

இவ்வளவு செய்தும் அதிருப்தியுற்ற தொழிலாளர் பெருவாரியாக ஒரு வேலையைவிட்டு மற்றொரு வேலைக்குப் போகலாயினர். இதை நிறுத்த 1938-இலிருந்து நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. 1940-முதல் வேலையைவிட்டுப் போவோர், ஏன், நேரங்கழித்து வருவோர், சோம்பித் திரிவோர் உட்பட பலவந்தக் கூலிகளாகத் தண்டிக்கப்பட்டனர். இக்குற்றங்கள், இவை ஏற்பட்ட 5 நாட்களுக்குள் ஒரே ஒரு நீதிபதியால்(முன் பெல்லாம் விவாதிக்க வேறிருவரும் இருப்பர்) விசாரிக்கப் படவேண்டும். விசாரணையில் நீதிபதியோ, தொழில் அதிகாரியோ தயவு காட்டினால் கடுந்தண்டனைக்குள்ளாவர். ஒரே வேலையில் நெடுநாள் இருந்தவர்களுக்கே இன்ஷ்யூரென்ஸ் உரிமையுண்டு. எந்தப் புது வேலையிலும் 6 மாதங்களுக்கு வியாதி விடுமுறை கிடையாது; விடுமுறை அளவு வருடாவருடம் அதிகமாய் 10 ஆண்டுகளுக்குப் பிறகே முழுப்பலன் தரும். வேறு வேலைக்குப்போனால் மறுபடியும் பழைய கணக்குத்தான்.

இதேசமயம் வாரத்துக்கு 6 நாள், நாளொன்றுக்கு 7 மணி வேலை என்ற விதிகள் நீக்கப்பட்டன, 100-க்கு 15 மடங்கு வேலை அதிகரித்தது; எனினும் சம்பளம் பழையபடிதான்; அதிலும் திறமையின்மைக்காக அடிக்கடி சம்பளத்தில் பிடிக்கப்படும். பெண் தொழிலாளிகளின் பாதுகாப்புச் சட்டங்கள்—அமிதவேலை, இரவு வேலை போன்றவைகளைத் தடுப்பன—ரத்து

செய்யப்பட்டன, இவையாவும் யுத்தத்திற்கு முந்தி. 1941, டிஸம்பர் முதல் ரஷ்யக் கைத்தொழில்கள் ராணுவ அதிகாரத்தின்கீழ் வந்தன. சிறு குற்றங்களும் தலைவாங்கும் தண்டனை பெற்றன.

பெயரளவிலாவது பாட்டாளிவர்க்க ஆட்சியின் கீழிருந்த தொழிலாளர்கள் இத்தனைக் கொடுமைகளையும் யாதொரு எதிர்ப்புமின்றி எவ்வண்ணம் சகித்தனர்? என்றகேள்வி எழலாம்.

முதலாளித்வ நாடுகளில் பாட்டாளி மக்கள் தங்கள் குறைகளைத் தீர்த்துக்கொள்ள அரசாங்கத்தைத் தூண்ட இருவழிகள் உண்டு; ஒன்று தேர்தலில் யந்திரத்தைப் பயன்படுத்துவது; மற்றொன்று தொழிற்சங்கங்கள்.

ஒரே கட்சியால் ஆளப்படும் ஒரு தேசத்தில் முதல்வழி அடைக்கப்பட்டுள்ளதென்பது வெளிப்படை. ஸோவியத் வாக்காளனுக்கு ஒரு கட்சியால் நியமிக்கப்படும் ஒரே அபேட்சகரைப் பற்றி 'உண்டு' 'இல்லை' என்று சொல்லத்தான் உரிமையுண்டு; இல்லை என்பதால் ஆபத்தும் உண்டு. நாட்டுப்புறங்களில் வெளிப்படையான கைத்தட்டல் கணக்கால் வோட்டுச் சேகரிப்பதும் உண்டு. எப்படி இருந்தாலென்ன? அபேட்சகர் ஒருவர்தானே? சட்டப்படி எதிர்க் கட்சி கிடையாது. பத்திரிகைச் சுதந்திரம் கிடையாது; பொதுஜன அபிப்பிராயத்தை அரசாங்கத்திற்கு அறிவிக்க யாதொரு வழியும் கிடையாது; இந்த நிலையில் சிறுசிறு குழுவினராகப் பயனற்ற சதி செய்வதைத் தவிர வேறொன்றும் சாத்யமில்லை.

இரண்டாவது, பொருளாதார வழி தொழிற்சங்கமே. ஸோவியத் தொழிற்சங்கங்களின் ஒரே ஒரு முக்கியமான தொழிலைப்பற்றி மேற்த ஐரோப்பிய ஸோவியத் அநுதாபிகளுக்கு ஒன்றுமே தெரியாது. உள்நாட்டுப் போரின்போதும், அதன்பின்னும் தொழிற்சங்கங்களே தேசத் தொழில்கள் யாவற்றையும் கண்காணித்துப் பொருளாதாரக் குழப்பத்தையும், வீழ்ச்சியையும் தடுத்தன. என். இ. பி. (NEP) போலீஸ் ஆட்சியில் அவர்களின் முக்யத்வம் குறைந்தது; எனினும் தொழிலாளரின் அன்றாட நலங்களைக் காக்கும் காவல் நாய்களாயிருந்தன. ஸ்டாலின் அதிகாரத்தில் தொழிற்சங்கங்கள் அரசாங்க இலாக்காக்களாய் மாறின; தொழிலாளர் இயக்கம் தொழிலாளரை நசுக்கி வேலைவாங்கும் இயக்கமாகியது. முன்குறித்துள்ள கொடுமைகள் யாவும் தொழிற் சங்கங்களின் ஆதரவு பெற்றே நிறைவேறின. ஒவ்வொரு தொழிற் சட்டமும் "தொழிற் சங்கங்களின் மத்திய ஐக்யக் கவுன்ஸிலின் சிபார்ஸுகளின்படி யு. எஸ். எஸ். ஆரின் உச்சக் கவுன்ஸில் உத்தரவிடுகிறது—" என்ற முன்னுரையுடனேயே இயற்றப்பட்டது.

இச்சங்கங்கள் கூட்டுறவு முறையில் அமைக்கப் பெற்றவை; எல்லாத் தொழிலாளர்களையும் அடக்கிக்கொண்டவை. இவற்றின் தேர்தல்கள் கைதூக்குவதால் கணிக்கப்பெறும். அவைகளின் வேலைத் திட்டத்தைப் பற்றி இரு தலைவர்களின் வார்த்தைகளிலிருந்தே தெரிந்துகொள்ளலாம்.

"கூலி நிர்ணயம் ஆலை அல்லது பண்ணைத் தலைவர்களிடமே விடப்படவேண்டும். அவர்களே குறைந்தபட்சக் கூலியை நிச்சயிக்கவேண்டும்" (ஆண்ட்ரீவ் 1935 ப்ராவ்டாவின் 29 (XII)-ல்)

"சரியான கூலி நிர்ணயமும், தொழிலாளர் தேவைகளைச் சரிசெய்வதும், கைத்தொழிற் தலைவர்கள், நுணுக்கத் திறலினர் இவர்களது பொறுப்பு. ஒரு தொழில் ஒரு தலைமைக்கீழ் ஒழுங்காக நடைபெறவே இவ்வண்ணம் செய்கிறோம்—(தொழிலாளர்கள் தங்களை ஆளுவோர்களை எதிர்க்கக்கூடாது அது அடியோடு குற்றம், ஆட்சி முறையைக் கவிழ்க்கும் சூட்சி, தீவிர வாதத்தின் தில்லுமுல்லு, தனி அதிகாரத்தை எதிர்த்து ஆட்சியைத் தடைப்படுத்துவது—" (1933, 8 (VII) ட்ரட்டில் வெய்ன்பர்க் எழுதியது.)

## 9

### ஸோவியத் சட்டங்கள்

உள்நாட்டுக் கலகத்தால் உளுத்துப்போய் ஒட்டாண்டியான நாட்டில் பத்தாயிரக் கணக்கில் குழந்தைகள் பராரிகளாயினர்; கொள்ளையராய்க் கூட்டமிட்டனர். நாகரிக வாழ்வின் தொத்து நோயாயினர், அரசாங்கத்தின் அள்ளையில் முள்ளைப்போல் தைத்தனர். இவர்களுக்கு அரசாங்கம் பெஸ்பிரிஸோர்னி (Besprizorni) என்று பெயரிட்டது.

இந்நூற்றாண்டி இருபதுகளில் ரஷ்யாவின் வெளிநாட்டுப் பிரசாரத்திற்கு இப் பெஸ்பிரிஸோர்னிகள் முக்கியமாகப் பயன் பட்டனர். இப்பிரசாரத்தின் நோக்கம் இரண்டு; ரஷ்யர்களின் துயரத்தைக் கண்டு பிறர் பரிதாபப் படவேண்டும் என்பது ஒன்று; குற்றவாளிக் குழந்தைகளை ரஷ்யா எவ்வளவு நல்லமுறையில் சீர்திருத்துகிறது என்பதைப் பிறர் பாராட்டவேண்டும் என்பது மற்றொன்று. அக்காலத்தில் எக் (Ekk) கின் வாழ்வுக்கு வழி (The Road to Life) என்று ஒரு மிகச் சிறந்த சினிமாப்படம் வெளியாயிற்று. அதில் ஒரு குற்றவாளிக் குழந்தைக் கூட்டம் பலவந்தம், தண்டனை ஒன்றுமில்லாமல், தொழில் வைத்தியம், தாஜா வைத்தியம், சமூகக் கூட்டுறவு என்ற முறையில் சீர் திருத்தப்படுகிறது. இப்படம் உலகெங்கும் பிரபலமாக ஓடியது; சூழ்நிலை நன்றாகயிருப்பின் மனிதனும் நன்றாயிருப்பான் என்ற ஸோஷலிஸக் கொள்கையை விளக்கியது. தண்டனை, பழி

வாங்கல், குற்றக் கட்டுப்பாடு இவைகளுக்குப் பதில் சமூகப் பாதுகாப்பு முறை ஏற்பட்டது. இதுவே, ஆரம்பகாலத்தில் ஸோவியத் சட்டத்தின் அடிப்படை; ஸோஷலிஸ தத்துவத்தின் அச்சாணி, இதை விட்டு விட்டால் ஸோஷலிஸமே செத்துவிடும். ஸமூகச் சூழ்நிலையாதல் தவறுசெய்தவனை ஸமூகச் சூழ்நிலையே சீர்திருத்த முடியவில்லை எனில், அச்சமூகத்தை எந்த அரசியலமைப்பும் சீர்ப்படுத்த முடியாது. இதைப்பற்றிப் பழங் கொள்கையினர் மனித இயல்பு மாறுபடுவதில்லை; மேற்சொன்ன ஸோஷலிஸ முறைக்கேற்ற தன்னலமின்மை ஸாத்யமல்ல என்றனர். இவையாவும் ஸமூக சூத்திரத்தின் அடிப்படைகள்; இவற்றைத் திரும்பத் திரும்பச் சொல்லவேண்டும்; ஆனால் ஸோவியத்துக்களே இவ்வடிப்படைகளை அநேகமாய் அடியோடு மறைத்து விட்டனர்.

ஸோவியத் ஆட்சிக்கு இந்த பெஸ்பிரிஸோர்னிகள் ஒரு பரீட்சையாயினர். எவ்வளவு ஏழையாயிருப்பினும் ஒரு சமூகம் தன் குற்றவாளிக் குழந்தைகளை வாழ்வுப் பாதையில் வளம் பெறச் செய்யமுடியும்; தேசியப் பொதுமையில் அவர்களுக்கும் இடந்தர முடியும். இக்குழந்தைகளெல்லாம் பரம்பரைக் குற்றவாளிகளல்ல; உள்நாட்டுக் கலகத்தில் தாய் தந்தையர் இறக்க அநாதையானவர்கள். 1934-இல் இந்தப் பரீட்சையின் முடிவு தீர்மானிக்கபட்டது. 1935, ஏப்ரல், 7-இன் உத்தரவுப்படி மேற் கூறிய ஸமூகப் பாதுகாப்பு முறைகள் யாவும் கைவிடப் பட்டன; 12 வயதுக்கு மேற்பட்ட குழந்தைகளுக்கும் கொலைத் தண்டனை விதிக்கலாமென்று ஏற்பட்டது.

புரட்சி நடந்து 18 ஆண்டுகளுக்குப் பிறகு இது நடந்தது. பழைய குற்றவாளிக் குழந்தைகள் பெரியவர்களாய் விட்டனர்; புதுக் குற்றக் குழந்தைகள் தோன்றினர்; இவர்களைச் சீர்திருத்த செவிலிகளோ, உபாத்தியாயர்களோ இல்லை; வெடிவைத்துச் சுடும் வெம்படையே இருந்தது.

இந்த உத்தரவை ஸோவியத் ஆதரவாளர் மறுக்கின்றனர். கீழே 1935-இல் வெளியிட்ட ஸோவியத் சட்டத் தொகுப்பின், 19—155 பகுதியை முழுமையாக மொழிபெயர்த்துத் தருகிறோம்.

"குழந்தைக் குற்றங்களைச் சமாளிக்கும் சட்டமுறைகள், சி. இ. சி (C.E.C.)யும், எஸ். என். கே. (S. N. K.) யும் 7-4-35-இல் செய்த உத்தரவு. வெகு சீக்கிரம் மைனர்க் குழந்தைகளிடையுள்ள குற்றங்களை ஒழிப்பதற்காக C. E. C.—S. N. K. தீட்டிய சட்ட அறிவிப்பு.

1. கொள்ளை, கொடுமை, உடற்சிதைவு, தற்கொலை, தற்கொலைக்கு முயலல் முதலிய குற்றங்கள் புரியும் 12 வயதுக்கு

மேற்பட்ட குழந்தைகளும் கோர்ட்டுக்கு முன் கொண்டு வரப் பட்டு சட்டப்படி தண்டனை அடைய வேண்டியவர்களே.

2. குழந்தைகளைக் குற்றத்திற்கும், சூதுக்கும், விபசாரத் திற்கும், பிச்சை எடுப்பதற்கும் தூண்டுபவர்கள் 5 வருஷத் திற்குக் குறையாத சிறைத் தண்டனை அடைவர்.

12 வயதுக் குழந்தையும், வயது வந்த குற்றவாளிகளைப் போலவே கோர்ட்டில் நிறுத்தித் தண்டனை கொடுக்கும் சட்டம் ரஷ்யாவைத் தவிர உலகத்தில் எந்த நாகரிக நாட்டிலும், ஏன் அநாகரிக நாட்டிலுங் கூடக் கிடையாது.

இதுபோன்றே, உலகத்தில் வேறெங்குமில்லாத மற்றொரு சட்டமுண்டு. அதன்படி, வெளிநாட்டில் ராணுவத்தினின்றும் விலகிய ஒருவனது குடும்பம், குற்றத்தை அவன் உணரா திருப்பின், 5 வருட காலம், சைபீரியப் பாலைவனத்தின் கண் காணாத இடத்திற்கு அனுப்பப்படும்; குற்றத்தை அறிந்திருந் தால் அக்குடும்பத்தின் சொத்து பறிமுதல் செய்யப்படும்; அத் துடன் 5 முதல் 10 வருடக் கடுங்காவல் தண்டனையும் அடையும். 1934, ஜுன், 9இல் இஸ்வெஸ்ட்யாப் பத்திரிகையில் வெளியான 1934, ஜுன் 8ஆம் தேதிச் சட்ட அறிவிப்பின் மூன்றுவது பத்தி கீழ்வருமாறு:

3. வெளி நாட்டில் ராணுவத்தை விட்டோடிய வீரனது குடும்பத்தின் வயது வந்த அங்கத்தினர்கள் யாவரும், அக்குற்றத் திற்கு எந்த வகையிலாவது உடந்தையாயிருந்தால், அல்லது, அதை அறிந்தும் அதிகாரிகளுக்கு அறிவிக்காமலிருந்தால், 5 அல்லது 10 வருடச் சிறைத் தண்டனை அடைவர்; அவர்களது சொத்துக்களும் பறிமுதல் செய்யப்படும்.

மற்றும், அவனைச் சார்ந்த அவன் குடும்பத்தினர், அக்குற்றத் தின்போது அவனுடனோ, அவன் ஆதரவிலோ இருந்தால் அத் தகையோரின் வாக்களிப்புரிமை நீக்கப்படும்; அத்துடன் 5 வருடங்களுக்கு அவர்கள் சைபீரியாவின் தொலைவிலுள்ள பகுதிகளுக்குக் கடத்தப்படுவர்.

இச்சட்டம் ஒருவனது குற்றத்திற்காக அவனது குடும் பத்தையோ, குழுவையோ பொறுப்பாக்கும் பூர்வ குடிகளின் காட்டுமிராண்டித்தனத்தை உயிர்ப்பிக்கிறது. 1935-முதல் இச்சட்டம் எல்லாவகையான குற்றங்களுக்கும் பொருந்து மென்று விரிவாக்கப்பட்டது. இதனால், ஒவ்வொரு தனி நபரும் தன் குடும்பம் முழுவதையுமே தன் நடவடிக்கைக்கு உத்தரவாத மாகப் பணயம் வைக்கவேண்டி வந்தது. எனவே, தன் கணவன் கைது செய்யப்பட்டான் என்று அறிந்ததும் அவன் மனைவி உடனே அவசரமாக விவாகரத்து கோரலானாள். 1944-இல் இப்படிப்பட்ட விவாகரத்துகளும் விலக்கப்பட்டன.

இத்தகைய கொடுஞ் சட்டங்களைப் பற்றி நீதியின் மக்களதிகாரியான க்ரொலன்கோ 12-2-36. இஸ்வெஸ்ட்யா நெ. 37-ல் கீழ்க்கண்டபடி சமாதானம் கூறுகிறார்:

"தாராளக் கட்சியினரும், எல்லா விதமான சந்தர்ப்பவாதிகளும்,—வலிமை மிக்க ஒரு நாடு தன் எதிரிகளுக்குத் தயை காட்டும் என்கின்றனர். இல்லை, நிச்சயமாக இல்லை,—வலிமை மிக்கநாடு மகத்தானது; கட்சியும் அரசாங்கமும், குடிமக்களோடு வலுவாகப் பிணைக்கப்படுவர்—எனவே, எங்கள் ஸோஷலிஸ அமைப்பைக் கலக்க வரும் எவரையும் நாங்கள் வன்மையாக வெறுக்கிறோம், எதிர்க்கிறோம்; இந்த வகையில் அவர்களைக் கடுமையாகத் தண்டிப்பது நியாயமே."

இந்தச் சமயத்தில் முதன்மையான ஸோஷலிஸ அடிப்படைகளெல்லாம் சட்டப் புத்தகங்களிலிருந்து அடியோடு விலக்கப்பட்டன. புது ஸோஷலிஸ சட்டப் புத்தகத்தில் 'ஸமூகப் பாதுகாப்பு' என்ற வார்த்தை 'தண்டனை'யாக மாறியது; சட்டத்தின் நோக்கம் பழிவாங்கல், வெருட்டல், பயமுறுத்தல் என மாறியது. உயர்ந்தோர், தாழ்ந்தோர், யாவராயினும் மனித வேட்டைக்குகப்பட்டவர்களை 'ஸமுதாய நெறியில் தவறியவர்கள்' என்பதற்குப் பதில் பைத்திய நாய்கள், எலிகள், காளான்கள், புலிக் கழுதைகள், சாணிச் சட்டிகள், குப்பைக் கழிவுகள் என்றெல்லாம் பெயர் பெற்றனர். மார்க்ஸ் கூறியபடி தன் ஸமூகச் சூழ்நிலையாலேயே மனிதன் குற்றவாளியாகிறான் என்றால் எந்தச் சூழ்நிலைப் பழைய போல்ஷிவிக் காவலர்களைத் துரோகிகளாகவும், பேய் நாய்களாகவும் ஆக்கியது? இக்கேள்விக்கு விடையளிப்பது கஷ்டமே; எனினும் ஒவ்வொரு மார்க்ஸியவாதி மனத்திலும் இக்கேள்வி எழத்தான் எழுந்தது. இக்கேள்வியைத் தவிர்க்க ஒரே ஒரு வழி ஸோஷலிஸ அடிப்படைகளை அடியோடு விட்டு விடுவதே.

இவ்விடுதலை உணர்ச்சி, கல்யாணம், விவாகரத்து, காம உறவுகள், பிரயாணம், சமயநம்பிக்கை, ராணுவப் பயிற்சி என்னும் பொதுவான தனியான வாழ்க்கை நெறிகளைப் பற்றிய புதுச் சட்டங்கள் யாவிலும் பரவிநின்றது. ஈண்டு நாம் சிலவற்றையே குறிப்பிட்டு விளக்குகிறோம்.

ஐரோப்பிய ஸோஷலிஸ்டுகள் முதலாளித்வ நாடுகளின் பும்மைதுன (homosexuality) த்தையும், கருச்சிதைப்பையும் குற்றங்களாக்கும் சட்டங்களை எதிர்த்து வந்தனர். பும்மைதுனத்தைப் பற்றிய அவர்களது வாதங்களெல்லாம் யாவருக்கும் தெரிந்ததே. அது குற்றமெனில் பெரிய எழுத்தாளர்கள், ஓவியர்கள், இசைக் கலைஞர்கள், ப்ளேட்டோ முதலாக, லியனார்டோ வழியில் ப்ரோஸ்ட், கைட் வரையான மேதைகளிற்

பாதிப்பேர் இக்குற்றத்திற்காகச் சிறையிலிருக்க வேண்டியவர்கள் என்பதே. கருச் சிதைவைப் பற்றிய ஸோஷலிஸ வாதத்தைக் கீழ்க்கண்டபடி சுருக்கமாகக் கூறலாம். பிள்ளைப் பேற்றை விரும்பாத பெண் கருத்தடை செய்து கொள்வாள். கருச்சிதைவுக்கு ஒரு பெண் தயாராவதென்றால் அதற்கு ஏதாவது முக்கியமான மனோதர்ம, பொருளாதாரக் காரணங்களிருக்க வேண்டும். இருவகைகளிலும் வேண்டாத குழந்தை பிறவாமலிருப்பதே மேல். தன் கருவைச் சிதைக்க உறுதி கொண்ட பெண் சட்டதிட்டங்களைப் பற்றிக் கவனிக்க மாட்டாள். (வேமர் குடியாட்சியில் சட்ட விரோதமான கருச்சிதைவிற் தோல்வியுற்று ஆண்டு தோறும் சுமார் 500,000 பெண்கள் ஆஸ்பத்திரிகளில் அநுமதி பெற்றனர்; பெறாத கருச்சிதைவுகள் எத்தனையோ?) எனவே, கருவுச்சிதைவைச் சட்டத்தின்மூலம் தடைசெய்வதால் பணக்காரர்கள் தங்கள் காம விளையாட்டில் தங்கு தடையின்றி ஈடுபடுவர்; ஏழைகள் திண்டாடித் திணறுவர் என்பதே அவர்கள் வாதம்.

ஸோவியத் ரஷ்யாவில் கருச்சிதைவுத் தடைச் சட்டம் ஒன்றுதான் பொதுஜன அபிப்பிராயத்துக்குமுன் வைக்கப் பட்டது. வாக்கெடுப்புச் சோதனையில் மக்கள் அதற்கு விரோதமாய் இருப்பதாகத் தெரிந்தது; எனவே வாக்கொடுப்பு கைவிடப்பட்டு, 1937, டிசம்பர், 27 இல் (1936 சட்டத் தொகுப்பு நெ. 34—309-இன் படி) சட்டமாகியது. இதன்பிறகு அபாயகரமான பொதுஜன வாக்கொடுப்பு முறை அநுஷ்டிக்கப் படவேயில்லை. இப் புதுச் சட்டம், கருச்சிதைவுக்கு டாக்டர் சர்டிபிகேட் பெறுவதையும், சட்டபூர்வமான ஆமோதிப்பை வதையும் கஷ்டசாத்யமாக்கியது. ஜெர்மனி, பிரிட்டன், அமெரிக்கா முதலிய நாடுகளின் சட்டங்கள் இத்துணைக் கடுமையாயில்லை.

1944 இல் ஏற்பட்ட விவாகரத்துச் சட்டத்திலும் இதே கடுமை இருந்தது. விவாகரத்து இடைக்காலத்துத் தலை வெட்டிக் கொக்கிப் பலகை (Pillory) யில் சிக்கிக் கொள்வதைப் போன்றது. முதலில் விவாகரத்து விரும்பும் ஆணோ பெண்ணோ அவ்வூர்ப் பத்திரிகையில் அவ்விஷயத்தைத் தம் சொந்தச்செலவில் பிரசுரிக்க வேண்டும். (சட்டம் 24, பத்தி. c) விவாகம், விவாகரத்து விவரங்கள் உள்நாட்டுப் பிரயாண அநுமதிச் சீட் (Passport) டில் குறிக்கப்படவேண்டும்; இச்சீட்டுகள் உணவு ரேஷன் பெறவும், வேலைபெறவும், உள்நாட்டு ரெயிலில் பிரயாணம் செய்யவும் ஒவ்வொருமுறையும் காட்டப்படவேண்டும். விவாகரத்து விசாரணை வெளிப்படையான மக்கள் நீதிசபையில் முதலில் நடைபெற வேண்டும்: இச்சபை தம்பதிகளைச் சமா

தானம் செய்து இணைக்கமுயலும்; முயற்சி பலிக்காவிட்டால்—விவாக ரத்துசெய்ய இதற்கு அதிகாரமில்லை. ஆனால் மேல் கோர்ட்டுக்கு அப்பீல் செய்யலாம் (சட்டப் பகுதி 25) இந்தமேல் கோர்ட்டில், விவாக ரத்துக்கான நிர்ணயமான வழிமுறைகள் சரியாக அமைக்கப்படாமையால், தீர்ப்பளிப்பது ஜட்ஜின் சொந்த இஷ்டத்தைப் பொறுத்தது. பொதுவாக அரசாங்கம் விவாகரத்துக்கு விரோதமாயிருப்பதால் அவர் அநுகூலமாகத் தீர்ப்பளிக்க மாட்டார். இதற்குள் வழக்காளி ஓய்ந்து போக வில்லையென்றால் பிரதேசக் கோர்ட்டு, ஜில்லாக் கோர்ட்டு, நகரக் கோர்ட்டு, ஈற்றில் உச்சக் கோர்ட்டு என்று அப்பீல் செய்து கொண்டே போகலாம். இதுவரையில் விவாகரத்து வழக்குக் கட்டணம் 50 ரூபிள்களாக இருந்தது. இப்போது 500 முதல் 2000 ரூபிள்களாய்விட்டது. இதில் வக்கீல் ஃபீசும், மற்றச்செலவு களும் சேர்ந்ததல்ல. (சட்டப்பகுதி 27.) அவைகளையும் சேர்த் தால் ஒரு வழக்கில் கீழ்க் கோர்ட்டுத் தீர்ப்புக்கே 3000 ரூபிள்கள் செலவாகலாம். சென்ற 1938 அரசாங்க அறிக்கைப்படி ஸோவியத் வாசியின் சராசரி மாத வரும்படி 289 ரூபிள்கள்; எனவே விவாகரத்து விரும்பும் ஒருவர் கீழ்த்தரக் கோர்ட்டுகளைப் பொறுத்தவரையிற் கூட ஏறத்தாழத் தம் ஒரு வருட வருமானத் தைச் செலவிடவேண்டும்; எனவே உயர்ந்த அதிகாரிகள், என்ஜினீயர்கள், காரியதரிசிகள் முதலியோரைத் தவிர வேறு எவரும் விவாகரத்து செய்து கொள்ள முடியாது. பொருளா தாரத் துறையில் மட்டுமல்ல மற்றவகையிலும் இது கஷ்ட ஸாத்யமே. 1944, ஆகஸ்டில், விவாகரத்துச் சட்டம் ஏற்பட்ட பின் முதல் மாதத்தில் நாடு முழுமையிலும் ஒரு விவாகரத்து விண்ணப்பம் கூட வரவில்லையென்று பத்திரிகைகள் பரவசப் பட்டன.

உயர் வகுப்பினரைத் தவிர மற்றவரிடையே விவாகரத்தை ஒழிப்பதே ஸோவியத் ஆட்சியின் நோக்கம். அது எதையும் அரைகுறையாகச் செய்வதில்லை. சட்டப்படி ஒரு ஸோவியத் ராஜ்யம் விரும்பினால் ஸோவியத் ஐக்யத்திலிருந்து விலகலாம்; ஆனால் அநுபவத்தில் இது சாத்யமில்லை; அதுபோலவேதான் விவாகரத்தும்.

ஒரு ஸோவியத் பெண் கல்யாணமானதும் குழந்தைகள் பெறும் யந்திரமாகிறாள். விவாகரத்தை விலக்கும் சட்டமே பிரம்மச்சாரிகள், வயது வந்த கன்னிகைகள், மூன்று குழந்தை களுக்கு மேலில்லாத குடும்பங்கள்—இவைகள்மேல் ஒரு தனி வரி போடுகிறது. (ஜூலை 8, சட்டம், விதிகள் 16–18). மூன்றுக்கு மேல் குழந்தை பெற்ற தாய் சன்மானம் பெறுகிறாள்; நாலுக்கு மேல் குழந்தைகளை உடைய தாய் இதற்காக மாதச் சம்பளம்

பெறுகிருள் ; ஐந்தாறு குழந்தைகளை உடையவளுக்கு ' தாய்மைப் பதக்கம்' அளிக்கப்படுகிறது; ஏழுமுதல் ஒன்பது குழந்தைகளின் தாய் ' மகிமைத்தாய்' ஆகிருள்; பத்துக்கு மேலான குழந்தைகளை உடையவள் 'வீரத்தா'யாகிருள். இதைப் பற்றிய ஸோவியத் வெறி பேய்வெறி (hysteria) யைக் காட்டிலும் பிரமாதப்பட்டது. ப்ராவ்டா இச்சட்டமேற்பட்ட மறுநாள் எழுதியது :

"நம்மிடையேதான் உலகத்திலேயே முதன்முதலாக அரசாங்கம் தாய்மையை மதித்து மரியாதை செய்கிறது.''

உள்நாட்டுப் பிரசாரத்திற்காகக் கூட மேற்கண்ட வாக்யம் அர்த்தமற்றது. இங்கிலாந்தில் 4ஆம் குழந்தைக்கல்ல, இரண்டாம் குழந்தையிலிருந்தே குடும்ப வருமானம் அதிகரிக்கப்படுகிறது. நாஜி ஜெர்மனி இதேமுறையைக் கையாண்டபோது ஸோவியத் பத்திரிகைகள் ஜெர்மனி தன் பெண்களைப் பந்தயக் குதிரை பெறும் பெண் குதிரைகளாக்குவதாகப் பழித்தது. இத்தகைய பத்திரிகையாளர்களை ஸோவியத் வீரத்தாயார்களுக்கு மணம் செய்துவைக்க வேண்டும்.

லெனின் மரணத்திற்குப் பிறகு ஸோவியத் சட்ட அமைப்பு வரலாற்றை நோக்கினல் படிப்படியாக வாழ்வின் எல்லாத் துறையிலும் தனி மனித சுதந்திரங்கள் மறைந்து வருவதைக் காணலாம். 27-12-1932 சட்டம் (சட்டத் தொகை O. L. 1932, 84-516) உள்நாட்டுப் பிரயாணத்திற்கும் அநுமதிச் சீட்(Passport)டை ஏற்படுத்தியது. இதன்படி ஸோவியத் வாசி தன் சொந்த நாட்டில் இஷ்டப்படி பிரயாணம் செய்ய முடியாது. ஒரு பெரும் ஆலைத் தொழில் நகரை அணுக தனி அநுமதிச் சீட்டுப் பெறவேண்டும். 24-மணி நேரத்திற்குமேல் சொந்த ஊரைவிட்டு விலகவேண்டி இருந்தால் போலீஸுக்குத் தகவல் தெரிவிக்க வேண்டும். இந்த முறை வேறு எந்த நாட்டில் தேடினலும் கிடைக்காது.

அரசாங்க அலுவலன்றி வேறு எதற்காகவும் வெளிநாட்டிற்குச் செல்லக் கூடாது; சட்ட விரோதமாய் வெளிநாடு செல்ல முயல்பவர்களுக்குக் கொலைத் தண்டனை அளிக்கப்படும். அரசியல் அலுவலாக வெளிநாடு செல்வதுங்கூட ஆபத்தாகவே கருதப்பட்டது. — திரும்பி வந்ததும் அவர்கள் ஸம்ஸயத்துடனேயே கண்காணிக்கப்பட்டனர். சென்ற 25 வருடங்களாக இச்சிறை முறை மற்ற யாவற்றினும் முக்கியமாயுள்ளது. இதனலேயே ரஷ்யா நாஜி—ஜெர்மனியிலிருந்த தன் அகதிகளைப் பெற மறுத்தது ; இம் மறுப்பாலேயே 1938-எவெய்ன் மகாநாடு முறிந்தது ; ஸர்வதேசியப் பாணியில் இம் மறுப்புக்கு விடை காண்பதும் தீர்ந்தது. இதனலேயே ஃபிரெஞ்சு கடுஞ் சிறைப் பண்ணைகளில் கலங்கிய ஸர்வதேசிய ஸோஷலிசப்

படைகளை ரஷ்யா ஏற்க மறுத்ததும்; ஸ்டாலின்-ஹிட்லர் ஒப்பந்தத்துக்குப் பிறகு ஜெர்மன் ஃபாஸிஸ—விரோதிகளை ஜெர்மனிக்கே அனுப்பியதும்—அவ்வாறு அனுப்பப்பட்டவர்கள் பெயர்களுடன் அத்தாட்சிகளும் இந்நாட்டில் இன்னும் கிடைக்கின்றன.

மறுபடியும் நாம் கேட்கிறோம். இவற்றிற்கெல்லாம் காரணம் யாது? மறுபடியும் இக் கேள்விக்குள்ள ஒரே ஒரு விடை இது தான்: ஸோஷலிஸ தத்துவங்களைக் கைவிட்டு விட்டு ஸோவியத் ஆட்சி பலவந்தமாகப் பயமுறுத்தி மக்களை ஆள விரும்புகிறது; இதனால் வெளி உலகக் குடியாட்சிகளைப் பற்றிய அறிவை மக்கள் அடையாத வண்ணம், அவற்றோடுதம் நிலைமையை ஒப்பு நோக்காத வண்ணம் கட்டுப்படுத்திவைத்துள்ளது. (வேறு எந்த வகையிலும் இதை விளக்கமுடியாது.)

## 10

### புதிய அதிகாரவர்க்கம்

ஸோவியத் ஐக்யத்தின் அதிகார மையம் அதன் கட்சியே. சென்ற பத்தாண்டுகளில் போல்ஷிவிக் தலைமையிலும், அங்கத்தினர் வகையிலும் ஏற்பட்ட மாறுதல்களைச் சரியானபடி அறிந்துகொண்டால் தான் ஸ்டாலின் ஆட்சியின் அர்த்தம் நன்கு விளங்கும்.

முதலில் தலைமையைப் பற்றிப் பேசுவோம். புரட்சித் தலைவர்கள் ஒவ்வொருவர் பெயரையும் கூறவேண்டிய அவசியமில்லை; ஸ்டாலினைத் தவிர லெனின் காலத் தலைவர்கள் யாவரும் அழிக்கப்பட்டனர் என்பது போதும். இது தலைமைப் போட்டியால் நேர்ந்தது; மற்றத் தலைவர்களை அழித்து ஸ்டாலின் வெளி நாட்டு உள்நாட்டுக் கலகங்களின்றி ரஷ்யாவைக் காத்தார்; இதனால் கட்சி ஒன்றும் பாதிக்கப் படவில்லை என்று பொதுவாகக் கூறப்படுகிறது. அப்படியானால் மனிதவேட்டை ஒரு அரசியல் தந்திரமாயிருக்க வேண்டும்; குடியாட்சிகளில் ஏற்படும் மந்திரி சபை நெருக்கடிகளை ஓரளவு இதற்கு ஒப்பிடலாம். இதனால் ஸோஷலிஸ அமைப்புக்கு ஆபத்தில்லை; இது புரட்சிக் கெதிரான புரட்சி (Thermidor) அல்ல என்பர்.

மனித வேட்டையைப் பற்றிய இந்த விளக்கம் தவறு. இம் மாறுதல்கள் அரசியல் மேலிடத்துத் தலைவர்களை மட்டும் பாதிக்கவில்லை; தலைமுதல் கால்வரை முழுக் கட்சியையுமே பாதித்தது; அதன் இயல்பையே மாற்றிவிட்டது. கீழ்வரும் அதிகார பூர்வமான அத்தாட்சிகளே அதை நிரூபிக்கும்:

17-வது அகில ஸோவியத் போல்ஷிவிக் கட்சி மகாநாடு 1934 இல், மனித வேட்டைக்கு முன் நடைபெற்றது.

18-வது கட்சி மகாநாடு 1939 இல் மனித வேட்டைக்கு அடுத்தபடியாக நடைபெற்றது.

17-வது மகாநாட்டில் 1917 முதல்' புரட்சிக்கு முன்பிருந்தே கட்சியிலிருந்த பழைய அங்கத்தினர்கள் 100-க்கு 22. 6 பேர் பிரதிநிதிகளாய்ப் பங்கெடுத்துக் கொண்டனர்.

18-வது மகாநாட்டில் அவர்கள் தொகை 100-க்கு 2.4 பேரே. எனவே, பழைய அங்கத்தினர்களில் 10-க்கு ஒருவரே வேட்டையிற் சிக்காமல் தப்பியவர்கள்.

17-வது மகாநாட்டில் 1917 இல், புரட்சியின்போது கட்சியிற் சேர்ந்த அங்கத்தினர்கள் 100-க்கு 17.7 பேர்கள் இருந்தனர்.

18-வது மகாநாட்டில் இவர்கள் தொகை 100-க்கு 2. 6 பேரே.

உள்நாட்டுக் கலகத்திற்கு முன்பிருந்தே கட்சி அங்கத்தினர்களாயிருந்தவர்கள் 17 வது மகாநாட்டில் 100-க்கு 40 பேர்கள்; 18-வதில் 5 பேர்கள்.

1919-ஐ பரீக்ஷார்த்த வருஷமாகக் கொண்டால் அதற்குமுன் கட்சியில் 100-க்கு 80 விழுக்காடு பழைய மெம்பர்களிருந்தனர்; 1919-க்குப் பிறகு (18-வது மகாநாட்டில்) 14. 8. மட்டுமே,

எண்சுவடி முறையில் 18-வது மகாநாட்டின்போது கட்சியில் 1,588,852 அங்கத்தினர்கள் இருந்தனர். இவர்களுள் 20,000 பேர்களே (100-க்கு 1. 3 விழுக்காடு) பழைய போல்ஷிவிகர்கள். 1918 இல் 260,000 முதல் 270,000 வரை இருந்தனர் அவர்கள் இளைஞர்கள். அவர்களுக்கு என்ன நேர்ந்தது? ஸ்வார்ட்ஸ் அவர்களில் நாலில் ஒரு பங்கு உள்நாட்டுக் கலகத்தில் மடிந்திருக்கலாம் என்று கணக்கிடுகிறார். இது அதிகப்படியான கணிதம். இக்கணிதத்தை ஒப்புக்கொண்டாலும் 18-வது மகாநாட்டின்போது 200,000 பேர்கள் இருக்க வேண்டுமே? ஆனால் 20,000 பேர்கள்தானே இருந்தனர்; 10-க்கு 9 பேர் மறைந்து விட்டனரே? 1934–39-க்குள் மேண்டேடரி கமிஷன் (Mandatory commission) கூற்றுப்படி இவர்கள் எங்கு போயினர்; இவர்கள் தலைவர்களல்ல, புரட்சியையும், உள்நாட்டுக் கலகத்தையும் வெற்றிகரமாக நடத்திய சாதாரணத் தொழிலாளர் குடியானவப் போர்வீரர்கள்.

மனித வேட்டைக்குப் பிறகு போல்ஷிவிக் கட்சி பூரணமாய் மாறியது புதுக் கட்சியாய் உருப் பெற்றது; அதில் 100-க்கு 1. 3 மட்டுமே பழைய அங்கத்தினர்கள்.

இருப்பினும், இதுவும் தொழிலாளக் குடியானவக் கட்சியாகவே இன்னும் செயல் புரிகிறது என்று ஆதரவாளர்கள் விவாதிக்கலாம். இது உண்மையா? அதிகார பூர்வமான அத்

தாட்சிகளே கூறட்டும். 17-வது மகாநாட்டில் 100-க்கு 9.3 பிரதிநிதிகள் தொழிலாளர்கள் எனக் கமிஷன் குறிப்பிடுகிறது. 18-வது மகாநாட்டு அறிக்கையில் இதைப் பற்றிப் பேச்சே இல்லை; காரணம் மகாநாட்டு நடவடிக்கைகளிலிருந்தே தெளிவாகிறது; கட்சியிலிருந்து தொழிலாளரை விலக்கத்தக்க தீர்மானங்கள் நிறைவேறின. 18-வது மகாநாட்டில் வெகுவாகப் பாராட்டப் பெற்ற புகழ் வாய்ந்த ஸ்டெகனோவிட்டுகளில் ஒருவர் கூட 139 பேர்களடங்கிய கட்சியின் மத்யக் கமிட்டியில் அங்கத்தினராகச் சேர்த்துக் கொள்ளப் படவில்லை.

அப்படியானால் கட்சியின் அந்தஸ்து என்ன? 1,000,000-க்கு மேலாக அதிகாரத்திலிருந்து ஆட்சியை நடத்துவது யார்? 1934 இல் 'தொழிலாளரல்லாது' கட்சியிலிருந்த 100-க்கு 90. 7 பேர்கள் யார்? ஸோவியத் ஆட்சிக்குத் தன்னைத் தவிர ஒரே ஒரு ஜாதியைத் தான் தெரியும். ஆட்சியிலிருப்பவர்களுள் மூன்றிலொரு பங்கு என்ஜினியர்கள்; இரு பங்கு அதிகாரிகள். முந்திய பகுதிகளிலேயே இப்புது அதிகாரவர்க்கம் பொதுஜனங்களோடு தங்களுக்குள்ள தொடர்பைக் கொஞ்சங் கொஞ்சமாய் இழந்ததைப் பார்த்தோம். பிறப்பின் உயர்வு தாழ்வுகளை ஏற்படுத்தும் வகையில் உரிமைச் சட்டங்களும், வருமானப் பகுப்புகளையும் கண்டோம். மனித வேட்டையும், கட்சியில் அதிகார வர்க்கமே அங்கத்தினரானதும் தொழிலாளர் அரசாட்சியைப் புதிய ஒரு அதிகார அடக்குமுறை ஆட்சியாக்கியது.

## 11

### பலவந்தத் தொழிற் பண்ணைகள்—இடையீடு

ரஷ்ய ஆட்சிமுறை மாற்றங்களில் சரியானபடி விடையளிக்க முடியாத ஒரு விஷயம் இவற்றாடு வாழ்வையோ, உரிமையையோ இழந்த ஸோவியத் வாசிகளைப் பற்றியது. ரஷ்யாவைச் சூழ்ந்துள்ள மௌன மதில் அரண் சர்வ சாதாரண விஷயங்களைக் கூடப் பிறர் அறியாவண்ணம் மறைக்கிறது. எனினும் இம்மறைப்பையும் மீறிச் சில செய்திகள் வெளியாகின்றன; ஆனால் இவ்விஷயத்திலே அநேகமாய்ப் பூரண மௌனமே நிலவுகிறது. வெண்கடற் கால்வாயும், டர்க்ஆப் ரயில்வேயின் ஒரு பகுதியும் பலவந்தத் தொழிற் படையினராலேயே கட்டப்பட்டன என்பதை ரஷ்யாவே அதிகாரபூர்வமாய் ஒப்புக்கொண்டாலும், 1,000,000 அடிமைகள் வேலை செய்த இவற்றைப் பற்றி வேறெவ்விதமான தகவலும் தர மறுக்கிறது; வெளியார் எவரும் இந்த அடிமைப் பண்ணைகளைப் பார்க்க அநுமதிக்கப்படவில்லை.

குறுக்குவழியில், ஸோவியத் ஜனத்தொகை விவரங்களிலிருந்து, அல்லது அதில் கூறுது விடப்பட்ட செய்திகளிலிருந்து சில குறிப்புகள் கிடைக்கின்றன. 1930 இல் புள்ளி விவர ஸ்தாபனம் வேட்டையாடித் தூய்மை செய்யப்பட்டது; 'புள்ளி விவரம் கம்யூனிஸப் போரின் ஒரு கருவி' என்றனர். இக்கருவி அநேகமாய் மௌனமாகவே இயங்கியது; உலகத்திலேயே மக்களின் வாழ்க்கைத் தரத்தைப் பற்றிப் புள்ளி விவரங்கள் தராத தேசம் ரஷ்யா ஒன்றுதான். இதேபோல் 1926 முதல் 1940 வரையில் யாதொருவிதமான ஜனத்தொகைக் கணிதமும் பிரசுரிக்கப்படவில்லை. 1937-ஜனவரியில் ஜனத்தொகை எடுக்கப்பட்டது. ஆனால், பிரசுரிக்கப்படவில்லை; காரணம் மக்கள் எதிரிகளால் அதில் குற்றங்குறைகள் மலிந்து விட்டனவாம் (26-3-1939, இஸ்வெஸ்ட்யா) எனவே புள்ளி விவர ஸ்தாபனம் மறுபடியும் புதுப்பிக்கப்பட்டது. 1939, ஜனவரியில் மறுபடியும் புது ஜனத்தொகை கணிக்கப்பட்டது. அதன்படி ரஷ்யாவின் ஜனத்தொகை 170,126,000; இது எதிர்பார்த்ததற்கு ஒன்றரைக்கோடி கம்மியானது. (1926, டிஸம்பர் ஜனத்தொகை 147,000,000; 1930 இன் அரசாங்க மதிப்பீட்டுப்படி 157,500,000; ஸ்டாலின் கணக்குப்படிச் சராசரி வருடாந்தர அதிகப்படி 3,000,000; 1939 இன் குறைந்தபட்சம் எதிர்பார்த்தது 185,000,000) எனவே, இந்த ஒன்றரைக்கோடி மக்கள் எங்கே? கருத்தடையால் கண்மாயமானுர்களா? ஆனால், அந்தக்காலத்தில் கருத்தடைக் கருவிகள் ரஷ்யாவில் கிடைப்பது அரிதாயிற்றே! 1,000,000 பேர்கள் பஞ்சத்தால் (1932–33) மடிந்திருக்கலாம்; பிறர் பலவந்தத் தொழிற் பண்ணைகளில்—வருடாவருடம் 100-க்கு 30 பேர் அளவைகளில் சாவதாக நேரில் கண்டவர்கள் கூறுகின்றனர் — மடிந்திருக்கலாம். இதெல்லாம் யூகந்தான், ஒன்றுமட்டும் நிச்சயம், ரஷ்யா ஜனத்தொகையில் 100-க்கு 10 பேர் எங்கோ மறைந்து விட்டனர்.

இதுவரையில் நான் அதிகார பூர்வமான ஸோவியத் அத்தாட்சிகளைப் பற்றியே பேசினேன். பலவந்தத் தொழிற்பண்ணை விஷயத்தில் ஸிலிகா, ட்ராட்ஸ்கி, விக்டர்ஸெர்ஜ் முதலிய தனிப்பட்டவர்களின் அத்தாட்சியே கிடைக்கிறது. சமீபகாலத்தில் இப் பண்ணைகளை நேரில் பார்த்து வந்த பலர் தந்த தகவல்கள் என்னிடமுள்ளன. அவர்களுள் பண்டென்னும் போலந்து யூதச் ஸோஷலிஸ்ட் கட்சியைச் சார்ந்த லூஸியன்ப்லீட் என்பவர் என்னிடம் நேரிற் கூறியவற்றையும், 'ஸோஷலிஸ நேசரிணைப் புக்குழு' என்னும் தம் சங்கத்திற்கு 1943, ஏப்ரல், 9 இல் சமர்ப்பித்த அறிக்கையையும் கொண்டு கீழ் வருவனவற்றை விவரிக்கிறேன்.

1939 இல், போலந்து வீழ்ந்ததும், வார்ஸாப் பாதுகாப்பில் ஈடுபட்டிருந்த ப்ளிட், லிதுவேனிய ஆட்சியிலிருந்த வில்னுவுக்குத் தப்பிச்சென்ருர். 1940, மார்ச்சில், தம் கட்சியினரால் வார்ஸாப் பாதாள இயக்கத்திற்கு பிரதிநிதியாக அனுப்பப்பட்டார். விஷின்ஸ்கி என்ற மாறு பெயரில் வார்ஸாவுக்குச் செல்லும் போது, ரஷ்ய எல்லைப்படையினரால் மே 30ஆம் தேதி கைது செய்யப்பட்டார்.

10 மாத காலம் (30-5-1940 முதல் 30-3-1941-வரை) லோம்ஸாச் சிறையிலிருந்தார். அவரது சிறைக் குகை நெ. 81; மூன்ரும் மாடியிலிருந்தது, சுமார் 15 அடிச் சதுரம்; ஒரு படுக்கை, ஒருவருக்கான சிறை, எனினும் இவருடன் எழுவர் இருந்தனர். இவ்வெண்மரும் 10 நிமிட தேகாப்யாசத்துக்காக 1941, ஜனவரி, 22 ஆம் தேதி, அதாவது 236 நாட்கள் அடைபட்டுக் கிடந்தபின் வெளிவந்தனர். அடுத்த தேகாப்யாஸம் ஒரு மாதத்திற்குப் பிறது பெப்ரவரி, 22 இல் அநுமதிக்கப்பட்டது. அங்குள்ளவர்கள் எவரும் எதுவும் படிக்கக்கூடாது, எழுதக் கூடாது, வெளியுலகத்தோடு எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்ளக் கூடாது. உரக்கப் பேசுதல், சாளரத்தைத் திறத்தல், ரொட்டித் துண்டில் பொம்மை செய்தல் முதலான சிறு சிறு குற்றங்களுக்கும் ஒரு பனி அறையில் 'ஷர்ட்' மட்டும் அணிந்து ஒரு சுவரிற் சாய்ந்து 48 மணி நேரம் நிற்கவோ, கடினமான வகையில் பனியில் இடுப்பளவு ஜலத்தில் நிற்கவோ தண்டனை தரப்படும். இக்கடின தண்டனை ப முறை பக்ஷவாதம், பைத்யம் அல்லது சாவில் முடிந்துள்ளது. குற்ற விசாரணை பெரும்பாலும் இரவிலேயே அடி உதைகளோடும், பயமுறுத்தலோடும் நடைபெறும். பெண்களுக்கும் அடிஉதைகள் உண்டு, அதுவும் போலந்து தேசபக்த மாணவ சங்கப் பெண்களை அதிகமாக இம்ஸிப்பர். இவர்களில் பைத்யமாவதும் தற்கொலையும் சகஜமாயிருந்தன. ஒருவன் தானே இயேசு என்று 5 நாட்கள் கத்தினுன்; 6 ஆம் நாள் அவனை இழுத்துச் சென்றனர். ஒரு யூதன் ஒரு வாரம் முழுதும் 'நான் ட்ராட்ஸ்கி அல்ல' என்று உரக்கக் கூவிக் கொண்டிருந்தான்.

விசாரணையில் அரசியல் குற்றம் ஒன்றும் நிரூபணமாகவில்லையெனில், அநுமதி இன்றி ரஷ்யாவிற்குள் புகுந்ததற்காக மட்டும் அவனை 3 முதல் 8 வருடங்கள்வரை பலவந்தத் தொழிற் பண்ணையில் சேவை செய்யும்படி அனுப்பி விடுவர். ஜெர்மானியாரிடமிருந்து ஸோவியத் நாட்டில் அடைக்கலம் புகுந்த போலந்தர்களுக்கும் இதே கதிதான். ப்ளிட் விஷயத்திலும் இப்படித் தான் கீழ் வருமாறு நடந்தது.

1941, பிப்ரவரி, 26ஆம் தேதி, இரவு, மூட்டை முடிச்சுகளைக் கட்டிக் கொண்டு கீழ் வரும்படி உத்தரவு வந்தது. கீழே, மற்றும் சிலரோடு, நானும் ஒரு பெரிய இருட்டறைக்குக் கொண்டுபோகப் பட்டோம். அங்கு ஒவ்வொருவரையும் ஒரு சிறு காகிதத் துண்டில் எவ்வித விவரமும் சொல்லாமல் கையெழுத்திடச் செய்தனர். (என் துண்டில் ரஷ்ய எல்லையைத் தாண்டி உள்ளே வந்ததற்காக பலவந்தத் தொழிற் பண்ணையில் 3 வருஷம் வேலைசெய்ய வேண்டுமென்ற தண்டனை கொடுக்கப்பட்டிருந்தது.) வேறு வழியில்லாமல் நாங்கள் கையெழுத்திட்டோம்.—என்மேல் வேறு குற்றம் எதும் இல்லாததால் 3 வருஷத்தோடு போயிற்று. வேறுசிலர் 5 வருடம் பெற்றனர். ஒரு யூதர் 8 வருஷம் பெற்ருர். எங்களைத் தண்டித்த ஸ்பெஷல் கமிஷனுக்கு எட்டு வருஷங்களுக்குமேல் தண்டனைதர அதிகாரமில்லை. இந்தத் தண்டனைகளுக்கு அப்பீலும் இல்லை

1941, ஏப்ரல், 4 இல், ஒனேகாநதிக்கரையிலுள்ள ப்ளெஸ்க் என்னும் பலவந்தத் தொழிற் பண்ணைக்கு ப்ளிட்ஸ் கொண்டு வரப்பட்டார். அப்பண்ணையில் 35,000 கைதிகளிருந்தனர். அந்த வடதுருவப் பிரதேசப் பனியில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவரும் 12 முதல் 13 மணி நேரம்வரை மரம் வெட்ட வேண்டும். காலை நாலேந்து மணிக்கும் இரவு எட்டொன்பது மணிக்கும் ஒரு ரொட்டித் துண்டும் இரு ஸூப்புகளும் ஆகாரமாய்த் தரப்படும்; இடையில் வெந்நீர் தவிர வேறென்றுமில்லை, காய்கறி சர்க்கரை எதும் இல்லை, இவைகளால் கைதிகளுக்கு சொறிசிரங்கும் கரப்பானும் ஏற்பட்டன; சில மாதங்களில் பற்கள் உதிர்ந்தன. ஆடையோ, போர்வையோ, படுக்கையோ தரப்படுவதில்லை. ஒரிரு வாரங்களில் டைகள் கந்தலாய்விடும். வேலைமுடிந்து சிறைக்குள் வரும்போது உடல்முழுதும் நனைந்திருக்கும்; இரவில் பனியில் உடல் விறைக்கும். ஒவ்வொரு நாளும், ஆணே பெண்ணே, ஒவ்வொருவரும் 8-க் கனகெஜம் (8 Cubic yards) மரம் பிளந்தாக வேண்டும்.

"சாதாரண வலிவுள்ள ஒருவனுல் இதிற் பாதி வேலைதான் செய்யமுடியும். வேலையின் அளவு குறைந்தால் உணவின் அளவும் குறைந்துவிடும். அரைவாசி வேலைக்குப் பலன் முழுப் பட்டினி. இளம்பெண்கள் சிறைக் காவலர்க்குத் தம்முடலை விற்று ஒரு பவுண்டு ரொட்டி வீதம் பெறுவர். உயிர்வாழ விபசாரமும், திருட்டும், கோளும், குத்திரமும் நிறைந்திருந்தன. 1941, ஆகஸ்டில், என் பகுதியிலிருந்த 450 போலந்தர்களில் 120 பேருக்கு உடல் வீங்கி எழுந்திருக்கவும் சக்தி இல்லாது போயிற்று. வருடத்திற்கு 100-க்கு 30 விழுக்காடு சாவு ஏற்பட்டது. ஓய்வின்றி வேலை, ஒழியாத வேலை, விடுமுறை கிடை

யாது; ஞாயிறும் வேலைதான்; மே தினத்திலும் வேலையே. நான் அங்கிருந்த 5 மாதங்களில் ஒருவருக்காவது ஒரு நாள்கூட ஓய்வு கிடைத்ததில்லை.

(ரஷ்யாவில் இவ்வண்ணம் தண்டனை பெற்றவர் விடுதலை பெறுவது அவ்வளவு சுலபமல்ல. இது ரகசியப் போலீஸ் கையிலிருந்தது. அநேகமாய் விடுதலை உத்தரவு வராது; ஏதாவது உத்தரவு வரினும் அது தண்டனையை நீடிக்கச் செய்வதாகவே இருக்கும்.)

1941 இல், ஜெர்மனி ரஷ்யாவைத் தாக்கியபோது ப்ளிட், மற்றப் போலந்தர்களுடன் விடுவிக்கப்பெற்றார். பின் போலந்துப் படையில் சேர்ந்தார். பலவந்தத் தொழிற் பண்ணையிலுள்ள ரஷ்யர்களுக்கோ இந்தமாதிரி இன்பகரமான விடுதலை என்று கிட்டாது; வடதுருவப் பலவந்தப் பண்ணைக்குச் சென்றவர் திரும்புவதேயில்லை; அந்தப் பனி நரகமே அவர்களது சமாதி.

இப்படிப்பட்ட கைதிகள் எத்துணை பேர்? அறிய வழி யில்லை. ஸோவியத் நாடகத்தின் பின்னால் பார்த்தவர்கள் ஜனத் தொகையில் 10இல் ஒரு பங்கு என்கின்றனர். இது ஒன்றும் அசாத்யமான கணக்கல்ல. கூட்டுப் பண்ணைக்காக நாடு கடத் தப்பட்ட குலக்குகளே 5,000,000 பேர்கள், அதாவது 100-க்கு 3, 5. அப்பால் தீவிரவாதிகள், மிதவாதிகள், ட்ராட்ஸ்கியர், புகா ரினர் முதலியோர் ஒடுக்கத்தில் ஆரம்பித்த மனிதவேட்டைகள். புரட்சி முறையில் பழகிய அத்தேசத்தில் அவ்வப்போது எதிர்ப் புரட்சிகளும் சாத்யமே; எனவே, எல்லாமாகச் சேர்ந்து ஜனத் தொகையில் பத்துக் கொருவர் பலவந்தப் பண்ணையிலிருந்தனர் என்பதை நம்பும்படித் தூண்டுகிறது.

“பல ரஷ்யக் குடும்பங்களுடன் நான் வசித்திருக்கிறேன். உறவினரிடையோ, நண்பர்களிடையோ ஏதாவது ஒரு நபரை இழக்காத குடும்பமே கிடையாது. ஒரு பிரபலமான குபி ஷெவ் பத்திரிகைக்காரரிடம் இதைப்பற்றிப் பேசியபோது அவர் பெருமையுடன் அத்தகையோர் 18,000,000-க்கு மேலில்லை என்றார். 20,000,000 மேலாகப் போனால்தான் அரசாங்கத் திற்கே கோபம் வருகிறது” என்று ப்ளிட் தன் முடிவுரையில் கூறுகிறார்.

இது என்னிடமுள்ள பல நம்பிக்கைக்குகந்த நண்பர்களின் அத்தாட்சிகளில் ஒன்று. ஸோவியத் மாயையில் சிக்கியவர் இதை ஒப்புக் கொள்ளுவது கஷ்டம். மாயைக்கும் உண்மைக்கு முள்ள இருபது வருட இடைவெளியை ஓரே தாண்டில் தாண்டு வது சுலபமல்ல.

இதனாலேயே இதனை ‘இடையீடு’ (Parenthesis) என்று கூறியுள்ளேன். இக்கண்கரணிப்பில் இப்பகுதி மட்டுமே அதிகார

பூர்வமான அத்தாட்சியற்றது; தனி மனிதர்களின் அந்தரங்க அத்தாட்சியின் மேல் நிற்பது. வாசகருக்கு இதை நம்பாதிருக்க உரிமையுண்டு. அவர்கள் என்னை ட்ராட்ஸ்கிய ஏஜெண்ட், மென் ஷெவிக், எதிர்ப்புரட்சியாளன், ஜப்பானிய ஒற்றன், கத்தும் கழுதைப்புலி என்றெல்லாம் வழக்கப்படி வசை கூறலாம். ஆனால் அதிகாரபூர்வமான அத்தாட்சிகள், சட்டங்கள், அறிக் கைகள், புள்ளிவிவரங்கள்—இவற்றைவாசகர்கள் அவ்வளவு சுலபமாக ஒதுக்கிவிட முடியாது. ப்ளிட்டின் விவரணம் ஒரு தா ரணமே. அதை ஒப்புக் கொண்டாலும், ஒப்புக் கொள்ளாவிட் டாலும் அது இக்கட்டுரையை அதிகமாய்ப் பாதிக்காது.

## 12

### அசையா அடிப்படைகள்

நாம் இதுவரையில் கூறிய விவாதங்களைச் சம்மேளனம் செய்யும் சமயம் வந்து விட்டது.

சென்ற 20-வருட சோவியத் கொள்கை இருவகையான விமர்சனம் பெறும். ஒன்று, ரஷ்யா தன் ஸோஷலிஸ நோக் கத்தை விட்டு விட்டது;இவ்வகையில்பார்த்தால் அத உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கைகளில் எதுவும் ரகசியம் கிடையாது; ரஷ்யா ஒரு இளமை வாய்ந்த விஸ்தரிப்பு விரும்பும் ஒரு அதிகார வர்க்கம்; லார்டு பீவர்ப்ரூக் முதல் காலஞ்சென்ற வெண்டல் வில்கிவரை ரஷ்யாவை இவ்வகையிலேயே கணித்தனர்.

அல்லது ரஷ்யா இன்னும் ஸோஷலிஸ மார்க்கத்திலே சென்று கொண்டிருக்கிறதெனில் நாம் மேற்கூறியவற்றை யெல்லாம் தற்காலிக தகிடுதத்தங்களாகக் கொள்ள வேண்டும். ஆனல். ரஷ்யாவின் போக்கில் இவைசுளி லெதிலும் தற்காலிகமாகத் தோன்றவில்லை. தத்துவ முறையிற்கூடப் பழங்கொள்கைகள் மாறிப் புதுக் கொள்கைகள் ஏற்பட்டு விட்டன.

ஆனல், முதலாவதுதான் உண்மை யென்று முடிவுகட்டு முன், ஸோவியத் ஆதரவாளரின் மற்றொரு வாதத்தை நாம் பரிசீலிக்க வேண்டியிருக்கிறது. அவ்வாதம் கீழ்வருமாறு:—

ரஷ்யாவில் ஏதோ தவறு நேர்ந்து விட்டது; சில சட்டங் களும், கொள்கைகளும் நெருக்கடிக்கான நிலைகளெல்லாம் நாட்டையே நலிக்கும் நிரந்தரத்தன்மை பெற்றுவிட்டன. இவற்றை ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஆனல், உற்பத்தி யாவும் அரசாங்கத்தின் உரிமையாயிருக்கும் வரையில், லாபமற்ற கொள்கை அங்கு நிலவும் வரையில் ரஷ்ய ஸோஷலிஸம் அழிந்து விடாது; இன்றுள்ள கேடுகளெல்லாம் இந்தஅடிப்படையான சக்தியால் தாயாகவே அழிந்து விடும்.

இவ்வாதத்தில் ஒன்று போல இரண்டு கூற்றுக்கள் உள்ளன. ஒன்று, தனிப்பட்ட முதலாளித்வ நாடுகளைப் போலன்றி வர லாற்றுமுறையில் அதன் பொருளாதாரம் வெகுவாக முன்னேறி யுள்ளது; இரண்டு, நல்ல ஸோஷலிஸ ஸமுதாயம் ஏற்பட இம் முன்னேற்றமே போதுமானது.

முதலாவது உண்மையென்று நான் நம்புகிறேன், மற்றது பொய். பொருளாதார முறையில் ஸோவியத் ஐக்யம் ராஜாங்க முதலாளித்வமாகும். உற்பத்தியும், உற்பத்தி சாதனங்களும், விநி யோகமும் சர்க்காருக்குச் சொந்தம். சர்க்கார் முதலாளித்வம், சர்க்கார் ஸோஷலிஸம் என்னும் இரண்டிற்கும் பொருளாதார முறையில் யாதொரு வித்யாசமுமில்லை. வித்யாசமெல்லாம் அர சியல் ஸமூகத்துறைகளிற்றான், சர்க்கார் யாவற்றையும் அடக்கி யாளுகிறது; சர்க்காரை அடக்கியாளுவது யார், என்பதே கேள்வி. தேர்தல் மூலமோ, தொழிற் சங்கங்கள் மூலமோ, அரசியல் பொரு ளாதார நெருக்கடிகள் மூலமோ ஸர்க்காரைப் பொது ஜனங்கள் கட்டுப்படுத்த முடியாதென்பதை முன்பே கண்டோம். ஊரல் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களுக்கு பிரிட்டிஷ், அமெரிக்கச் சுரங்கத் தொழிலாளர்களுக்குள்ள கூலி, வேலை நேரம், வாழ்க்கை நிலை முதலியவற்றைப் பற்றியுள்ள உரிமைகள் கூடக் கிடையாது. வேலை நிறுத்தம் செய்யவோ, தங்கள் சங்கத்தலைவர் களைத் தேர்ந்தெடுக்கவோ, பிரதிநிதித்வசபையில் சண்டைபிடிக் கவோ, பத்திரிகைகளில் எழுதவோ, தெருவில் கூச்சலிடவோ முடியாது. இங்கிலாந்து வாசிக்கு பிரிட்டிஷ் கப்பற்படை எப்படிச் சொந்தமில்லையோ அப்படியே ஸோவியத் தொழிலா ளிக்கும் தன் தொழிற்சாலை சொந்தமல்ல.” (பொலான்யே)

ரஷ்யா ஸர்க்காரின் முதலாளித்வம் பொருளாதாரத்துறை யில் தனி உரிமை முதலாளித்வத்தைக் காட்டிலும் உயர்ந்தது என்றால், நாஜி ஜெர்மனியின் (ஷாட்) ஏற்றுமதி இறக்குமதித் திட்டம் மேற்கு நாட்டுத் திட்டங்களினும் உயர்ந்தது என் பதைப்போன்று யுத்தத்திற்கு முன்பும், யுத்தத்தின் போதும் ஜெர்மன் ஸர்க்கார் முதலாளித்வத்தையே நோக்கிச் சென்றது. ஆலைமுதலாளிகள் சக்தி அழிக்கப்பட்டது. ஸர்க்கார் நியமித்த படியே அவர்கள் உற்பத்தி செய்ய வேண்டும்; நிர்ணயித்த கூலி தரவேண்டும். விதித்தவிலைக்குவிற்கவேண்டும். ஸோவியத்தில் ஒரு ஆலை மானேஜருக்குள்ள அதிகாரமே ஜெர்மனியில் ஆலைச் சொந்தக்காரருக்கு இருந்தது. ரஷ்யாவில் மானேஜர் சம்பள த்தை ஸர்க்கார் நிர்ணயித்தது. ஜெர்மனியில் சொந்தக்காரன் லாபத்தை ஸர்க்கார் கட்டுப்படுத்தியது. இதனால் நாஜிஸமும் ஸோஷலிஸப் பாதையிற் செல்வதாகக் கூறிவிட முடியுமா? அவ் வாறு கூறினால் தீவிரவாதி உடனே அதை மறுப்பான்; ஆனால்,

ரஷ்யன் இதே காரணங்களால் ஸோஷலிஸத்தை நோக்கிப் போவதாக வாதம் செய்வான்.

இந்தக் கட்டத்தில், மேற்கூறியபடி வாதமிடும் ட்ராட்ஸ்கியர்கள், மற்றும் அதிருப்தியுற்ற கம்யூனிஸ்டுகள்-இவர்களிடம் விடை பெற்றுக்கொள்ளுகிறோம். மார்க்ஸும், எங்கல்ஸும் தங்களது நிச்சயமற்ற பாஷைத் தயக்கங்களூடும், உற்பத்தியை தேசியமயமாக்குவது மட்டும் ஸோஷலிஸத்தை உண்டாக்கப் போதாது என்று ஒப்புக்கொண்டனர். வெறும் தேசியமயமாக்கல் ராணுவத் தைபல் வேலையை யொத்ததே என்கிறார் எங்கல்ஸ். சென்ற பத்தாண்டுகளின் வரலாறு ஸோஷலிஸ சமுதாயம் ஏற்படத் தேசியமயமும், திட்டங்களும் அவசியமே; ஆனால் இவை மட்டும் போதாது என்று நிரூபித்திருக்கிறது. தேசியமாக்கல் அரசியல் ஒழுக்க நெறிகளுக்கேற்ப ஸோஷலிஸத்திலோ ஃபாஸிஸத்திலோ முடிவடையும். ரஷ்யத் தேசியத்துவமே ஸோஷலிஸமென்று தீவிரவாதியும், ஸர்க்கார் அதிகாரமும், திட்டங்களுமே ஃபாஸிஸமென்று மிதவாதியும் கூறுவது பொய்யான வாதங்களாகும்.

உலக வரலாற்றில் அடுத்தபடி வரப்போவது அரசாங்கம் பொதுப் பொருளாதாரமே என்பதிற் சந்தேகமில்லை; ஆலைத் தொழில்கள், அறிவாராய்ச்சிகள், விமானங்கள், செயற்கை உரங்கள் யாவும் இவ்வகையில் முன்னேற்றங்களே. இவைகளை யெல்லாம், ஸோஷலிஸத்தின் பலன்களே என்று ஸோவியத் ரஷ்யா பசப்புகிறது. ஆனால் உண்மையில் இவை தீவிர, மிதவாதங்களின் விளைவல்ல; யந்திர முறை வளர்ச்சிகள்; காலப்போக்கில் எங்கும் காணும் காட்சிகள், ஸமூக நீதி நெறிகளைப் பற்றியவையல்ல. எனவே இவற்றை தேசிய மயமாக்குவதால் ஃபாஸிஸ்ட், குடியாட்சி, ஸோஷலிஸ்ட்—யார் வேண்டுமானாலும் பயனடையலாம்.

எனவே, அரசியல், கலாசார, நீதி நெறிகள் பொருளாதார அஸ்திவாரத்தின்மேல் கட்டப் பட்ட கட்டிடங்களல்ல; பொருளாதாரத்தைச் சரியான முறையில் உபயோகிக்க, முக்கியமான எஜமானத்வமாகும் என்ற முடிவுக்கு வருகிறோம். இதனால் பொருளாதாரத்தின் முக்கியத்வத்தை நாம் குறைக்கவில்லை; தனி உடைமையில் ஸோஷலிஸம் வளரமுடியாது. வேறு வார்த்தையில் "தேசியமாக்கல் மட்டும் போதாதெனினும் ஸோஷலிஸ அமைப்புக்கு அவசியமானது" எனலாம்.

உற்பத்தி ஸாதனங்களைச் சமுதாயப் பொதுவுடைமையாக்குவதாலேயே புதியதோர் உலகைச் சிருஷ்டிக்க முடியும் என்ற மார்க்ஸிய நம்பிக்கை சென்ற பத்தாண்டுகளில் தவிடுபொடியாகி விட்டது.

## வெளிப் பொருளும் உட் பொறுப்பும்

வரலாற்று முறையில் எந்தக் கட்டத்தில் மூதல் முதலான ஸோஷலிஸ சோதனை தவறு செய்தது? ஏன் தவறு செய்தது? தவறுவது தடுக்க முடியாததா?

இதற்கு முடிவான விடைகூற இன்னும் அதிகமான காலம் வேண்டும்; எனினும். இன்றுகூடச் சில குறிப்புகள் தோன்று கின்றன. ரஷ்யப் பரிட்சை ஸோஷலிஸ ஸாத்யத்தைப் பற்றி எவ்விதமான முடிவையும் தெரிவிக்கவில்லை. பொருத்தமற்ற சூழ் நிலையில் (லேபரேடரியில்) இந்தப் பரிட்சை நடந்தது. ஸோஷ லிஸத் தத்துவப்படி யந்திரத் தொழில் மிகுதியாக வளர்ச்சி பெற்ற நாட்டிலேயே அது ஸாத்யமானது; ஜாரின் ரஷ்யாவோ இம்முறையில் மிகப் பிற்போக்கானது; ஆசியப் பழங் கொள் கைகளை உடையது; யந்திரத் தொழிலாளிகளை விடப் பத்து மடங்கு அதிகமான குடியானவர்களைக் கொண்டது; 100-க்கு 80 பேர் படிப்பற்றவர்களாலானது. எனவே. இவைகளில் தேர்ந்த ஜெர்மனியிலோ. அமெரிக்காவிலோ, இப்பரிட்சை நடந் திருந்தால் வேறு முடிவுகள் ஏற்பட்டிருக்கலாம்.

ஆனால், தகுதியற்ற சூழ்நிலையிலும் ரஷ்யாவில் நேர்ந்தது தவிர்க்க முடியாததா? அல்லது ஸ்டாலினது தவறு? இக்கேள்வி வரலாற்று விதியையும்,அவ்விதியில் நிகழும் தனிப்பட்ட தலைமை கள் போ ற உள்ளுறைகளையும் பற்றியது. இதை நாம் சுருக்க மாகத்தான் கூறமுடியும்.

பௌதிக ஸாஸ்திரத்தில் ஹேதுவிதி (laws of probability) களைப்போலவே வரலாற்று நூலில் புள்ளி விவரவிதி (laws of statistical nature) களும் இயங்குகி றன. ஒரு பெரும் ஜனத் தொகை அதன் சூழ்நிலைக் கேற்ப இவ்வாறுதான் மாறும் என்று ஒருவாறு கூறமுடியும். இதில் 'ஒருவாறு' என்பது இவற்றின் வரம்புகளுக்குள்ளேயே ஒரு சரித்திர புருஷன் தோன்றிச் சமூ கத்தை மாற்றுவது ஸாத்யமாகிறது. உலக சரித்திரத்தை நூற் றுண்டுகளால் அளந்தால் இந்தத் தனி இயல்புகள் முக்கியத்துவத் தை இழக்கின்றன; உதாரணமாய், அதிகரிக்கும் போக்கு வரவு சாதனங்களால் ஐரோப்பா முழுமையும் ஐக்யப்படும் என்று நிச் சயமாகக் கூறலாம். இந் நோக்கத்தில் ஹிட்லர் தோற்றுல், ஸ்டாலின் வெற்றி பெறலாம்; ஸ்டாலினும் தோற்றுல் ஒன்றி ரண்டு நூற்றுண்டுகளில் வேறு யாரேனும் வெற்றி பெறலாம். உலகவரலாறு ஒரு நதி போன்றது; சரித்திர புருஷன் அதி லுள்ள சிறு பாறை போன்றவா. நதியின் ஒருமைலுக் கப்பால் பாறையிலிருந்தே தெரியாதபடி அகண்டமான தன் படுகையில் அனுயாசமாகப் போகலாம்; ஆனல் நதிப் போக்கில் நூறு கெஜ

அளவுக்குள், அப்பாறையோ, அல்லது புருஷனே முன்னணியில் நிற்கிறான்.

இப்போது அரசியல் நூற்றாண்டு, கணக்குகளில் கணிக்கப் படவில்லை. வருடா வருடம் மாறுகிறது; எனவே தலைவர்களின் தனிப் பொறுப்புகள் முக்கியத்துவம் பெறுகின்றன. இது சரித் திரத்திற்கு அவர்கள் தரும் பொறுப்பல்ல; தம் காலத்தவர்கள் மேல் சுமத்தும் பொறுப்பு. ஐரோப்பிய ஐக்கியத்தைச் சாதிப்பது ஹிட்லரா, அல்லது வேறொருவரா எ பதைப் பற்றிச் சரித்திரத் திற்குக் கவலையில்லை. ஒன்றிரண்டு நூற்றாண்டுகளுக்குள் நாஜி ஸமே பண்படுத்தப் பட்டுவிடும்; உயர் ஜாதிக் கொள்கையும், யூத வேட்டையும் பழங்கால சம்பவங்களாய் மறக்கப்படலாம். முடிவாக கி. பி. 2,500-இல் ஒரு ஐக்கிய ஐரோப்பா ஏற்பட்டிருக் கலாம்; இதை ஹிட்லருக்குப் பின்வரும் வேறொருவர் ஸாத்ய மாக்சலாம். ஆனால், அரசியற்படியான குறுகிய காலத்திற் குள்ளோ, சரித்திர புருஷனின் தலையீடு, மக்களின் த்யாகங்கள், இவற்றால் வரலாற்று நதியின் போக்கில் ஏற்படும் குமுறல்களும், கொந்தளிப்புகளும் அபாரமானவை. ஸ்டாலின் ஆட்சிக்கும் இவையெல்லாம் பொருந்தும். சரித்திரத்தின் தவிர்க்கமுடியாத தன்மையை இவர்கள் பாதிப்பதில்லை.

சென்ற இருபது ஆண்டுகளில் ஸோவியத் வரலாற்றில், இரண்டு வழிகளில் எதைப் பின்பற்றுவது என்ற நெருக்கடிகள் குறைந்தபட்சம் 6 தடவைகளாவது ஏற்பட்டுள்ளன. ஒரு சில உதாரணங்கள்; 1927-இன் சைனாக் கொள்கை; 1929—30-இன் குடியானவக் கொள்கை (இதன் தவறு, மறைமுகமாகவேனும் பின்னர் ஸ்டாலினாலேயே ஒப்புக்கொள்ளப்பட்டது; இதனால் குடியானவர்கள் தங்கள் கால்நடைகளைக் கொன்றனர், தான் யங்களை எரித்தனர், பஞ்சம் ஏற்பட்டது; மனித வேட்டை துவங் கியது; பயங்கர ஆட்சி அமுலுக்கு வந்தது); 1929இன் ப்ரஷ்யக் கொள்கை (கம்யூனிஸ்டுகளும் நாஜிகளும் கூடிப் ப்ரஷ்யாவின் ஸமுதாயக் குடியாட்சியை எதிர்த்தனர்); ஈற்றில் 1939-இல் ஏற் பட்ட ஸ்டாலின்—ஹிட்லர் ஒப்பந்தம், இந் நெருக்கடிகளில் எதற்கும் சரித்திர பூர்வமான ஸமாதானம் கூறமுடியாது. இவை ஒவ்வொன்றிலும் தனித் தலைவர்கள் எதிர்ப்புச் சக்திகளை முறியடித்துத் தவறான பாதையிற் சென்றனர். எனவே, தகுதி யற்ற சூழ்நிலையில் ஆரம்பமான ஸோவியத் சோதனை அதன் தலைவனது தன் பொறுப்பால் அரசாட்சி முறையில் தவற்றின் உச்சத்தை அடைந்தது.

இவற்றின் பொதுப்படையான காரணங்கள் யாவை? ஸ்டாலின் ஆட்சி முறையை ஊக்கிய உள்நோக்கங்கள் என்ன? வெளிநாட்டுக் கொள்கையில் பிறநாட்டுப் பாட்டாளிவர்க்கங்கள்

ரஷ்யாவின் நலத்தைக் காக்க அடிமைப்படுத்தப்பட்டன என்று தைக் கண்டோம். ஒரே நாட்டில் மட்டும் ஸோஷலிஸக் கொள்கை எந்த நாட்டிலுமே ஸோஷலிஸமில்லை என்ற முடிவுக்கு வந்ததையும் பார்த்தோம். இத்துடன் செயற்கைச் சுவர் களெழுப்பி வெளிநாடுகளைப் பற்றிய அறியாமையை வளர்த் ததையும், ரஷ்யக் கட்சிகளுக்குள் பிடிவாதமான போட்டா போட்டியையும், திடீர் திடீர்க் கொள்கை மாற்றங்களையும், பொதுஜன அபிப்பிராயத்தால் சரி செய்யப்படாத அதிகார வர்க்கத்தின் கோணல்களையும் நாம் குறிப்பிடவேண்டும்.

உள்நாட்டு விவகாரத்தில் இருவகையில் இத்தவறு நேர்ந் தது. ஒரு புதிய அதிகார வர்க்கம் ஏற்பட்டது; புரட்சி அடிப் படைகள் தீர்ந்தன. கடைசியாகக் கூறியதே ஸோவியத் சோதனையின் தோல்விக்கு முக்கிய காரணம்.

## 14

### உடைந்த ஊக்கங்கள்

முதலாளித்வம் இடைக்கால மத உணர்ச்சிகளைப் பொருளா தாரப் போட்டியால் ஒழித்தது; இப்போட்டியாலேயே அது இன்னும் வாழ்கிறது. ஸோஷலிஸம் பொருளாதாரப் போட் டியைப் புது ஊக்கங்களால் அழிக்க வேண்டும். இப் புது ஊக் கங்களில்லாமல் ஸோஷலிஸம் வாழமுடியாது.

1917 ஆம் ஆண்டுப் புரட்சி பொருளாதாரப் போட்டியையும், லாப நோக்கையும் நீக்கியது. ஒரு கடைக்காரன் அரசாங்கப் பொதுத் தர்மத்தின் சேவகனுனன்; கடையில் விற்பனை எப்படி யிருப்பினும் சர்க்கார் அவனுக்குச் சம்பளம் கொடுத்தது; குடி யானவன் கொஞ்சங் கொஞ்சமாய்ப் பண்ணைக் கூலியானுன்; அவன் நிலத்தையோ, கால்நடைகளையோ தன்னுடையதாய் எண்ணவில்லை; ஆலைக் கமிட்டிகள் இருந்த காலத்தில், யந்திரத் தொழிலாளிக்கு, தான் தண்டிக்கப் படுவோமென்றோ, வேலையி லிருந்து நீக்கப்படுவோமென்றோ பயம் கிடையாது; பள்ளிக் கூடச் சிறுவன் தனக்கு இஷ்டமானவற்றைப் படித்தான்; அதி காரியில்லாமல் போர்வீரன் போர் புரிந்தான்; மதக்குரு இல்லா மல் மக்கள் மணஞ் செய்து கொண்டனர்; இஷ்டமானபோது சுலபமாக விவாக ரத்தும் செய்து கொண்டனர்.

புதுப் புரட்சியை ஊக்கிய நோக்கங்கள் பின்வருவன: தனி மனிதப் போட்டியை நீக்கும் கூட்டுறவுகள்; சட்டமூலமும், பொருளாதார மூலமும் அல்லாத, தம்மிச்சையான சேவைகள்; ஸமூகப் பொதுமையின்பால் தனி மனிதப் பொறுப்புணர்ச்சி; ஸர்வதேசியத் தொழிலாளர் ஐக்யம், பிறப்பினுலும் பதவியாலு மான உயர்வு தாழ்வுகளை நீக்கத் தொழிலால் ஏற்படும் மரியாதை;

கடவுளின் தந்தைத் தன்மையையும், தலைவர்களையும் நீக்கிய ஸர்வஜன ஸகோதரத்வம்; பழிவாங்கலுக்குப் பதில் சீர்திருத்தம்; பலவந்தத்திற்குப் பதில் தாராள தயாளத்வம் என எங்கும் பொதுவாக ஒரு ஸகோதரத்வம், ஸமத்வம், முழுமை என்ற ஆன்மிக உணர்ச்சிகள் தழைத்தன. 'எல்லாம் ஒருவருக்கே; அவ்வொருவர் எல்லோருக்குமே'—என்ற பூரணத்வ நெறி, உதயமாகியது.

இன்று, இவையாவும் கசப்பான வஞ்சப் புகழ்ச்சிகளாகத் தோன்றுகின்றன; கனவு, கற்பனை, வெற்றுணர்ச்சி என்ற வார்த்தைகளைக் கம்யூனிஸ்டுகளே வழங்குகின்றனர். 25-வருட ஸோவியத் உண்மை அவர்களது உறுதியைப் பாழ்படுத்தியது. ரஷ்யாவே ஸோஷலிஸம் என்ற நம்பிக்கையில் ஸோஷலிஸம் என்ன என்பதையே அவர்கள் மறந்து விட்டனர். புது ஊக்கம் தராமல் பழைய முதலாளித்வ ஊக்கங்களை ஒழித்து விட்டதால் ஸமூக உடலில் ஒரு வெறுமையும், விறைப்பும் ஏற்படுகின்றன. பொருளாதார அமைப்பு எப்படி இருப்பினும், புது ஊக்கங்களும், ஒழுக்கங்களும் இல்லையேல் அந்த ஸமூகம் குழப்பம், அராஜகம், அல்லது அசல் அடிமையாக மாறிவிடும்.

1917-ஆம் ஆண்டின் புத்துணர்ச்சி இடையூறுகள் ஏதுமின்றி வெற்றி பெறுமென்று யாரும் எதிர்பார்க்க முடியாது. ஆனால், ஸோவியத் வரலாறே முன்னும் பின்னுமான ஏற்றத் தாழ்ச்சிகளோடு வளரவில்லை. இந்நூற்றாண்டின் இருபதின் மத்திவரையில் முன்னேறியது; அப்பால் படிப்படியாகப் பின்தங்கி வெறுக்கப்பட்ட பழைய கொள்கைகளுக்கே மீண்டும் வந்து விட்டது.

யுத்தம் இப் பிற்போக்கைப் பூரணமாக்கியது. 1943, ஸெப்டம்பர், 12இல் வைதிக ஸெர்க்கியஸை மாஸ்கோ மாதா கோயிலில் முடிசூட்டி, ரஷ்யப் பிதாமகனென்று போற்றியதிலிருந்தே ஸோவியத்துக்கள் வாழவும், இறக்கவும் ஆன ஒரு புதிய மானுடப் பண்பை, ஒழுக்க சீலத்தை, நம்பகத்தை உற்பத்தி செய்யவில்லை என்பது தெளிவாகிறது. ஸோவியத் ஆதரவாளன் ஒரு புதிய ஆன்மிக தர்மம் ஏற்பட ஒரு தலைமுறை போதாது என்று வாதிக்கலாம். அவன் இடைக்காலச் சமய மறுமலர்ச்சி, இஸ்லாம், அறிவின் மறுமலர்ச்சி இவற்றின் வரலாறுகளைப் படித்துப் பார்க்கட்டும், உண்மையான ஆன்மிகப் புரட்சிகள் உடனுக்குடனே பலனளித்துள்ளன. எனினும் லூதருக்கோ, மஹம்மதுக்கோ, கலீலியோவுக்கோ, தமக்குக் கீழடங்கிய பத்திரிகைகளோ, ரேடியோக்களோ கிடையாது. தற்கால வரலாற்றில் நாஜி இயக்கம் வெகு சீக்கிரத்திலேயே கிறிஸ்து தர்மத்

தையும், மானுடப்பண்பையும் (10 வருடங்களுக்குள்) ஒறுத்துத் தேசிய ஸோஷலிஸத்தை நிலைநாட்டிக் காட்டியுள்ளது.

பால்கனியர்களை வசஞ் செய்யவே வைதிகக் கிறிஸ்தவ மதம் ரஷ்யாவில் புனருத்தாரணம் செய்யப்படுகிறது என்று ஸோவியத் ஆதரவாளர் கூறுகின்றனர். இது உண்மையாகவே இருக்கலாம்; எனினும், இது நம் வாதத்தையே நிரூபிக்கிறது. ரஷ்யாவில் நடைபெறும் ஸோஷலிஸத்தில் ஆன்மிக தர்மம் குறைவாயிருப்பதாலேயே சமயத்துறையில் ஸோவியத் பிறரை வசிகரிக்க முயல்கிறது. இவ்வகையில் பழமைப் பேயொன்றும் புதுப்பிக்கப் பட்டுள்ளது. அதாவது, ஸ்லாவிய ஸாம்யம் (Pan-slavism)

1941 முதல் வருடா வருடம் ஸ்லாவிய ஸாம்ய மகாநாடு மாஸ்கோவில் நடைபெற்றது; போலந்து, ஜெக், பல்கேரியா, யூகோஸ்லோவியா, மாண்டனக்ரோ முதலியவற்றின் பிரதிநிதிகள் கலந்துகொண்டனர், இம் மகாநாடுகளின் பிரசங்கங்கள் 1910-இல் கூட மிதவாத மினுக்குகளாகவே தோன்றியிருக்கும். தொழிலாளர்கள் தந்தை நாடான ரஷ்யா ஸ்லாவியர்களின் தலைமைப் பதவி பெற்றது :—“ரஷ்யாவின் எதிரி முதலாளித்வமல்ல. ஸ்லாவியர்களின் நிரந்தர விரோதியான ட்யூடானிக் ஜாதியே.” (4-வது ஸ்லாவிய ஸாம்ய மகாநாட்டில் ஜெனரல் பர்லிங்)

ஸோவியத் மாயத்தில் மயங்கியவர்கள் ஜெர்மன் ஸாம்யத்தை வெறுக்கின்றனர்; ரஷ்யாவின் ஸ்லாவிய ஸாம்யத்தைப் பற்றி மட்டும் மேன்மையாக நினைக்கின்றனர்; ஏனெனில் அது ரஷ்ய ஸோஷலிஸ அறிகுறிகளான செஞ்சட்டைகளையும், பலாலிகாரக் குகளையும் அவர்களுக்கு ஞாபகமூட்டுகிறது. எனினும், உண்மையில் ஸ்லாவிய ஸாம்யம் ஒரு வகுப்புவாத இயக்கமேயாகும்; ரஷ்ய ஸாம்ராஜ்ய விஸ்தரிப்புக்கு இது மிகவும் பயன்படுகிறது. வரலாற்று வகையில் ரஷ்யாவின் நோக்கம் டார்டனல்ஸிலும், பால்டிக், ஏஜியன், அட்ரியாடிக் கடற் பிரதேசங்களிலும் ஆட்சி செலுத்துவதே, இன்னும் இந் நோக்கம் அப்படியேதானிருக்கிறது. கம்யூனிஸ அகிலத்தை ஒழித்து அதற்குப் பதில் பழைய வைதிக ஸம்பிரதாயங்களையும், ஸ்லாவிய ஸாம்யத்தையும் என்று பின்பற்றியதோ அன்றே ரஷ்யா ஸோஷலிஸத்தை விட்டு ஸாம்ராஜ்யக் கொள்கையைப் பின்பற்றலாயிற்று.

ஒரு புது ராணுவ உத்வேகமும், அலைபலையான ஆரவாரமும் இம்மாறுதலுடன் தோன்றின. ராணுவப்பிரதிக்ஞை மாறியது. முன்பு :—

“என்னுடைய எல்லாச் செயல்களையும், சிந்தனைகளையும் தொழிலாளர்களின், விடுதலைக்காகவும். ஸோவியத் ஐக்கியத்தின் வெற்றிக்காகவும், ஸோஷலிஸத்திற்காகவும் ஸர்வ ஸகோதரத்திற்காகவும் ஸமர்ப்பிக்கிறேன்” என்பவன், 1939 முதல்,

"என் கடைசி மூச்சுவரை என் தந்தை நாட்டிற்கும், சர்க்காருக்கும் சேவை செய்வேன்" என்று சபதமிடுகிறான் எனவும்,

1944, மார்ச் 15-இல் ஸர்வ தேசிய கீதம் நீக்கப்பட்டு, "மகத்தான ரஷ்யா" என்னும் மற்றொரு கீதம் உற்பத்தியாயிற்று.

1943, ஆகஸ்ட் 23-ஆம் தேதி பழைய ராணுவ பள்ளி முறைகள் வழக்கத்துக்கு வந்தன. 1943, அக்டோபர் பத்தில் ராணுவத்தின் அரசியல் மேலதிகாரப் பதவிகள் நீக்கப்பட்டன. 1941-42-இல் காப்பாளர் படை (Guard Regiment) என்ற பட்டம் மறுபடியும் அமுலுக்கு வந்தது. 1942-ஜூலை 29-இல் லெனின் கொடியும், செங்கொடியுமான ராணுவ அமைப்புகள் மாறி ஸுவராவ், குடுஸாவ், அலெக்ஸாண்டர் நவ்ஸ்கி முதலியோரின் பதக்கங்கள் கொடுக்கப்பட்டன. அதிகாரிகள் சாப்பாட்டறை, விளையாடுமிடங்கள், பந்தாடுமிடங்கள், அவர்களை வணங்கும் முறைகள் யாவும் 1934-35 லேயே ஸ்தாபிதமாகி விட்டன. கடைசியாக, 1943, ஜனவரி 6-இன் அறிக்கைப்படி பழைய 'ஜார் ராணுவ தோள்பட்டைகள்' கொடுக்கப்பட்டன. இவ்வகையில் இடையில் வந்த புரட்சியின் முட்டாள்தனங்களெல்லாம் அடியோடு அகற்றப்பட்டன.

இதற்கேற்பப் பள்ளிப் புத்தகங்களும், சரித்திர நூல்களும், அகராதிகளும் மாறின. மனித வேட்டைக்கு முன்னால் பொக்ரோவ்ஸ்கி என்பவர் மார்க்ஸிய முறையில் ரஷ்ய வரலாற்றை எழுதினார். 1934-இல் பொக்ரோவ்ஸ்கி மதிப்பிழந்தார்; முதலில் ஷெஷ்டகாவும், பின் யூஜென் டார்லேயும் சரித்திரமெழுதினர். 1936-இல் ஷெஷ்டகாவின் ரஷ்ய வரலாறு எல்லாப் பொதுப் பள்ளிக்கூடங்களிலும் பாடமானது; அதன் தலைப்பில், "எங்கள் தேசத்தை நாங்கள் விரும்புகிறோம்; அதன் அற்புத சரித்திரத்தை அறிந்தே தீருவோம்! டார்லே சரித்திர வக்ரமான ரூபங்கள் பெற்றது. மனித வேட்டைக்கு முன் 17, 18-ஆம் நூற்றாண்டினரான புலாவின், ஸ்டென்கா ராஸின், எம்லேன் புகசாவ் என்ற வீரர்கள் பின்வந்த தொழிலாளர் புரட்சிக்கு வழிகாட்டிகளென்று போற்றப்பட்டனர். ஆனால், ஸ்டாலின் பெரியவனாகக் கருதிய மகாபீடருக்கு புலாவின் விரோதியாயிருந்தார். புகசாவ் இளவரசன் ஸுவராவிடம் தோல்வியுற்றார்; இந்த ஸுவராவ் போரில் ஸ்டாலின் ஒரு ராணுவ அமைப்பையே ஆரம்பித்தார். எனவே மறுபடியும் சரித்திரங்கள் மாறுபடலாயின.

1941, நவம்பர் 7-இல் ஸோவியத் புரட்சியின் 24-வது வருஷ விழாவில், "இந்த யுத்தத்தில் நம் முன்னோர்களின் மகத்தான உருவங்கள் உங்களுக்கு ஊக்கமூட்டட்டும். ௨ங்கள் பெருமைகள் அலெக்ஸாண்டர் நுவ்ஸ்கி, டெமிட்ரி டோன்ஸ்கோய், குஸ்மா

மினின், டிமிட்ரிபொஷார்ஸ்கி, அலெக்ஸாண்டர் ஸுவராவ் மிகேல் குடுஸாவ் முதலியோரது'' என்று ஸ்டாலின் கூறினர். அவ்வளவு தான், மார்க்ஸ், எங்கல்ஸ், முதலிய பழைய புரட்சிவீரர்களுடன் மேற்கூறிய அறுவரும் ராணுவத் தெய்வங்களாயினர். இவ் வறு வரில் நால்வர் இளவரசர்கள், ஒருவர் தெய்விகமகான்; இதில் ஒருவராவது ஸமூக முன்னேற்றத்திற்காகப் போரிட்டவர்களில்லை. குஸ்மா மினினைப்பற்றி 1930, ஸோவியத் என்ஸைக்ளோபீடியா (கலைக்களஞ்சியம்), "புனிதத்தாயான ரஷ்யாவிற்காக வகுப்பற்ற முறையில் போரிட்ட மாவீரர் என்று முதலாளித்வ வரலாற்றறிஞர்கள் போற்றுகின்றனர்'' என்று எழுதியுள்ளது. 1611-ல் இளவரசன் பொஷார்ஸ்கி ரஷ்யப் படையுடன் போலந்தின்மேல் படை எடுத்தான்; இளவரசன் ஸுவராவ் ஃபிரஞ்சுப் புரட்சியை எதிர்த்துப் போராடின ; புகசாவ் தொழிலாளரையும், போலந்தர்களையும் எதிர்த்தான், இளவரசன் குடுஸாவ் குடியானவப் புரட்சியை அடக்கியவர்; நெப்போலியனையும், போலந்தர்களையும் வெ றவர்; இளவரசன் டொன்ஸ்கோய் 14-ஆம் நூற்றுண்டில் மங்கோலியர்களுடன் போரிட்டவர்; வைதிகக் கிறிஸ்தவக் கோயிலில் மகானாகை ஒப்புக்கொள்ளப்பட்டவர்.

இவைகளுக் கேற்பவே இலக்கியங்களும், கலைகளும் மாறின; ஸோவியத் ஓவியர்கள் பழைய ரஷ்யப் போர்களைச் சித்தரித்தனர்; ஸோவியத் கவிஞர்கள் தாய்நாட்டு மண்ணின் மகிமையைப் பாடினர்; ஸோவியத் கதாசிரியர்கள் பழைய தேசிய வீரர்களின் சரிதங்களை எழுதினர். 1942-இல் ஸ்டாலின் பரிசுபெற்ற நாவல்கள் 4. அவை, பொரோடின் எழுதிய இளவரசன் டிமிட்ரிடோன்ஸ்கோய் சரிதம்; அண்டொனேவ்ஸ்கியின் ஸ்டாலினது ஜியார்ஜியா வீரனை மகத்தான முர்ரேயின் கதை; யானுடைய செங்கிஸ் கான்; எஃரன்பர்க்கின் பாரிஸ் வீழ்ச்சி என்பவையே, இவ்வருஷம் ஸ்டாலின் பரிசுபெற்ற கவிஞர் குஸேவ், அவரது மிகப் பிரபலமான கவிதை கீழ்க்கண்டபடி ஆரம்பமாகிறது:

"நான் ஒரு ரஷ்யன், மாஸ்கோவின் மகன்;
நாடரும் ரஷ்ய மேன்மையின் வாரிசு''.

இவ்வருஷத்துப் பரிசுபெற்ற நாடகம், கார்னிசக்கின் முன்னணி (Front) என்பதே. இதில் உள்நாட்டுப் போரில் பழைய போல்ஷிவிக் தலைவர் ஒருவர் பரம முட்டாளாக வர்ணிக்கப்படுகிறர்; இதே ஆண்டில் அலெக்ஸி டால்ஸ்டாய் தமது 'மகாபீட'ரிலிருந்து ஒருபடி தாண்டி 'பயங்கர இவா'னை எழுதினர். இந் நாடகம் எஸின்ஸ்டினுல் படமாக்கப்பட்டது. "இவனது கொடுஞ்செயல்களெல்லாம் உள்நாட்டிலும் வெளிநாட்டிலுமுள்ள அவரது விரோதிகள் உற்பத்தி செய்தவை, அல்லது, மிகை

படக்கூறியவை என்று எஸின்ஸ்டன் கருதினர். இப்படத்தை எடுப்பதில் பயங்கர இவானே வலிபொருந்திய ரஷ்ய ஐக்யத்தை உருவாக்கியவர்; நிலையான ரஷ்யப் படையை நிறுவினவர்; வரலாற்று நெருக்கடியின அவசியங்களுக்கேற்ப நடந்து கொண்டவர்''—என 'ஸ்டாலினும் நிரந்தர ரஷியாவும்' என்ற தம் நூலில் கோலார்ஸ் தெரிவிக்கிருர்.

எஸின்ஸ்டின் நிருபருக்களித்த பேட்டியில் இதையே சொன்னுர். ரஷ்யக் காலிகுடலாவான இவானது பயங்கர ஆட்சி 'வரலாற்று முறையின் அவசர நெருக்கடி'யாவதைப் பற்றி ஏதும் கூற அவசியமில்லை. பொடாம்கின் 'போர்க் கப்பல்' படத்திலிருந்து 'பயங்கர இவான்' படம் வரையில் ரஷ்யாவின் ஆன்மிக வளர்ச்சி ஸாட்சாத்கார மாகிறது.

* * *

நாஜிகள் அநேகமாய் ஐரோப்பா முழுமையையும் ஆக்ரமித்த பொழுது ரஷ்யா தயைமிகுந்த நடுநிலைமை வகித்தது. ஃபிரான்ஸ் தாக்கப்பட்டபொழுது, நேசநாடுகள் தோல்வியின் எல்லையிலிருந்த பொழுதும் ரஷ்யா இரண்டாம் போர்முனையை ஆரம்பிக்கவில்லை. தானே நேரடியாகத் தாக்கப்பட்டபோது தான் தானும் தாக்கியது; தேசியம் வாழ தேசிய கோஷங்களுடன் போரிட்டது. மார்க்ஸுக்குப் பதிலாக ஸுவராவ் பெயரில்; ஸர்வதேசியத்துக்குப் பதில் தேசிய கீதத்துடனும், ஜார் தோள் பட்டைப் பரிசுகளுடனும், ஸ்லாவிய ஸாம்ய ஜாதிக் கிறுக்குடனும், பழைய தாடிவைத்த மதக் குருமார்களின் கீழ யுத்தம் செய்தது.—ரஷ்யாவில் ஸோஷலிஸ ஊக்கங்களெல்லாம் அடியோடுடைந்தன என்பதற்கு இதுவே அத்தாட்சி.

1917-ஆம் புரட்சியில் ஏற்பட்ட தார்மிக ஊற்றுக்கள் ஸ்டாலின் ஆட்சியின் பசப்பால் வறண்டு விட்டன. இந்தப் புத்துணர்ச்சிகள் வளர இடைவிடாமல் ஊக்கப்படவேண்டும்; வலிமைபெற்று நிற்க ஸகோதரத்வ தார்மிகச் சூழ்நிலை ஏற்பட்டிருக்கவேண்டும். இவ்வகையிலேயே இவை மானுட இயல்பை மாற்றிப் புதியதொரு விடுதலை பெற்ற மேதைமானுட (homo sapiens liber)ரை உற்பத்தி செய்திருக்க முடியும். இவ்வாட்சி முறை 19-ஆம் நூற்ருண்டின் லோகாயதக் கொள்கைகளினின்றும் எழுந்தது; ஆன்மிக தர்மத்தின் அவசியத்தை உணர்ந்ததே யில்லை. முடிவுக்குத் தக்கபடியே முறை என்ற கொள்கையின் அஸ்திவாரத்தில் நின்றுகொண்டு, அசைவற்றுப் பேச்சற்ற பொதுமக்களின் அவலத்தால் களைப்புற்று, விஞ்ஞான ஆராய்ச்சிக் கூடத்தில் மூலப் பொருள்களை நடத்துவதுபோல் மக்களையும் சம்மட்டிகளாலும், சிற்றுளிகளாலும், தீத்திரவங்

களாலும், பல விதமான அலைவரிசைகளோடு கூடிய பிரசார மழை களாலும், சிதைத்தது. வெளிப்பார்வைக்கு இம்முறை வெற்றி கரமாக வேலை செய்வதுபோல் தோன்றியது. மக்கள் தங்கள் தலைவர்களை நம்பினர், பாராட்டினர், யந்திர மனிதரைப்போல் செயல் புரிந்தனர். வீரர்களாய்—ஜப்பான், ஜெர்மன் பொம்மை வீரர்களைப் போன்றே—மடிந்தனர். ஆனால், அவர்களது உள்ளங் களை ஊக்கிய புதிய ஊற்றுக்கள் வற்றின; பதிலாகக் குமைந்த குப்பைகூளங்களி லிருந்தெடுத்த பழமை குடி கொண்டது.

ஒரு புது மானுட ஸமூகத்தையும், புது ஒழுக்க நெறியையும் உண்டாக்குவதில் ரஷ்யப் புரட்சி தோற்றுவிட்டது. இதன் அடிப்படைக் காரணம் 19-ஆம் நூற்றாண்டின் பயனற்ற லோகாயதமே. மனிதனுக்கு ஆன்மிக உணவு அவசியம் என்பதை அறியாததாற்றான் பழங்கொள்கைகளை மறுபடியும் உயிர்ப்பிக்க வேண்டிவந்தது.

# மாயையின் முடிவு

ஒரு வேகமான தாக்குதல்; முதலில் ஜெர்மன் படை, பின்னர் (ரஷ்யச்) செம்படை, அவ்வளவுதான்; வார்ஸேல்ஸ் உடன்படிக்கையிலுதித்துப் பிறரை எதிர்ப்பதாலேயே வாழ்ந்த போலந்து அடியோடு அழிந்தது.—பழைய போலந்தை இனி உயிர்ப்பிக்க முடியாது என்பதை யாவரும் அறிவர்.''... (மாலடோவ், 31. அக்டோபர், 1939).

"நான் வலிமையும், சுதந்திரமும் பெற்ற போலந்தையே எப்போதும் விரும்பி யுள்ளேன்.'' — (ஸ்டாலின் - திரும்பத் திரும்ப-1944).

### ரஷ்யாவின் அதிகார வேட்டை முறைகள்

நம் ஆராய்ச்சியின் விளைவை அடியிற்கண்டபடி சுருக்கிக் கூறலாம்:—

ஸோவியத் ரஷ்யா ஒரு அரசாங்க—முதலாளித்வ ஸர்வாதிகார அடக்குமுறை ஆட்சி. அது பொருளாதாரத் துறையில் முன்னேறுகிறது; மற்ற எல்லாத் துறைகளிலும் பின்வாங்குகிறது, முதலாளித்வ உச்சத்திலிருக்கும் குடியாட்சிகளோடு ஒப்பிடும்போது, அரசியல், கலாசாரம், ஆளுவோர் ஆளப்படுவோர் தொடர்பு யாவிலும் அது மிக மிகப் பிற்போக்கானதே. முறைகள் புதிதாயிருப்பினும் சொந்த நாட்டை வியாபகம் செய்வதில் ஸோவியத் பழைய எதேச்சாதிகார ரஷ்யாவையே பின்பற்றுகிறது.

உலகத் தொழிலாளிகளுக்கும், முற்போக்குச் சக்திகளுக்கும் மற்ற வல்லரசுகள் எத்துணை முக்கியமோ அத்துணை முக்கியமே ரஷ்யாவும். அது (வலக்கட்சி) மிதவாதிகளின் ஆபத்துமல்ல, (இடக்கட்சி) அமிதவாதிகளின் அக்கறையுமல்ல. இரு கட்சிகளை யும் தன் சொந்த அதிகாரத்திற்காக உபயோகிப்பதே ரஷ்யாவின் நோக்கம். நேற்றைப்போலவே, இன்றும் இனியும். அரசியல் கொள்கைகளுக்காக அல்ல, அதிகார அவசரங்களுக்காகவே ரஷ்யா தன் கூட்டாளிகளைத் தேர்வதும், விலக்குவதும்.

இதில் இரு ரகங்கள் உண்டு. முதலாவது அதிகார அரசியவில் ரஷ்யாவுக்கும் பிறநாடுகளுக்கும் வித்யாசம் உண்டு. அதிகார வேட்டை சந்தர்ப்பவாதமும்,ஸம்ஸயவாதமும் நிரம்பியது; நெருக்கடியான நிலைமையில் அவசரமென்ற பெயரில் ஒழுக்க நெறிகள் கைவிடப்படும். எனினும் ஸாம்ய வாதத்திலும், ஒழுங்கின்மையிலும் பலதரங்கள் உண்டு. குடியாட்சிகளிலும் வெளிநாட்டு உறவுகளைப் பாதிக்கப் பொதுஜன அபிப்பிராயத்திற்கு ஸக்தியில்லை. ஆயினும், சிற்சில ஸந்தர்ப்பங்களில் வீதிக்கூச்சல் முறை

யாலேயே அரசியலைப் பொதுமக்கள் மாற்றுவதும் உண்டு. உதாரணம்: லவால்-ஹோர் உடன்படிக்கை. இந்த மாற்றும் சக்தி அநேகமாய் உபயோகிக்கப் படுவதில்லை, எனினும், அரசினர் ஓரளவு இதைப்பற்றிக் கவலைப்படாமலிருக்க முடியாது. தங்கள் தேர்தல் தொகுதி மக்கள், வாக்குரிமை பெற்ற பத்திரிகைகள், மக்கள் சபை (Parliament) விவாதங்கள். இழுப்பாடாயினும் எதிர்ப்புகள் முதலியவற்றைக் கவனித்தேயாகவேண்டும். இவைகளின் முக்கியத்வத்தை அரசியல் தகிடுதத்தர் மிகைபடுத்திக் காட்டுவர், அதீதவாதிகள் குறைத்துக் கூறுவர். இந்தப் பொது ஜன ஸமன சக்தியால் இங்கிலாந்தும், அமெரிக்காவும் தெளிவற்று நோய்தரும் வழவழ கொழகொழ வளைவலைப் பாதையில் சென்றாலும், ரஷ்யாவைப் போன்று தாறுமாருய்க் கோணிக் குடையும் பாதையில் செல்லாது.

குடியாட்சிகள் ஸர்வாதிகாரிகளையும், மாற்று டார்லன்களையும் ஸமாதானப்படுத்தலாம்; ஆனால் 24 மணி நேரத்துக்குள், உடன்படிக்கை எழுதிய மை உலருமுன்பே திடீரென்று கொள்கைகளை மாற்றிக்கொள்ள அவற்ருல் முடியாது. ஆனால் ஸோவியத் ரஷ்யாவும் நாஜி ஜெர்மனியும் கட்டுப்பாடற்ற வெறுமையில் வாழ்கின்றன; எனவே, தட்டிப்பேச ஆளில்லாவிட்டால் தம்பி சண்டப்ரசண்டம் என்ற வகையில் எப்படி வேண்டுமென்ருலும், எப்போது வேண்டுமென்ருலும், எதை வேண்டுமென்ருலும் திடீர் திடீரென்று மாற்றிக்கொள்ள அவற்ருல் முடிகிறது. வருங்கால அரசியல் தந்திரங்களில் அடுத்த மாற்றத்தை அறியாத வகையில் ரஷ்யாவுக்குப் பிறரைக் காட்டிலும் அதிக சௌகர்யமிருக்கிறது. பழங்கொள்கைக் கட்டுப்பாடுகளுடைய நாடுகளைக் காட்டிலும் ஒழுங்கு முறைகளை உதறித்தள்ளிய நாட்டை இஷ்டப்படி உருவாக்குவது சுலபம். வேறு வழி இல்லை என்ற நிலைமையிலேயே மேலை நாட்டினர் உடன்படிக்கைகளை மாற்றிக் கொள்வர் - அதிலும் மனக் கசப்போடுதான். மறு பக்கம், ஸோவியத் அரசினரோ தங்கள் முதலாளித்துவ கூட்டாளிகளுக்கு இரண்டகம் புரிவதை இன்பத்தோடும், இதயபூர்வமாகவும் செய்கின்றனர்; தவிர, நோக்கம் இன்னதென்பதை மறந்துவிட்டாலும். ஏதோ ஒரு உயர்ந்த நோக்கத்திற்காகவே தாங்கள் பாடு படுவதாக அவர்கள் இன்னமும் நினைக்கி றனர்.

19ஆம் நூற்ருண்டின் பழைய கொள்கைகளைப் பின்பற்றும் மேற்கு நாட்டினர் இந்தத் திடீர்த்தாக்குசல் முறைகளை அறிந்து கொள்ள கொஞ்சகாலம் பிடிக்கும்-இப்போதுதான் அவர்கள் ஓரளவு இதை அநுபவித்துள்ளனர். இதற்கிடை, மூனிச் ஒப்பந்த வருடங்களில் நாஜி ஜெர்மனியைப்போல் ரஷ்யக் கொள்கையும் வெற்றிபெற்றுவரும்.

## 2

அதிகாரவேட்டை முறையில் ரஷ்யாவுக்கும் பிற நாடுகளுக்கும் உள்ள இரண்டாவது வித்யாசம் போல்ஷிவிக்கர்களுக்கும் மற்ற தீவிரவாதிகளுக்கு முள்ள வித்யாசமே. இது கொள்கைகளின் வேறுபாட்டால் ஏற்பட்டது; கொள்கைகள் மறைந்து விட்டன. எனினும் கோபதாப கள் தீரவில்லை. ஸோவியத்தைப் பாராட்டுபவர்களில் பலருக்கு ஐரோப்பாவின் இரண்டாவது ஸர்வதேசியத்தைச் சேர்ந்த பிரிட்டிஷ் தொழிற் கட்சி, ஃபிரஞ்சு எஸ். எஃப் ஐ. ஓ. கட்சி, இத்தாலி, போலந்து, ஆஸ்ட்ரியா, ஸ்பானியஸோஷலிஸ்டுகளும் அவற்றின் தலைவர்களும் ரஷ்யாவின் கண்காணிப்பில் 'புரட்சி விரோதப் புல்லர்' களே எனக் கருதப் படுவது தெரியாது. பிறநாட்டு ஸோஷலிஸ்டுகளிடம் ஸோவியத்தர்களுக் கிருந்த வெறுப்பு எத்தகையது என்பது, காலங் கடக்கு முன் ரஷ்யர்கள் பிறரது ஃபாஸிஸ எதிர்ப்பிற் கலந்து கொண்டமையாலேயே நன்கு தெளிவாகிறது. ஹிட்லரது கடுஞ் சிறைக்கூடங்களில் கம்யூனிஸ்டுகளும், ஸோஷலிஸ்டுகளும் ஒருங்கே கொல்லப்பட்டனர்; எனினும் ரஷ்யா கொலையுண்டவர்களை ஃபாஸிஸ்டுகள் என்றுதான் திட்டியது. 1934-இல், ஃபிரான்ஸ் ஜெக்கோஸ்லோவோக்கியாவுடன் ராணுவ உடன்படிக்கைகள் சர்வதேச சங்கத்தில் அங்கத்தினரது என்ற வகையிலான ரஷ்ய வெளிநாட்டுக் கொள்கைக்கு உதவியாக உருவான பொது ஜன முன்னணிக் கொள்கையால் தீவிரவாதிகளுக்குள் யாதொரு மாறுதலும் ஏற்படவில்லை; இவைகளுக்குப் பின்னால் ரஷ்யா தன் சொந்த நலனுக்காக ரகஸியத் தகிடுதத்தங்கள் செய்தது. இந்த இரட்டைக் கொள்கை ஸ்பானிய ள்நாட்டுக் கலகத்தின்போது உச்சநிலையை அடைந்தது. ரஷ்யா தனிப்பட்ட முறையில் தீவிரவாதக் கட்சிகளான போம் (poum), சுதந்திர ஸோஷலிஸ்ட் முதலியோரின் வேற்றுமைகளை மிகுதிப்படுத்தி அவர்களது சக்தியை அழிக்கச் சதிசெய்தது. எனவே. கம்யூனிஸ்ட் கட்சி மிகுந்தவகையில் அடிக்கடி மாறுவது; எதிரிகளை ஒழிப்பது என்பதில் மட்டுந்தான் நிச்சயமானது.

சென்ற சில வருடங்களில் கம்யூனிஸ்ட் கட்சி, ப்ரஷ்ய முதலாளிகள் ஆஸ்ட்ரிய மன்னவைக் கட்சியின் க்ரோட் உல்லாசகர், இத்தாலிய கத்தோலிகர்கள் முதலியவருடன் சேர்ந்து கொண்டனர்; பழைய கட்டுப்பெட்டி தலைவர்களுக்கு முடிசூட்டினர்; போப்பாண்டவருடன் ஒப்பந்தம் பேசினர்; மாறி மாறி ரிபப்ளிகன், டெமாக்ரடிக் கட்சிகளை ஆதரித்து அமெரிக்க முதலாளித்துவத்தைப் பரப்பஉதவு வதாகவாக்களித்தனர். சென்ற இரண்டு ஆண்டுகளுக்குள் பிரிட்டிஷ் தொழிற் கட்சியை யுத்தத்தை அது

ஆதரிப்பதற்காகவும், பின் ஆதரிக்காமைக்கும், ஜெர்மன் எதிரியாய் இருப்பதற்கும். ஜெர்மனியைப் பிளப்பதை விரும்பாததற்காகவும், தொழிற்கட்சியை மீன் வாணிச்சியைப்போல் திட்டவும், அதேசமயத்தில் அதனுடன் சேரவும் என எத்தனையோ மாறுதல்களடைந்துவிட்டன, தங்கள் வார்த்தைகளையே அவர்கள் உண்டு உமிழ்ந்தனர். பார்க்கப்போனால் கம்யூனிஸ்ட் கட்சி, மற்ற தொழிற் கட்சிகளுடன் ஒத்துழைப்பதைத் தவிர, மற்ற எல்லாவகையிலும் மாறிக்கொண்டே வந்துள்ளது.

இதன் காரணம் ரஷ்யக் கட்சியின் வரலாற்றில் இயல்பாயுள்ள ஒன்றே. 1903-இல் லண்டன் மகாநாட்டில் ஏற்பட்ட பெரும்பான்மைக் கட்சி போல்ஷ்விக்குகளுக்கும், சிறுபான்மையான மென்ஷ்விக்குகளுக்குமான பிளவையின் புண் இன்னும் ஆறவில்லை. போல்ஷிவிகர் மத்தியப் புரட்சியினர், மென்ஷிவிகர் பரவற் சீர்திருத்த வாதிகள். லெனினியக்க ஆரம்பகாலத்தில் மென்ஷிவிகர் ஸோஷலிஸ மிசவாதிககளாகக் கருதப்பட்டனர். 1919-இல் இரண்டாம் ஸர்வதேசியம் ஏற்பட்டபோது அவர்களும் அசல் ஸோஷலிஸ்டுகளே என ஒப்புக்கொண்டது ரஷ்யா; சென்ற பத்தாண்டில் மென்ஷிவிகர் ஸோஷலிஸப் புரட்சியாளராயினர், புரட்சியாள ரஷ்யா சமாதானத்தைப் போதிக்கலாயிற்று. எனினும், கொள்கை வித்தியாசங்களெல்லாம் தவிடுபொடியாயினும்மென்ஷிவிக்வெறுப்பு நீங்கவில்லை; மறந்துபோன காரணங்களுக்காகப் பழிவாங்கும் படலம் தீரவில்லை; வகுப்பு முறையில் அமைந்த அரசியல் கட்சிகள் யாவும் ஜாதிமத பேதங்களைப்போல் தங்கள் பழஞ் சண்டைகளை மறப்பதில்லை.

ரஷ்யாவின் இந்த மறைப்பு வித்தைக்கு அதிகமாக அறிவிற்குப் பொருந்திய மற்றொரு காரணமும் உண்டு. சுதந்திரமான தொழிலாள இயக்கங்களோடு சேர்வதைக் காட்டிலும் முதலாளித்துவ சக்திகளுடனும், தன்னலக் கூட்டத்துடனும் சேர்வது சுலபம் என்பதை ஸோவியத் தலைவர்கள் உணர்ந்தனர், முன்னது பரஸ்பரத் தன்னலத்திற்கானது; பின்னதோ ஒழுக்க நெறிகளையும், நீதிகளையும், உயர்நோக்கங்களையும் கொண்டது-எனவே முறையை சமயத்துக்கேற்றபடி மாற்றமுடியாது. இங்கிலாந்தில் கன்ஸர்வேடிவ் கட்சிக்கும், தொழிற் கட்சிக்கும் உடன்பாடு ஏற்பட்டிருந்தால் அது 1939, செப்டம்பரில் ஸ்டாலின்—ஹிட்லர் ஒப்பந்தத்தை மறுப்பதால் அழிந்து போயிருக்கும்; சுதந்திரத் தீவிரவாதிகளுடன் இணைந்திருந்தால் அது யுத்தத்தை ஆமோதிக்க மறுத்தால் 1941-இல் தீர்ந்திருக்கும் தாசானுதாசரான கம்யூனிஸ்டு ஸர்வதேசியமே க்ரெம்லின் ராஜதந்திரத்திற்கு முட்டுக்கட்டையாய் இருந்ததெனில் மற்ற சுதந்திரத் தொழிற் கட்சிகளைப்பற்றிக் கேட்பானேன்? அந்நியர்களோடு வியாபாரம்

செய்யலாம், சொந்த மனிதரோடு வியாபாரம் செய்யமுடியாது என்பதை ரஷ்யத் தலைவர்கள் அறிவர். இதனாலேயே, ஸர்வ தேசத்துறையில் தொழிற் கட்சி மந்திரிகளை விட்டு பீவர்ப்ரூக், வில்க்கி முதலியோருடன் ரஷ்யா உடன்படச் சம்மதித்தது.

அதிகார பூர்வமாய் ஸோஷலிஸம் தனக்கே உரியதென்று ரஷ்ய அரசாங்கம் பாவனை செய்தாலும், வெளிநாட்டுச் சுதந்திர ஸோஷலிஸ இயக்கங்களைத் தனக்குத் தடையாகக் கருதியது. இத்தடை நீங்கவேண்டுமானால் ஒன்று, சுதந்திர ஸோஷலிஸ இயக்கங்கள் தம் சுதந்திரத்தை இழந்து ரஷ்ய அதிகார வர்க்கத்தின் அடிக்கடி மாறும் தகிடுதத்தத்திற்குத் தலைசாய்க்கும் தலையாட்டித் தம்பிரான்களாக வேண்டும்; மற்றொன்று, ஸோவியத் ரஷ்யா தன் வெளிநாட்டு விவகாரங்களுக்கு வலிமைவாய்ந்த ஊன்றுகோலா யிருக்கும் தானே ஸோஷலிஸ உரிமையாளன் என்ற பாசாங்கை நீக்கிவிடவேண்டும். இவை இரண்டும் அநுபவஸாத்யமானதல்ல; எனவே போட்டியிடும் வெளிநாட்டு ஸோஷலிஸ இயக்கங்களைக் குறைகூறி விரட்டுவதைத் தவிர ரஷ்யா வேறொன்றும் செய்யமுடியாது, இது ஒன்றும் ரஷ்யாவிற்குப் புதிதில்லை; உள்நாட்டில் ஸமூகப் புரட்சியினரையும், மென்ஷ்விகர்களையும், அராஜகர்களையும், ட்ராட்ஸ்கியர்களையும், பழைய போல்ஷிவிகர்களையும் ஒழிக்க ரஷ்யா கையாண்ட முறையின் தொடர்ச்சியே இது. யூதர்களின் உலகச் சதி (Judaic World Conspiracy) என்று ஹிட்லர் கூறியதுபோல் ட்ராட்ஸ்கியர், மென்ஷிவிகர் என்பவைகளும் தம் ஆட்சி முறைக்கும் ஆமாம் போடாத யாவரையும் குறிப்பதாக ரஷ்ய அதிகாரிகள் கொண்டனர், இவ்வாறு கணிசமான ஏமாற்றமும் வெருட்டுணர்ச்சியும் ரஷ்யாவில் விளைந்தன.

மனிதவேட்டைக்குப் பிறகு ஸோவியத் அரசாங்கம் ஸம்ஸயவாதிகளையும், மிதவாதிகளையும் தனக்கு எதிரிகளாகக் கருதவில்லை; பிறநாட்டு ஸோஷலிஸத் தீவிரவாதிகளையே விரோதிகளாக எண்ணியது. ஸம்ஸயவாதிகளோடு வாழ்க்கை முறை (Modus vivendi)யில் ஒத்துப்போகலாம்; தீவிரக்கொள்கை உடையோர் கவைக்குதவாதவர்கள், சில்விஷமிகள், ஆபத்தானவர்கள். இது தனி நபர்களுக்கும் சரி, இயக்கங்களுக்கும் சரி—பொதுவானதே. எனவே, ஸோவியத் விரிவாசை முதல் முதலாக ஆக்ரமிக்கப்பட்ட போலந்திலும், பால்டிக் நாடுகளிலுமிருந்த தீவிரவாதிகளை ஒழிப்பதிலேயே கவனம் செலுத்தியது.

## 3

ரஷ்யாவின் போலந்துப் படையெடுப்புக்கும், ஜெர்மனியின் ரஷ்யப் படையெடுப்புக்கும் இடையிலுள்ள இரு வருடங்களில்

கிழக்கைரோப்பிய நாடுகளை ஸோவியத் மயமாக்க ரஷ்யா செய்த முக்கியமானகாரியம் சரித்திரம் காணுத வகையில் பெருவாரியான மக்களை நாடு கடத்தியதே. இக் கடத்தற்படலம் அடுத்தடுத்து, 1940–பிப்ரவரி, 1940–ஏப்ரல், 1940–ஜூன், 1941–ஜூன் என நான்கு முறையாக நடைபெற்றது. கிழக்குப் போலந்திலிருந்து வெளியேறியவர்கள் சுமார் 1,000,000 பேர்; கடத்தற் திட்டத்தின்படி இன்னும் எத்துணைபேரோ? இத்திட்டம் ரஷ்ய—ஜெர்மனிப் போரால் இடையில் தடையுற்றது, அல்லது, தள்ளிப்போடப்பட்டது. கடத்தப்பட்டவர்கள் தங்கள் தலைவிதிப்படி மூவகைப்படுவர், (1) 3 முதல் 8 ஆண்டுகள் வட துருவத்தை அடுத்துள்ள பலாத்காரக் கூலிப் பண்ணைகளில் மரம் வீழ்த்துவது, சுரங்க வேலை முதலான ஆபத்துகள் நிறைந்த தொழில்களிலும், பொது வேலைகளிலும் ஈடுபட்டவர்கள்; (2)ஜனமற்ற வெறுமைப் பிரதேசங்களில் காடழித்து நாடாக்குவதிலும், மரமறுப்புச் சாலைகளிலும், ரோட் வேலைகளிலும் ரகஸியப் போலீஸின் காவலின் கீழ் ஈடுபட்டவர்கள்; (3) மத்திய ஆசியப் பகுதியில் (முக்கியமாக காஸக்ஸ்தான், கிர்கிஸ், யகூட்ஸ் குடியாட்சிகளில்) போக்குவரவைத் தவிர மற்றப்படிப் பெயரளவில் சுதந்திரமுடையவர்களாய் அங்குள்ள கோல்கோஸஸர்களின் கீழ்க் கூலி வேலை செய்பவர்கள்.

பால்டிக் நாடுகளிலிருந்து மக்களைக் கடத்தியதும் இதே முறையில்தான். ஸோவியத் லிதுவேனியாவின் உள்நாட்டு மக்களின் ஸர்வாதிகாரி (People's commissar for the interior of Soviet-Lithuania) யான குஸிவிட (Gusevitius) ஸின், 1940, நவம்பர், 28-ஆம் தேதி, 0054 நம்பர் உத்தரவுப்படி, 14 வகையான லிதுவேனியர்கள் நாடுகடத்தப்பட வேண்டியவர்கள். இப்பதினுவில் 1, ரஷ்யப் புரட்சிக்கு முந்திய கட்சி அங்கத்தினர்கள், ஸமூகப் புரட்சிவாதிகள்; மென்ஷெவிகர்கள், டி. டி. (D.D.)க்கள், ட்ராட்ஸ்கியர்கள், அராஜகர்கள்; 2 முதல் 6 வரையான பகுதியில் லிதுவேனிய அரசியல் கட்சிகளான வால்டிமாரஸைட்டர்கள், கிறிஸ்தவக் குடி ஆட்சியினர், தேசியமாணவர், ஷாவிஸிஸர், போலீஸ் அதிகாரிகள், சேவகர்கள், சிறைச்சிப்பந்திகள், பழைய ஜார் ஆட்சி, வைட்ரஷ்யா, போலந்து, லிதுவேனியா இவற்றின் போர்வீரர்கள் யாவரும் அடங்கினர். 7 ஆம் பத்தியில் கம்யூனிஸ்ட் கட்சியிலிருந்து விலக்கப் பட்டவர்கள்; 8-இல் அரசியல்பிரஷ்டர்கள்,பிரஷ்டாபிரஷ்டர்கள்,மயக்கமருந்து வணிகர்; 9இல் வெளிநாட்டினர், வெளிநாட்டு வியாபாரிகள்; 10இல் வெளிநாட்டில் யாத்திரை செய்தவர்கள், வெளிநாட்டோடு தொடர்புடையவர்கள், 'எஸ்பரேண்டோ (Esperanto) என்னும் உலகப் பொதுப் பாஷையினர், (வெளிநாட்டு) தபால் தலை

சேகரிப்பவர்கள்; 11இல் லிதுவேனிய அமைச்சராலய சிப்பந்திகள்; 12இல் போலந்து செஞ்சிலுவைச் சங்கத்தார், போலந்து அகதிகள்; 13, 14இல் மதக்குருமார்கள், செல்வந்தர்கள், நிலச்சுவான்தாரர்கள், பாங்கர்கள், ஆலை முதலாளிகள், பணக்கார வியாபாரிகள், ஹோட்டல்காரர்கள் யாவருமே.

இந்த அட்டவணையை அலசிப்பார்த்தால் இது தேசிய உடலிலிருந்து கீழ்க்காணும் அங்கங்களை வெட்டி எறியும் முயற்சி என்பது தெளிவாகிறது.

1. கம்யூனிஸ்ட் கட்சியைத் தவிர மற்ற எல்லாத் தீவிர வாதக் கட்சிகளையும், செயலாளர்களையும், சிந்தனையாளர்களையும் ஒழிப்பது.

2. பழைய அரசாங்கத்தின் மேலிட அதிகாரிகளைத் தொலைப்பது.

3. தாராள மனப்பான்மையுடைய யாவரையும் நீக்கி விடுவது.

கிழக்குப் போலந்தில் இந்த அங்கச்சிதைப்பில் உபாத்தியாயர்கள், வக்கீல்கள், பத்திரிகையாளர்கள் என்ற அறிவினர் கூட்டம் முழுமையும் அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாயினும் அகற்றப்பட்டனர். அதிலும் 1941, ஜூனில் நடந்த நாலாவது நாடுகடத்தலில் ஸோவியத் ஆட்சி ஏற்படுமுன் அரசாங்கத்தைக் கைப்பற்றிய கம்யூனிஸ்ட் கட்சியும், தொழிலாளர் படையும் கூட ஒதுக்கப்படலாயின.

பொதுவாக இந் நாடுகடத்தலால் தனி மனிதர் மட்டுமன்றி குடும்பங்கள் பூராவுமே பாதிக்கப்பட்டன; சிறு குழந்தைகள் அநாதை விடுதிகளுக்கு அனுப்பப்பட்டனர். வேண்டுமென்றே அகதிகளைக் கொடுமை செய்தனர் என்று கூறமுடியாவிட்டாலும், அவர்களைக் கடத்திச்சென்ற சூழ்நிலை அகோரமானதே. ஆடு மாடுவண்டிகளில் அடைபட்டு மூன்று வாரம் ஒரேயடியாகப் பிரயாணம் செய்ததால் அநேகர் வழியிலேயே இறந்துபோயினர். ரஷ்ய ரகஸியப் போலீஸார் அகதிகளை இரவில் அழைத்து 200 பவுண்டுகளுக்கு மேற்படாமல் தங்கள் மூட்டை முடிச்சுகளைக் கட்டிக்கொள்ள ஒரே ஒரு மணிநேரம் அவகாசம் தந்தனர். விடியுமுன்பே ரெயில் கிளம்பியது; ஒவ்வொரு வண்டியிலும் மல ஜலம் கழிக்கவும், உணவுப் பண்டங்களைக் கைநீட்டி வாங்கவுமான ஓட்டைகளைத் தவிர வேறு திறப்புகள் கிடையாது. கிளம்பிய ரெயில் துருவப்பிரதேசத்தையோ, மத்திய ஆசியாவையோ அடைந்த பிறகுதான் நின்றது.

இந்தக் கடத்தற் கொள்கையின், நோக்கம் புதிதாகக் கிடைத்த நாடுகளிலிருந்து ரஷ்ய அரசியல் அகராதிப்படி செய

வினர் (Activists) என்னும் யாவரையும் விலக்குவதே. செய வினர் என்பதில், மிதவாதிகள், அமிதவாதிகள், சுதந்திரச் சிந்தனையாளர்கள், செயலாளர்கள், பொருளாதார, ஸமுதாய அறிவியக்கங்களை அமைப்போர் யாவரும் அடங்குவர். இவ் வாறு முதுகந்தண்டையும், மைய நரம்புகளையும் நீக்கிவிட்டால் ஒரு நாடு ஸோவியத் ஸர்வாதிகாரத்தை ஏற்றுக்கொள்ள தயா ராக எப்படி வேண்டுமானாலும் உருவாக்கத்தக்க எலும்பற்ற மொத்தையாகிவிடும். ஏனெனில், ஸோவியத்தின் இப் புதுக்குடி கள் பொதுஜன பிரதிநிதி ஸபையோ, அபிப்பிராயமோ இல்லா மல், புதிய சட்டங்களின்கீழ், போக்குவரவு, பேச்சு, படிப்பு, தொழில் யாவிலும், முன்பிருந்த போலிஷ்—லிதுவேனிய அரை குறைச் சர்வாதிகாரங்களிலும் காணாத அளவில் மிக மிகக் குறுகிய கட்டுப்பாடுகளிடையே வாழவேண்டும். எனவே, வாழ்க் கைத் தரத்தில் வித்தியாசங்கள் அதிகமாக ஆக, ரஷ்யா அப்புது நாட்டைச் சரியானபடி ஜீரணிக்க வேண்டுமென்றால், அந் நாட்டின் மென்மைத் தன்மையும் அதிகமானால் தானே முடியும்?

## 4

கிழக்கு ஐரோப்பிய நாடுகளைப் பொறுத்த ஸோவியத் கொள்கைக்கும், நாஜிக் கொள்கைக்கும் ஒற்றுமையுமுண்டு, வேற்றுமையுமுண்டு. வெற்றிகொண்ட நாட்டைச் செயலற்று, தலைமையற்று நிரந்தரமான பயத்தில் வாழச்செய்வதில் இரண் டும் ஒரே மாதிரிதான்.

ஜெர்மனிக்கு தன் நாட்டவரைக் குடியேற்றப் புதிய பிரதே சங்கள் தேவை. எனவே பிடிபட்ட போலந்திலும், உக்ரேனி லும் பெரும்பாலான மக்களைக் கொன்று குவித்தோ, பட்டினி போட்டோ, ஆண்களை அப்புறப்படுத்தியோ அழிக்க முற் பட்டது. மிச்சமுள்ளவர் உயர்ந்த இனத்தவரான ஜெர்மானி யர்களின் அடிமைகளாக இருக்கலாம்.

ரஷ்யாவோ விசாலமானது; ஜனக்குறைவுடையது; தன் நோக்கங்களை நிறைவேற்றப் போதுமான ஆள்பலமற்றது- ஆலைத்தொழில்கள், ரோடமைப்புகள், பொதுச்சாதனக் கட்டி டங்கள், செப்பனிடப்படாத அகண்ட ஸைபீரியா, மத்திய ஆசி யப் பிரதேசங்களில் குடிவளம்—இவைகளுக்காகக் கூலிகளையும், குடிகளையும் தேடியது. வோல்கா, உக்ரேன் ஜெர்மன் வாசிகள், பிரோ-பிட்ஜான் யூதர்கள், காகஸஸ் மலைப்பூர்வகுடிகள், என மூலை முடுக்குகளில் 200 ரகமான மக்களுள்ள ரஷ்யாவில் ஓரிடத் திலிருந்து மற்றோரிடத்திற்கு ஒரு ஜனத்தொகையை முழுமை யாக மாற்றுவது அஸாத்யமோ, அபூர்வமோ அல்ல. யுத்தத்

திற்கு முன் பல பத்துலக்ஷம் உக்ரேனியர்கள் ஸைபீரியாவுக்கு மாற்றப்பட்டனர், யுத்தத்தின்போது ஜெர்மன்—வோல்கா—ராஜ்யம் முழுமையுமே கடத்தப்பட்டது. லிதுவேனியாவின் 30 லக்ஷம் ஜனங்களில் 7 லக்ஷம் பேரையும், கிழக்குப் போலந்தின் 130 லக்ஷம் ஜனங்களில் 13 அல்லது 14 லக்ஷம் பேரையும் கடத்த ரஷ்யா திட்டமிட்டிருந்தது. ஜெர்மன் படைஎடுப்பு இத்திட்டத்தை முழுதாக நிறைவேற்றுவதில் குறுக்கே நின்றது. யுத்தத்திற்குப் பிறகு, கிழக்கு, தென் கிழக்கு ஐரோப்பா முழுமையும் தங்கள் அதிகாரத்திற்குக் கீழ்வந்ததும், தங்கள் குடிகளிடமே மனிதத் தன்மையைக் காட்டாத ஸோவியத் அரசாங்கம், இதுவரையில் இல்லாத அளவில் பெருவாரியான மக்கள் இடம் விட்டு இடம் மாற்றப்படுவதைக் கேள்விப்பட்டால் ஆச்சரியத்திற்கு யாதொரு இடமுமில்லை.

II

**ஸோவியத் விரிவின் கண்ணோட்டம்**

யுத்தத்திற்கு முன் ஐரோப்பா முக்கோணமான வல்லரசுகளால் ஆளப்பட்டது—பிரிட்டன். ஜெர்மனி, ரஷ்யா, இம் மூவரில் ஒவ்வொருவரும் மற்ற இருவரிடையே பிளவை உண்டு பண்ணி, போர்மூண்டால் 'ஊரிரண்டு பட்டால் கூத்தாடிக் கெளிது' எனச் சிரிக்க விரும்பினர்.

விருப்பு வெறுப்பற்று, தற்போது சிறிது காலத்துக்குள்ள பொங்கலும் பொய்களும் தீர்ந்து வரப்போகும் எதிர்காலத்தை நோக்கினல் பிரிட்டன், அமெரிக்கா, ரஷ்யா என்னும் மும் முனைகளையுடைய முக்கோணம் ஒன்று உருவாவதைக் காண்போம். ஏற்கனவே இம் முப்பக்கங்களிலும் முறுக்கேற்பட்டுள்ளது நன்கு விளங்குகிறது; அட்லாண்டிக் கடலின் அக்கரையிலும் இக்கரையிலும் பொருளாதார நெருக்கடிகள், பசிபிக் கடலுக்கப் பாலும், துருவமண்டலத்திலும் அரசியல் நெருக்கடிகள், ஐரோப்பிலும், மத்தியக் கிழக்கு, ஆசியாவிலும் அரசியலும், ஆக்ரமிப்புமான குமுறல்கள்.

இந்த மூன்று வல்லரசுகளில், பிரிட்டன் தற்காப்பையே கவனிக்கும். சர்ச்சில் கூறியதுபோல் 'உள்ளதைவிடாத' உறுதியையே காட்டும். பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்துக்குள் விலகிச் செல்லும் கொள்கை அதிகமாய் குடியேற்ற நாடுகளின் தளையை அநேகமாய்த் தளர்த்திவிடவேண்டி நேரலாம். இந்தத் தளர்ச்சியால் ஏற்பட்ட இடைவெளிகளில் போட்டியிடும் மற்றவர்கள் நிர்ப்பந்தமான நெருக்கடிகளை உண்டாக்கலாம்.

அமெரிக்காவோ பொருளாதார விஸ்தரிப்பிலும், போர்த் தளக் கேந்திரங்கள் பெறுவதிலுமே அக்கறையுள்ளது. இரண்

டாவது அக்கறையால் பிரிட்டன் பாதிக்கப்படாது; ஏனெனில் அமெரிக்கா வேறு வாழ்விடங்களை விரும்பவில்லை, போர்க் கேந்திரங்களையே விரும்புகிறது. ஆனால், பொருளாதாரப் போட்டி ஆங்கிலோ—அமெரிக்க உறவைப் பாதிக்கக்கூடும்; இதனால் மூன்றாமவனது மும்முனைத் தகிடுதத்தத்திற்கு அதிக இடம் ஏற்படலாம்.

இந்த மூன்று வல்லரசுகளிலும் ரஷ்யாவே தேசவிஸ்தரிப்புத் திட்டத்தில் முன்னணியில் நிற்கிறது. சமீபத்திலேயே இந்த ஸ்தானத்திற்கு வந்ததால் இளமையும் மிடுக்கும் கூடியுள்ளது. தேசியமயமான பொருளாதாரம்; மையமான திறல், ஸர்வாதிகார முறை யாவும் சேர்ந்து ரஷ்யாவிற்கு மகத்தான ஒரு செட்டுத் தன்மை (Compactness) யை உண்டாக்குகிறது. அதனுடன் ஒப்பிடும்போது, லேசாகப் பிணைந்து, மையமற்று விரிவான பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யம் ஒரு ராக்ஷஸ பீரங்கிக்கு நேராக உள்ள சிதையும் பழங்கோட்டைக் கொத்தவால்போல் தோன்றுகிறது. இதனால் அந்த பீரங்கி கோட்டையைத் தாக்கும் என்பதல்ல; எனினும் பீரங்கிக்குப் பின்னும் கோட்டையினுள்ளும் உள்ளவர், வெளிக்கு நேசமுடையவராகத் தோன்றினாலும், உள்ளுக்குள் ஒருவர் சக்தியை ஒருவர் அறிவர், இந்தச் சக்திகள் என்றாவது நெருக்கடியாக மாறும் என்பது நிச்சயமே.

குறைப் பாதுகாப்புச் சட்டத்தின்படி இந்த நெருக்கடி தளர்ந்த பகுதிகளில் அதிகமாயிருக்கும்-மத்யக்கிழக்கு நாடுகள், மத்யதரைப்பகுதி தேசங்கள், ஐரோப்பா முதலியவைகளில் மேலெழுந்த வாரியாகக் கூறினால் இவையெல்லாம் வெறு 'நேச உணர்ச்சி நாடுகள்' சேர்ப்பதே எனப்படும். ஆனால், இந்த விளக்கத்தின் தன்மை இரு சக்திகளுக்கும் உள்ள தராதரத்தைப் பொறுத்தது. தராதரம் சரிசமானமாக இருந்தால் இவ் விஸ்தரிப்பு பிரிட்டனுக்கும், போர்ச்சுகலுக்கும் இடையிலுள்ளது போல் வெறும் வியாபாரச் சலுகையாகவும், அரசியல் ஒப்பந்தமாகவும் நின்றுவிடும். தராதரம் சிறிது கோணினால் ஒரு நாட்டை உபநாடாக்கி விமானத் தளங்களாகவும், போர்க் கேந்திரங்களாகவும் மற்றொரு நாடு உபயோகிக்கும். தராசுமுனை இன்னும் சற்றுத் தாழ்ந்தால் சிறு நாடு பெரு நாட்டின் கீழ் மஞ்சுகோவும், ஜப்பானும் போல வெறும் பொம்மை அரசாங்கமாகும். கடைசியில் கிழக்குப் போலந்து, பால்டிக் நாடுகள் இவற்றில் நேர்ந்ததுபோல் படைப்பலத்தால் வென்று பயத்தால் ஆளுவதாகமுடியும்.

ஒரு நாட்டின் விஸ்தரிப்பைப் பற்றிப் பேசும்போது அரசியல் அறிஞர்கள் கூட நிலையான, பழைய நெறிகளிலேயே பேசுகின்றனர். ரஷ்யர்களைப் பற்றி நாஜிகள் "ஆசியக் கும்பல்' என்ற

னர்; ஸ்டாலின்—செங்கிஸ்கான் காஜக் படைகளுடன் போலோனுக்கு வருவதாக நம் மனத்தில் சித்திரம் தீட்டினர்; மிதவாதிகள் ஜெக்கோஸ்லோவேகியாமேல் ரஷ்யர் வெற்றியை நேரடியான படைப்பல வெற்றியாகவே வர்ணித்தனர். இதனாலேயே ஐரோப்பா கண்டத்தில் ரஷ்ய விஸ்தரிப்புப் பொதுவாக ஆச்சர்யத்தை உண்டாக்குகிறது. ஊரை இரண்டாக்கிக் கூத்தாடியாய் நின்று கொள்ளை கொள்ளும் அரசியல் போராட்டத் தத்வம் ஹிட்லரோடு தீர்ந்துவிடவில்லை. இம்முறையின் உண்மை ஸ்வரூபத்தை இன்னும் யாரும் சரியானபடி அறியவில்லை.

ஸோவியத் ஐக்யத்தின் அமைப்பில், எஸ்கிமோ முதல் உக்ரேனியன்வரை, எஸ்டோனியன் முதல் டர்க்மேனியன்வரையான பலதரப்பட்ட மக்கட்பகுதிகளும், ராஜ்யங்களும் உள்ளன. எனவே, பிறமக்களையும், ராஜ்யங்களையும் ஸ்வீகரிப்பது ரஷ்யாவுக்குச் சுலபம். ஜெர்மன் ரீச்சுக்கு ஜெக்கோஸ்லோவேகியா முழுதும் அந்நியமான ஒரு நாடு, அதை வீக்கிக் கொள்ளாமல் விழுங்குவது கஷ்டம்; ரஷ்யாவுக்கோ எந்தச் சுயாட்சிப்பொறுப்புள்ள புதிய நாட்டையும் லேசாக ஸ்வீகரிக்கமுடியும், அதன் அரசியல் கட்டிடத்தில் அது ஒரு புதிய கற்றூணாகும், அவ்வளவே. 1943–அரசியல் சட்டப்படி தன் தனி ராஜ்யங்களுக்கு அதிகமான சுயநிர்ணய உரிமை அளித்ததன் மூலம் ரஷ்யாவின் கபளீகர சக்தி அதிகரித்தது. அதன் கதவுகள் திறந்துள்ளன, புதிதாக எவரும் உள்ளேவரலாம், ஹங்கேரி, ஸ்லோவோகி, ஸேக்ஸோனி யாவரும் ஸோவியத் சுயநிர்ணயத்தில் சேரலாம், இவ்வாறான ஒவ்வொரு கூட்டுறவும் படிப்படியாக, வேறுபடும் காலவரையறைக்குள், முழுவதும் ஸோவியத் மயமாகும்; சேரும் நாடுகளுக்கு இவை தம்மிச்சையான இயல்பாகவும் தோன்றும்.

ஸ்டாலின் இவ்வகையில் 'எவ்வளவு தூரம் செல்வார்?' என்ற கேள்வி அர்த்தமற்றது; பெரிய ஸாம்ராஜ்ய விஸ்தரிப்புகள் சிற்சில விதிகளின்படியே ஏற்படுகின்றன. அரசியல் வெறுமையால் சூழப்பட்ட பெரிய நாடு தடையை உணரும்-வரையில் விரிவடைகிறது. மேலை நாடுகளின் போக்குவரவுச் சாதனங்களும், ஆலைத்தொழில் அபிவிருத்தியும், வாழ்க்கைத்தர உயர்வும் ரஷ்யாவை ஈர்க்கின்றன! மேலும் மேலும் வளரும் பாதுகாப்பு உணர்ச்சியும், அதிகாரவிருப்பமும் முன்னேக்கித் தள்ளுகின்றன; ஸ்லாவியத் தொகுப்பு பழங்கொள்கையும்; போலந்தையும், பால்கனையும், கான்ஸ்டாண்டிநோபிளையும்-சேர்ந்து விழுங்கும் பழைய ஆசையும் சரித்திரபூர்வமான பின்னணிகளகின்றன. மத்யதரைப் பகுதி, பால்டிக், வட அட்லான்டிக் வியாபரக்கடல் மார்க்கங்களை அடையும் ஆசைமீறி. விஸ்தரிப்புக் கொள்கைக்கு வேகங்கொடுக்

கிறது. அரசியல் வெறுமையில் ஆக்ரமிப்பு விருப்பத்திற்கு அளவேகிடையாது.

மறு பக்கம், அதிகாரம் அதிகமாக ஆக, பிறர் உதவியின்றித் தம்மைக் காத்துக்கொள்ள முடியாத சிறுநாடுகள் அதன்பால் அதிகமாக வசிகரிக்கப்படுகின்றன. பெரும் வல்லரசின் மேற்பார்வையில் அவை வளர்கின்றன. படிப்படியாய் உபநாடுகளாகி ஈற்றில் ஒன்ருய்ச் சங்கமமாகின்றன. சென்ற 50 ஆண்டுகளுக்குள், ஐரோப்பாவில் ரெயில்வேக்கள் ஏற்பட்டதுமுதல், 300 சுதந்திர ஜெர்மன் ராஜ்யங்கள் ரீச் அரசாட்சியில் ஒன்ருயின. இதே முறை ஐரோப்பா முழுமையிலும் ஏற்படுவது நிச்சயம்; விமான ஸகாப்தம் ஆரம்பித்த பிறகு சிறிய நாடுகளின் வலைப்பின்னல் சிக்கல்களுக்கு இடமில்லை; சில பத்தாண்டுகளில் இது நிறைவேறிவிடும்; ஜெர்மன் ஐக்யம் அதன் ராஜ்யங்களில் மிகத்தீவிர, பிடிவாத, தன்னிச்சையான ஆட்சிமுறையால் ஸாத்யமானது. கிழக்கு, மத்திய ஐரோப்பாவைப் பொறுத்த வரையில் இன்று ரஷ்யா 19-ஆம் நூற்ருண்டில் ஜெர்மனி வகித்த அதே ஸ்தானத்தை வகிக்கிறது.

## 2

19-ஆம் நூற்ருண்டுப் பாணியில சிந்திக்கும் அரசியலினர் நாம் கூறியவற்றை இருவாதங்களால் மறுக்கின்றனர்; ஒன்று, யுத்தத்திற்குப் பிறகு ரஷ்யாவுக்கு நீண்ட அமைதி தேவை; மற்ருென்று சிதைந்த தன் நிலைமையைச் சரிசெய்ய அதற்கு ஆங்கிலோ-அமெரிக்கப் பொருளாதார உதவி அவசியம் என்பவையே.

ரஷ்யாவுக்கு அமைதி தேவை என்பது வாஸ்தவமே-பிரிட்டனுக்குந்தான் அது தேவை, ஆனுல். ரஷ்யாவின் விஸ்தரிப்புத்திட்டம், பெனேஸ்-மாலடோவ் ஒப்பந்தம் போன்ற பரஸ்பர நேசம், உதவி என்ற வகையில உருவாகிறதே தவிர, போருக்கு ஆயத்தமாக உருக்கொள்ள வில்லை. இதேமுறையில் நேசநாடுகளை மதில் பூனைகளாக்க மூக்கணுங்கயிற்றை இழுத்து இறுக்குவதையும் சண்டைக்காஸ்பத மில்லாத சமாதான வகையில் செய்வது ஸாத்யமே. ரூமேனியன் அரசியலில் எதிரிகளை ஒடுக்கி மாறுதல் ஏற்படுவதற்காக ரஷ்யாமேல் பிரிட்டன் போர்தொடுக்குமென்று யாராவது எதிர்பார்க்க முடியுமா? அல்லது. போலந்து தன் கட்சிகளை யெல்லாம் ஒன்று சேர்த்து ரஷ்யாவுடன் சுங்கச்சாவடிப் பொதுமையைப்பற்றி உடன்படிக்கை செய்து கொண்டால் அதற்காக யாராவது ரஷ்யாவுடன் போர் துவக்க எண்ணுவார்களா? வெளிநாட்டிலாக்காக்கள் இவற்றின் உண்மையும், விளைவுகளையும் அறியலாம்; அப்போதும் நியூ ஸ்டேட்ஸ்மன் அண்ட் நேஷன் முதலிய பத்திரிகைகள் இவற்றிற்குத் தகுந்த சமா

தானங்கள் கூறும். பைத்யக்காரரைத் தவிர வேறு எவரும் இவ் வற்ப காரணங்களுக்காக உலக யுத்தம் ஏற்படும் என்று நினைக்க முடியாது.

பொருளாதார உதவியும் இப்படித்தான், ஜப்பான் சீனுவைத் தாக்கியதென்று ஆங்கிலோ-அமெரிக்க இணைப்பு ஜப்பானுக்கு எண்ணெய் அனுப்புவதை நிறுத்திவிட்டதா? வார்ஸேல்ஸ் ஒப் பந்தம் ஜெர்மனியின் போர்த்தளவாட விஸ்தரிப்புக்கு ஆங்கிலோ அமெரிக்க உதவியை மறுத்ததா? இதேபோல் நூற்றுக்கு 94·5 ஹங்கேரியர் ரஷ்யாவுடன் சேரவிரும்புவதாகப் பொது வாக்களிப் பில் தீர்மானித்தது உண்மையோ, பொய்யான வஞ்சனையோ, அதற்காக அமெரிக்க யந்திரக் கருவி உற்பத்தியினர் அவற்றை ரஷ்யாவுக்கு ஒப்பந்தபடி உதவ மறுக்கமாட்டார்கள்; தளவாட உற்பத்தியின்மேல் ஏதோ ஒரு வகையான பொதுமக்கள் கண்கா ணிப்பு ஏற்பட்டாலும், அமைதியை உத்தேசித்து ஏற்றுமதிகள் இருந்தபடியேதான் இருக்கும். தவிர ரஷ்யாவுக்கு வேண்டியது போர்க்கருவிகளல்ல. உலக வியாபாரத்துக்கு ரஷ்யா ஒரு பெரிய முக்கியமான ஸ்தலம்-வியாபாரம் தன்னுடைய சொந்த விதிகளையே பின்பற்றும்; நுணுக்கமான அரசியல் ஒழுங்குகளைப் பற்றி அதற்குக் கவலையில்லை. 1932-வரையில் ஜெர்மன் கைத் தொழில்களுக்கு அமெரிக்க உதவி நின்றுபோகலாம் என்ற காரணத்திற்காக ஹிட்லர் யூதர்களுக்கு எதிரான பயமுறுத்தல் களை நிறைவேற்றமாட்டார் எனக் கூறிவந்தனர்; நடந்ததென்ன வென்பது யாவருக்கும் தெரியும். ஸோவியத் பொருளாதார முறை நம்பிக்கை இருவகையானது; (1) ஆங்கிலோ-அமெரிக்க வியாபாரப் போட்டியை அழித்துக் கட்டுப்பாடான ஐக்கியத்தை ஏற்படுத்துவது; (2) இரு நாடுகளிலுமுள்ள ஒரேவியாபாரக் கம் பெனிகளை தன் வெளிநாட்டிலாகாவின் கட்டற்ற அதிகாரத் துக்கு உட்படுத்துவது; (ஏற்றுமதி அநுமதிச் சீட்டுகளை அடக்கி ஆள்வது மட்டும் போதாது. பிரிட்டனிலும், அமெரிக்காவிலும் தனிமனித வியாபாரத்தை ஒழிப்பதாலேயே ஸாத்யமாகும்.)

நாம் ஐரோப்பிய எதிர்காலத்தை வருடங்களில் கணிக்க வில்லை; பத்துப் பத்தாண்டுகளாகக் கணிக்கிறோம் என்பதை வலி யுறுத்த விரும்புகிறோம். ஸோவியத் அதிகார விஸ்தரிப்பு மெது வாகத்தான் நடக்கும். ஆக்ரமிப்பு நாடுகளின்மேல் தன் பிடிப்பை அதிகமாக்குவதிலும், அந்நாடுகளை விரிப்பதிலுமாகச் சாவதான மாகத்தா னியங்கும். இடைக்கால இயல்களெல்லாம் உள்நாட்டு வளர்ச்சி எனப் பசப்பப்படும்; சிறு நாடுகளின் தயக்கம் அதிகரிக் கப்படும்; செயல்களின் வேகமும், வரன்முறையும் அந்தந்த நாட் டின் நாடித் துடிப்புக்கேற்பக் கையாளப்படும், பல வருஷ காலப் பரப்பில், நீண்ட அமைதிக்கப்பால் நெருக்கமான தாக்கு

தலும், நோயாளி தேறிவருங்கால் திடீர் ராஜதந்திர வீக்குதலு மாக விஸ்தரிப்புகள் நிகழும். நல்லெண்ணமும், வெற்றியும் உத வியும் உறுத்தலும் ஒரே சமயத்தில் மாறி மாறிவரும். இவை கோரமான தீர்க்க தரிசனங்களாகத்தோன்றலாம்.எனினும் நீண்ட பழைய அதிகார அரசியல் அநுபவங்களை வருங்காலத்திற்குப் பொருத்திப் பார்ப்பதால் ஏற்பட்ட தீர்க்க தரிசனங்களே.

3

பல நூற்றுண்டுகள் மத்திய–கிழக்கு ஐரோப்பா ஜெர்மன் அதிகாரத்தின்கீழ் இருந்தது. ஆஸ்ட்ரிய ஸாம்ராஜ்யம் சிதறிய தும் சமனத்தன்மை மாறி ஒரு அரசியல் வெறுமை ஏற்பட்டது. வார்ஸேல்ஸ் ஒப்பந்தம் ஐரோப்பிய அதிகார கேந்திரங்களுள் முக் கியமான ஒன்றைப் பல சிறு நாடுகளாகப் பிரித்தது: ஒவ்வொரு நாடும் தனித்தனி இயங்கியது; ஒன்றுக்காவது பொருளாதார, அரசியல் சுதந்திரங்களில்லை. பால்கனும், டான்யூப் பிரதேசமும் சூரியனற்ற கிரகங்களைப்போல் உப நாடுகளாய் உழன்றன,

மூன்று வல்லரசுகள் இவைகளைத் தங்கள் இஷ்டப்படி ஆட்டமுயன்றன. ரஷ்யா கம்யூனிஸ்டு அகிலம் மூலமும், ஃபிரா ன்ஸ் லிட்டில் என்டென்ட் மூலமும், ஜெர்மனி வியாபார பேரத் தாலும், ஐந்தாம் படையாலும் இதைச் சாதிக்க முயன்றன. ஜெர்மனி வெற்றி பெற்றது-இவ்வெற்றி பின்னர் ராணுவபலத் தால் அழிக்கப்பெற்றது; எனவே,1918-இல் மறுபடியும் பழைய சிதறிய நிலைமையே இன்னும் அதிகமாக ஏற்பட்டது, ஆல்ப் அரசியல், பொருளாதார, உயர் நோக்கக் குழப்பத்தால் திகைத் தது, ஆனல், இப்போதோ, ரஷ்யா, ஐரோப்பா முழுமையினும் போட்டியில்லாத தனி வல்லரசாய் நிற்கிறது. போட்டியிடக் கூடிய ஒரே ஒரு நாடான ஃபிரான்ஸைக் காட்டிலும் ரஷ்யா மகத் தான வலிமை பெற்று நிற்கிறது. ஐந்தாவது சார்லஸ் மன்னருக் கப்புறம் இன்றுபோல் என்றும் ஐரோப்பிய அதிகாரத்தராசு ஒரே நாட்டின்பால் சாய்ந்ததில்லை.

இதன் முக்கிய காரணம் ஐரோப்பாவின் கீழ்ப் பகுதியில் ஜெர் மனியின் ஆதிக்கம் அடியோடு அழிந்ததே. சென்ற யுத்தத்தில் தோற்றும் ஜெர்மனி உயிர்த்தெழ வில்லையா? எனலாம். ஆனல் அன்று நிலைவேறு, இன்று நிலைவேறு. சென்ற யுத்தத்திற்குப் பிறகு கிழக்கில் போலந்தும், ரஷ்யாவும் போர் செய்தன, மேற்கில் குறைவான ஜனத்தொகையும், வலிவற்ற கைத்தொழில்களும் உடைய ஃபிரான்ஸால் ஜெர்மனிக்கு எதிராய் ஒன்றும் செய்ய முடியாத நிலைமை, ஆனல், இன்றோ கிழக்கில் வெற்றிவெறி கொண்ட ராட்சத ரஷ்யா; ஜெர்மனியின் கைத்தொழில்கள் சிதறி யுள்ளன; அதன் விரிவு பல நாடுகளின் ஆதிக்கமாகப் பிளக்கப்

பட்டுள்ளது, கோனிக்ஸ்பெர்க்குக்கு அப்பாலுள்ள கிழக்கு ஜெர்மனி ரஷ்யாவின் பங்காகும். மேற்கு ப்ரஷ்யா, போமரேனியா, ஸிலேஷியா, ஸ்டெட்டின் ப்ளஸேலு முதலியவை ரஷ்யாவின் கைப்பொம்மையான போலந்துக்குப் போகும். எனவே ரஷ்ய ஆதிக்கம் பெர்லினுக்கு 50 மைல் கிழக்கு வரையில் போகும். ஆனால், தற்காலிகமாக மேற்கிலும் பெர்லினுக்கும் ரைனுக்கும் இடையே மையம் வரையில் அதன் ஆதிக்கம் செல்லும்.

இந்த ஆதிக்கம் எத்துணைக்காலம் இருக்குமோ, தெரியாது: ஆனால், இவ்வாதிக்கம் தீரும்பொழுது இப்பகுதியினர் முழுதும் மாறியிருப்பர் என்பதில் சந்தேகமில்லை. இந்தத் தற்காலிகப் பிளவுகள் நிரந்தரப் பிளவுகளாக நிலைத்துவிடலாம். உதாரணமாய்ப் புரட்சிகரமான செஞ்சேக்ஸனி கம்யூனிஸ அரசியலை ஏற்று ரஷ்யாவுடன் ஒன்ருகலாம். கத்தோலிக்ரைன்லாந்து தன் நாகரிகத் தாராள மனப்பான்மையோடு ஃபிரஞ்சு ராஜ்யங்களில் ஒன்ருகலாம். இன்னும் ஐந்து வருஷத்தில் என்ன நேருமென்று கூறுவது கஷ்டசாத்யமே. தென்பகுதியில் இம்முறை ஓரளவு வேகமாகவும். தெளிவாகவும் விளங்குகிறது.

இந்நிலைமையைச் சமனம் செய்யக் கிழக்கு ஐரோப்பிய சமஷ்டியை ஏற்படுத்த பிரிட்டன் செய்த முயற்சி, பென் மாஸ்கோ சென்று ஸோவியத்-ஜெக் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட போதே அழிந்தது. இதை எழுதும் 1944, ஸெப்டம்பரில், ஸோவியத் பால்கன் வெற்றி உச்சி நிலையிலுள்ளது; அரசியல் பணிவகைக் குருடர்களுக்குக் கூட போலந்தைப்பற்றிய ரஷ்யாவின் திட்டம் தெளிவாய்த் தெரிகிறது. ஸ்டாலின் எவ்வளவு தூரம் போவார் என்பது கேள்வியல்ல. இன்றுள்ள நிதர்சனமான உண்மைகளே முக்கியம். அவை பின்வருவன; ரஷ்யாவின் மேற்கத்திய ஆக்ரமிப்பு ஏற்கனவே விஸ்டுலாவிலிருந்து எல்பாவுக்கும், கருங்கடலிலிருந்து ஏட்ரியாடிக்-மத்யதரைக் கடல் பகுதிக்கும், வார்ஸாவிலிருந்து மேலே ப்ரேகுக்குமாகப் பரவி விட்டது.

III

**தீவிரவாதிகள் மாற்றம்**

ரஷ்ய விஸ்தரிப்பு எவ்வளவு தூரம் போகும்? ஜெர்மன் பிளப்பாலும், ஃபிரான்ஸின் வீழ்ச்சியாலும் தடுமாறிய அதிகாரத் தராசு சரியாகும் வரைப் போகும் என்பதே இக்கேள்விக்கு இப்போதுள்ள சாத்தியமான விடை.

ஆனால், ரஷ்யாவின் கட்டுப்பாடான வீர்யத்தின்முன் தராசு முனையைச் சரிசெய்யும் சக்திகள் குழம்பிக் குளறுபடியாயுள்ளன. இவற்றை சௌகரியத்திற்காகப் பழமை விரும்பும்

முன்னேற்றச் சக்திகளெனலாம். பழமை விரும்பும் சக்தியின் வலிவற்ற தன்மை வெளிப்படையானது. அது 20-ஆம் நூற்ருண்டுக்கப்பாலும் 19-ஆம் நூற்ருண்டுப் பதவியை நிலைநாட்ட விரும்புகிறது; வீர்யத்தை வெறுமையால் எதிர்க்கிறது. 8-கோடி ஜெர்மனியர்களின் விதியை நிர்ணயிப்பதில் மேற்கு ஐரோப்பிய அரசியல் நிபுணருக்குள்ள குழப்பம் வருந்தத்தக்க வக்கிரமே. ஜெர்மனியர்களுக்கு புனர்போதனை அளிப்பதை அவர்கள் எள்ளி நகையாடுகிருர்கள்: ஏனெனில் ஜெர்மனியருக்குப் போதிக்கத்தக்க யாதொரு தத்துவமும் கிடையாதாம்; 16-வயது ஜெர்மன் இளைஞர்களின் தற்கொலைப் பிடிவாதத்தைப் பற்றிக் குறை கூறுகின்றனர்; ஆனுல், அதை மாற்ற யாதும் செய்வதில்லை; முற்றுகையிடப்பட்ட அரணைவிட்டு விடச் சொல்லுகிருர்கள். அப்படி விட்டால் என்ன ஆகும் எனக் கூறுவதில்லை. ஐரோப்பாவின் வருங்காலத்தைப் பற்றியோ, அல்லது உலகத்தின் எதிர்காலத்தைப் பற்றியோ அவர்களுக்கு யாதொரு விதமான கொள்கையும் கிடையாது; கொடியுமில்லை, திட்டமும் இல்லை. அட்லாண்டிக் சாஸனம் 'இங்கி' உலருமுன்பே மறைந்து விட்டது.

எனினும் உலக வரலாற்றில், பழங்கொள்கைகளின் மறுமலர்ச்சிக்கு இன்றுள்ள தருணத்தைபோல் அதிகம் ஏற்பட்டதில்லை. ஸர்வாதிகாரப் பயமுறுத்தலில்-ஹிட்லருடன் ஸர்வாதிகாரம் எவ்வாற்ருனும் தீர்ந்துவிடவில்லை—மேற்கு நாடுகளின் அழிந்து வந்த பழங்கொள்கைகள் புத்துருப்பெற்று பரவசமான புதுமைகளாய்த் தோன்றுகின்றன. 50-ஆண்டுகளுக்குமுன், நாம் உயர்வாகக் கருதிய மனித உரிமைகள், ஒழுக்கமுறைகள் யாவும் உலகத்தின் பெரும் பகுதியில் அழிக்கப்பட்டு விட்டன; மற்றப் பகுதிகளிலும் அழிக்கப்படுகின்றன. உடலுரிமை, பேச்சுரிமை; நீதி உரிமை, வாழ்வுரிமை, எழுத்தாலன்றிப் பழக்க வழக்கத்தால்வந்த மனிதப்பண்பாடுகள்-யாவும் (பொதுவுடமை) கனவுலகம் கண்ணுக்குத் தெரிவதுபோலத் தோற்றியதும் எவ்வளவு பயனற்றவையாகக் காட்சி அளித்தன? இன்ருே (ஸர்வாதிகார) சுவரில் முட்டிக் கொள்ளும் நிலைமையில் இவைகள் எவ்வளவு உயர்வாய்த் தெரிகின்றன. காற்றின்றித் திணறியவர்களுக்கே பிராணவாயுவின் பெருமை விளங்கும்; அதுபோல் நாஜி ஜெர்மனியிலோ, அல்லது, ஸ்டாலின் ரஷ்யாவிலோ ஒரு வருடமாவது இருந்தவர்களுக்குத்தான் இந்த அடிப்படைச் சுதந்திரங்களில்லையேல் மனிதன் உளுத்துடைவது தெரியும். ஆனுல், நம்முள் எத்தனைபேர் இரண்டையும் ஒப்பிட்டுப் பார்ப்பவர்கள்? ஒரு ஆங்கிலத் துறைமுகத் தொழிலாளி ஒரே குற்றத்திற்காகச் சம்பளக் குறைப்புக்கும், சாவுத்தண்டனைக்கும்

உள்ள வித்யாசத்தைச் சிந்திக்க முடியாது. ஒரு ஆங்கிலப் பத்திரிகைக்காரனுக்கு கட்டுப்பட்ட எழுத்துரிமைக்கும், தானே ஒரு யந்திரத் தந்தி ஈயடிச்சான் காப்பி ஆவதற்கும் உள்ள வேறுபாடு புரியாது. அரசியல் சுருட்டுப் புகைப்பது, போட்டோக்கள் எடுப்பது என்றுள்ள ஆங்கில கனவானுக்கு ஒரு அடாவடித் தலைவன் கீழ் அடிமையாயிருக்கும் அவதி தெரியாது. முணுமுணுத்தாலும் சட்டத்தின் பாதுகாப்பில் வாழும் ஆங்கிலப் பாமரன் எந்த நிமிஷமும் ஆபத்தை எதிர்பார்க்கும் யதேச்சாதிகாரப் போலீஸாட்சி எப்படி இருக்கும் என்பதை எண்ணவே முடியாது. தங்கள் குறைகளைத் தவிர வேறொன்றும் அவர்களுக்கு விளங்காது. குடியாட்சிச் சூழ்நிலை பழகி அலுத்த பனிப் படலமாகி விட்டது; அதை ஸ்வாஸிப்போர் அதிலுள்ள உயிர்வாழ்வுக்காக வந்தனம் செலுத்துவதில்லை. மேற்கு ஐரோப்பியர் தாங்கள் இழக்க இருக்கும் பழைய மதிப்பீடுகளின் மேன்மையை உணரவில்லை

இவைகளை மறுபடியும் தழைக்கவைப்பது எப்படி? ஐரோப்பிய வெறுமையை அர்த்தம் நிரப்பியதாக்குவது எப்படி? பிரிட்டன், ஃபிரான்ஸ் முதலிய மேற்கு நாடுகள் அரசியல் முறையில் இணைவது மட்டும் போதாது. பழைய ரோமாபுரி ஆட்சியால் பண்படுத்தப்பட்ட இந்நாடுகளிற் சிறந்த பொதுவான நோக்கங்களிருப்பது வாஸ்தவமே; இரண்டாயிர வருஷ யூத-கிறிஸ்தவ நீதிகளாலும், ஒரு நூற்றாண்டின் தாராள மனப்பான்மைத் தத்துவத்தாலும் இந்நாடுகளில் தேங்கியுள்ள சீர்மைகளை மேலெழுந்தவாரியான அரசியற் புயல்கள் அழித்துவிட முடியாது என்பதும் உண்மையே. எனினும், இச்சீர்மைகள் எல்லாம் நிரந்தரமானவை எனினும், குப்பை கூளங்களுக்கடியே புதைந்துள்ளன, இக்குப்பை கூளங்களை விலக்கினாலன்றி இவைகள் பயன்படாது. வேறுவார்த்தையில் பழங்கொள்கைகளைப் புது முன்னேற்றத்தாலேயே பாதுகாக்க முடியும்.

2

இதற்குத் தகுதிபெற தீவிர் வாதம் தன்மயக்கங்களை மறந்து பழைய உயர் நோக்கங்களை மறுபடியும் பெறவேண்டும்.

இதன் வழி இருவகைப்படும். இதன் எதிர்மறை முறையைப் பாலுணா மாற்றம் எனலாம். தீவிரவாதம் ஒரு சிறு குழந்தை, முதலில் தேசிய மங்கையின் மார்பகத்தின் பாலுண்டது; பின்னர் ரஷ்யாவின் புட்டிப்பால் உண்டது. பிரிட்டிஷ் தொழிற் கட்சி முதற் பருவத்திலிருந்து இன்னும் மாறவில்லை; அவர்களது பொக்கைவாய்ப் போக்கே இதற்கு அத்தாட்சி. கம்யூனிஸ்ட் கட்சியோர் ரஷ்ய புட்டிப்பாலுண்டு பழகியது.

அப்பாவின் அஜீர்ணத் தன்மை அதன் ஆடையின் கவிச்சாலேயே நன்கு தெரிகிறது. இந்த உருவகம் சகிக்க முடியாததாகத் தோன்றலாம்; எனினும் கம்யூனிஸ்ட் ஸாஸனம் வெளியான நாளிலிருந்து நூறு ஆண்டுகளுக்கப்பால் இன்றுள்ள நிலையைக் காணும்போது இவ்வுபமானம் சரி என்பதை, யார் தான் மறுக்க முடியும்?

முதற் பாலுண மாற்றம் படுதோல்வி அடைந்தது; காரணம் மனோ உணர்ச்சி இயலுக்கு இது விரோதமாயிருந்ததே. கம்யூனிஸ்ட் ஸாஸனத்திலுள்ள பிரபலமான 'தொழிலாளருக்கு தாய் (தந்தை) நாடென்று ஒன்றுமில்லை' என்னும் வாக்கியம் மனிதத் தன்மையற்றது. பொய்யானது; தோட்டத் தொழிலாளி, சுரங்கப் பாட்டாளி, தெருக் கூட்டுவோன் முதலிய ஏழைகளும் பணக்காரரைப் போலவே தம் ஊர், தெரு, பாஷை, பழக்க வழக்கங்கள், இவைகளுடு உணர்ச்சி வகையில் இணைக்கப்பட்டுள்ளனர். இவ்வுணர்ச்சியை எதிர்ப்பது மனித இயல்பையே எதிர்ப்பதாகும், ஸோஷலிஸ தத்துவம் இதையே செய்தது. பாலுணவு மாற்றம் மனிதத் தேவையை மறுப்பதல்ல. மாற்றி அமைப்பது, கட்டுப்பட்ட தேசியத்திலிருந்து கட்டற்ற உலகப் பொதுமையை உற்பத்தி செய்ய மனித உள்ளம் நிறையவேண்டும், குறையக்கூடாது. உலகஞ் சுற்றி ஊருக்குத் திரும்பியவனும் தன் ஊரை நேசிக்கிறான்; ஆனால், ஊரை விட்டே வெளியேறாதவன் நேசத்திற்கும் இவன் நேசத்திற்கும் வித்யாஸமுண்டு. ஸோஷலிஸக் கல்வியின் முக்கிய நோக்கம் மக்களின் தேசிய உணர்ச்சியில் இத்தகைய மாறுதலைச் செய்வதே; லகப் பொது ஏழை எளியவர்களின் கூட்டுறவு உயிருள்ள உண்மை உணர்ச்சியாய்த் திகழ வேண்டும். இது இன்று வெறும் கனவு போல் தோன்றுகிறது; இத்தகைய ஆன்மிக மலர்ச்சியற்ற ஸமுதாய இயக்கங்கள், அதிகார இயக்கங்கள்போல் திகைத்து நின்று விடும்.

தீவிர வாதிகளின் இரண்டாவது பாலுணவு மாற்றமும் கஷ்ட சாத்தியமானதே. ஸோவியத் மாயை எப்படி மக்களின் நெஞ்சாழத்திலுள்ள நிரந்தர ஆசைகளைத் தூண்டியதென்பதை நாம் முன்பே பார்த்தோம். தன் சொந்த நாட்டுணர்ச்சியை விட்டு விலகிய புரட்சியினர் அதே உணர்ச்சிக்கு மறுபடியும் அடிமையானது யதேச்சையாய் நேர்ந்ததல்ல. இழந்த ஸ்வர்க்கத்தை திருப்பப் பெற ரஷ்யா ஒரு தெய்விகத் தாய் நாடாகியது.

இவ்வகையில் ஜெர்மனியின் ஆக்ரமிப்புக்குள் அடங்கி இருந்த தேசங்களின் புரட்சியாளர் நிலையையே மிகமிகப் பரிதாபமானது. தங்கள் அதிகார வர்க்கத்தின் தோல்விகளையும், வஞ்சங்களையும் அறிந்த அவர்கள், தம் நாட்டு எதிரிகளை வெறுத்

ததுடன் அதே சமயத்தில் தம் நாட்டின் பழமையையும் வெறுத்தனர். பழமையை ஒதுக்கிப் புதுமை இன்னதென்று அறியாத புரட்சி மனப்பான்மை கொண்டனர். இதைத்தான் ஜுன்கர் 'முதலாளித்வ வெறுப்பு மசக்கை' என்றார். இம்மனோ நிலைமை தெளிவற்றது, ஆனால் சீறுவது; முழுப் புதுமை, முழுமாற்றம், முழுமலர்ச்சி இவற்றை விரும்புவது; இதிலிருந்து உண்மைப் புரட்சிகள் தோன்றியுள்ளன, பொய்யான புரட்சிகளும் தோன்றியுள்ளன; இவை வரலாற்று ராசி நிலையால் விளைபவை. உலக வரலாற்றில் உண்மைப் புரட்சிக்குச் சில உதாரணங்கள் உண்டு, மறுபடியும் மறுபடியும் புரட்சிகள் பழைய அதிகாரங்களை அழித்தன; புதிய அதிகாரக் கொடுமைகளை நிலைநிறுத்தின. ஜெர்மன் மத்யதர வகுப்பினரின் முதலாளித்வ வெறுப்பே ஹிட்லரை அதிகாரத்தில் அமர்த்தியது; இதே வகையில் கிழக்கு ஐரோப்பாவின் புரட்சிச் சக்திகளே ரஷ்ய விஸ்தரிப்புக்குக் கருவிகளாகலாம். மேற்கு நாட்டு ஸோவியத் அநுதாபிகளைக் காட்டிலும், உலகம் அறியா ஏமாற்ற இருட் குகைகளில் வாழ்ந்த கிழக்கு நாட்டினர் ரஷ்யாவை ஒளிமிகுந்த உண்மை உலகமாகக் கண்டனர். ரஷ்யாவே அவர்களது நம்பகம், ஜெர்மானியர் குறை கூறக் கூற அவர்களது ரஷ்ய பக்தி அதிகரித்தது. உண்மையான ஸமுதாய இயக்கம் இல்லாமையால், புரட்சியாளர் ஒரு உணர்ச்சிக் கூட்டுள் அடைபட்டனர்; இக் கனவிலிருந்து மனித வேட்டை, நாடு கடத்தல், சமனஞ் செய்தல் என்ற பயங்கர உண்மைகளைக் கண் விழித்துக் காணும்போது சிறைக் கதவுகள் அடைக்கப்பட்டு விடும்.

மேற்கு நாட்டுத் தொழிலாளிகளுக்கு இந்தக் கதி ஏற்படாதென்று நாம் நம்புவோம். இன்னும் சில வருஷங்களில் ஸோவியத் உண்மை தெளிவாகி விடும். உலக அரங்கத்தில் ரஷ்யா முன் வரவர தன் உள் நாட்டு விவகாரங்களை மறைப்பது பின்னும் பின்னும் கஷ்டமாகும்; 1939–41-இல், போலந்தையும், பால்டிக் நாடுகளையும் பிரித்துவைத்து ஒதுக்கியதுபோல் இன்றும் அது முயற்சி செய்யலாம். உண்மை வடிக்கட்டப் பட்டு வரும்—ஆனல், கொஞ்சம் கொஞ்சமாய்த்தான். 1933-39–இல் ரஷ்யாவைக் காட்டிலும் சமீபத்திலிருந்த ஜெர்மனி, வெளிநாட்டு நிருபர்களுக்குச் சுதந்தரமாக வந்துபோக அநுமதி அளிக்க ஜெர்மனி வெற்றிகரமாகத் தன் உள்நாட்டு விவகாரங்களைப் பிரிட்டனும், ஃபிரான்ஸும் அறியாதபடி மறைக்கவில்லையா? அன்று நம் செவிட்டுக் காதுகளில் உண்மையைக் கூறி அறை கூவியவரை நாம் யுத்தப் பித்தர்கள், கொடுமை விரும்பும் குறும்பர்கள் என்றெல்லாம் குறைகூற வில்லையா? இ னும் ரஷ்யாவைப் பற்றி இப்படிப் பேசுவது நன்றியற்ற தனமாகக் கருதப்

படினும் அவசியமானதே. 1933–39 தீர்க்கதரிசிகளின் வார்த்தைகளுக்குச்செவிசாய்த்திருந்தால்சென்றயுத்தத்தையே நிறுத்தியிருக்கலாம். இன்றைய தீர்க்க தரிசிகளின் நிலைமையும் இதுவேதான்; எனினும், இன்று, மூனிச் மக்கள் தீவிரவாதிகளாய் விட்டனர்.

1939-இல் ஜெர்மன்–ஜெக் தகராறு பற்றிக் கன்ஸர்வேடிவ் கட்சியினர் மழுப்பியது போலவே ரஷ்ய—போலந்து விவகாரத்தைப்பற்றி இன்றுள்ள தீவிரவாக, மிதவாதக் கட்சிப் பத்திரிகைகள் மழுப்புகின்றன. பழையபடியே பயத்தாலும், பலாத்காரத்தாலும் நாடு பிடிப்பதைச்சமனப்படுத்தப்பயனற்ற வாதங்கள் கூறப்படுகின்றன; முன்னர் ஸுடேடன்—ஜெர்மன், இன்று உக்ரேனியன்—போலோ ரஷ்யன் போன்ற சிறுபான்மை நாடுகளைப் பற்றிய வழவழ விவாதங்கள் கொலைக் கொடுமை ஆக்ரமிப்புக் கடுமையை மறைக்க வழங்கப்படுகின்றன. கூச்சலிடாமல் சாக மறுக்கும் நாடுகளிடம் சகிப்பற்ற தன்மையும், தன்னைக் கொல்ல வருவோனை எதிர்க்க அஞ்சும் பேடிமையும், பழையபடியே இருந்தன. பழைய தயக்கங்களும், தடுமாற்றங்களும் சிறிய நாடுகளும், பெரிய கொள்கைகளும் தியாகம் பண்ணப்பட வேண்டிய நிலைமையும் உறவாடின.

மூனிச் எழுச்சியின்போது தீவிரவாதிகளைச் சாந்தப்படுத்துவது சண்டைக்கு ஆயத்தமாவதே என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினர்; அப்பால் தங்கள் கூற்றை அடியோடு மறந்தனர். ரஷ்யாவிலும் சரி, ஜெர்மனியிலும் சரி சாந்தப்படுத்தும் கொள்கை தனித்து விடப்பட்டால் ஒரு தேசம் தேங்கித் தியங்கும் என்ற தவறான எண்ணத்தின் மேலேயே கையாளப்பட்டது. உடன்பாடு வெறுமையை உற்பத்தி செய்கிறது; இவ்வெறுமை விஸ்தரிப்பை விரும்புகிறது; இவ்விஸ்தரிப்பாசையில் வலிவுள்ள தேசம் எவ்வளவு தூரம் போகலாமென்பதை அறியாமல் சண்டையில் ஈடுபட்டு விடுகிறது. சென்ற இரு உலக யுத்தங்களும் இத்தகைய தவறுகளால் விளைந்தவையே. உடன்பாட்டு முறை ஸர்வதேச அரங்கத்தில் சதுரங்கமாடுவதற்குப் பதில் சீட்டாடுகிறது. சதுரங்கத்தில் ஒவ்வொருவர் நிலையும் நன்கு தெரியும். சீட்டாட்டத்தில் தெரியாது. எனவே உடன்படுபவர்கள் தங்கள் நிலைமைகளைச் சரிவரத் தெரிந்துகொள்ள வேண்டும்; இதனால் சண்டையைத் தடுக்க முடியா விட்டாலும் கண்மூடித்தனமாக ஈடுபட மாட்டோம்! இவ்வளவே அரசியல் அறிவுக்குச் சாத்யமானது. உலக யுத்தம் வருமென்று நிச்சயமாய்த் தெரிந்தால் ஒரு பெரு நாடு ஒரு சிறு நாட்டைத் தாக்காது. வேறு வார்த்தையில் விஸ்தரிப்பு விரும்பும் நாட்டின் அளவற்ற

பேராசையல்ல-உலகச் செயல்களை நிர்ணயிப்பது; அவ்வாசைக்கு விரோதமான சூழ்நிலையே.

மேற்கு நாட்டு நாகரிக மதிப்பீடுகளின் மறுமலர்ச்சியே ஐரோப்பாவில் அதிகாரத் தராசு முனையைச் சரிசெய்ய வல்லது. இது பழங் கொள்கைக் கன்ஸர்வேடிவ்களால் முடியாத காரியம்; இன்றுள்ள மாயத்தினின்றும் விடுபட்ட வலிவுள்ள தேசிய, ஸர்வதேசியத் துறைகளில் இயங்கும் ஸோஷலிஸமே இதைச் சாதிக்கவல்லது. யுத்தத்திற்குப் பிறகு பிரிட்டிஷ் ஆட்சியில் தொழிற் கட்சியின் பங்கு எவ்வாறிருப்பினும், தொழிற் கட்சியினர், ரஷ்யாவுக்கும் தொழிலாளருக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை என்பதையும், பிற அதிகாரவர்க்கங்களைப் போலவே ரஷ்யாவும் தன் சொந்த விஸ்தரிப்பையே விரும்புகிறதென்பதையும் அறிந்துகொள்ள வேண்டும். இல்லையேல் தீவிரவாதிகளுக்கு எப்போதுமே ஆபத்துத்தான்.

ஃ ஃ ஃ

ஸோவியத் மாயை விலக விலக மேற்கு ஐரோப்பிய ஸோஷலிஸ்டுகளிடையே ஒரு புது முன்னேற்றம் தோன்றும். ரஷ்யாவைப் பின்பற்றும் தீவிரவாதிகள் இருவகையாக மாறுவர்; சுதந்திரப் புரட்சியாளராகவும் ஸோவியத் தாசர்களாகவும் இயங்கலாம். முந்தியவர்களே ஸோஷலிஸ மறுமலர்ச்சிக்குத் தக்கவர்கள்; பிந்தியவர்கள் பயங்கரமான ஆபத்தை நோக்கிச் செல்பவர்கள், ஸோஷலிஸக் கொள்கைக்கும் ரஷ்யாவிற்கும் யாதொரு சம்பந்தமுமில்லாமையால் அவர்கள் ஸர்வதேசிய ஸோஷலிஸ்டுகளால் இருப்பதை விட்டு ரஷ்ய அதிகாரத்தின் கைப்பொம்மைகளாவர். இப்போதே சிறுபான்மையோரான கட்சியின் மேலிடத்தவர்கள் இவ்வாறு மாறிவிட்டனர்; பெரும்பான்மையோர் இவர்களைக் குருட்டுத்தனமாகப் பின்பற்றிக் குழியில் விழுவர். உலக வரலாற்றில் மத வரலாற்றிற் போலவே இவர்கள் தேங்கித் தியங்கி உளுத்துப் பயனற்ற ஸோஷலிஸ்டுக்ளாக இடம்பெறுவர். இவர்கள் தொடர்ந்து வக்ரமான வியப்பான வகையில் வாழ்க்கை நடத்துவர்; சிறைப்படுவர்; ஸோஷலிஸம் என்ற பெயரால் வைதிகக் கிறிஸ்தவ மதத்திற்கும் ஸ்லாவிய ஜாதிப் பெருமைக்கும், செஞ்சட்டைக் கோடீஸ்வரர்களுக்கும், பயங்கர இவான், மகா பீடர் முதலியோரது கொடுமைப் பரம்பரைக்கும் சந்தோஷமாகத் தம்மைப் பலியிட்டுக் கொள்வர்.

இவர்களைப் பற்றி மீளாத பெரும் நஷ்டம் என்றுதான் என எழுதவேண்டிவரும். இந்த நஷ்டம் மகத்தானது:

ஏனெனில், ஒரு காலத்தில் இவர்கள் ஸோஷலிஸ முன்னணியில் வலிமைக்கும், தைர்யத்திற்கும் உச்சமாக நின்றவர்கள்.

3

கனவுலக அநுபவத்தை இழப்பது போன்று, வருத்தம் தருவது வேறொன்றுமில்லை. ஸோவியத் எத்துணைத் தவறுகள் செய்தாலும் தான் அதற்கு எதிராகப் போவதைப் பெரும் பாவமென்றே ஸோவியத் பக்தன் கருதுகிறான். இன்றுள்ள ரஷ்யா ஸோஷலிஸ நாடல்ல என்பதை ஒப்புக்கொள்ள நேரினும், ஸ்டாலின் இறந்தபிறகு அல்லது 'அதிகாரவர்க்கத்தின் திறல் உடைந்த பிறகு', என்றாவது ரஷ்யா ஸோஷலிஸ நாடாகும் என நம்புகிறான்.

என்றாவது, நெடுநாட்களுக்குப் பிறகு ரஷ்யா ஸோஷலிஸ நாடாகலாம்; அதைப் போன்றே போர்ச்சுகலும், அமெரிக்காவும் கூட ஸோஷலிஸமாகலாம். இப்போது நாம் சொல்லக் கூடியதெல்லாம், தேசியம்யமான பொருளாதாரத்தை வரித்திருந்தாலும், நியூஜீலந்து, பிரிட்டன் இவற்றைப் போலவே ரஷ்யாவிலும் ஸோஷலிஸ நோக்கம் இல்லை என்பதே. 1917-ஆம் ஆண்டுப் புரட்சியின் பரிணமவளைவு ஸோஷலிஸத்தை நோக்கிச் செல்லவில்லை; அதற்கு எதிராகப் போகிறது. அதேசமயம் இங்கிலாந்தின் வளர்ச்சி வளைவு எத்துணை தட்டித் தடுமாறித் தயங்கினாலும் மெதுவாக ஸமூக முன்னேற்றத்தையும், மேற்கீழ் வகுப்புகளின் ஒழிப்பையும், தொழிலாளர் வாழ்க்கைத்தர உயர்வையும் நோக்கிச் செல்லுகிறது.

ஸோஷலிஸ அமைப்புக்கு ஏற்றது எதுவென மார்க்ஸியக் கொள்கைப்படி இங்கிலாந்தையும் ரஷ்யாவையும் ஒப்பிட்டால் முன்னதே முன்னிற்கிறது. மார்க்ஸியத்தின் அடிப்படைகளில் ஒன்று அரசாங்கத்திற்குள் தொழிலாளர்களின் சுதந்திரமே. முதலாளித்வக் குடியாட்சி அதிகார வர்க்கத்தின் கருவியேயாகும்—எனினும் அதற்குள் மக்களுக்கு ஓட்டுரிமை, பேச்சுரிமை, கூட்ட உரிமை முதலியவை உண்டு; எனவே தொழிலாளர்கள் தங்கள் சக்தியை அதிகரித்துக் கொள்ள இடமிருக்கிறது. ஸர்வாதிகாரத்திலோ இது ஸாத்யமல்ல.

ரஷ்யாவின் சட்டபூர்வமான ஒரே ஒரு கட்சி தொழிலாளர் கட்சியல்ல. அதிகார வர்க்கக் கட்சி; தொழிற் சங்கங்களும் அப்படியே என்பதைக் கண்டோம். ரஷ்யா தொழிலாளர் ராஜ்யமல்ல, அதிகார வர்க்க அரசாங்கம். இதுவரையில், உலக சரித்திரத்தில் எந்த அதிகாரவர்க்கமும் தம்மிச்சையாக அதிகாரத்தை விட்டுக் கொடுத்ததில்லை,—அதிலும் ரஷ்ய அதிகாரவர்க்

கம் புதியது; இளமைமிக்கது; திறல்படைத்தது. கட்சியில் ஏதோ சிலர் தாராள மனப்பான்மை யுடையவர்களாயிருக்கலாம்; ஆனால் பொதுவாகக் கட்சி முழுமையுமே அதிகாரத்திற்காக தகிடுதத்தம் செய்வதிலேயே ஈடுபட்டுள்ளது.

இங்கிலாந்தில் கன்ஸர்வேடிவ் கட்சியை ஒழித்தால்தான் ஸோஷலிஸம் சாத்யம்; ரஷ்யாவில் அதிகார வர்க்கத்தை அழித்தால்தான் ஸாத்யம். இன்றுள்ள நிலையில் பிரிட்டிஷ்—தொழிற் கட்சி நீந்தமுடியாத நொண்டி வாத்து; எனினும் ஸோஷலிஸ வளர்ச்சிக்கான சூழ்நிலையும், சுதந்திரமும் பிரிட்டனில் உண்டு, ரஷ்யாவில் இல்லை. தவிர, பிரிட்டிஷ் அரசியல் சரளமாக ஸோஷலிஸத்திற்கு மாறக்கூடிய வகையில் அமைந்துள்ளது; ஸர்வாதிகாரத்தையோ பலாத்காரத்தாலேயே மாற்றமுடியும். பலாத்காரப் புரட்சி பலம் பொருந்திய ஒரு கட்சியினாலேயே பயன் தரும்; அத்தகைய கட்சிக்கு ரஷ்யாவில் இடமில்லை. எனவே 1917-க்கு மாறான எப்புரட்சியும் கொடூரமான குழப்பத்திலேயே தான் முடியும்.

நாம் இதுவரையில் கூறியதன் முடிவு இதுதான்; ரஷ்யாவின் ஸோஷலிஸப் பாசாங்கை உண்மையான ஸோஷலிஸத்தாலேயே ஒழிக்கமுடியும். கிழக்குச் ஸர்வாதிகாரத்திற்கு மாற்று மேற்கு ஐரோப்பிய தாராளத்வ மனுஷத்தன்மையே.

இன்றுள்ள எந்தத் தீவிரக் கட்சியும் இதற்கு லாயக்கில்லை. புது ஸர்வதேசிய இயக்கமொன்று தோன்றுமா என்பது இப்போது வெறுங் கேள்விக்குறியே. அவ்வாறு நேர்ந்தால் நல்லதுதான்; இல்லையேல் நாமும், நமது பரம்பரையும் பாழ் நெறிக்கே போய்க் கொண்டிருக்கிறோம்; மேற்கு ஐரோப்பிய வீழ்ச்சி உலக சரித்திரத்தின் ஒரு உண்மையாகி விடும்.

ஃ ஃ ஃ

ரஷ்யச் சோதனையில் தோல்வியிலிருந்து நாம் தெரிந்து கொள்ளவேண்டியது பொருளாதாரம் முக்கியமே; ஆனால், அதுவே ஸர்வ முக்கியமானதல்ல என்பதே. படை உடுப்புத்தைப் போன் எப்படிச் சமூகச் சின்னமில்லையோ அதேபோல் தேசியமயப்பொருளாதாரமே ஆட்சிமுறைக்கு அவசியமானதல்ல, பொருளாதாரத்தையே முக்கியமாகக் கவனித்ததால் மாறிவரும் மனித உள்ளத்தைத் தீவிர வாதிகள் மறந்து விட்டனர். எனவே மக்களின் ஆன்மா மாய வலையுட் சிக்கியது.

தீவிரவாத உணவு மாற்றமும், பொய்யுணர்ச்சிகளைப் பொட்டென்றுடைப்பதுமே பாதிவேலையாகும். பின்னர் புதிய ஆன்மிக நெறியில் ஒரு புதிய ஸகோதரத்வம் ஏற்படவேண்டும்; இது

ஏழ்மை நிலையிலிருந்து ஏழை எளிய பாமரர்களோடு வாழ்க்கை நடத்தவேண்டும்; தடையற்ற அதிகாரமாக மாறிவிடக்கூடாது. இதெல்லாம் கனவாகத் தோன்றினல் ஸோஷலிஸமே ஒரு கனவுலகந்தான்.

அறிவியக்கம் தனி மனித அமரத்வத்தில் நம்பிக்கையை ஒழித்து விட்டது; இந்த ஒழிப்பின் புண்கள் இன்னும் சொஸ்தமாக வில்லை. ஒவ்வொரு உயிரிலும் ஒரு வெறுமை இருக்கிறது; ஒவ்வொருவர் உள்ளத்திலும் ஒரு தாகம் தோன்றியுள்ளது. இவ் வெறுமையையும் தாகத்தையும் தீர்க்க முடியவில்லை என்ருல் நம் காலத்தில் ஸோஷலிஸம் தோற்றுவிட்டது என்றுதான் அர்த்தம்; ஃபிரஞ்சுப் புரட்சி முதலாக வளர்ந்த இத்தத்துவம் உலக சரித்திரத்தில் ஒரு அத்யாயத்தின் முடிவு; புது அத்யாயத்தின் ஆரம்ப மல்ல என்றுதான் கொள்ளவேண்டும்.

# சந்நியாசியும் சர்வாதிகாரியும்

## விஞ்ஞானம் விசாலமான மனங்கவரும் சொல்லடுக்கு

—சி. சி. ப்ரேட

மாலை 6 மணி. ஒரு கிண்ணி மதுகுடித்தேன். கட்டுரை எழுதுவதைவிட இன்னும் இரு கிண்ணி மது வருந்திவிட்டு வெளியே சென்று விருந்துண்பது மேலென்று நினைத்தேன். கால் மணி நேரம் இந் நினைவுக்கெதிராய்ப் போராடினேன்; மதுவைப் பூட்டிவைத்தேன், கை மேஜைமுன் உட்கார்ந்தேன்; இவ்வாறு என் நினைவை எதிர்த்துவெற்றிபெற்றதில் எனக்கு எவ்வளவோ திருப்தி. ஆனால்,விஞ்ஞான முறைப்படிப் பார்த்தால் இத்திருப்தி பொய்யானது. ஏனெனில் இம்மனப் போராட்டத்தின் முடிவு முன்பே தீர்மானிக்கப்பட்டு விட்டது; ஏன், இம்முடிவால் நான் திருப்தி அடையவேண்டுமென்பதும் தீர்மானமானதே. இதை நான் நம்பவில்லை, கால்மணிக்கு முந்தியும் நம்பியதில்லை. நம்பியிருந்தால் இந்த 'எனக்குள் நானே'யான இதயப் போராட்டத்திற்கே இடமிருந்திருக்காது; என் விதி இது என்று இன்னும் அதிகமாகக் குடித்திருக்கலாம். விதியே விதியில் நம்பகமற்ற முறையிலேயே ஒருவனது விதியை நிர்ணயிக்கிறது. விதியின் அமைப்பை அறியாமையாற்றான் நாம் விதிப்படி நடக்கிறோம். விதியில் நம்பாமையே விதியின் வெற்றி, அது மனித சிந்தனையையும், செயலையும் வேறு பிரிக்கிறது; இப்படியிருந்தால் என்று செயலும், இதனால் என்று சிந்தையும் தொழிற்படுகின்றன.

இவ்விதிப் பிளப்பு, விஞ்ஞானத்தை மட்டும் பற்றியதல்ல. விதியில் பரிபூரண நம்பிக்கை உடைய முஸல்மானும் இவ்விருமையோடுதான் நடந்துகொள்ளுகிறான். அவன் 'ஒவ்வொருவன் விதியும் அவன் கழுத்தைச் சுற்றி அமைந்துள்ளது' என்ற குர் ஆன் வாக்கை நம்புகிறான். எனினும், தானோ, பிறரோ தவறு செய்யும்போது, இவையெல்லாம் விதியின் விளைவுகளே என்று எண்ணாமல், தன்னையும் பிறரையும் சபிக்கிறான். அவன் நடத்தையும் பழைய காரல் மார்க்ஸ் நடத்தையும் ஒன்றுதான். மனிதனது மனோநிலை அவனது சூழ்நிலையைப் பொறுத்தது என்றார் காரல் மார்க்ஸ்; எனினும், தத்தம் சூழ்நிலைக்குத் தக்கபடி அவரது கொள்கைகளை எதிர்த்தவர்கள்மேல் வசவு மழை பொழிந்தார்.

விதியும் விடுதலையும், காரண காரிய வாதமும் யதேச்சையும் மனித உள்ளத்தின் நிரந்தரமான இருமைகள். இவையிரண்டும் அடிப்படையான மனித இயல்பினின்றும் எழுந்தவை; பல்வேறு

காலங்களில் பல்வேறு வகையாகப் பயன்பெற்றவை. விதி இயற்கையிலுள்ள கோணல் மாணலான குளறுபடிகளை யெல்லாம் ஒன்ருக இணைத்து நடத்தும் ஒரு உயர்ந்த பொது ரீதியைக் காண முயல்கிறது; வாழ்வில் காப்பின்மை, உலகத்துயர், இவைகளை விளக்க முனைகிறது; பயங்கரமான அபூத உண்மைகளை சர்வ சாதாரணமான வாழ்க்கை உண்மைகளாக்கப் பார்க்கிறது. பழங்காலப் பூர்வகுடிகளின் மதங்களிடையே இயற்கைச் சக்திகள் மிருகத் தெய்வங்களாகவும், தெய்வமிருகங்களாகவும் உருக் கொண்டன. இவை கொடூரமானவையாயினும், அர்த்தமற்றவையாயின் வாழ்வின் நிகழ்ச்சிகளைப் பூரணமாய் விளக்கின.

கி. பி. 1600-இல் விதிமுறையில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. வஸ்துக்களின் அளவுகளும், இணைப்பு வழிகளும் கணிக்கப்பட்டு, விதி, புதுமையானதோர் விளக்கம் பெற்றது. வேறு வேருன பொருள்களின் வேற்றுமைகளெல்லாம் படிப்படியான அளவைகளைப் பொறுத்தவை—வண்ணம், ஒலி, உஷ்ணம், குளிர்ச்சி, மேல்கீழ், மிருகம், மனிதன் என்னும் தராதர வித்யாசங்களே. இவைகளைக் கொண்டு உலகப் பொது விதியின் உண்மைகளை அறிவது சுலபம் என்று ஏற்பட்டது. தெய்வத்தின் மானுட குணங்கள் குறைந்தன; உருவம் அருவமாயிற்று. 'ஒவ்வொருவன் விதியும் அவன் கழுத்தைச் சுற்றி அமைந்துள்ளது' என்ற கொள்கை அப்படியேதானிருந்தது; ஆனல், அதன் மையம் மாற்றப்பட்டு விட்டது. கடவுளர் மேல்நிலைப் பாதையில் அதிமானுடராயிருந்தனர்; அணுக்கள் கீழ்நிலைப் பாதையில் மானுடத்திற்கும் கீழான வஸ்துக்களாயின. மேலிருந்து தொழில் செய்த விதி இப்போது கீழிருந்து தொழில் செய்தது.

விதிக்கு விரோதமான தன்னிச்சை, உள்ளுணர்ச்சிகளாலும் பழக்க வழக்கங்களாலும் உற்பத்தியாகிறது. இது அறிவுத் தரத்தில் நிகழும்போது, பலவந்தமான உணர்ச்சியாகத் தோன்றுவதில்லை; தேர்ந்தெடுத்த அவசியங்களாகத் தெரிவதில்லை, தன்னுணர்வின் மையத்திற்குப் போகப் போகத் தன்னிச்சை வலிபெறுகிறது. தன்னுணர்வுக்கு அடித்தட்டில் நிகழ்பவை அரை குறைத் தன்னிச்சைகள், அப்பால் நிகழ்பவை முழுத் தன்னிச்சைகள்.

இதை உயிருணர்ச்சி என்றே கூறலாம். இதன் முக்கிய இயல்பு அகத்திலிருந்து புறத்தே வருவது; புறத்திலிருந்து அகத்திற்குப் போவதில்லை; இதன் ஊக்கம் வெளிப்பொருள்களல்ல, உள்ளுணர்ச்சிகள். இது அழிந்தால் உயிருருவை மறக்கும் பைத்யம் பிடித்துவிடும். எல்லா ஒழுக்க முறைகளிலும், நீதி நெறிகளிலும் இதுவே அஸ்திவாரமானது.

எனவே விதியும், மதியும் ஒருவனது அடிப்படையிலேயே இணைந்துள்ளன. ஒன்று உலகக் குழப்பங்களை விளக்கும் உறுதியாகிறது; மற்றொன்று மனிதனது செயல்களைத் தூண்டுகின்றது. இவை ஒன்றுக்கொன்று எதிரும் புதிருமாய் வேலை செய்கின்றன. காணும் பொருள்கள் கருத்தில் குவிந்து கருதும் தன்மையைக் கட்டுப்படுத்துகிறது. இதனால் மனமே தன் சுதந்திரத்தை மறக்கும்படி நேர்ந்து விடுகிறது.

ஆரம்பத்தில், இவையிரண்டும் வரையறுக்கப்பட்ட வெளிநோக்கு உள்நோக்குகளாக அமையவில்லை. பூர்வ மிருகத் தேவதைகள், தெய்வங்கள்—இன்றுள்ள விடுதலை உணர்ச்சியைப் போன்றே சக்தி வாய்ந்தவை, அறிவிற்குப் பொருந்தாதவை; வாதத்துக்கு வராதவை. இவ்விரு பண்புகளும் ஒன்றைவிட்டொன்று மாறி மாறி வருகின்றன.

## 2

பூர்வகுடிகளின் வாழ்வு அவர்களது விதியை நிர்ணயிக்கும் தெய்வங்களைத் திருப்திப்படுத்தும் சடங்குகள் நிரம்பியது. இவற்றைச் செய்வதால் கடவுளரையும் அவன் வசப்படுத்த எண்ணினான். இவற்றால் விதியை ஒப்புக்கொண்டு, அதற்கு விரோதமாய் விதியை வெல்ல மதிக்குச் சக்தி இருப்பதை அவன் நடைமுறையில் காட்டினான். இம்முரண்பாடு அவனுக்குத் தெரியாதிருக்கலாம், அவனது தெய்வங்கள் அவனைப் போன்று குற்றங்குறையுள்ள மனிதர்களே. ஆனால், படிப்படியாக இத்தெய்வங்களை ஆள இன்னும் மேலான தெய்வங்கள், அவற்றிற்கும் மேலானவை எனக் கடைசியில் அருவமான, அலாதியான, யாவுமறிந்த ஆண்டவன் தோன்றினான்.

பூர்வகுடியின் விதி நம்பிக்கை முதல் முதலாகத் தோன்றிய விவரமற்ற ஒரு காட்டுமிராண்டித் தன்மையை உடையது. மனித உள்ளம் விரிவடைய அடைய விளக்கங்களும் விரிவடைகின்றன. விதிவலையும் நெருக்கமாகப் பின்னுகிறது; தெய்வமும் தெளிவாகிறது. இந்தக் கட்டத்தில் விதிக்கும் மதிக்குமுள்ள முரண்பாடு விளக்கமாகிறது; இவ்விளக்கம் பழம் புராணங்களில் நாடகத்திறலோடு உருப்பெற்று நடக்கிறது. ஆண்டவன் இஷ்டத்திற்கு விரோதமாக ஏவாள் நல்லது கெட்டது அறியும் நறுங்கனியைச் சாப்பிடுகிறாள்; ப்ரொமோதியஸ் கடவுளர் அக்கினியைக் களவாடுகிறான்; ஜேகப் வானத்தேவதையோடு சண்டையிடுகிறான், பேபல் கோபுரம் கட்டப்பட்டு அழிவும் பெற்றது. இவைகளிலெல்லாம் விதியும் மதியும் போரிடுகின்றன. பின்வந்த மதி எப்போதுமே தோல்வியடைகிறது; முன்னுள்ள விதி

வெல்லுகிறது. ஒவ்வொரு ப்ரொமேதியன் முயற்சியின் முடிவும், தோல்வி, தண்டனை, இழிப்பு; ஏஜியன் தொழுவம் என்றும் தூய்மையாக்கப் படவில்லை; டேனியல் மரக்கலம் நிரப்பப் படவில்லை; ஸிஸிபஸ் உழைப்புகள் எப்போதுமே பயனற்றவை,—தன்னிச்சைத் தேர்ச்சியைக் காட்டிலும் மேலிடத்துக் காப்பே பெரிதாய் நிற்கிறது. துயரற்ற ஓர் உலகில், துளைக்கமுடியாத தூய உடல் பெற்ற மக்களிடையே மானுட தெய்வப் போட்டியில் மனிதனே வெற்றிபெறும் கதைகள் உற்பத்தியாகலாம்.

இப்போராட்டம் யுடிபஸ் ரெக்ஸ் கதையில் உச்சம் பெறுகிறது, யுடிபஸ் மதியை இழக்காமல் தன் விதியை நிறைவேற்றுகிறான். விதிக்குத் தெரியும்; மதிப்படி விட்டுவிட்டால் அவன் தன் தந்தையைக் கொல்லமாட்டான்; தாயை மணக்கமாட்டான் என்று. எனவே, விதி அவனை வஞ்சிக்கிறது. அவனது மதியின் விடுதலை அவற்றின் சம்பவங்களைக் கணிப்பதோடு நின்றுவிடுகிறது. அவ்வளவே, எனவே அதனால் பயனில்லை. எனினும் விதி மனிதனுக்கு சுதந்திரம் உள்ளதுபோல் மாயங் காட்டுவதென்னமோ வாஸ்தவம்.

கிறிஸ்தவ மதம் இவ்விஷயத்தில் ஒருபடி முன்னேறிச் சென்றது. மனித சுதந்திரம் வெறும் மாயமல்ல, மனித மட்டத்தில் அது உண்மையானதே; தெய்வம் எல்லாம் வல்லது, யாவும் அறிந்தது, அமானுஷிக உலகில் யாவற்றையும் அமைப்பது. இவ்விருமையின் எல்லைகள் நன்கு வரையறுக்கப்பட்டன; இவை மனித உள்ளத்தினின்றும் இயற்கையின் மேல் பாய்ந்தன, உலகமே மானுட இயல்பு, தெய்விக இயல்பு—விதி எனப் பிரிக்கப்பட்டது, இவ்வியல்புகள் ஒன்றின்மேல் ஒன்றாய் உள்ளன; மனித உள்ளத்திற்கு தேவ இயல் தெரியாது; தெய்வத்திற்கு மனித இயல் பரிபூரணமாகத் தெரியும். கடவுள் "நான் நினைக்கும் படி இல்லை; அவரே அவரை அறிந்தபடி இருக்கிறார்." பூர்வ குடிகளின் உலகம் ஒரே தன்மையானது; அதில் தெய்வங்களும் மனிதர்களாகவே நடந்து கொண்டனர். கிறிஸ்தவ உலகம் பலபடியானது.—தெய்விக உலகம், மானுட உலகம், மிருக உலகம் என, விதிக்கும் மதிக்குமுள்ள வித்தியாசத்தை பலபடிக்கான பல மேற் கீழ் வாதமுறைகள் விளக்குகின்றன.

கிறிஸ்தவ உலகின் மேற் கீழ்த்தரங்களின் நிலைமைகளைக் கீழ்க்கண்டவாறு கொள்வது பயனுடைத்தாகும்:—

யாவற்றையும் விளக்குவது கடவுளே; எனினும் இவ்விளக்கத்தைக் கீழான மனித நிலையிலிருந்து வரையறுக்க முடியாது.

மேல் நிலை விதிகளை கீழ் நிலையிலிருந்து விளக்க முடியாது.

கீழ் நிலை விதிகள் மேல் நிலையில் ஊன்றியுள்ளன எனினும், மேல் நிலை கீழ் நிலையில் ஸாட்சாத்காரமாகும்போது புரிந்து கொள்ள முடியாத அதிசயமாய்த் திகழ்கிறது.

## 3

17-ஆவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் கடவுள் கணக்கராளுர்; விதியை அருவாக்கும் முதல் முயற்சி இதுவே எனலாம். உலகப் பொருள்களை தொகை வகைப்படுத்தி அளந்த அறிஞர்கள் கடவுள் உலகத்தை பீஜ கணிதப்படியே சிருஷ்டித்ததாக நம்பினர்; வானக் கோளங்களின் தவறுன வரன் முறையை விரும்பியே கடவுள் பீஜகணித விதிகளை ஏற்படுத்தினர். வெளிப்படையாக உலகங்கள் யாவற்றையும் இயக்கும் இயற்கை விதிகள் இருக்கும்போது இவற்றை இயற்ற உட்படையான ஒரு சக்தி தேவையில்லை என்ற எண்ணம் தோன்றியது. தோன்றவே உருவான கடவுள் அருவான விதியாளுர்; விதிகள் விதிப்படி நடந்ததால் அவற்றை நடத்த ஒரு நீதிபதி அவசியமில்லை.

எனவே, பரிணுமத்தின் ஒரு மேல் வளைவில் உலகம் மறுபடியும் ஒரு தன்மையான சமனம் பெற்றது; அணுவையும், தாரகைகளையும், உயிர்ப் பொருள்களையும், உள்ளப் போக்கையும் என யாவற்றையும் ஒரேவிதமான விதிகள் ஆட்சி புரிந்தன. ஆனுல் ஒரு வித்யாசம். முன்பு மேல் விதிகள் கீழ் விதிகளை நிர்ணயித்தன. இப்போது கீழ் விதிகள் மேல் விதிகளை நிர்ணயிக்கின்றன. பூர்வ குடிகள் கீழ்நிலை உருவில் கடவுளைப் படைத்தனர்; பூர்வ விஞ்ஞானிகள் முவ்வரை (three dimensional) அணு உருவங்களை அமைத்தனர். ஆராய்ச்சி அநுபவம் அதிகமாக ஆக பழைய தெய்வங்கள் மறைந்தன. பழைய உருவங்கள் இறந்தன. தெய்வங்கள் அருவமாயின, உருவங்கள் வெறுமையாயின. மனித உள்ளத்தில் மேல் நோக்குணர்ச்சியும், கீழ் நோக்கான காலதேச வர்த்தமானக் கிளர்ச்சியும் உண்மையை உள்ளபடி விளக்க முடியவில்லை. "கடவுளுக்கு உருவம் தராதே"—என்ற வேதக் கட்டளை, கடவுளைப் பற்றி மட்டுமல்லாமல் பல வரைப்புகள் (multi dimensional) உள்ள இடம் (space), விமர்ஸ அணு (electron), அலைக்கோவை (Wave packets), நுண்திறல் (Vuanta) முதலிய யாவற்றிற்கும் பொருந்தும்.

விஞ்ஞான விதி நிர்ணயம் மதவிதி நிர்ணயத்தைப் போன்றே; யுடிபஸ் புராணக் கதையிற் போல், ஒரு புது நெருக்கடியை நோக்கிச் சென்றது. கடவுளர்களின் கைக்கருவியாய் இருந்தது போய் மனிதன் தன்னிச்சையா யியங்கும் பௌதிக—ரஸாயனப் பொம்மையாளுன். முன்னதைப் போன்றே பின்ன

திலும் சுதந்திரத்திற்கு இடமில்லை. பரம்பரைக் குணமும் (ehredity) சூழ்நிலை அமைப்பும் (environment) விதி மகளிரை (Weird sisters of fate) ப் போல் அவனை விலக முடியாதபடிக் கட்டுப்படுத்தின. இந்நூற்றாண்டின் ஆரம்பத்தில் தத்துவ சாஸ்திரிகள் தங்கள் வார்த்தைப் பந்தல்களால் இவ்விஷயத்தை மறைக்க முயன்றனர்; அவ்வார்த்தைப் பந்தல்களால் அவர்களே ஓய்ந்து போயினர்; மதி விடுதலையை மதவாதிகளுக்கு விட்டு விட்டனர். பிரிட்டிஷ் மியூஸியத்திலுள்ள எல்லாப் புத்தகங்களும் சேர்ந்தும் மதுக் குடிப்பதை விட்டு நான் ஏன் இக்கட்டுரையை எழுதிக் கஷ்டப்பட வேண்டும் என்பதை இம்மியளவும் விளக்க முடியாது.

ஃ ஃ ஃ

இதுவரையில் விதி—மதி முரண்பாட்டின் நியாய வாதங்களைப் பற்றிக் கூறினோம். இவை நம் நீதி நெறிகளை எவ்வாறு பாதிக்கின்றன?

நீதி மனிதனுக்குச் செயலைப் பொறுத்த அளவில் சுதந்திரமுண்டு என்ற அடிப்படையில் அமைந்தது. பூர்வகுடிகளிடையே தன் பணிவாலோ, பலவந்தத்தாலோ, தந்திரத்தாலோ, லஞ்சத்தாலோ—உடற் துன்பங்கள் அல்லது பலியாலோ தேவதைகளைத் திருப்திப்படுத்தும் வகையில் ஒழுக்க நெறிகள் அமைந்திருந்தன. அதாவது விதித் தலைவனை விதிக்குட்பட்டவன் சில விதிகள் மூலம் வெல்ல முயன்றான்; விதியையும் மதியையும் இணைத்து சமயச் சடங்குகள் பாலம் போட்டன.

கடவுள் சர்வ ஸக்தனாக மாறியவுடன் இச்சடங்குகள் கைவிடப்பட்டன; ஒழுக்க நெறி பணிவும், அடைக்கலமுமாக பரிணமித்தது. மதியின் சுதந்திரம் தெய்வீக விதியின் வழியிற் சென்றது. தன்னிச்சையைத் தியாகம் செய்வதால் தான் தெய்விகம் வாழ்க்கையின் வழிகாட்டியாகும்; ஞானி தன் சுதந்திரத்தோடு ஸர்வ சுதந்திரங்களையும் தியானத்தின் சமனத்திற்குச் சமர்ப்பணம் செய்கிறான். தெய்விகப் பரவசத்தில் தனிப்பட்டவனது ஆன்மா அகண்ட ஆன்மிகத்துடன் ஒன்றுகிறது; யாவும் விளக்கப்படுகிறது; ஆனால், இந்த நிலையின் முடிவான வெற்றி, உரிமைகள் யாவற்றையும் மறுப்பதாலேயே சாத்யம், துறவு—தெய்விக தரிசனத்தின் அடிப்பீடம். இதனைச் 'சங்கல்பம் எதையும் நான் ஸங்கல்பிற்க மாட்டேன்' என்ற கூற்றாகக் கூறலாம்.

பின்னர் கடவுள் கணித விதியாகிறார்; ஒழுக்க நெறியும் அளவைப் பாஷையை அநுசரிக்கிறது. "அதிகமான எண்ணிக்கைக்கு அதிகமான இன்பம்; இவ்வாறு ஒழுக்க நெறி விதி

மதியை இணைக்கிறது ; ஆனால், இவ்விணைப்பில் பழைய சடங்கு முறைகள் தீர்ந்து போகின்றன. முன்னெல்லாம் மேல்தரத்து விதிக்குப் பணிந்த மனிதன் இப்போது கீழ்த்தர மதியால் அதனை ஆக்ரமிக்க முயல்கிறான். இயற்கை இயல்புகள் மனித விதியை நிர்ணயிக்கின்றன. எனினும் தன் மதி நுணுக்கத்தால் அவ்விதிகளை அவன் அடக்கியாளுகிறான் ; அவன் உள்ளத்தில் பணிவைக் காட்டிலும் தற்பெருமையே தாண்டவமாடுகிறது. முன்பெல்லாம் தியானத்திலிருந்தே அறிவு வந்தது; இப்போதோ வெளி உலக ஆராய்ச்சியிலிருந்து அறிவு பிறக்கிறது. முன்பு மனித நிலை துறக்க வீழ்ச்சியின் விளைவானது; இன்று பரிணும வளர்ச்சியினால், உயிர் வாழப் போராட்டத்தால் உருக் கொள்ளுகிறது. ஸமூகம் தெய்விக நியதிப்படி இயங்க வேண்டுமென்ற கிறிஸ்தவ தர்மம் அகத்திலிருந்து புறத்தை மாற்ற விரும்பியது; புது முறையே கணிதப் புள்ளி விவரங்களுக் கேற்பப் புறத்திலிருந்து ஸமூகத்தின் அகத்தை மாற்ற முயல்கிறது; புது முறைகள் தியான நிம்மதியைவிட செயல் திறமை ஊக்கத்தை வலியுறுத்துகிறது ; பணிவுக்குப் பதில் அதிகாரம் ; மென்மைக்குப் பதில் வன்மை ; வரன்முறைக்குப் பதில் கணிதம் என வேறுபட்டுள்ளது ; தெய்விகன் புரட்சிக்காரனானான்; சந்நியாஸி சர்வாதிகாரியானான்.

இம்மாறுதல்களின் மற்றொரு விளைவு காப்புத் தன்மை கழிந்து போனதும் அறிவுக்கும், ஆதரவுக்கும் அடிப்படையான அற்புதத்தையும் சாதாரணத்தையும் இணைப்பதே. மத முறையான விதி உள்ளுணர்ச்சி முழுவதையும் ஸ்வீகரித்தது. கடவுள் யாவற்றுக்கும் விளக்கமாயும், ஆதரவாயும் இருக்கிறார், விஞ்ஞான விதிமுறை விளக்கம் தந்தது; (ஆண்டவனாகிய) ஆதரவு தரவில்லை, எனவே விடுபட்ட தன்மை பழிவாங்கத் தொடங்கியது; விஞ்ஞானக் கடிகாரத்தின் 'டிக்—டிக்' ஸப்தம் பழம் புராண 'டாம்—டாம்' பேரிகை ஒலியில் மடிந்தது.

## 4

விஞ்ஞான விதி முறையின் நெருக்கடியான கட்டம் இந் நூற்றாண்டின் இருப்பத்தில் நேர்ந்தது; பௌதிகத் தத்துவம் முதல் அநுபவ பூர்வமான கருநூல் (embryology) வரை யாவுமே மாறின.

1900-சில அணுமையங்கள் சின்னஞ் சிறு யுடிபஸ்கள் போல் நடந்து கொண்டன. அவை திட்டப்படித்தான் நடந்தன. எனினும், திட்டத்தை மீறியும் சென்றன. தவறாமல், ஒழுங்காக ஒரு மில்லிகிராம் ரேடியம் ஒரு 50 கோடி அணுக்களை இழந்தது ; இவ்வாறிழப்பதில் ஆல்பா, பேடா, காமா ஒளிக்கதிர்

களை வெளிப்படுத்திபது; எனினும் இந்த யுடிபஸ் அணுமையங்கள் சூழ்நிலையால் பாதிக்கப்படவில்லை. 1903 ருதர்ஃபோர்டு, ஸோடி சட்டப்படி கதிரணுக்களின் குலைவு அவற்றின் இருப்பிடம், பௌதிக நிலை, சூழ்நிலை—எதனுலும் சிறிதும் மாறுவதில்லை. இன்றைய அணு வர்ணனைகள் எதுவும் அதன் எதிர்காலத்தைப் பற்றி ஏதும் சொல்லவில்லை. "அணுவின் உள்ளுக்குள்ளிருந்தே, வெளியிலிருந்தல்ல" அதன் விதி நிச்சயிக்கப்படுகிறது (ஜீன்ஸ்). ஒரு தனி அணு விஞ்ஞானத்தால் விளக்க முடியாத வகையில் சுதந்திரமாக நடந்துகொள்ளுகிறது. 1917-இல் ஈன்ஸ்டின் தம்மிச்சைப்படி குலையும் சக்தியை எல்லா அணுக்களுக்கும் நாம் கொடுத்தே தீரவேண்டும் என்ருர். இருபதுகளில் ஸ்க்ரோடிங்கர் நிலை அணு (electrons) க் களின் இயக்கங்களைப் பற்றி இப்படி இருக்கலாம் என்பதைத் தவிர இப்படித்தான் என்று நிச்சயமாகக் கூறமுடியாது என்ருர். ஹெய்ஸன்பர்க்கின்படி அணுக்களுக்குள்ளும் நிரையணுக்கள் நிர்ணயமற்ற முறையிலேயே இயங்குகின்றனவாம். டிராக் கால தேசப் போக்கில் நிகழும் எல்லா வர்த்தமானங்களையும் காலதேசக் கட்டுக்ககப்படாத ஏதோ ஒன்று அளவிடப்படா வகையில் இயக்குவதாக எண்ணினுர்.

இவைகளால் பௌதிக சாஸ்திரமே கலங்கியது; விஞ்ஞானமே வேதாந்தமாகியது. கடவுட் தத்துவம் முதல் மிஸ்டார தி ஸ்வேயரின் துப்பறியும் கட்டுக்கதை வரை 'ஸயன்ஸ்' மயமாயின. எனினும் விதி விலகிவிட வில்லை; கண்ணுக்குத் தெரியாத நுண்ணணு உலகைத் தவிர மற்ற உலகுகளை ஆக்ரமித்தது; யுடிபஸ் போன்ற தனி அணுக்கள் தம்மிச்சையாக இயங்கினுலும் அணுக்கூட்டங்கள் விதித்த விதிக்குள் அடங்கியே நடந்தன.

இதனுல் தற்கால பௌதிக ஸாஸ்திரம் அணுவுக்குள் தெய்வத்தைப் புகுத்தியதென்பதல்ல; அணுவைப்பற்றி விளக்கத் தனக்குச் சக்தியில்லை என்பதை ஒப்புக்கொள்வதேயாகும். அதாவது நுண்ணுலகச் செயல்களைக் காலதேச காரியகாரண நுணுக்கங்களால் விளக்கமுடியாது என்பதே. மனித நிலை உண்மைகள் மற்ற நிலைகளுக்குப் பொருந்தாது,

அணுவைப் பொறுத்த வரையில் எதிர் மறையான விதியும் மதியும் இயங்குவதைப் பின்வருமாறு விளக்கலாம்:

தனிப்பட்ட நேரணு (Protons) க்கள், நிரை அணுக்கள், அணுமயங்கள்-இவைகள் மதியுடையவைபோல் விடுதலையுடன் இயங்குவது கடவுளாலல்ல; இவற்றின் ண்மை இயலை மனித அநுபவத்தால் கணிக்க முடியவில்லை என்பதுவே. அவை இந்த

உலகத்தைச் சேர்ந்தவையல்ல; ஈண்டு உலக மென்பது நமது காலதேச வர்த்தமான அநுபவங்களே. வெளியுலக விதிகள் அணுவுலகக் கதிகளை விவரிக்க முடியாது.

மேற்கூறிய ஒவ்வொரு வாக்கியத்திலும் இயலாது, முடியாது, போன்ற ஒரு எதிர்மறைச்சொல் வருகிறது. அவை விஞ்ஞானத்தின் கட்டுப்பட்ட அளவையை விளக்குகின்றன. பரமாணுக்களைப் பற்றிய பேச்செல்லாம் இப்படித்தான். கடவுள் கணக்கரானது மூன்று நூற்றாண்டுகளுக்கு முன்புதானே! எனவே பிற மாறுதல்களுக்கு இன்னும் எத்தனையோ காலமிருக்கிறது. பொதுவாக மதத்தைப் போலவே விஞ்ஞானமும் ஒரு தடுமாற்ற நிலையை அடைந்துள்ளது; அணுவுலகின் விதி மதியை நிர்ணயிக்க இன்றுள்ள பௌதிக சாதனங்கள் போதவில்லை; திடீரென்று விவாரணம் ஏற்பட்டு வியப்புத்தரலாம்.

## 5

பௌதிகத் துறையைக் காட்டிலும் உயிர் நூல் துறையில் மேற்கண்ட நிலைவாரி விளக்கங்கள் மிகுந்துள்ளன. இதைக் கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையின் உயிர்நூல் மேதையான ஜே. நீடாம் எழுத்துக்களில் காணலாம். தவிர அவர் ஒரு மார்க்ஸியவாதி. எனவே வேதாந்த, வீர்ய விறல் வாதங்களை விரும்பாதவர். எனினும் விஞ்ஞான ஆராய்ச்சியில் கசப்பானாலும் உண்மையை வெளியிடுபவர். அவரது கொள்கையை இரு எடுத்துக் காட்டுகளால் விளக்குகிறோம்.

1928-இல் அவர் கூறினார்; "இன்றுள்ள நிலையில் பிராணி நூல், உயிர்நூல் ரஸாயனமாயுள்ளது; உடல்நூல் உயிர்நூல் பௌதிகமாயிருக்கிறது,"— என்று; 1941-இல் "உயிர்நூல் அமைப்பை பௌதிக-ரஸாயன அமைப்பாக விளக்க முடியாது. ஏனெனில் வெறுமையிலிருந்து எதுவும் விளையாது. ஸாமுவல் பட்லர் ஒரு சமயம் சொன்னதுபோல் 'ஒன்றுமில்லாதது என்றும் வெறும் எதுவாகவும் இருக்க முடியாதது," என்றார்.

உயிர்நூல் துறையில், சென்ற நூற்றாண்டின் இறுதியில், கருநூல் (biology) உற்பத்தியானபோது இந்த நெருக்கடி ஏற்பட்டது. 1895-இல் ட்ரிஸ்ச் என்பவர், விஞ்ஞானம் எதிர்பார்த்தபடி இல்லாமல், கருநிலையில் எது செய்தாலும் அதன் விளைவை அச்செய்கைகள் சிறிதும் மாற்றுவதில்லை எனக்கண்டு பிடித்தார். ஒரு தவளை முட்டையை இரண்டாகப் பிளந்தால் ஒவ்வொரு பிளப்பும் அரைத்தவளையாவதில்லை; சின்னஞ்சிறிய முழுத்தவளையாகிறது. முட்டைக் குழிவு (Blastural) நிலையிலும் இதே கதை தான். ந்யூட் என்னும் மீன்வாலியின் வாலாகவேண்

டிய உறுப்பைக் கால் வரவேண்டிய இடத்தில் பொருத்தினல் அது வாலாக வளருவதில்லை, காலாக வளர்கிறது. இது பெரிய குழப்பத்தை உண்டுபண்ணியது. ஜீவக்கண்ணிகளும், அக்கண்ணிகளின் நரம்புப்பிணையல்களும் பௌதிக-ரஸாயன விதிகளின்படி நடப்பதானல், மீன்வாலிகள் அரைமீன் வாலிகளாகவும், வாலி வாலாகவும் தானே மாறவேண்டும்; ஆனல், அவை தம்மிச்சையாக முழு மீன்வாலிகளாகவும், வால் காலாகவும் மாறுவதேன்? டிஸ்ச்சின் கத்திமுனை எதிர்பார்த்து அவை தம் பௌதிக ரஸாயன முறைகளை மாற்றிக் கொள்ளுகின்றன என்பது அறிவுக்குப் பொருந்திய வாதமல்ல.

கருவளர்ச்சியில் முற்றிய நிலையில் மேற்கூறிய முறை முற்றிலும் வேறுபடுகிறதென்ற உண்மை குழப்பத்தையே அதிகமாக்குகிறது. கருமுட்டை கிண்ணியுருநிலை (Gastrular Stage) யை அடைந்தபிறகு ஒரு உறுப்பை மற்ருேர் உறுப்பில் பொருத்தினல் பொருத்தப்பட்ட உறுப்பு தன்னுருவிலேயே வளர்கிறது; அது மட்டுமல்ல; புதிதாகவந்த விருந்தாளிக்கேற்பப் பொருத்தமுற்ற உறுப்புத் தன்னியலையும் மாற்றிக் கொள்ளுகிறது. (அது மாறக் கூடிய மென்மையிலிருந்தால்). 1924-இல் ஸ்பீமனும், மங்கோல்டும் செய்த புதுமுறை உருப்பொட்டும் ஆராய்ச்சிகள் விஞ்ஞான உலகில் பெரும் திகைப்புண்டாக்கியது. ஒரு தவளைக் குஞ்சின் கண்ணை எடுத்து வயிற்றில் ஒட்டவைத்தால், வயிற்றுத்தோல் கண்ணுடிபோலாகி வயிறு கண்ணை வரவேற்று வளர்க்கிறது. ஈற்றில் பால் வெய்ஸ் என்பவர் இவ்வொட்டுவாலொட்டி முறைகள் கருநிலையில் மட்டுமல்ல, வளர்ச்சியடைந்த பிறகும் இம்மாதிரியே நடைபெறுவதாகக் கண்டுபிடித்தார். வாலிலிருந்து வெட்டப்பட்ட இளையவால் நரம்புப்பிணையல்கள் காலுறுப் பிடத்தில் ஒட்டப்பட்டால் காலாக வளர்ந்தது; முதுமை யடைந்த நரம்புத் தொகுதிகள் வாலாகவே வளர்ந்தது மாறவில்லை.

எனவே உயிர் விதிகள் வெறும் பௌதிக-ரஸாயன யந்திர நெறிகளே என்ற கொள்கை முழுமையாகத் தோல்வியுற்றது. கருநூல் ஆய்வுகள் மற்ற உயிர்நூல் ஆராய்ச்சிகளின் விளைவுகளை ஒத்தே நடைபெற்றன. அணுவைப் பற்றியதைவிட ஜீவக் கண்ணியைப் பற்றிய வகையில் விதிமதி முரண்பாடு அதிகமாய்த் தெரிந்தது. இங்கும் உயிர்முறைகள் நம் ஆராய்ச்சியளவுக்குள் அடங்கவில்லை என்றுதான் அர்த்தமே ஒழிய அபூதமான எதுவும் குறிக்கப்படவில்லை. அரைகுறைத் தவளையா, முழுத் தவளையா என்ற ஜீவக்கண்ணிகளின் விடுதலையுணர்ச்சி வேறு நிலைமானத்தால் விளக்கப் படவேண்டும்; பௌதிக ரஸாயன மானத்தால் அவற்றை விளக்க முடியாது.

இவற்றை முதல் முதலாக ''உள்ளூறு சக்திக்கெதிர் மறை விளைவு" (entelechies)க் கொள்கையால் விளக்க முயன்ற ட்ரிஸ்ச் சின் ஆராய்ச்சி தோல்வியுற்றது; 19-ஆம் நூற்றாண்டின் ஆகாச தத்துவத்தைப் போலவே இவையும் அர்த்தமற்ற சொல்லடுக்கு களாயின. ஒவ்வொரு அணுமையத்திலும் ஒரு 'உள்ளூறு சக்திக் கெதிர்மறை விளைவு' உள்ளதாகக் கூறலாம். ''உள்வெளி விளைவு முறையை ஒப்புக்கொண்டால் அவை 'கடவுள்' எனத் தக்க உயர்வான ஒரு உள்ளத்தை (ஒவ்வொரு வஸ்துவிலும்) ஒப்புக்கொண்டேயாக வேண்டும்.

இந் நூற்றாண்டின் முப்பதுகளில் உயிர்விறல் (Vitalism) உயிர் யந்திரம் (Live mechanism) என்னும் கொள்கைகளின் எதிர்ப் போராட்டங்களுக்குப் பிறகு வெறுமையான ஒரு தயக்கம் ஏற்பட்டது. எனவே உலகைப் பலபடிகளாய்ப் பிரிப்பதை யாவரும் ஒப்புக்கொண்டனர்; இத் தராதரப் படிகளை விளக்கு வதிலேயே வேறுபட்டனர்;

ஒவ்வொரு படியிலும் செயல் விதிகள் இருவகையாக இயங்குகின்றன. (1) வரையறுக்கப்படாத விதிகள்; இவை எல்லா நிலைக்கும் பொதுவானவை, என் தட்டிலுள்ள முட்டை நானகத் தள்ளினலன்றி இடம் மாருது; அதாவது மந்த (Inertia) நியதி இதனல் முட்டையைப் பற்றிய என் அறிவு எவ் வகையிலும் விளக்கம் பெறவில்லை; (2) வரையறுக்கப்பட்ட விதிகள்; இவ்விதிகளே ஒரு வஸ்துவின் அநுபவபூர்வமான உண்மைகள் யாவற்றையும் அறிவிப்பவை. கீழ்ப்படியிலிருந்து இவற்றை அறிந்து கொள்ள முடியாது; அதன் நிலையிலிருந்தே அதை ஆராய வேண்டும்.

ஒவ்வொரு வஸ்துவும் ஒவ்வொரு படியிலும் ஒவ்வொரு வித மாக நடந்துகொள்கிறது — அவ்வப்படியின் அமைவுக்கேற்ப, ஒரு கரியமில அணுத்தொகுதி (A carbon molecule)க் கூட்டம் உயிரற்ற வஸ்து (inorganic compound) வில் ஒரு வகையாகவும், உயிர் வஸ்து (organic compound) விலும், பளிங்கு ச்ருங்கடக (crystalline) ங்களிலும். மொத்தை (colloidal) நிலையிலும், உயிர் ரஸாயன (biochemical) படியிலும் வெவ்வேறு விதமாக நடந்து கொள்ளும். ஒரு ஜீவரேணு (spermatozoon) வின் உள் ளூறைகள் உயிர் வலி (vitro), வெதிர் (scrotum), கருப்பை (ovum), கருவளைக் குழிவு (blastular state), கருக்கிண்ணம் (gastrular). வளர்ச்சி பெற்ற உயிர் வர்க்கத் (grown up organism) துள் எனப் பல படிகளிற் பலபடியாக நடந்து கொள்ளும். இவற்றில் எதையும் கீழ் நிலையிலிருந்து நிர்ணயிக்க முடியாது. பௌதிக—ரஸாயன உள்ளூறைகளால் விவரிக்கவும் முடியாது.

ஒவ்வொரு நிலையில் ஒவ்வொரு புது இயலும் திடீரென்று குதிக்கின்றன; எனவே இதனை 'அவசர நெருக்கடிக் கொள்கை' (Theory oi Emergency) என்பர்,

மேற்படியைக் கீழ்ப்படியினின்றும் விளக்குவது எவ்வாறு இயலாதோ அவ்வாறே கீழ்ப்படியை மேற்படியினின்றும் விளக்க முடியாது. பகுத்தறிவென்பது ஒன்றைப் பகுத்துப் பகுத்துக் காணும் அறிவு. ஒவ்வொரு பகுப்பும் தனித்திருக்கும்போது ஒரு வகையாகவும், சேர்ந்து தொகுப்பிலிருக்கும்போது வேறு வகையாகவும் இயங்குகின்றது. செயற்கையான தொகுப்புச் சூழ் நிலையில் ஒரு பகுப்பை ஆராய்வதும் பூரணப் பயனளிக்காது. "ஒரு பகுதியின் சூழ்நிலை அதன் முழுமையான தொகுதியே." (ஊட்ஜர்). உதாரணமாகக் குண்டிக்காயின் ஒரு ஜீவக்கண்ணி தனிப்பட்ட ஆராய்ச்சியில் மற்ற ஜீவக்கண்ணிகளைப் போன்றே நடந்து கொள்ளும்; இதனால் குண்டிக்காய்க் கண்ணி என்ற அதன் விசேஷம் விளங்காது. எனவே முழுத் தொகுப்பும் பகுப்புகளின் சமன்வயத்தாலும், ஒவ்வொரு பகுப்பும் தொகுப்புக்கும், மற்றப் பகுப்புகளுக்குமுள்ள சம்பந்தா சம்பந்தத்தாலுமே இயங்குகின்றன; தனிப் பகுப்பின் ஆராய்ச்சி இச்சம்பந்தா சம்பந்தங்களை விளக்குவதில், பகுதியிற் பகுதியில் பகுதி ஆராய்ச்சிகளாகவே நடைபெறும்.

பகுத்தறிவு பகுப்புகளின் பொதுத்தன்மையை வீளக்குகின்றது; பகுப்புகளின் வெறும் இணைப்பால் தொகுப்பின் முழுத் தன்மை விளங்காது. ஒவ்வொரு தரத்திலும் ஒவ்வொரு வகையான தொகுப்பு விதிகள் தோன்றுகின்றன. உதாரணமாக புள்ளிகளை இணைத்து ஒரு சதுரமுண்டாக்க வேண்டுமானால் சதுரவகையில் நான் அவற்றைப் பொருத்த வேண்டும்—பெருக்கல் வாய்ப்பாட்டைப் பயன்படுத்த வேண்டும்; ஒரு நீள வட்டம் வளைய உள்ளுறு கணித (Integral calculus) முறையைக் கடைப்பிடிக்க வேண்டும். ஒரு படத்தின் புள்ளிகளாயின் அவற்றின் இணைப்பு விதிகள் அடியோடு மாறுபடுகின்றன. ஒவ்வொரு படியும் அதிலுள்ள பகுதிகளால் வேறுபடவில்லை; அப்பகுதிகளின் இணைப்பு விகுதிகளாலேயே வேறுபடுகின்றன. பழைய கீழ் நிலையிலில்லாத புதிய இணைப்பு விதிகள், விடுதலைகள் மேல் நிலையில் தோன்றுகின்றன; கீழ் நிலைவிதி முன்கூட்டிக் கூறமுடியாத மேல் நிலையில் நாம் அறியாவண்ணம் உள்ளன.

வேறுவார்த்தையில், பகுதியின் விதியே தொகுதியின் விடுதலை; பகுதித்தன்மையே பகுதியின் விதி. இதைத்தான் தெய்விக ஞானிகளும் செப்பினர். இதனால் தெய்விகம் உயர்ந்ததென்பதல்ல; ஸயன்ஸ் கட்டுப்பட்டது என்பதே.

இத்தகைய பலதரப்ப்டிகள் ஒவ்வொரு வகையான விஞ் ஞானத்திலும் இயங்குவதைக் காண்பது ருசிகரமானதே.

இந்நூற்ருண்டின் ஆரம்பத்திலேயே உளநூல் துறையில் வெற்றளவை மார்க்கங்கள் கைவிடப்பட்டன. இருபதுகளில் கோஹ்லர், கோஃப்கா, வெர்த்திமர் என்பவர்களால் அமைக்கப் பட்ட தொகுப்புளநூல் (Gestalt-psychology) வெளிப்புலனறிவு களைத் தொகுத்து அறிவாக்கு தொகுதி முறையைப் பின்பற்றி யது.

ஒரு முக்கோணம்; அதைப் பகுத்துணர்ந்தால் அளவைக் குட்பட்ட மூன்றுவரிகள் கிடைக்கின்றன. இருப்பினும் வெறும் வரி முக்கோணத்தின் நேர்கோணத்திற்கு எதிரேயுள்ள சாய்வு வரி என்று தெரிவிக்காது. அதாவது வெறும் வரி குண்டிக்காயின் ஒரு ஜீவக்கண்ணி, குண்டிக்காய்க்கண்ணி என்பதைக் காட்டா தது போலவேதான். முக்கோணத்தின் சாய்வு வரி என்பதைக் காட்டாது. 'வெளிப்புலன் அறிவு' என்ற வகையில் முக்கோணத் தின் பகுதியாயிருப்பினும், வெறும் வரியாயிருப்பினும் இரண் டிற்கும் வரி யென்ற முறையில் வித்யாசமில்லை. ஒரு காகிதத்தில் வரையப்பட்ட முக்கோணத்தின் மற்றைய இரு வரிகளையும் நான் மறைத்து விடலாம்—அப்போதும் அந்த வரி வரியேதான். வெளித்தோற்றத்தில் வேறிரண்டு வரிகளோடு கூடினுற்ருன் இவ்வரிக்குப் புது அர்த்தம் ஏற்படுகிறது. இந்த வகையான அநு பவத்தைக் காட்ட மூளையில் ஏதோ ஒரு பகுதி இருக்கவேண்டும். கோஹ்லர் கண்ணுக்கும் மூளைக்கும் இடையே மின்காந்த (electro-magnetic) விகாஸங்கள் இயங்குவதாக எண்ணினுர்; வேறு வகையிலும் இதை விளக்கலாம்; முக்கியமான விஷயம் கரும் பலகையில் வரையப்பட்ட முக்கோணம் அசைவற்ற மூன்று வரி களே. ஆனுல், மனோ நிலையில் இம்மூன்று வரிகளும் பொருள் நிறைந்த முக்கோணமாய் உருப்பெறுகிறது:—ஒவ்வொரு வரி யும் மற்றவற்ருேடு இணைவதால் புதுமை யுறுகிறது. இதெல்லாம் பாமரனுக்குச் சாதாரண விஷயங்களாய்த் தோன்றலாம்; ஆனுல் உண்மையில் இவற்ருல் அணுத்தன்மை மன ஆய்வில் புலனு ணர்ச்சி, காட்சி அறிவு, அர்த்தமுடைமை என எத்துணைக் குழப் பங்கள் ஏற்படுகின்றன. அணுத்தன்மை மன ஆய்வின்படி புலனுணர்ச்சிகளை ஏற்கும் திரையாகிறது. இதற்குமேல் இப் புலனுணர்ச்சிகளைக் காட்சியறிவாகவும், முக்கோணம் என்ற அர்த்தமுடையவையாகவும் செய்ய மற்ருெரு மனம் தேவைப் படுகிறது. தொகுப்புள நூல் உயிர் உற்பத்தியை உயிர்நூல் விளக்காதது போலவே, மனத்தை விளக்க வில்லை; மனநிலைக்கு ஏறிய புலனுணர்ச்சிகளின் இணைப்பு வகைகளையே ஆராய்

கிறது. எனவே, உளநூல் துறையிலும் பலதரப்படிகள் ஏற்படுகின்றன.

## 7

நாம் மேற்காட்டிய தரங்களை ஒன்றின் மேலொன்றாய்ச் செல்லும் படிகளாகச் சித்தரிக்கலாம். இச்சித்திரத்தின் படுக்கைக் கோடுகள் விதிப்படி இயங்கும் நிலைகளைக் காட்டும்; செங்குத்தான நேர்க்கோடுகள் ஒரு நிலையிலிருந்து இன்னொரு நிலைக்குத் தாவும் திடீர் மாறுதல்களைக் காட்டும். மேலேறிச் செல்லும் படிகள் காலதேசம். பரமாணுக்கள், பௌதிகம், ரஸாயனம் (chemistry) என்றவகையில் மனோநிலை வரையான பல படிகளைக் காட்டும். இப்படிகள் படிகளுட் படிகளாகப் பலதரமாகலாம்; ஈற்றில் இப்படி ஏற்றமே எங்கோ கிளைத்துச் செல்லலாம். அவைகளைப் பற்றி நம் விவாதத்திற்கு அக்கறையில்லை. மற்றும் இருபடிகள் இணைந்த சிருங்கடகங்கள் (paracrystals) தோன்றலாம்; இவை படிகளின் இடையற்ற தொடர்பை விளக்குவதாக சில யந்திரவாதிகள் கூறுவர். ஆனால், இக்கொள்கை இக்காலத்தவரால் கைவிடப் பட்டது; அர்த்தனாரிகள் இருப்பதால் ஆண் பெண் வேறுபாடுகள் அளவைப் பற்றியதே ஒழியத் தன்மையைப் பற்றியதல்ல என்றாகிவிடுமா? "கவனத்துடன் உயிரமைப்புகளின் படிகளைப் பார்த்தோமானால் இவற்றைப் பிரிக்கும் வரிகள் இணைப்புருவங்களால் முன்னைக் காட்டிலும் தெளிவாக வெளிப்படுவதைக் காணலாம்" என்கிறார் நீடாம்.

நம் சித்திரத்தை இருவகையில் பார்க்க முடியும்.




'நே' என்பது விஞ்ஞானியைக் குறிக்கிறது; அவனுக்குப் படுக்கைக் கோட்டின் ஒன்று மேலொன்றான மட்டங்கள் தோன்று

கின்றன; இம்மட்டங்கள் ஒளிவிசிறியின் வண்ணவரிகளைப் போல் பௌதிகத்துறை முதல் உளநூல் துறை வரையான வரன் முறைகளைக் காட்டுகின்றன; இப்படிகளைத் தூக்கிவிடும் நேர்க் கோடுகள் நுண்ணிய வெறுங்கோடுகளாய்த் தேய்கின்றன. ஒவ்வொரு படியின் விதிகளும் தெளிவான வகையில் விளங்குகின்றன—அல்லது சிறிது நாளில் விளக்கப்படும்; ஒவ்வொரு படிக்கும் மற்றொரு படிக்குமுள்ள இணைப்புக் கோடுகளே விளங்காத ரகஸியங்கள்.

'ப' எழுத்திலிருந்து பார்த்தால் எல்லாமே விளங்காத ரகசியங்களாகின்றன. படிகளின் மட்டங்கள் மறைகின்றன, அவற்றை இணைக்கும் நேர்கோட்டுத் தாவல்களே தெரிகின்றன. 'நே' அளிக்கப்பட்ட படிகளை ஆராய்கிறுன்; 'ப'-காரணங் காண முடியாதபடி அப்படிகள் ஏன் படிப்படியாய் அளிக்கப்பட்டுள்ளன என்று அறிய முயல்கிறுன்; இத்திடீர்த் தூக்கங்கள் எதற்கு? சிருஷ்டி தொடர்ச்சியாக (creatio continua) நடைபெறுகிறது?

"உயிரமைப்புகளின் பலதரங்கள் ஏற்பட்டதன் காரணம் இன்னும் விளங்கவில்லை. ஒவ்வொரு படியின் நிலைமையும் நமக்குத் தெரிந்தாலும் இயற்கையின் முழுமையில் இப்படிகளின் ஸ்தானமென்ன? ஒரு படியோடு மற்ருெருபடி எவ்வாறு இணைகிறது? என்பது தெரியாததே. இதில் மறைபொருள் (obscurantism) யாதொன்றுமில்லை" என்கிறுர் நீடாம்.

தெரியாததைத் தெரியாததென்பதில் மறைபொருள் ஒன்றுமில்லை தான். மறைபொருள் படுக்கைக் கோட்டுப் படி மட்டங்களில் இல்லை; செங்குத்தான நேர்கோட்டுத் தாவுதல்களில் தானிருக்கிறது.

நேர்கோட்டு விதியால் ஏன், எப்போது, எப்படி கீழ்ப்படியிலிருந்து மேற்படிக்கேகும் உயிரமைப்புகள் தோன்றுகின்றன என்பதை நம்மால் கூறமுடியும். விஞ்ஞான முறையில்லா விட்டாலும் ஓரளவு கூடுதல் பிரிதல் (aggregation and segregation) என்ற முறையில் விருப்பு—வெறுப்பு, இணைப்பு—தனிமை, வளர்ச்சி—வகுப்பு (attraction-repulsion, integration-specialisation, growth-division) எனவும், காமஉணர்ச்சிகள், மரணஉணர்ச்சிகள் எனவும் விளக்க முயல்கிறோம். வேறுவகையில் அளவை, கலவை (symmetry and harmony) என்றும் கூறுகிறோம். மார்க்ஸியச் சீடரான நீடாம் மறைபொருளை விலக்கும் முயற்சியில்:—

"ப்ரம்மண்டுடன் கூடி நாமும் பலதரப்பட்ட படிகளின் தன்மைகளுக்கும், அவற்றின் இணைப்புகளுக்கும் ஒரு சம்பந்தமிருப்பதாகச் சொல்லலாம். ஃப்ராய்டு காமன் வேலை (the task of Eros) என்றுரே...இந்த முறையில் ஒரு தொகுதிக்குள் உள்ள

மொத்தைகள்(colloidal), ஸ்ருங்கடகங்கள் (crystalline), அணுத் தொகுப்புகள் (molecular) பரமாணுக்கள் (sub-atomic levels) உட்பட எல்லாப் பகுதிகளிடையும் ஒரு வகையான காதலும் தோழமையும் இருக்க வேண்டும்' என்கிறார்.

ஒழுங்கு, சமனவயம், காதல்—இவையாவும் பழக்கமான இணைப்புச் சக்திகள். இவை தெய்விகம் எனில் வித்யாஸமான தெய்விகமே. இது ஆராய்ச்சி ஆரம்பத்தில் குறிக்கப்படுவதில்லை, முடிவில் குறிக்கப்படுகிறது.

8

விதிக்கும் மதிக்கும் இடையே சிக்கிய மதம் பலபடியான விதிகளை ஏற்படுத்தியது. இன்றைய விஞ்ஞானமும் இதே முறையைப் பின்பற்றுகிறது. கிறிஸ்தவப்படி முறைகளை நாம் முன்பே குறிப்பிட்டோம்.

மேல்நிலை விதிகளைக் கீழ் நிலையிலிருந்து மாற்றவோ நிர்ண யிக்கவோ முடியாது

கீழ்நிலை விதிகள் மேல்நிலை அமைப்பால் குறிக்கப்படுகின் றன. எனினும்,

மேல் நிலைகள் கீழ்நிலையில் உருக்கொண்டால் விளக்க முடியாத அதிசயங்களாகின்றன.

இவையாவும் உயிர் நூலுக்கும் (embryology) கரு நூலுக் கும் உள்ள உறவான விஞ்ஞானத்திற்கும் பொருந்தும்.

மதம் மற்றொன்றையும் நமக்குப் போதித்தது. படுக்கைப் படி மட்டங்களால் உலக இயலை ஆராய்வது ஒன்று; நேர்கோட்டு அபூத நிலைகளை தியானத்தால் அறிவது மற்றொன்று. இரண் டாவது அறிவு முறையில் தனிப்படிகளைத் தாண்டிச்செல்ல வேண்டும். எனவே விஞ்ஞானியும், சர்ச்சுகளும், படிப்பாளி களும், வாதிகளும் தெய்விகனை அவநம்பகத்தோடு நோக்குகின் றனர். எனினும் நெருக்கமான, நிர்ணயமான உண்மைகளை அறியத் தங்கள் முறைகள் குறையுற்றவை என்பதை அவர்கள் ஒப்புக்கொண்டுதான் தீரவேண்டும்.

மதப்படிகள் சிற்சிலவே; ஆறு நாள் சிருஷ்டிக்கு இணங் தவை எனலாம். விஞ்ஞானப்படிகள் பற்பல, படிக்குப்படி உள்ள வித்யாஸம் கண்ணுக்குத் தெரியாத வண்ணம் நுண்மை யாகலாம். எனினும் இயற்கையில் இடையீடற்ற தொடர்பு களில்லை; தாவல்களே உள்ளன; படிப்படலம் சரிவாக முடி யாது. ஏனெனில் ஒரு படியில் ஒரு நுண்பொருள் தங்கியிருப் பதை நான் நினைக்கமுடியும், சரிவில் அது ஓடி மறைவதை எண்ணமுடியாது. செங்குத்தான ஒளியில் பக்கவாட்டிலிருந்து

பார்ப்போருக்கு படித்தாவுதல்கள் நிழலிருட்டில மறைந்து நிற்கும்.

9

இப்படி முறை ஒரு முறை நம் மனத்தில் படிந்துவிட்டால் கலைப்பண்பு, ஒழுக்க நெறி, அறிவுத் தத்துவம், முதலியவற்றைப் பற்றிய குழப்பங்கள் தீர்ந்துவிடும். ஒரு படிப்படியே மற்றைப் படிகளையும் கணிப்பதாலேயே குழப்பங்கள் ஏற்படுகின்றன; ஒழுக்க நெறியை உயிர் நூலால் உணர்த்த முடியாது.

"லியனார்டோ டா வின்ஸியைப் பற்றிய குழந்தைப் பருவ நினைவுகள்" என்ற ஃப்ராயிடின் கட்டுரை அற்புதமானது. அதில் அவர் கூறுகிறார் "கலைத்தொழிலை அதன் உள்ளக் கருவிலிருந்து விளக்க நமக்கு ஆசைதான். ஆனால், இந்தக் கட்டத்தில் நம் ஆராய்ச்சி முறை தோல்வி அடைகிறது" என்று.

ஃப்ராய்டுக்குத் தன் முறையின் குறைகள் தெரியும்; அதைப் போன்றே மார்க்ஸுக்கும் தெரியும். ஆனால், ஃப்ராய்டியர்களுக்கும், மார்க்ஸியர்களுக்கும் தெரியாது. அவர்கள் தங்கள் தங்கள் முறையாலேயே யாவற்றையும் விளக்க முயல்வர்; எனினும், உண்மைக் கெதிர்ப்பட்ட பொழுது ஒரு சித்திரத்தின் மகிமை அதன் வண்ணக் கலவைகளிலில்லை என்பதையும், பொருளாதாரத்தாலேயே யாவற்றையும் விளக்க முடியாது என்பதையும் ஒப்புக்கொள்வர்.

பலபடியான வாழ்வை ஒருபடியாக விவரிப்பது சாத்யமல்ல.

10

பலபடிகளின் பலதரத் தன்மையைக் குறைக்கும் முயற்சிகளெல்லாம் ஒழுக்கத் துறையில் தீய விளைவுகளை உற்பத்தி செய்துள்ளன.

நம் காலத்திலுள்ள ஒழுக்கக் கீழ்மையை ஐந்து வகையாகப் பிரிக்கலாம். (1) ஒழுக்க நெறியைச் சூன்யமாக்கல், (2) உயிர் நூற்படி உணர்த்தல், (3) உள நூல்வகை, (4) அளவைப்படி, (5) தெய்விகப்படி விளக்குதல் எனலாம். பொதுவாக இவ்வகைகள் இணைந்தே தோன்றுகின்றன; எனினும் இவற்றைத் தனித்தனி கணிப்பதே சுலபமானது.

(1) ஒழுக்க நெறியைப் பகுத்தறிவால் பகுத்துப் பகுத்துப் பார்ப்பது வெறுமைத் தத்துவத்திலேயே முடிவடையும். குறுக்கியல் அளவற்ற முட்டாள் குறுக்க (reductio ad infinitum ad-absurdum) மாகவே முடியும். "நான் நம்புகிறேன் என்பதை நம்பவில்லை என்று நம்புபவனுக்கு இவ்வுலகமே ஒரு பொய்யாகும். பொய்மேல் நிற்பதாகும். எனவே இவ்வுலகச் சட்டங்

களெல்லாம் பொய்களே; பேய்களின் விளையாட்டே" என்று, கிரிலாவ் வெறிகொண்டவன் (The possessed) என்னும் நாவில் கூறுகிறார்.

இவ்வெறுமைத் தத்வம் 1860-இல் புல்கானினது நண்பனை நெசாவிடம் ரஷ்யாவில் நேர்ந்தது போல் அநேகமாக நேருவதில்லை. ஆனால், இத் தத்துவத்தைக் கீழ்த்தர அரசியல் வாதிகள், விலைமாதர்கள், பெரும் வியாபாரிகள், குற்றவாளிகள், இழிவுற்றோர் முதலிய யாவரிடமும் காணலாம். ஸமூகக் கழிபடைகளிடமெல்லாம் இவ்வொழுக்கக் குறுக்குச் சூன்யதத்வம் மறைந்தாவது இருக்கும். உலகம் ஒரு தன்மைத் தெனில் அதன் விதிகளை மேல் நிலையில் கடவுளிடமிருந்தோ, கீழ்நிலையில் வெறுமைக் குழப்பத்திலிருந்தோதான் பெறமுடியும். வெறுமை வாதிகள் பின்னர்க் கூறியதைப் பின்பற்றுகின்றனர்.

இச் சூன்யவாதத்தைத் தலைகீழாக்கிக் கூறுவதும் உண்டு (tout comprendre e'est tout pardonner). இதைப் போன்ற சொண சொணப்பான முறை வேறொன்றுமில்லை. இதன்படி ஒருவனது ஒழுக்கமுறைக்கு அவனது சூழ்நிலையும், அதைப் பற்றிய அவனது அநுபவமுமே காரணம்; எனவே அவன் மன்னிப்புக்குரியவன் என்பதே.

நான் நாஜிஸத்தைக் கண்டிப்பது ஸமூகத்தில் அது இயற்றிய கேடுகளை அநுபவபூர்வமாகக் கண்டதாலேயே. எனவே, ஒருவன் தன்னளவு அநுபவித்தால் நாஜியாவதை நான் தடுக்க முயல்கிறேன். இதை விட்டுச் சரித்திரம், சந்தர்ப்பம், வகுப்புணர்ச்சி என்பவற்றின்படி பார்த்தால் பாவம், அவன் நாஜியாகாமல் என்ன செய்ய முடியும் என்று அவனை மன்னிக்கிறேன். இம்மன்னிப்பால் அவனை ஒரு தன்னிச்சையற்ற மிருகமாகவோ, யந்திரமாகவோ மதிப்பிடுகிறேன். அவன் தன்னிச்சையற்ற மிருகமாகவோ, யந்திரமாகவோ இருப்பின் மற்றொரு வகையில் அவனைச் சண்டையிட்டு ஒழிப்பதற்கும் எனக்கு உரிமையுண்டு. துருப்பிடித்த என் க்ஷவரக் கத்தியை நான் மன்னிக்கலாம்; அதைக் குப்பைத் தொட்டியில் எறிவது தவறாகுமா?

எனவே இம்மன்னிப்பு முறை எதற்காக ஏற்பட்டதோ அதையே இழந்து விடுகிறது; இதில் வெளி அநுபவத்தைத் தவிர உள்ளுணர்ச்சிகளுக்கு இடமில்லை.

(2) உயிர் நூல் கொள்கைகளை ஒழுக்க நெறியிற் புகுத்துவது டார்வின் ஸமுதாயக் கொள்கையை ஒப்புக்கொள்வதாகும். அதாவது தக்கவன் வாழ்வான்; அமானுஷிகா (Superman)னுக்கே வாழும் உரிமை உண்டு என்பதே, இக்கொள்கையின் ஸாட்சாத்காரமே ஃபாஸிஸம். உயிர் நூல் சமூக நூலைப் பொறுத்த வரையில் காட்டுமிராண்டித்தனமாகும்; அதன் சட்

டங்களை மேல் நிலைகளிற் பொருத்தினால் அதற்குத் தக்க அவலமே விளையும். இதைப் பற்றி மார்க்ஸ் டிஸேட் என்பவர் அழகான புத்தகமொன்று எழுதி இருக்கிறார்.

(3) உளநூற் படியும், உள—உடல் (psycho-pathology) நூற்படியும் ஒழுக்க நூலைக் குறைப்பது அரசியலைப் பாதிப்பதில்லை; கலாசாரத்தைப் பாதிக்கிறது. தைர்யம், தியாகம் என்ற ஸமுதாய உணர்ச்சிகளைத் தனி மனிதனது சகிப்புத் தன்மை (masochism), சாவுணர்ச்சி என்பவற்றிற்குக் குறைப்பது உயிர் வர்க்கங்களை அவற்றின் ரஸாயனப் பொருள்களுக்குக் குறைப்பது போன்றதே. ஸமுதாய நிலையில் தனி மனிதன் ஒரு புது சாம்யத்தின் பகுதியாகிறான்—இச் சாம்யத்தின் விதிகள் குறைக்கவோ, மாற்றவோ முடியாத தனி இயல்புள்ளவை.

உயிர் உற்பத்திற்கு ரஸாயன, உஷ்ணமான நிலைகள் அவசியமாயினும், அவைகளால் மட்டும் உயிர் உற்பத்தியை விளக்க முடியாது. உண்மையில் உயிர் ஸ்ருஷ்டி ரகஸியமான முறையில் ஒரு உயர் நிலையைக் காட்டுகிறது. உயிருற்பத்திக்கு முன் உயிரணுக்கள் குளறுபடியாகத் தானிருந்தன. உயிருற்பத்தி இக் குளறுபடிகளை மீறி இணையும் ஒரு குறுகிய வெற்றியேயாகும்.

ஃப்ராய்டின் புகழ்பெற்ற "நான் ஏன் மற்றவனை நேசிக்க வேண்டும்'' என்ற கேள்விக்கு அவரது காமக்கரு (libido) விடை தர முடியாது. நானும், மற்றொருவனும் ஒரே தொகுதியின் இரு பகுதியே என்னும் உணர்ச்சியே இதற்கு விடையளிக்க முடியும். இத்தகைய உணர்ச்சிகள் யாவற்றிற்கும் நாம் காமக் கரு என்று பெயரிட்டோமானால் இக்கரு ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொரு விதமாகச் செயற்படுகிறது. ஆகர்ஷண சக்தி, அணுத் தொகுதி, ஸ்ருங்கடகம், கருக்கிண்ணி, உறுப்பிணைப்பு, உயிருரு அமைப்புகள் என வளர்ந்து ஸமுதாய முழுமை வரையில் பல படியாகத் திகழ்கிறது,

(4) பௌதிக அளவைகளால் ஒழுக்க நெறியை அளப்பதே மிகப் பாழான விளைவுகளை உற்பத்தி செய்துள்ளது. கணக்கான புள்ளி விவரங்களையெல்லாம் அறிவுக்குப் பொருந்தியதாக நாம் கருதுவதால்—ஃபாஸிஸ உயிர் நூல் முறையைக் காட்டிலும் சர்வாதிகாரக் கணித முறைகள் நமக்குச் சரியாகத் தோன்றுகின்றன. எனவே, பெரும்பான்மையோரின் நன்மைக்காகச் சிறுபான்மையோரைப் பலியிடலாமென்று எண்ணுகிறோம். மூனிச் காலத்தில் ஒரு பெரிய தேசம் சிறிய தேசத்திற்காக அபாயங்களை ஏற்காதென்று மிஸ்டர் சேம்பர்லேன் கூறவில்லையா? இதே சமயம் ஆம்புலன்ஸ் வண்டி ஒன்றிலுள்ள 5 பேர்கள் ஒரு உயிரைக் காப்பாற்ற ஆபத்துக்குள்ளாவதை எதிர்பார்க்கிறோம். 1000 கள்ளங் கபடற்றவர்களை ஒரு ஒற்

றன் தப்பித்து 40,000 கணக்கான மக்களுக்கு ஆபத்துண்டாக்க லாம் என்பதற்காகச் சிறையிலடைப்பது தவறல்லே என்ற ஸோவியத் ஆதரவாளனின் கூற்றையும் ஒப்புக்கொள்ளுகிறோம். ஆனல் ஒரு ஒற்றன் செய்யக்கூடிய தீங்கையும், ஆயிரம் பேரை அடைத்து வைப்பதால் வரும் தீ கையும் நாம் எடைபோட்டுப் பார்ப்பதில்லே. விஞ்ஞான முறைப்படியான கணித ஒழுக்கத் தில் நாம் ஒருதலேயான கொள்கைகளேப் பின்பற்றுகிறோம். தராதரம் பார்க்கும்போதுதான் கணித முறைகள் பயனற்றவை யாகின்றன—ஒழுக்க நெறியின் உயர்வு தென்படுகிறது. ஒரு புரட்சியில் துரோகிகளேயும், முட்டாள்களேயும் சுட்டுக் கொல்ல வேண்டியதுதான்; ஆனல் என்னுடன் மாறுபடும் ஒருவன் எப் போது துரோகியாகவும், முட்டாளாகவும் மாறுகிருன். எந்த கட்டத்தில் வைத்யனது கத்தி கொலேயாளியின் வாளாகிறது; எந்த நிலேயில் தொழிலாளர் ஸர்வாதிகாரம் அதிகாரிகளின் ஸர் வாதிகாரமாகிறது. வாத தத்துவம் (Dialectics) கூறுகிறது, அளவுகள் தன்மைகளாக மாறுமென்று அவைகள் தெரிவிக்க வில்லே. கணித முறை ஒழுக்க நெறிகள் தங்கு தடையில்லாது சரிவில் சறுக்குவது போன்றது.

ஸர்வாதிகார ஒழுக்க நெறியில் மற்ருெரு தவறு, முடிவே முறைகளே நிர்ணயிக்கும் என்ற தத்துவமே. இது ஏதோ சிற் சில சம்பவங்களுக்கு ஏற்றதாக இருக்கலாம். இதையே நிரந்தர மான விதியாக்குவது ஒழுக்க நெறிக்கே ஊறு செய்வதாகும். 300 ஆண்டுகளுக்கு முன்னரே கணித முறைகள் 0-க் குறியீட் டுக்கும் 00-என்ற அகண்டக் குறியீட்டிற்கும் பொருந்தாது என்பதைக் கண்டார். ஸர்வாதிகார ஒழுக்கம் தனி மனிதன் ஸமூகத்தோடு சூன்யத்திற்கும், அகண்டத்திற்கு மிடையே நிற் கிருன் என்பதை அறியவில்லே.

(5) 'யோகி ஒழுக்கம்' தியான முறையில் வந்த விளேவுகளேச் செயல் முறையில் போடுவதாகும். இது அசாத்யமானதல்ல, ஆனல் கஷ்ட ஸாத்யமானது. தியானிப்பவன் படிமுறை விதி களில் நெட்டுக் கோடுகளேப் பற்றியே சிந்திக்கிருன். இது ஸமு தாயக் கொள்கைகளேப் பற்றிய அசட்டுத்தனங்களுக்கு இட மளிக்கிறது, இம்முறை அபாயகரமானது. இவ்வபாயங்களில் வெளிப்படையானவை, அமைதி, துறவு, விதியை விலக்கி நிற்றல் முதலியன; "எனவே, கடைசியில், கனவான்களே! நம்மால் செய்யக்கூடிய சிறந்த செயல் ஒன்றும் செய்யாமலிருப் பதே என்ற முடிவுக்கு வந்து விட்டோம்; இனி வெறுமையான தியானத்திலாழ்வோம்" என்கிருன் டாஸ்டோவ்ஸ்கியின் ஒரு கதாநாயகன்.

தியான முறையிலுள்ள நம்பிக்கை மற்றவர்களது 'உள்ளுணர்ச்சிக்குரலை' க் கேட்கும்படி நம்மைத் தூண்டுகிறது. ஆனால், தியான அநுபவமற்ற பொதுஜனங்களின் 'உள்ளுணர்ச்சிக் குரல்' வளர்ச்சி அடையவில்லை; அவர்கள் நம்பிக்கைகள் பழம் பழக்க வழக்கங்களால் ஏற்பட்டவை. எங்கள் வீட்டுக்காரியின் ஏழு வயது மகள் யுத்த காலத்து இருளில் வளர்ந்தவள். ஒரு நாள் லண்டனில் 'இருட்டடிப்பு நீக்கப்பட்டபோது' வெளிச்சமாய்த் திறந்திருந்த என் சாளரத்தைக் கண்டு அவள் வெருண்டாள். எவ்வளவு சமாதானங் கூறியும் அவள் பயம் தீரவில்லை. "ஆர்தர் மாமாவுக்குக் கடவுளிடம் நம்பிக்கையில்லை"—என்று அவள் அம்மாவிடம் கூறினாளாம்.

ஸமூக, காம நெறிகளைப் பற்றிய நம் உட்குரல்கள் மேற்சொன்ன குழந்தைத் தன்மையிலிருந்து இன்னும் மாறவில்லை; தியானத்தில் வெற்றி பெறுமுன் அதை நம்புவது அடுத்த தேர்தலில் டோரிக் கட்சிக்கு ஓட்டளிப்பதாகவே முடியும். தியானம் நமது கட்டுப்பாடுகளை உடைக்க உதவ வேண்டும்—அது பிடிவாதத்திற்கு, அப்பிடிவாதம் விஞ்ஞானமானாலும் சரி, மதமானாலும் சரி—விரோதமானது. சி. எஸ். லூயி ஸ்க்ரூடேப் கடிதங்கள் என்னும் நூலில் சாத்தான் தன் ஒன்று விட்ட சகோதரனுக்கு "எவைக்கும் மேல் விஞ்ஞானத்தை (உண்மையான விஞ்ஞானத்தையே சொல்லுகிறேன்) கிறிஸ்தவ மதத்திற் கெதிராக உபயோகிக்க முயலாதே. அது காணவும், தொடவும் முடியாத உண்மைகளைப் பற்றி அவனைச் சிந்திக்கச் செய்யும்; தற்கால விஞ்ஞானிகளில் இத்தகைய பரிதாபகரமானவர்களும் உண்டு" என்று எழுதினதாகக் கூறுகிறார். இவ்வாறு யந்திர இயலுக்குள்ள ஒரே ஒரு மாற்று இங்கிலாந்தின் மாதா கோயில்களே; காண முடியாத, தொட முடியாதவற்றை அறியக்கூடிய ஒரே ஒரு மார்க்கம் கிறிஸ்தவ மதமே என்று 1944–இல் மக்டலேன் கல்லூரித் தோழரான ஒருவர் கூறுவது ஆச்சர்யமே. விஞ்ஞானத்தின் கஷ்டங்களைப்பற்றி மதவாதிகள் பேசுவது அருவருப்பையே தருகிறது—இளங் காதலனால் கைவிடப்பட்ட ஒரு பெண்ணை ஒரு காமக்கயவன் கவர நினைப்பது போலிருக்கிறது.

தியான விரோதத்திலும் பெரிய ஆபத்துள்ளது; அதுதான் பிடிவாதமான ஊக்கம். உள்ள சத்திலிருந்து வெளிப்புற மாற்றங்களால் கிறிஸ்துவ வலிமைக் கிளர்ச்சி வேறுபாடுகளை இயற்றப் பார்க்கிறது. இதில் முடிவுக்கான கொள்கையின் முரண்பாடுள்ளது. தியானத் தெய்விகன் ஒருவன் தலைகீழான ஸர்வாதிகாரியான நிலையை ஹக்ஸ்லி தம் பழுப்பு மேன்மை (Grey Eminence) என்ற நூலில் வெகு திறம்பட விளக்கியுள்ளார்.

இவைகளே யோகி ஒழுக்க முறையினுள் குண்டுங் குழி களும், எனினும், யாவைக்கு மேல் தற்காலச் சமூகச் சிக்கல் களிற் சிக்கித் தடுமாறுவோருக்கு தியானத்தைத் தவிர வேறு வழிகாட்டிகளில்லை. எனினும் தியான வழி, விஞ்ஞான வழி யைப் போன்றே மிகவும் கஷ்டமானது; தவிர தற்கால மனி தனுக்கு இது அநேகமாய் அசாத்யம். சங்கல்பமேதையும் சங் கல்ப்பியாதிருக்கும் சக்தியை மனித ஜாதி இழந்து வெகு நாளா யிற்று. எங்கோ ஓரிருவர் இச்சக்தியைப் பெற்றாலும் அதன் மகிமையிலேயே முழுகிப் பழைய உலகத்தின் உறவைமறந்து விடு கின்றனர். படி நெட்டுக்களை அறிவது படி மட்டங்களை அறிவது போன்றே அறிவின் ஒரு பகுதியே யாகும். இவ்வாறு பெண்டு லம், காணுச் செங்கதிருக்கும் காணு நீலக்கதிருக்கு மிடையே மாறிமாறி ஊசலாடுகிறது.

ஃ ஃ ஃ

நம் காலத்தின் அறிகுறி இதுதான். விஞ்ஞானம் தனது கட்டுப்பாட்டை ஒப்புக்கொண்டு விட்டது; எனவே 300 வரு டங்களாய் மறைந்து கிடந்த தியான வழிக்கு இடமளிக்கிறது. அளவு மார்க்கம் பரிபூரண வளர்ச்சி அடைந்து அவற்றின் அநு பவ விளைவுகளின் சிறுமைகளால் பணிவுடன் நிற்கிறது. படுக் கைக் கோடாக இருந்த 19-ஆம் நூற்றுண்டு விஞ்ஞானம் படிப் படியாகப் படி வரிசையாய் நெட்டு நிலை ஆய்வின் அவசியத்தை உணர்ந்துள்ளது, மனித நிலையின் அடிப்படை முரண்பாடு களான விதியும்—மதியும், ஒழுக்கமும் வாதமும்—என்று எப் படிச் சொன்னலும்—இவற்றை அறிய நெட்டாராய்ச்சியின் தேவையை இன்று உணர்ந்துள்ளோம்; இம்முறையிற் சென்று, இதனுல் படுக்கைப்படி மட்டங்களையும் மறவாதிருக்கும் கஷ்ட சாத்யமான காரியமே தற்கால மனிதன் சாதிக்க வேண்டிய சாதனை.

வெறும் உரைகளாற் பயனில்லை. மனிதன் தனது பூரணத் வத்தை,தெய்வத்தன்மையை அறிந்துகொள்ளத் தியானப் பழக் கத்தைக் கற்றுக்கொள்ளவேண்டும். இதற்கு யோக மார்க்கப் பத்திரிகைகளும், யோகப் பைத்யங்களும் கூறும் மூச்சிழுப்பு வித்தைகளும், படாடோப முடக்கடிகளும் போதாது. ஒரு பஸ் ஓட்டிக்கு 9 மணி நேர வேலைக்குப் பின் கிடைக்கும் ஓய்வில் ஹெர்டு எழுதிய ஆன்மிக வாழ்வுப் பயிற்சி (Training for the life of the Spirit) என்ற நூல் சிறிதும் பலனளிக்காது. கீழ் நாடுகளில் தான் தியான முறை இன்றும் உள்ளது; எனவே அதை அறிய நாம் கீழ்நாட்டையே நோக்கவேண்டும்: ஆனல், அக்கீழ் நாட்டு தியான முறையை நமக்கேற்றபடி விளக்கத் தக்க மேதைகள்

தேவை. மொழிபெயர்ப்புகளாலும் ஒன்று வாழ்நாள் முழுமையையும் இதற்கே செலவிடுபவர், அல்லது ஒன்றும் அறியாதவர்—இவர்களைத் தவிர வேறு யாருக்கும் பயனில்லை. வேதாந்தம் என்னை ஓய்ந்து போகச் செய்கிறது; டோ சித்தாந்தம் அர்த்தமற்றதாய்த் தோன்றுகிறது. "ஹடயோகம் அப்யசிப்பவர் தனியாக நீர், நெருப்பு, பாறை இவைகளில்லாத, ஒழுக்கசீலனை ஒரு அரசனால் ஆளப்பட்ட வளம்பொருந்திய ஒரு நாட்டில் யாதொரு விதமான உபத்திரவமு மில்லாமல், வில்லளவான ஒரு ஆஸ்ரமத்தில் வசிக்க வேண்டும்" என்ற ஸ்வாத்மராம் ஸ்வாமி கூறினால், பஸ் ஓட்டியை நினைத்துப் பாருங்கள்.

நாம் உண்மையாகவே நமது இழந்த பகுதியைத் திருப்பிப் பெற வேண்டுமென்றால் புது வகையான கல்வி முறைகளை அவலம்பிக்க வேண்டும். நமது பள்ளிகளில் விஞ்ஞானத்தோடு தியான முறைகளும் போதிக்கப்பட வேண்டும். பைத்யங்களை உற்பத்தி செய்யவல்ல; மனிதப்பூர்ணத்வ ஸாம்யத்தைப் பெறவே.

இதைப்பற்றி நாம் உண்மையிலேயே உடனே கவனிக்க வேண்டிய நிலை வந்து விட்டது. நமது விளக்கங்களும், ஒழுக்க நெறிகளும், அவற்றின் அரசியல் விரிவுகளும் உச்சமான நெருக்கடியை அடைந்து விட்டன. ஒவ்வொரு தனி மனித முழுமையும் ஸமூகத்தின் பகுதியாகவும், சமூகமே மேலான ஒரு அகண்டத்தின் பகுதியாகவும் மாறவேண்டும். வெல்ஸ் முறையில் விவேகத்திற்கு மட்டுமான விரிவுகள் இதற்குப் பயன்படா, தெய்விகனும் சரி, புரட்சிக்காரனும் சரி நம்மைக் காப்பாற்ற முடியாது; இதற்கு இரண்டும் கலந்த ஒருவர் தேவை, நம்மால் இதைச் சாதிக்க முடியுமோ, முடியாதோ, எனக்குத் தெரியாது. ஆனால் இவ்வாறு செய்ய முடியாவிடில் ஐரோப்பிய நாகரிகத்தின் அழிவை மகா யுத்தத்தைக் காட்டிலும் பெரிதான அகண்ட யுத்தத்தாலும் வரும் சில பத்தாண்டுகளில் நிறுத்த முடியாது.

இதைக் காணப் பெரிய அறிவு தேவையில்லை; நம் கற்பனையின் மந்தமே இந் நம்பிக்கையிலிருந்து நம்மை ஒதுக்கி வைக்கிறது. யுத்தத்தின்போது நாம் சமாதானத்தை நம்புவதில்லை; சமாதானத்தின்போது யுத்தத்தை எதிர்பார்ப்பதில்லை, அதைப் போல்தான் இதுவும். அறிவின் குரலுக்குக் கீழ் மெதுவாகப் புன்சிரிப்புடன் நமக்குள் ஒரு குரல் கேட்கிறது.—நாம் சாக மாட்டோம்; நேற்றிருந்தபடியே நாளையுமிருக்குமென்று.

அந்தக் குரலை நாம் நம்பாதிருக்கக் காலம் வந்து விட்டது.



அக்டோபர், 1944.

முற்றிற்று

3B
10-25

எமது
இதர வெளியீடுகள்

★ இரும்புப் பெட்டி
★ அரசியல் கட்டுரைகள்—தாமஸ் பெய்ன்
★ போரே, நீ போ
★ சமாதானத்தின் புதிய பரிணமங்கள்
★ சுதந்திரப் பாலம்
★ மகத்தான மாறுதல்
★ பிலிப்பைன்ஸ் தேசத்து நிலச் சீர்திருத்தங்கள்
★ என் சரிதை
★ அழிவற்ற காதல்
★ இந்தியா என் வீடே
★ சுதந்திரமும் பண்பாடும்
★ மணமகள் வருகிறுள்
★ கடல் முத்து
★ பிரபஞ்சமும் டாக்டர் ஐன்ஸ்டினும்
★ வீதியில் ஒரு விடுதி

வெளியிடுவோர்கள் :
பெர்ல் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிட்., பம்பாய்-1.

பூரண விநியோகஸ்தர்கள் :
இந்தியா புக் ஹௌஸ்
புருஷோத்தம் பில்டிங், 193, மவுண்ட் ரோட், மதராஸ்-2.